# AGENTS FOR THE SALE OF MADRAS GOVERNMENT PUBLICATIONS

## IN INDIA

The Superintendent, Nazair Kanun Hind Press, Allahabad.

The Bangalore Printing and Publishing Co., Ltd., Bangalore City.

M. C. Kothari, Bookseller, Publisher and Newspaper Agent, Raopur Road, Baroda.

R. Sunder Pandurang, Kalbadevi Road, Bombay.

D. B. Taraporevala Sons & Co., Bombay.

Thacker & Co. (Ltd.), Bombay.

N. S. Wagle, Circulating Agent and Bookseller, No. 6, Tribhuvan Road, Girgaon, Bombay.

The Burma Book Club (Ltd.), 240-a, Merchant Street, Rangoon, Burma.

The Book Company, Calcutta.

Butterworth & Co. (Ltd.), 6, Hastings Street, Calcutta.

R. Cambray & Co., Calcutta.

Thacker, Spink & Co., 3, Esplanade East, Calcutta.

Shri Shankar Karnataka Pustaka Bhandara, Malamaddi, Dharwar.

The Dominion Book Concern, Booksellers, Publishers, Main Road, Hyderabad.

Ramakrishna & Sons, Lahore.

The Proprietor, The Punjab Sanskrit Book Depot, Motilal Banarsidass, Saidmitha Street, Lahore.

The Upper India Publishing House (Ltd.), Lucknow.

The Christian Literature Society for India, Post Box No. 501, P.T., Madras.

City Book Co., Post Box No. 283, Madras.

Higginbothams (Ltd.), Mount Road, Madras.

The Law Book Depot (Ltd.), 15 & 16, Francis Joseph Street, Madras.

S. Murthy & Co., Madras.

G. A. Natesan & Co., Madras.

P. R. Rama Iyer & Co., Madras.

P. Varadachari & Co., Booksellers, 8, Linga Chetti Street, Madras.

The Universal Publishing Co., Bezwada (Madras).

D. Sree Krishnamurthi, Editor, "Grama Paripalana," Morrispet, Tenali, Guntur (Madras).

E. M. Gopalakrishna Kone, Pudumantapam, Madura (Madras).

The Modern Stores, Salem (Madras).

The Srivilliputtur Co-operative Trading Union (Ltd.), Srivilliputtur (Madras).

S. Krishnaswami & Co., Teppakulam Post, Trichinopoly Fort (Madras).

A. Venkatasubban, Law Bookseller, Vellore (Madras).

Nivasarkar, Manager, "Hitawada," Nagpur.

The International Book Service, Booksellers, etc., Poona 4.

Mohanlal Dossabhai Shah, Books Agent, Publisher and Printer, Rajkot.

The Booklovers' Resort, Booksellers and News Agents, Taikad, Trivandrum.

## IN STRAITS SETTLEMENTS

The Federal Rubber Stamp Co., Penang.

## NOTICE

Official publications may be obtained in the United Kingdom either direct from the office of the High Commissioner for India, India House, Aldwych, London, W.C. 2, or through any bookseller.

சென்னை இறையாட்சியாளர் பதிப்பு எண் 1.

# பாலவாகடம்

# DISEASES OF CHILDREN

சென்னை இறையாட்சியாளர் ஏற்படுத்திய பாடபுத்தக கழகத்தாரால்

எழுதப்பெற்று


சென்னை இறையாட்சி இந்திய மருத்துவ கலாசாலை சித்தமருத்துவத் தலைமை ஆசிரியராகிய திருவாளர் - மருத்துவ சிரோமணி

க. ச. முருகேச முதலியாரால்

பார்வையிடப்பட்டு



முதற் பதிப்பு

சென்னபட்டணம்

கவர்ன்மெண்ட் பிரஸ் சூபரின்டெண்டெண்ட் அவர்களால் அச்சிடப்பட்டது

1933

PRICE, Rs. 4-12-0.]

# முன்னுரை.

---

உலகத்துய் மக்களெலாம் விதிவிலக்குகளை நலத்துடனோர்ந்து நடைபிறழாவகை நனியறிந்தொழுகி யாதொரு நோயுமுறாதிருப்பரேல் மாதவமியற்றி வீடுறுமாண்பெய்துவரெனுங் கருத்துறு மருத்துவக் கலை வல **அகத்தியர், தந்வந்திரி, திருமூலர், தேரையர், பிரமமுனி, புலிப்பாணி, போகரனையோர்** இயற்றிய, ஓதவும் உன்னவும் உலப்பிலா மகிழ்தருந் தமிழியல், மருத்துவ நூற்பலவாம். அவை எப்பிணி தீர்க்கவும் தப்பற உணர்வழி சாற்றுந் தகைமைத்தாய், அன்பேடு போற்றுவா ரருவினை யறுப்பனவாய், செந்தமிழ் மொழிவளஞ் சேர்ந்திலங்குவனவாய், பண்டை இசைவளங்காண் பார்க்கு இன்பநலம் இசைப்பனவாய், அரும்விதிகளைப் பிணியடியார்க்கு நிகழ்த்துவனவாய், பல்லாண்டுகட்கு முன்னரே வழிவழிப் பாடங்களேன் முறை வருவனவாய்ப், பனந்தாளிற் பழுதுறாதமைவனவாய் இருந்துவந்தன. இவ்விழுமிய நூற்களுள் மழலைச் சொற்குழவிகளின் கூற்றுறு நோய்களை நீக்கி இன்பநலம் பயப்பதாய " **பாலவாகடம்** " என்பதொன்றும்.

இக்காலெளிதில் பதிப்பேறி எங்கும் நூல்கள் பரவற்போ லக்கால் எளிதிருந்தது. ஆகலின், இத்தகை நூற்கள் பல்லோரிடத்தும் பரவ மார்க்கமில. பல்வளஞ் செறியிப் பரதநாடுற்ற இன்னல் பலவால் செல், சிதலை, மண், புனல், எரியிவைகள் இரைகொண்டன போக எஞ்சி நின்றவை கொஞ்சமேயாம். இக்குற்றுயிர் நூற்கள் புத்துயிர் பெறுங்கால் பிழை பல நுழைந்தன. அமிழ்துறழ்த் தமிழ்க்கலை காலவேறுபாட்டாற் குன்றிய நூல் பிழைக ளுழையவாயினபோலும். இஃதென்னணம் விளங்குவதெனின், ஒரு நூலைக் குறிக்கும் பல்லேடுகளை ஒப்பிட்டு நோக்குங்கால் பாடபேதம் விளங்குவதேயாம்.

இத்தகை நிலையுள நூல்களை இந்திய மருத்துவக் கலாசாலை மாணவர்கட்குப் பாடபுத்தகமாயமைத்து பாலர்தம் பிணிகளைக் கற்பித்தலெனின் கடினமேயாம். பிணித்தன்மைக் கேற்ப வரிசைக்கிரமத்தி லமையாதிருத்தலால் குறித்த காலத்திற் கற்க விடந்தரா. ஆகவே, தற்கால நடைக்கேற்ப குழவிப்பிணிகளின் தொகைகளை வகுத்தும் விரித்தும் கைவல்லியமான மருத்துவ முறைகளைத் திரட்டிப் பிணிகண் முடிவில் பொறித்தும், ஒவ்வொருவரும் குறித்த நோயின் குறி குணங்களையும், அதற்கேயுரிய சீரிய மருந்து இவையென எளிதிற் கண்டறியவும் இருவித அட்டவணைகளைப் புக்கி " **பாலவாகடம்** " எனும் பண்டைப்பெயரையே யமைத்து சென்னை யரசாங்கப் பேருதவி கொண்டு அச்சியற்ற நேர்ந்தது. இதைச் சிறப்பாகப் பெட்புறு மருத்துவ மக்களும், தமிழ்பால் நட்புறு மேனைய மக்களும், தம் குதலைச் சொன் மக்களைப் பாதுகாத்து நிற்பரென எல்லாம் வல்ல இறையைப் போற்றுவல்.

நிற்க, இந்நூலைத் தொகுத்து வரைந்த காலத்துண்டாய பற்பல குறைகளை நீக்குமாறு வேறு எடுகளைத் தேடியதில் காலக்கழிவும் கடின உழைப்பும் பாடபுத்தக கமிட்டியார்க்குண்டாயின. பின்னரிதை அச்சியற்ற இச்சித்த காலத்து குறுக்கிட்ட வின்னலுங் குறைந்த தில. அவைகளில் பெரும்பாலும் இழுக்குள யாப்பொழுக்கம் போன்ற குறைகள் "கற்கலந்த சோறு" போல் நிறைந்திருந்தமையின் இவைகளைக் களைவான்பொருட்டு முன்வந்து உதவிய தமிழ்மொழி வன்மையும் மருத்துவ அறிவும் நிறைந்த திருவாளர்—பண்டித. **சி. த. முத்தையாப் பிள்ளை அவர்கட்கும்**, செந்தமிழ் ரத்னுகரம் மருத்துவமணி, **வல்லை சண்முகசுந்தர முதலியாரவர்கட்கும்**, இந்நூலை அழகொழுகப் பதிப்பித்து வெளியிட்ட **சென்னை கவர்ன்மெண்ட் பிரஸ் சூபரின்டெண்டெண்டவர்களுக்கும்** நன்றி செலுத்துங் கடப்பாடுடையேம்.

க. ச. முருகேச முதலியார்.

---

# பாலவாகடம்

## (இதில் அடங்கிய நோய் வகுப்பு.)

# பாலவாகடம்

## கருவிற்றேன்று நோய் வகுப்பு

### குழவிகட்கு நோய்வரும் வகை

அகக்காரண நோய்.

எண்சீர் விருத்தம்.

பிறந்தநாள் பிள்ளைக்குத் தானே தன்றாய்
பிதாவாலே பிணியுடலின் மேலே தோன்றும்
சிறந்தபிணி கணமாந்தம் கரப்பான் தோடம்
தீதாகு மக்கரங்கள் கிரந்தி முன்னும்
அறந்தழைக்கு மருந்தறிஞை யானுற் றீரும்
அதுவன்றி மருந்தறிஞ ஞுற் றீரும்
திறந்தெரிந்து பார்த்துவிடு சிறுபிள் ளைக்குச்
சீராக வருநோய்கள் செப்பக் கேளே.

(பொ-ரை.)—உலகத்திற் குழந்தை பிறந்த நாளிலிருந்தே அக்குழந்தைக்கு உண்டாம் நோய்கட்குக் காரணம் தாய் தந்தையர்களேயாவர். அந்நோய்களில் சிறந்தவை: மாந்தம், கணம், கரப்பான், தோடம், கெடுதியை விளைவிக்கின்ற அக்கரங்கள், கிரந்தி முதலியவைகளாம். இந் நோய்கள் மருந்தறிஞை, மருந்தறிஞன் என்னும் இவர்களால் தீரும். மாணவ! நீ இந்நோய்களின் குறிகுணங்களையும் மருந்துகளையும் நன்றாய்ப் பார்த்தறியும்படி சொல்லுவேன். அவற்றை நீ நன்றாய்க் கேட்டுக்கொள் வாயாக.

மேற்செய்யுளிற் கூறப்பட்ட நோய்கள் முன்பின் முறை மாறியுள்ளன செய்யுணயம் நோக்கி என்க.

பண்டை நாட்டொடங்கியே ஆண், பெண் என்னும் இருபாலினரும் கல்விக்குரியரானாற்போல, வயித்தியஞ் செய்தற்கும் உரியரே என்றுணர்த்த 'மருந்தறிஞை', 'மருந்தறிஞன்' எனக் கூறியதென்க.

தாய் தந்தையர்களால் குழவிகட்கு நோயுண்டாம் என்றதை,

"சொல்லுகின்ற குழவிக்குக் கரப்பா னேது
தோடமென்ற வினையேது மாந்த மேது
கொல்லுகின்ற கணமேதக் கரங்க ளேது
கூறும்வை சூரியென்ற குழற லேது
புல்லுகின்ற தாயாலே தந்தை யாலே
புனைந்துகொடி படர்ந்ததுபோல் படர்ந்த திப்பால்
கொல்லுகின்ற கரப்பானும் கர்ப்ப மேகம்
கோதுற்ற தோடமெல்லா முலைப்பாற் சூடே."

என்னும் செய்யுளாலறிக...... ..............................(க)

## புறக்காரண நோய்

மேலே சொல்லப்பட்ட நோய்களும் பிறவும் நீங்கக் குழந்தை பிறந்த வுடனே கருவைவிட்டு வெளிவந்த வருத்தத்தாலும், பிற்காரணங்களால் அடங்காத சில புறகாரண நோய்களும் குழந்தைகளுக்குக் காண்பதுண்டு.

அவை :—(1) பிள்ளை பிறந்தவுடன் சீறிச்சீறியழுதல், (2) விக்கல், (3) பொருமல், (4) வயிறு வீங்கல், (5) பால் எதிரெடுத்தல், (6) கொட்டாவி, (7) பால் குடியாமை, (8) வயிற்று நோய், (9) மலக்கட்டு, (10) நீர்க்கட்டு, (11) தோடம் என்பன. இவற்றில் :—

### (1) சீறிச்சீறியழுதல், (2) விக்கல், (3) பொருமல்களுக்கு.

தீருமே திங்கள்சென்று பிள்ளை பெற்றால்
சீறியழும் பாலகர்க்கு மருந்து கேளாய் !
கூறுபுரி சிறுதேக்கு திப்பிலியுங் கூட்டிக்
குறுகவே பொடிசெய்தே யாவி னெய்யில்
வேறுபடக் கொங்கைபிள்ளை யுண்ணும் போது
விக்கல்போம் பொருமலுடன் விடமும் போகும் ;
பாரிலுறு திப்பிலிரோ கணியுங் கூட்டிப்
பருவமுட னெய்குழைத்துத் தனத்திற் பூசே.

(பொ-ரை.) குழந்தை பிறந்தவுடன் சீறிச்சீறியழுதால் அந்நோயைக் கூறு படுத்தியொழிக்கின்ற கண்டுபரங்கி, சிறுதிப்பிலி ஆகிய இரண்டையும் சரி எடை எடுத்து வெயிலில் உலர்த்தி யிடித்து மெல்லிய பொடியாய்த் துணி யில் வடிகட்டி, அதைப் பசுவினெய்யிற் கூட்டித் தாயின் மார்பில் பூசிக் குழந்தையைப் பாலுண்ணும்படி செய்தால் சீறிஅழுகையும், விக்கலும், பொருமலும், உடனே தீரும்.

'வேறுபட' என்பது 'குழந்தை நோயினின்றும் பிரிய' என்னும் பொருட்டு. (உ)

### (4) வயிறு வீங்கல், (5) பால் எதிர் எடுத்தல், (6) கொட்டாவி, (7) பால் குடியாமை, (8) வயிற்று நோய், (9) மலக்கட்டு, (10) நீர்க்கட்டு, (11) தோடங்களுக்கு.

பூசுவாய் பிள்ளையதின் வயிறு வீங்கில்
பொடிமதுரம் காடியரை பூசத் தீரும்
கூசியே குடித்தபா லெதிரிட் டாலும்
கொட்டாவி விட்டாலு மருந்து கேளாய் !
பாசமற்ற வெள்ளுள்ளி யசம தாகம்
பக்குவமாய்ச் செய்குடிநீர் பருகத் தீரும்
தோடங்கண் டெச்சமூலை யுண்ணு தாகில்
துலங்குநல் லதிமதுரம் பொடிய தாக்கே.

(இதுவுமது)

பொடியாகப் பாலரைத்து முலைக்கண் பூசிப்
பிள்ளைதன முண்டவுடன் போகு நோயும்
துடியாச்சேய் வயிறுநொந் தழுத தானல்
துலங்குபுன்னை சிறுதேக்கு கோட்டங் கொண்டு

வடிவாக நீரரைத்துக் காய்ச்சி யேதான்
மைந்தன்வயிற் றிற்பூச நோயுந் தீரும்
அடிவயிறு நொந்துமலங் கட்டு மாகில்
அதிமதுரம் பிசிதத்துளிர் சர்க்கரையு மரையே.

அரைத்துநெய்யிற் புகட்டிடவே மலமி றங்கும்
அஃதல்லா னீரிறங்க வெலிப்பு ழுக்கை
உரைத்திடுவாய் வெள்ளரிக்காய் விதையுங் கூட்டி
உவந்தரைத் தடிவயற்றிற் பூச வேதான்
நிறைத்திடவே நீரிறங்கும் பாலு முண்ணும்
நினைவாக மஞ்சள்துத்தி வேருங் கொண்டு
பரைத்திடுவாய் மஞ்சனூல் குளிசங் கட்டில்
பறக்குமே தோடமுடன் பலநோய் தானே.

(4) வயிறு வீங்கில் :—அதிமதுரப் பொடியைக் காடியினுல் அரைத்து வயிற்றிற்பூச, அவ்வீக்கம் நீங்கும்.

(5) பால் எதிரெடுத்தால், (6) கொட்டாவி விட்டால் :—தோல் நீக்கின வெள்ளைப்பூண்டுத் திரி ஐந்தைச் சட்டியிலிட்டுப் புன்வறலாக வறுத்து அதனுடன் ஒரு வராகனெடை ஓமத்தைச் சட்டியிலிட்டு அது வெடிக்குங் காலத்தில் அரை ஆழாக்குத் தண்ணீர் விட்டுச் சரிபாதியாகக் காய்ச்சிக் குடிப்பிக்க, மேல் சொல்லப்பட்ட நோய்கள் தீரும்.

(7) பால் உண்ணுவிடின் :—அதிமதுரத்தை மெல்லிய பொடியாகச் செய்து முலேப்பாலா லரைத்து மார்பிற் பூசிக் குழந்தையைப் பாலுண்பித்தால், குழந்தை நன்ருய்ப் பாலுண்ணும்.

(8) வயிற்று நோயானுல் :—புன்னே, கண்டுபரங்கி, சாதிகோட்டம், இம்மூன்றையும் சரியளவெடுத்துத் தண்ணீராலரைத்துக் காய்ச்சி அதை வயிற்றிற் பூச, வயிற்று நோய் தீரும்.

(9) மலங் கட்டினுல் :—அதிமதுரம், வேப்பந்துளிர், நாட்டுச் சருக்கரை இவைகளைச் சரி எடை (ஒவ்வொன்று கால் கால் வராகனெடை)யாக எடுத்து நெய்யினுலரைத்துக் குழந்தைக்குக் கொடுக்க, மலம் போகும்.

(10) நீர் கட்டினுல் :—எலிப் புழுக்கையும், வெள்ளரிப் பழ விதையும் சரியளவெடுத்துத் தண்ணீரால் அரைத்துக் குழந்தையின் அடிவயிற்றிற் பூசினுல், நீர் நன்ருய் இறங்கும், பாலும் செவ்வையாய் உண்ணும்.

(11) தோடமானுல் :—மஞ்சள் துத்திவேரை (ஞாயிற்றுக்கிழமையில்) தூபதீபங் கொடுத்து அருமற் பிடுங்கித் தூய்மையான இடத்தில் வைத்துத் தோடந்தீர் மந்திரத்தை 108 முறை உன்னி, அரை அங்குல அளவு துண்டு பண்ணி, அதன்மேல் மஞ்சள் நூலைச் சுற்றிக் குளிசஞ்செய்து குழந்தைக்குக் கட்டினுல், தோடம் நீங்கும்.

(௩,௪,௫)

## கிரந்தி.

மேலே சொல்லப்பட்ட நோய்களைப் போலவே குழந்தைகள் பிறந்த நாள் தொட்டு வருவது கிரந்தி என்னும் ஒரு வகை நோயாம். அதைக் கரப்பான் எனவுஞ் சிலர் சொல்லுகிருர்கள். அது தவறு. அதைப் பின்னரறிக. கிரந்தி—குழந்தை பிறந்த அன்று முதல் மூன்று திங்கள்காறும் வரக்கூடிய நோயாம்.

## கிரந்தி வகை

'செங்கிரந்தி கருங்கிரந்தி செவ்வாப் புத்தான்
தீயான கறுப்பானு மறையிற் காணும்
அங்கமெல்லாஞ் செவ்வாப்புச் சிவந்து காணும்
அஃதன்றிக் கருங்கிரந்தி தொண்டை கட்டும்.'

(பொ-ரை.)—மேற் சொல்லப்பட்ட இந்நோய் செங்கிரந்தி, கருங்கிரந்தி என இருவகைப்படும். அவற்றிற் செங்கிரந்தி செவ்வாப்பெனவும், கருங்கிரந்தி கறுப்பானெனவுஞ் சொல்லப்படுவனவாம். இவையிரண்டும் அறையிலேயே காணப்படும் நோய்களாம். இவற்றிற் செவ்வாப்பானது குழந்தையின் உடம்பு முழுமைக்கும் சிவந்த நிறம் மூடிக்கொள்வதுந் தவிர, அத்துடன் சிறு சிறு செங்கொப்புளங்களுந் தோன்றுவன.

கருங்கிரந்தி (கறுப்பான்) குழந்தை பிறந்தது முதல் (ஐந்து நாட்களுக்குள்) தொண்டையைக் கட்டிவிடுவது. இதனைச்

" செங்கிரந்தி தேகம் சிவப்பாங் கருங்கிரந்தி
பொங்கி மிடறுகட்டிப் போகுமே." என்பதாலுணர்க. (௬)

கிரந்திகள்—முக்குற்றங்கள் கலப்பால் வருமெனல்.

வெண்பா.

எல்லாக் கிரந்தி யெழும்வாத பித்தமொடு
பொல்லாத சேத்மத்தாற் பொங்கிவரும்—வில்லான
நீள்புருவத் தாளே நிறைந்த செயற்கறுப்பான்
எழ்புவியோர்க் கென்றே யியம்பு.

(பொ-ரை.)—வில்போன்று வளைந்த புருவமுடைய வயித்தியமுணர்ந்த பெண்ணே! செம்மை, கறுப்பு என்கிற எல்லாக் கிரந்திகளும் மிகுதிப்பட்ட முக்குற்றக் கலப்பாலேயே வெளிப்பட்டு வருவனவென்று இவ்வேழுலகத்தினர்க்கும் சொல்வாயாக. (எ)

இனி, அக்கிரந்திகளின் விளக்கச் செய்யுள்களை அடியிற்காண்க.

### (1) செங்கிரந்திக் குறி.

அறுசீர் விருத்தம்.

பிள்ளை பிறந்த வுடனழுது பிறகு மிடறு தனைக்கட்டி
மெள்ளப் பூனைக் குரல்போன்று விடாம னீர்மலம் வயிறூதித்
துள்ளிக் கைகால் சிவப்பேறிச் சும்மா கிடக்கு மேதென்னில்
கள்ள மான செங்கிரந்தி கருத்தா யிதனைக் கண்டுகொள்ளே.

(பொ-ரை.)—குழந்தைகளுக்குத் திருட்டுத்தனமாய் (மறைந்து) வருகின்ற செங்கிரந்தி நோயின் குறிகள் எவை என்னில், அவை : குழந்தை பிறந்தவுடன் விடாமல் ஒரே அழுகையாய் அழுது, பிறகு, தொண்டையை அழவொட்டாதபடி கட்டி மெதுவாகப் பூனைக் குரலைப்போல் ஒலி காட்டி, நீரையும் மலத்தையுங் கட்டி, வயிறூதிக் கைகால்களிற்றங்காமல் துள்ளி, கைகால் உடம்பு இவற்றிற் சிவப்பு நிறம் மிக்குண்டாய் அசைவற்றுச் சும்மா படுத்திருப்பது. (அ)

### செங்கிரந்திக்கு—மருந்து.

அறுசீர் விருத்தம்.

கோரோ சனைதான் முலைப்பாலிற் கொடுகர்ப் பூர வள்ளியிலை
நேரோ டுள்ளி தனைநருக்கி நிகருங் குன்றி மணியிலையின்

சாறு மருத்த முருங்கையிலைத் தன்சா றருத்தச் செங்கிரந்தி
தீருஞ் செம்முள் ளியினிலையைத் தினமு நீரிற் குளிப்பாட்டே.

(பொ-ரை.)—கோரோசனையை முலைப்பாலிலாவது, கர்ப்பூரவள்ளியிலைச் சாற்றிலாவது அல்லது ஓமவள்ளியிலைச் சாற்றிலாவது, வெள்ளைப் பூண்டை நருக்கிக் குன்றிமணியிலைச் சாற்றோடு சேர்த்தாவது, முருங்கைக் கீரைச் சாற்றிலாவது சிறிய அளவில் கொடுக்க செங்கிரந்தி நீங்கும். இதற்கு நாள் தோறும் செம்முள்ளிக் கீரையைப் போட்டுக் காய்ச்சிய நீராற் குளிப்பாட்டு வது முறையாம். (௬)

## (2) கருங்கிரந்திக் குறி.

### அறுசீர் விருத்தம்.

முழங்க வழுது முலையுண்ணு மூர்ச்சை யாகு முடல்வெதும்பும்
கொழுங்கண் திறவா வாய்வரட்சி கொண்டே யதரங் கறுப்பேறும்
அழுங்கி யலறுங் குரல்கம்மும் அதிக மாக வயிறூதும்
புழுங்கும் வலிக்குங் கருங்கிரந்தி பொல்லா தெனவும் புகன்றனரே.

(பொ-ரை.)—பொல்லாததாகிய கருங்கிரந்தியானது குழந்தைக்குண்டா னல் மிகக் கூச்சலிட்டு அழும், பால் குடிக்காது, எந்நேரமும் மூர்ச்சையா யிருக்கும், உடலிற் சுரங்காயும், கண் திறவாமல் மூடிக் கொண்டே யிருக்கும், வாய் வரளும், உதடு கறுப்பாகும், வருந்தி வருந்தியலறும், குரல் கம்மும், மிகுதியாய் வயிறுப்பும், வலிப்புண்டாம் என்று முன்னோர்கள் சொன்னார்கள்.

இக்குறிகளன்றி உடல் முரிமுரித்தல், உடல் விம்முதல், கண் விழித் தல், முகம் வாடிக்காணல், வயிற்றிற் புழு நிறைதல் என்னும் இக்குறிகளும் உண்டாமெனவும், இவையுண்டாயின் தீராத (அசாத்திய) கருங்கிரந்தியின் குணமென்றும், ஐந்து நாட்களில் சாதலுண்டாமெனவும் கூறுவாரும் உளர்.

## தீராக் (அசாத்திய) கருங்கிரந்தியின் குறி.

### எண்சீர் விருத்தம்.

“பாரேநீ கருங்கிரந்திக் குறியே தென்றால்
பணிபோலச் சீறியழு முலையுண் ணுமல்
ஆரேதான் முரிமுரித்துத் தேகம் விம்மும்
அரியநா வரட்சியுடன் கண்வி ழிக்கும்
வாரேதான் மலர்முகமும் வாடிக் காணும்
வல்வினையாய்க் குக்கிபுழு விளையும் பாவம்
மாரேதான் மைந்தனைந்து நாளிற் சாவான்
மகாகொடிது கருங்கிரந்தி யுரைத்தோ நாமே.”

என்னுஞ் செய்யுளாலறிக........................................(ய)

## கருங்கிரந்திக்கு—மருந்து.

### அறுசீர் விருத்தம்.

ஓணன் ரத்தம் காளவாயன் உவந்த பாலுந் தான்கொடுக்க
மூணாக் கரிய கத்தபத்தின் மூத்ர மவிரிச் சாறுசமம்
நாணு வசம்பு முள்ளியுமே நருக்கி யேரண் டந்நெய்யோ
டாணு லெரித்துக் கொடுத்திடுநீ ஆறுங் கரிய கிரந்தியதே.

(பொ-ரை.)—ஒணுன் ரத்தத்தில் ஒன்று அல்லது இரண்டு துளிகள் ஒரு சிறு பாலடை கழுதைப் பாலிற் கலந்து கொடுக்கலாம். கறுத்த கழுதை நீரும், அவிரி இலைச்சாறும் வகைக்குக் கால் படியாக எடுத்து ஒன்றாய்க் கலந்து அதில் வசம்பு, வெள்ளைப்பூண்டு இவ்விரண்டும் வகைக்குக் கால் பலம் எடுத்து ஷை சாற்றினால் அரைத்துக் கரைத்து, அதில் கால் படி எரண்ட நெய் விட்டு எரித்துப் பக்குவத்தில் வடித்து, வேளைக்கு கால் வராகனெடை வீதம் மூன்று நாள் அல்லது ஐந்து நாள் கொடுக்கக் கருங்கிரந்தி நீங்கும்.
(கக)

(வேறு)

எண்ணெய், குளிநீர்.

எண்சீர் விருத்தம்.

நெய்யுடனே விளக்குநெய் யெண்ணெய் கூட்டி
நீடுசங் கிலைச்சாறு சமனாய் விட்டுத்
தெய்யாமல் முக்கடுகை நீர ரைத்துத்
தீதில்லா ரவியில்வடித் தேயெ டுத்துப்
பையவொரு பணவெடைதா னுட்கொ டுத்துப்
பாங்குடனே மேலெங்கும் தடவி வைத்துச்
செய்யமுள்ளி கிரந்திநா யகநீர் போட்டுத்
தினமுமே குளிப்பாட்டத் தீரு மன்றே.

(பொ-ரை.)—பசுவின் நெய், ஆமணக்கு நெய், எண்ணெய் ஆகிய மூன்றையும் வகைக்குக் காற்படியாகச் சேர்த்துச் சங்கிலைச்சாறு சமன் கூட விட்டு, தோல் சீவின சுக்கு, மிளகு, திப்பிலி இவைகள் மூன்றும் வகை ஒன்றுக்கு பலம் ஒன்றாக எடுத்துத் தண்ணீர் விட்டரைத்து அவ்வெண்ணெய், சாறு இவைகளிற் கரைத்து வெயிலில் வைத்துக்கொண்டு வந்து, சாறெல்லாம் நன்றாய்ச் சுண்டின பிறகு அதைத் துணியில் வடிகட்டி வைத்துக்கொண்டு, அந்த நெய்யில் காலையில் காலையில் மூன்று குன்றியளவு குழந்தைக்கு உள்ளுக்குக் கொடுத்து உடம்பு முழுமைக்கும் தடவி வைத்துச் செம்முள்ளிச் செடியையும், கிரந்திநாயகத்தையும் சமூலமாக எடுத்திடித்துத் தண்ணீரிற் போட்டுக் காய்ச்சி யாற்றி யதை நாள்தோறும் குழந்தைக்குக் குளிப்பாட்டவேண்டும்.
(கஉ)

(வேறு)

எண்ணெய்.

மூக்கரை சாரணை முடக்கொத்தான் செந்நெருஞ்சில்
முத்தெருக்கஞ் செவியினுட னோரிதழ்த்தா மரையும்
ஆக்கமுட னீருள்ளி மயிலிறகு கூட்டி
ஆமணக்கி னெய்யிலெரித் துள்கொடுத்த பின்னர்
தாக்கிமேற் பூசிவிடு வந்தவலி நிற்கும்
தாயையும் பத்தியம் சமரசம் வைப்பாய்நீ
பூக்கமழுங் குழல்மடவாய் உமைக்கரனார் புகன்ற
புகழுரையு மிதுவாகும் புவியினுள்ள வர்க்கே.

(பொ-ரை.)—மூக்கிரட்டை வேர், சாரணைவேர், முடக்கொத்தான், செப்பு நெருஞ்சில்வேர், முத்தெருக்கஞ்செவி, ஓரிதழ்த்தாமரை, வெங்காயம்,

ம்யிலிறகு என்னும் எட்டும் வகைக்குப் பலம் கால் இடித்து ஆமணக்கு நெய் கால்படியிற் போட்டுப் பக்குவமாய் எரித்து உள்ளுக்குக் கொடுத்து மேலுக்கும் பூசிவிடு. அப்படிச் செய்தால் கருங்கிரந்தியால் வந்த வலிதீரும். அக்குழந்தையின் தாயை இச்சாப் பத்தியம் வைப்பாய், பெண்ணே! இது உமைக்கு இறைவன் சொன்னதாம். (கங)

கிரந்தி, சூலைகளுக்குச்

செம்பருத்தி நெய்.

பன்னிருசீர் விருத்தம்.

அண்டபகி ரண்டமுதற் கொண்டுமனு வுண்டுதொழு
மாமணக் கினதுநெய்சேர்
அடைவான தேங்காய்க டிருகிமுற் பாலையெடு
வலிர்செம் பருத்திநீர்சேர்
கண்டமட் பாண்டங் கலந்தடுப் பேற்றியெரி
காய்ச்சிவடி நெய்யதனிலே
கற்கமெனும் வர்க்கமவை சுக்குமுகிழ் தீர்கிராம்பு
கனிவா யுகந்தவேலம்
கொண்டசிறு திப்பிலியும் சண்டமா ருதபூரம்
குன்றுமிள கும்பொடியதாய்க்
குறையாம லிவ்வாறும் வகையோர் வராகனெடை
கூட்டிவிடு முன்னெய்யதில்
விண்டபடி யொருசங் குவந்தகுழ விக்கீய
விரைந்தோடும் நோய்கள்கேளாய்
வீறுமிரு கிரந்தியோ டறுமூன்று சூலையும்
வெட்கியோ டிப்போமரோ.

(பொ-ரை.)—உள்ளண்டம், வெளியண்டம் என்னும் உலகங்களில் வாழ்கின்ற மனிதர்கள் குடித்து அதன் நற்பயனைக் கண்டதனால் அவர்களாற் றெழப்படுகின்ற ஆமணக்குநெய் பலம் எட்டு, நன்றாய்முதிர்ந்த தேங்காய்களைத் திருகித் தனியாகப் பிழிந்த பால் பலம் எட்டு, செம்பருத்திச் சாறு பலம் எட்டு, இவற்றை ஒரு நெய் பழகிய மட்பாண்டத்திலூற்றி எரித்து பக்குவத்தில் வடித்து அதில் தோல்சீவின சுக்கு, மொக்கெடுத்த இலவங்கம், வாய்க்கு அமைந்த ஏலக்காயிலுள்ள அரிசி, சிறுதிப்பிலி, மிளகு, தூய்மை செய்த பூரம், இவை வகைக்கு ஒரு வராகனெடை தனித் தனி பொடிசெய்தெடுத்து அந்நெய்யிற்சேர்த்து நன்றாய்க்கலக்கி வைத்துக் கொண்டு, காலையில் காலையில் ஒரு சிறு பாலடை வீதம் குழந்தைக்குத் தொடர்ச்சியாக மூன்று நாள் கொடுத்துத் தாய்க்கு இச்சாப் பத்தியம் வைக்க செங்கிரந்தி, கருங்கிரந்தி, பதினெட்டுச் சூலை ஆகிய இவைகள் வெட்கமடைந்து அக்குழந்தையை விட்டு ஓடிப்போய் விடும். (கச)

இந்நோய்கள் அனைத்தும், கருவிற்றேன்றல், பாலுண்பருவத்துத் தோன்றல், பாலுங் குடித்துச் சோறுமுண் பருவத்துத் தோன்றல், சோறுண் பருவத்துத் தோன்றல் என்னும் குழவிப் பருவ நோய் நான்கில், கருவிற் றேன்றலிற் சேர்ந்தவை. ஏனெனில் இவற்றிற் பெரும்பாலன பிறந்த நாள் தொடங்கியே வருதற்பாலனவாகலான்.

அவ்வாறு பிறந்தநாள் முதல் வரும் நோய்களில் செங்கிரந்தியும், கருங்கிரந்தியும் பாலுண் பருவத்தும் உள்ளனவாயினும் அவை அப்பாலுண்

பதால் உண்டாகாமல் பிறவியிலேயே உடன்கொண்டு வரும் நோய்களா யிருக்கின்றமையால் அவையும் கருவிற்றேன்றலின்பாற்பட்டனவேயாம்.

இவை மூன்று திங்கள் நோய் என்பதை,

கறுப்பான் பிறந்த கனநா டொடங்கிக்
கறுப்பாகு முத்திங்கள் காண்.

இதனை,

" கழறுன கறுப்பான் தான் பிறவி நோக்கிக்
கண்டமுத னுடொடங்கித் திங்கள் மூன்று
புழறுன் குழவிகளை வதைக்குங் காலம்."

என்னுஞ் செய்யுளால் முன்னோர்கள் கூறி யிருப்பதாலறிக.

குழந்தைக்குக் கருவிற்றேன்று நோய் முடிந்தது.

---

# 2. தோட வகுப்பு

## தோடம்

தோடம் என்பது குற்றம். இது குழந்தைகளுக் குண்டாவது.

தொடு என்னும் முதனிலை தோடு என நீண்டு அம் என்னும் கடைநிலையைப் பெற்றுத் தான் திரியாமல், "பாடம்" என்னும் சொல்லைப்போல் 'தோடம்' என நின்ற தொழிற் பெயர் எனக் கொள்க.

தோடம் என்பது தொடுதல் என்னும் பொருள் பயந்து கண்ணுற்றெடுதல், கையாற்றெடுதல், ஊருற்றெடுதல் எனும் மூன்று பிரிவினதாம்.

இத்தோடம் ஈண்டு (1) பட்சி; (2) பறவை; (3) புள்; (4) எட்சி; (5) எச்சில்; (6) பெண்; (7) ஆண்; (8) தேரை எனத் தொகையால் எட்டாய், வகையால் பலவாம்.

### தோடத்தொகை வகை.

அகவல்.

உலகந் தன்னி லுயர்ந்த நோன்பு
பலவு மாற்றிப் பயந்த மக்கட்
குற்ற தோட மொருமுத் திங்கள்
பற்றி யாண்டு பயின்று வருத்தும்
அத்தோ டச்செய லதனை யறிந்து
மற்றோ டச்செய வயங்கித் தன்றொகை
வகைவிரி யதனை வகுத்துக் குறியும்
பகையு நன்றாய்ப் பகரக் கேண்மோ !

அதுவே :

பட்சி பறவை பகர்புள் ளெட்சி
எச்சில் பெண்ணு ணியன்ற தேரை
சீரா மிவற்றால் சேரெட் டென்னக்
கூறுந் தொகையிற் கூடும் பட்சி
ஆண்பெண் மலடலி யாகு நான்கா
யீண்டுப் புள்ளோ வீங்கல் தூங்கல்
விளக்கொளி வெங்கண் மிகுகரு டக்கண்
உளர்செங் கண்புள் ளோது வரட்புள்
பேய்க்க ணந்தி பெருகு நீர்ப்புள்
ஆய்ப்பஃ தாகு மவையு மன்றி
பெண்ணி லாறுப் பேசுவ ரவையே
நண்ணிப் பாயினில் நாடின ளூறும்
முட்டாய் நின்ற மொய்குழ லூறும்
குளிச மணியும் கொடியிடை நோக்கும்
குளித்த வவளே கொண்டதும் கண்டதும்

கருவழிந் தவளே கண்ட தும்மென
வரூஉந் தோட வகையிரு பானைந்
திப்பார் மக்கட் கினிதாய்த்
தப்பா திசைத்தார் தணிமருத் துவரே.

(பொ-ரை.)—இவ்வுலகத்தில் உயர்ந்த பல நோன்புகளைச் செய்து பெற்ற மக்களுக்கு மூன்றும் திங்களிலிருந்து ஓராண்டு வரைக்கும் துன்பத்தைச் செய்துகொண்டு வருகிற தோடத்தின் செய்கையை உணர்ந்து, அதற்குச் செய்யவேண்டிய மருத்துவங்களையும் தணிவுகளையும் செய்து நீக்குதற் பொருட்டு, அதைத் தொகுத்தும் வகுத்தும் விரித்தும், குறிகளையும் தன்மைகளையும், மருந்துகளையும் சொல்லுவேன். அதை நீ கேட்பாயாக. அத்தோடமானது—

(1) பட்சி தோடம்; (2) பறவைத் தோடம்; (3) புள் தோடம்; (4) எட்சித் தோடம்; (5) எச்சில் தோடம்; (6) பெண் தோடம்; (7) ஆண் தோடம்; (8) தேரைத் தோடம் என எட்டாம்.

இவ்வெட்டில் பட்சிதோடமானது—(1) ஆண் பட்சி தோடம், (2) பெண் பட்சி தோடம், (3) மலட்டுப் பட்சி தோடம், (4) அலிப் பட்சி தோடம் என நான்கு வகைப்படும்.

புள் தோடமானது—(1) வீங்கு புள் தோடம், (2) தூங்கு புள் தோடம், (3) விளக்கொளிக்கண் புள் தோடம், (4) வெங்கண் புள் தோடம், (5) கருடக்கண் புள் தோடம், (6) செங்கண் புள் தோடம், (7) வரட் புள் தோடம், (8) பேய்க்கண் புள் தோடம், (9) அந்திப் புள் தோடம், (10) நீர்ப் புள் தோடம் எனப் பத்து வகைப்படும்.

பெண் தோடமானது—(1) கணவனோடு கூடினவள் குளித்துத் துணி முதலியவை களையாத முன் உண்டாம் ஊறு தோடம், (2) தூரப் பெண் ஊறு தோடம், (3) பிள்ளையை விரும்பிக் குளிசம் கட்டிக் கொள்ளுங் காலத்தில் நேர்ப்படும் குழந்தையைப் பார்த்தலிற் றோடம், (4) தூரமாய்த் தூய்மைக் குளியல் செய்தவுடன் பார்க்கும் தோடம், (5) எடுக்குந் தோடம், (6) சூலுள்ளவள் ஈனாது அச்சூல் அழிந்துபோன அப்பொழுது பார்க்குந் தோடம் என ஆறு வகைப்படும்.

ஆகப் பட்சியால் 4, பறவையால் 1, புள்ளால் 10, எட்சியால் 1, எச்சிலால் 1, பெண்ணால் 6, ஆணால் 1, தேரையால் 1 எனத் தோடம் இருபத்தைந் தாகும்.

ஈண்டு பட்சி, பறவை, புள் என்பன ஒரு பொருளையே கொடுக்கக்கூடிய இருமொழியிலும் விரவிய சொற்களேனும் பறவைகளின் பெருமை, சிறுமை, நடுமைகளை உணர்த்தற்கே அவ்வாறு மூன்று சொற்களாகப் பாகுபடுத்தினரென்க.

அன்றியும், இத்தோடங்களில் வரும் குறிகளும், தன்மைகளும், செயல்களும் கருப்ப மாந்தத்திலும், பிறவற்றிலும் காணப்படுகின்றமையின், அந்நோய்களில் ஒன்றெனக் கூறாது தோடம் எனக் கூறுவ தேனென்பர். அவர்கள் ஒரு நோயில் வருங்குறிகளில் பெரும்பாலனவே வேறொரு நோயினும் வர, அவ்விரண்டையும் ஒரு நோயெனக்கூறாமல் பகுத்துணர்ந்து வெவ்வேறு நோயெனச் சில காரணங்கொண்டு கூறுதல்போல, இது தோடக்குறிகளெனவும், இது நோய்க் குறிகளெனவும் உய்த்துணர்ந்தறிதல் வேண்டும். அன்றி, அவ்விருவகைக்குறிகளும் எக்காரணங்களால் ஏற்பட்டனவேனும், உடலையும் உடற்கருவிகளையும் பற்றி வெளியிற் காணப்படுவனவேயன்றி, உடலையின்றி எக்குறிகளும் காணப்படுவதில்லை யாதலின் என்றறிக.

உணவு மாறுதலால் உண்டாதல் அகக் காரணமும், செயல் மாறுதலால் உண்டாதல் புறக்காரணமுமாக நோய் வருதல், மருத்துவர்களும் மற்றை யோரும் உணர்ந்ததேயாம்.

எவ்வாறெனில், உலகத்தில் ‘ என் பிள்ளை மழையில் நனைந்தான், நோய் வந்ததென்றும், வெயிலில் திரிந்தான் நோய் வந்ததென்றும், காற்றிற் படுத்தான் நோய் வந்ததென்றும் ’ கூறுதல் மரபாயிருக்கின்றது. ஆகை யால் இங்கு கூறப்பட்டது, புறக்காரணத்தில் தன் செயல் என்றறிக.

இனிப் புறக்காரணத்தில் பிறசெயலுமுண்டு. அது, நச்சுப் புழுக்கள், நச்சுப் பொருள்கள் எச்சம் இடுவதாலும், நீர் பெய்வதாலும், ஊறு செய் வதாலும் நோய் உண்டாதலென வறிக.

புறக்காரணத்தில் தன் செயலும், பிற செயலும் விரவிய காரணமும் உண்டு.

அது, ஆட்டு மந்தையிடைச் செல்லல், பாம்பு, விலங்கு முதலியவை மிகுதி யாகச் சேர்க்கப்பட்டிருக்கும் இடங்களிற் செல்லல் முதலிய தன் செயலோடு அப்பொருள்களின் பிற செயலாலுண்டாம் கெட்ட மணம் முதலிய கலத்தல்.

இம்மூன்று பாகுபாடுகளில் புறக்காரணத்தில் தன் செயல், பிற செயல் களே அனுமத்தாக (ஆகந்துகம்) திடீரென உண்டாகும் நோய்களாம்.

இவையன்றி, நோய் நீங்கு வகையில் பாரிசவாயு கொண்டான் ஒருவன் புறுவை வளர்த்தோ, புறுக்கள் உள்ள விடத்துச் சென்றோ அக்காற்றைப் பெற்றுத் தன்னேயை ஒருவாறு போக்கிக் கொள்வதைக் கண்கூடாகப் பார்த்திருக்கிறோம். அவ்வாறு நன்மை செய்த அப்புறுவின் காற்றே பித்த நோயுள்ளவனுக்காயினும், பித்தவுடம்பினனுக்காயினும் படுமானல் மயக்க முதலியவை உண்டாய் வருந்துவன்.

இவ்வாறான வகைகளால் நோய் கொண்ட மேற்படி பட்சிகள் முதலாகச் சொல்லப்பட்டவைகளின் காற்று அதிகாலே, முன் மாலேகளில் வெளிவரும் குழந்தைகள்மேற் படுமானல், அவை தோடஞ் செய்யும் என்பது துணிவாம். (கரு)

## பட்சிதோடத் தொகை.

குறள் வெண்பா.

ஆண்பெண் மலட்டோ டலிப்பட்சி நான்கென்று
காண்பட்சி தோடங் கணி.

(பொ-ரை.)—பட்சி தோடமானது ஆண் பட்சி தோடம், பெண் பட்சி தோடம், மலட்டுப் பட்சி தோடம், அலிப்பட்சி தோடம் என நான்கு வகைப் படுமென்று அதன் தொகையைக் கணிப்பாயாக. (கசு)

## பட்சிதோடப் பொதுக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

உதகமாய்க் கழிவ தன்றி உவாந்தியு மிகஉண் டாகி
இதமொடு தலேயெ டாமல் இருகண்ணில் பீளை கட்டி
விதவித மாக மேனி வெதும்பியே பேய்போல் சீறும்
பதமிது முனிவன் சொன்ன பட்சியின் தோடந் தானே.

பெருகி வயிறு தான்போகும் பேதம் உப்பும் கண்குழியும்
பெருகுங் கழுத்து முகஞ்சிறுக்கும் பெரிய குரல்போல் சீறியழும்
அருவி முலையும் உண்ணுது அலறுந் தண்ணீர் குடியாது
பருவ விடையோன் தானறியப் பகரும் பட்சி தோடமிதே.

(பொ-ரை.)—பட்சிதோடப் பொதுக் குறிகுணங்களாவன : சில குழந்தைகளுக்கு வயிறு உப்பல், சிலர்க்கு அவ்வுப்பலுடன் தண்ணீர் தண்ணீராய்ப் பேதியாதல், அப்படியே பலதடவை வாந்தியெடுத்தல், இவ்விரண்டினுலும் கண்கள் குழிவிழுதல், அத்துடன் கண் நிறையப் பீளை கட்டல், கழுத்து நேர்தல், முகஞ்சிறுத்தல், தலையை நிமிர்த்தமுடியாதபடி பளுவுடன் நோதல், பால்பிடித்துக் குடியாமை, தண்ணீர் குடியாமை, பலபலவிதமாக உடம்பு காய்தல் (ஒருவேளை காய்தல், ஒருவேளை இல்லாமை, ஒருவேளை அதிகமாய்க் காய்தல், ஒருவேளை கொஞ்சமாய்க் காய்தல், ஒருவேளை சிறு வேர்வையுடன் காய்தல்), பேய்பிடித்தவர்போல் சீறுதல், ஒரு வேளை அச் சீறலுடன் பெருங்குரல் எடுத்தழுதல், அலறுதல் என்பனவாம். இது இறைவன்மேல் ஆணையாக அகத்தியரால் கூறப்பட்டது. (கஎ)

## பட்சி தோடத்திற்கு—குளிசமும் மருந்தும்.

அறுசீர் விருத்தம்.

பட்சியின் தோடந் தீரப் பனையின்வேர்க் குளிச மாடி
உச்சித மணித்தக் காளி உவந்திடும் வேரோ டுள்ளி
பிச்சியின் வேரோ டெண்ணெய் பிசைகதிர்ப் புடமே செய்து
உச்சியி லிட்டுப் பின்னும் உள்ளுக்குங் கொடுத் திடாயே.

(பொ-ரை.)—பட்சி தோடந் தீர்வதற்குப் பனைமரத்தில் வடக்கேசெல்லும் வேரைத் தூபதீபங்கொடுத்து அறுமறப்பிடுங்கி, அதை வேண்டிய அளவு துண்டாக்கி ஐந்து நிறமுள்ள நூல்சுற்றி உச்சரிக்கவேண்டிய மந்திரத்தைச் சொல்லிக் குழந்தைக்கு அரைஞாணிலாவது கழுத்திலாவது கட்டவேண்டும். மேலும்,

மணித்தக்காளிவேர், வெள்ளைப்பூண்டு, பிச்சிவேர் இவைகள் வகைக்குக் கால் வராகனெடை எடுத்துத் தனியாய் ஒன்றும் விடாமலரைத்து, அது கொள்ளும் அளவு நல்லெண்ணெய்விட்டுப் பிசைந்து வெயிலில்வைத்து, அக்குழந்தையின் உச்சியில்தடவி, காலைமாலை இருவேளையும் மூன்று நாளைக்கு, வேளைக்கு இரண்டு குன்றியளவு கொடுத்தால் பட்சிதோடம் தீரும். (கஅ)

## பட்சி தோடத்திற்கு—குளிசமும் சாந்தியும்.

எண்சீர் விருத்தம்.

காணவே செப்பேடு தகடு வாங்கிக்
 கண்மணியே எண்கோணம் அதன்மேல் வட்டம்
பூணவே சிங்ஹ்ரீயும் ஸ்ரீயுஞ் சவ்வும்
 பூட்டியே எண்கோணம் அதிலே யூன்று
தோணவே நான்சொல்வேன் தரும மாகத்
 தூக்கான ஐயுமென்று நடுவிற் போடு
மாணவே போட்டதிலே ஐந்து நூலால்
 மகிமையாய்ச் சுற்றி நன்றாய்க் குளிசமாடே.

ஆடுகிற உழுந்துடனே யரிசி போட்டே
யச்சமறச் சமைத்தொரு பாண்டந் தன்னில்
வாடுகிற எருக்கிலையில் சாதம் வைத்து
வளமாக மூவிளக்கு மாவா லேற்றி
நாடவே மந்திரத்தால் நூற்றெட் டோதி
நயமாகச் சாந்தி செய்து குளிசங்கட்டு
பாடுகிற தில்லையந்தப் பட்சி தோடம்
பலத்தநோய் பறந்தோடும் வித்தை தானே.

(பொ-ரை.)—ஒரு அங்குலச் சதுரமுள்ள செப்புக் குளிசத்தகடு எடுத்து அதைத் தூய்மை செய்து அதில் எட்டுக்கோண சக்கரங்கீறி, அச்சக்கரத்தின் மேல் சுற்றுவளையம் ஒன்று கீறி, அவ்வெண்கோணத்தில் சிங், ஹ்றீம், ஸ்ரீயும், சவ்வும் என்பவைகளைச் சுற்றிப்போட்டு நடுவில் ஐயும் என்பதைப் போட்டு, அதைச் சிறுகச் சுற்றி மஞ்சள்பூசி ஐந்துநிறமான நூல்சுற்றிக்கட்டி வைத்துக்கொள்ளவேண்டும். பிறகு, பச்சரிசி ஒரு பங்கு, முழு உளுந்து கால் பங்கு கூட்டிச் சமைத்து ஒரு மண் பாண்டத்தில் எருக்கிலை பரப்பி, அதில் அவ் வுளுந்து பொங்கலைவைத்து அத்துடன் பச்சரிசி மாவால் மூன்று விளக்கு செய்து, அதில் நெய்விட்டு நூல்திரிபோட்டு விளக்கேற்றி அத்துடன் மேற்படி குளிசத்தை வைத்துத் தூபதீபங்காட்டி, நூற்றெட்டு மந்திரம் ஓதிக் கர்ப்பூரங் கொளுத்தி அச்சட்டியில் வைத்துக் குழந்தையைத் தாய்மடியில் வைத்துக் கொண்டு கிழக்குமுகமாக உட்காரவைத்து, மூன்றுதரம் குழந்தை முகத்தின் நேரிலிருந்து சுற்றிச் சாந்திசெய்து அக்குளிசத்தை குழந்தைக்குக் கட்டிவிட வேண்டும். இப்படிச் செய்தால் பட்சி தோடம் நீங்கும். (கக)

## (1) ஆண் பட்சிதோடக் குறிகுணம்.

நேரிசை வெண்பா.

ஆண்பட்சி தோடம் அறையக்கேள் நீர்வேட்கை
காண்யாக்கை மிக்குலரல் கண்குழிதல்—மாண்பாக
வீழ்தல்நா நீட்டல் மிகுபேதி யுண்டாதல்
தாழ்தல் குரலொலியுந் தான்.

(பொ-ரை.)—ஆண்பட்சி தோடக்குறிகளாவன: நீர்வேட்கை மிகல், உடம்பு மிகுதியாகவுலரல், கண்கள்குழிவிழுதல், நாக்கைப் பலமுறையும் நீட்டி நீட்டி உள்வாங்கல், மிக்க பேதியாதல், குரல் தாழ்தல் என்பவைகளாம். (உ0)

## (2) பெண்பட்சிதோடக் குறிகுணம்.

நேரிசை வெண்பா.

பெண்பட்சி பேதியழல் பேண்தாகம் சீறியழல்
கண்சொருகல் சீதம் கடுப்புவிக்கல்—கண்ணேய்
உடல்நடுக்கல் வாயினீ ருண்ணுபால் தோலோ
கடகரிகீழ் வாய்பிதுங்கல் காண்.

(பொ-ரை.)—பெண்பட்சித் தோடத்தின் குறிகளாவன: பேதியாதல், உடம்பு கொதித்தல், நீர்வேட்கை, சீறிச்சீறி அழுதல், கண்சொருகல், சீத பேதி, வயிறுகடுத்தல், விக்கல், கண்ணோய், உடல் முழுமையும் நடுக்கல், வாயின்நீர் சுரத்தல், பால் உண்ணாமை, தோல்கறுத்தல், மலவாய் வெளிப் படல் என்பவைகளாம். (உக)

## (3) மலட்டுப்பட்சிதோடக் குறிகுணம்

நேரிசை வெண்பா.

பார்மலட்டுப் பட்சி பகரிலிளைப் புச்சிகுழி
பேர்வாந்தி யாயாசம் பேதியும்—கூர்ந்ததொரு
நீர்வேட்கை மிக்காதல் நேர்ந்தவுடல் முற்றிலும்
ஆர்காங்கை யாதலுமே யாம்.

(பொ-ரை.)—மலட்டுப்பட்சி தோடக்குறிகளாவன : உடல் இளைத்தல், உச்சி குழிவிழுதல், மிக்கவாந்தி, ஆயாசம், பேதியாதல், மிக்கநீர்வேட்கை, உடல் முழுமைக்கும் கொதித்தல் என்பவைகளாம். (உஉ)

## (4) அலிப்பட்சிதோடக் குறிகுணம்.

நேரிசை வெண்பா.

அலிப்பட்சி தோட மறையவே தோளில்
கலிமுதுகு கண்டமுழங் கையில்—நலமாய்க்
குழிவிழுத லுச்சி கொடுவாந்தி யாதல்
கழிதல்மிக வாந்தாகங் காண்.

(பொ-ரை.)—அலிப்பட்சி தோடக்குறிகளாவன : தோள், முதுகு, கண்டம், முழங்கை இவற்றில் குழிவிழுதல், உச்சி பள்ளம்விழுதல், கொடுமையாக வாந்தியாதல், மிகக்கழிதல், தாகம் என்பவைகளாம். (உங)

## பறவைத்தோடக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

குஞ்சியின் உடம்பு நொந்து குடல்தனில் பாலுந் தங்கா
நெஞ்சையுஞ் சுழியாய் வாங்கும் நெற்றியும் வலிப்புண் டாக்கும்
துஞ்சிடும் போது சற்றே துணுக்கென வலித்துச் சீறும்
பஞ்சின்மெல் லடியி னுளே பறவையின் தோடந் தானே.

குடித்தபால் எதிரெ டுக்கும் குழிந்திடுந் தலையுங் கண்ணும்
அடிக்கடி திடுக்கிட் டேங்கும் அகமதில் தாக மாகும்
எடுத்திடக் கையில் தங்கா எதிரிளைப் பெடுக்கும் பிள்ளை
கடுத்துடன் வயிறு போகும் கருதுநீ பறவைத் தோடம்.

உச்சி மூளை தனைப்பற்றி உடலம் எங்கும் வெதுப்புண்டாம்
எச்ச மாக நாவுலர்ந்து இரண்டு கண்ணும் வெளுப்பெய்தும்
பச்சை மஞ்சள் முறித்தாற்போல் பசும்பொன் னிறமாம் முகமினுக்கும்
இச்சை புரியுங் குழல்மாதே இதுவே பறவைத் தோடமன்றே.

(பொ-ரை.)—குழந்தை உடம்புநோதல், குடித்தபால் பக்குவப்படக்கூடிய குடலிற்சென்று சரியாய்ச் செரிக்காதமுன் செரித்ததும் செரிக்காததுமாய் வாந்தியாதல், மூச்சு வாங்கல், நெற்றி நோதல், தூங்குங்காலத்தில் திடீரென்று கொஞ்சநேரம் வலியுண்டாய்ச் சீறல், குடித்தபால் உள்ளே செல்லாதமுன்னரே அவ்வாறே வாந்தியாய்விடுதல், (தலையிலுள்ள) உச்சி பள்ளம் விழுதல், கண் குழிவிழுதல், அடிக்கடி திடுக்கிடல், ஏங்குதல், நீர் வேட்கை, குழந்தை கையில் தங்காமை, முன்பக்கம் இளைத்தல், வயிறு கடுத்துப் பேதியாதல், உச்சியிலுள்ள மூளையைப்பற்றி அங்கிருந்து உடம்பு

முழுமைக்கும் சுரமடித்தல், நாவுலர்தல், இரண்டு கண்களும் வெளுத்தல், முகம் பச்சைமஞ்சளை யொடித்தாற்போல் மஞ்சள் நிறமாய் மினுமினுத்தல் என்னும் இவைகள் பறவைத் தோடக்குறி குணங்களாம். (உச)

பறவைத்தோடத்திற்கு—ஆல்குளிசம், சீரகக்குடிநீர்.

அறுசீர் விருத்தம்.

பறவையின் தோடந் தீரப் பயனுரைத் திடுவே னிந்தத்
துறையைநீ கேளா யாலின் துளிர்தனைக் குளிச மாடித்
திறமைச்சீ ரகமீ ருள்ளி திகழ்வரட் பூலா வேரும்
உறவதாய்க் காய்ச்சி யேதா னுறுபிணிக் குழவிக் கீயே.

(பொ-ரை.)—ஆலின் துளிரை முன்சொன்ன முறைப்படி குளிசஞ்செய்து குழந்தைக்குக் கட்டி சீரகம், வெங்காயம், வரட்பூலாவேர் இவைகளைச் சரி எடை எடுத்து இடித்துக் குடிநீர் விதிப்படி காய்ச்சிக் காலைமாலை இருவேளை யாக மூன்று அல்லது ஐந்து நாள் வேளைக்கு ஒரு சங்காகக் கொடுக்கப் பறவைத் தோடம் நீங்கும். (உரு)

பறவைத் தோடத்துக்கு—குளிசமும் சாந்தியும்.

அறுசீர் விருத்தம்.

வருத்தம் வெள்ளைக் குன்றிக்கு வளமாய்ப் பலியும் பொங்கலிட்டு
மறுத்த சாபம் நிவர்த்திசெய்து மகிமை வடக்கின் வேர்வாங்கிக்
கறுத்த செவ்வாய் நாளதுதான் கனக மதனிற் குளிசமிட்டுக்
கருத்த குளிசத் தூட்டியுடன் கழிப்புங் கூடக் கழித்திடுமே.

(பொ-ரை.)—செவ்வாய்க்கிழமையன்று வெள்ளைக்குன்றிமணிச் செடிக் குப் பலிகொடுத்துப் பொங்கலிட்டு, அதற்குரிய சாபத்தைப்போக்கி வடக்கே போகிற வேரை எடுத்து வேண்டிய அளவு துண்டித்து, ஐந்து நிறமுள்ள நூல்சுற்றிப் பொன்னுற் செய்யப்பட்ட தாயத்தில்போட்டுத் தூபதீபங்காட்டிக் குழந்தைக்குக் கட்டிக் கழிப்பு சாந்தி செய்தால், பறவைத்தோடம் தீரும். (உசா)

## புள்தோடத் தொகை.

அறுசீர் விருத்தம்.

வீங்குபுள் தூங்கு புள்ளும் விளக்கொளிக் கணன்வெங் கண்ணன்
தீங்குசொல் கருடக் கண்ணன் செங்கணன் வரட்புள் தோடம்
பாங்குபேய்க் கண்ண னந்திப் புள்நீர்ப்புள் பத்துப் புள்ளும்
ஈங்குள குணங்கள் காண இன்னன விசைக்கின் றேமே.

(பொ-ரை.)—வீங்குபுள், தூங்குபுள், விளக்கொளிக்கண்புள், வெங்கண் புள், கருடக்கண்புள், செங்கண்புள், வரட்புள், பேய்க்கண்புள், அந்திப்புள், நீர்ப்புள் என்று புள் தோடம் பத்து வகைப்படும். இவற்றின் குறி குணங் களைப் பின்னர் சொல்லுகின்றேம். (உஎ)

புள்ளின் தோடப் பொதுக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

உச்சி கண்ணுந் தான்குழியும் உண்ணும் பாலுந் தங்காது
பச்சை நிறம்போல் வயிறுவிடும் பறவைக் குரல்போற் சீறியழும்
எச்ச மிளைக்குந் தண்ணீரை எடுத்துக் குடிக்கு மெய்மறக்கும்
கச்சை யணிந்த முலைமாதே காணும் புள்ளின் தோடமிதே.

(பொ-ரை.)—குழந்தையின் உச்சியும் கண்ணும் குழிவிழுதல், குடிக்கும் பாலைக் கக்கி விடுதல், பச்சை நிறமாக வயிறு கழிதல், பறவையின் குரலைப்போலச் சீறிச்சீறி அழுதல், தேகம் இளைத்தல், தண்ணீரைத் தானே எடுத்துக் குடித்தல், அறிவில்லாமல் சோர்ந்து கிடத்தல் என்பவைகள் புள்ளின் தோடப் பொதுக்குறிகளாம். (உஅ)

புள்ளின் தோடத்திற்கு—பொது மருந்து.

அறுசீர் விருத்தம்.

புள்ளின் தோடம் தீரச்சிறு புள்ளடிவேர்க் குளிசஞ் செய்து
மெள்ள ஓரிதழ்த் தாமரையும் வெந்தய முடனே விடத்தேரும்
எள்ளத் தோரள வாய்மிளகும் இதமா யதனைக் குடிநீராய்
உள்ளத் தோர்மன தாகியநீர் உண்டிட நன்றென ஓதுமிதே.

(பொ-ரை.)—சிறுபுள்ளடி வேரை வேண்டிய அளவு துண்டித்து அதன் மேல் ஐந்து நிறமுள்ள நூலைச்சுற்றிக் குளிசமாகச் செய்து தூபதீபங்கொடுத்துக் குழந்தையின் இடுப்பிலுள்ள அரைஞாணில் கட்டவேண்டும். பின்னர் ஓரிதழ்த்தாமரை, வெந்தயம், விடதாரி இலை, மிளகு இவைகளை ஒரேயளவாய் எடுத்து (வகைக்குக் காற்பலம்) இடித்து ஒரு மண்சட்டியில் இட்டு அதில் கால்படி தண்ணீர்விட்டு அரையாழாக்காகக் காய்ச்சி வேளைக்கு இரண்டு சங்கு அளவாக இரண்டு வேளையும் மூன்று நாள் கொடுத்தால், புள் தோடம் நீங்கும். (உகூ)

(1) வீங்கு புட்தோடக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

வீங்குபுட் டோடமப் புள்வீங்க லெனவுடல மிகக்க னத்தல்
ஓங்குதலை யுச்சிகுழி யாதல்நா வுலருதல் உற்ற பால்போல்
தாங்குபித் தத்துடன் வாந்திபச் சென்னவும் சார்பா லெனவும்
வாங்குதல் பேதிபின் கையால்மு கந்தடவல் மருவு குறியே.

(பொ-ரை.)—வீங்குபுள்ளின் தோடமானது அந்தப் புள் வீங்கிக்கனத்தல் போல் குழந்தையின் உடம்பு கனத்தல், தலையில் உச்சி குழிவிழல், நா தண்ணீரில்லாமல் உலர்தல், பாலைப்போல் வெண்மையாகவும் பித்தநீர்போல் மஞ்சளாகவும் வாந்தியாதல், பச்சை நிறமாகவும், பால்நிறமாகவும் பேதியாதல், பின்கையால் தன்முகத்தைத் துடைத்துக் கொள்ளல் என்னும் இக்குறி குணங்களையுடையதாம். (௩௦)

வீங்குபுள் தோடத்திற்கு—அதிமதுர மாத்திரை.

அறுசீர் விருத்தம்.

மதுர முத்த மதிவிடய மானே கடுக்காய் மாவசம்பு
உதிருந் தேவ தார்மஞ்ச ளுடனே வகைக்கே யோரளவாய்
அதிருங் குறிஞ்சிப் பொடுதலைச்சா றதனு லரைத்தே வுண்டைசெய்து
சதுர முலைப்பால் தன்னிலிடத் தரியா வீங்குபுள் தோடமதே.

(பொ-ரை.)—அதிமதுரம், கோரைக்கிழங்கு, அதிவிடயம், கடுக்காய்த்தோல் ஆண் வசம்பு, தேவதாரம், மஞ்சள், இவைகள் வகைக்குக் கால் பலமாய் எடுத்திடித்துக் கல்வத்திலிட்டு, மலை நிலத்தில் விளைகின்ற பொடுதலைச் சாற

றுல் நான்கு சாமம் நன்றுயரைத்து மிளகளவு மாத்திரை செய்து நிழலில் உலர்த்தி, வேளைக்கு ஒரு மாத்திரையாகக் காலை மாலை இரண்டு வேளையும் மூன்று நாள் முலைப்பாலில் கொடுத்தால், வீங்கு புள் தோடம் தீரும். (௩௧)

## (2) தூங்குபுள்தோடக் குறி குணம்.

பதினான்குசீர்க் கழிநெடிலடி விருத்தம்.

தூங்குபுட் டோடமது தோன்றுகுறி தன்மைசெயல்
 தொகுதியா யுரைசெய் திடின்
தூங்கலரை விழியிலப் புட்பார்ப்ப தென்னவத்
 தூக்கம்விட் டலறி யெழுதல்
தாங்குகண் ணிருண்டுமே லிமையினுள் ளேசொருகல்
 தாங்கொணுக் கழிதல் வாந்தி
தகுமுகம் பலமுறைத் திருமியே பார்த்திடல்
 சார்பயத் தழுதல் மிகவாய்

ஆங்கிருப் பதிலிருந் தெழல்முரட தாகவே
 யருந்தனீர் பற்க டித்தல்
அடிப்பார்வை பார்த்தல்சோர் வுடல்மயக் கந்தலை
 யதனுச்சி பள்ள மாதல்
வாங்கிடுதல் மேல்மூச் சிளைத்தலுடல் முகமாறல்
 வருதலிவை காணு முலகர்
மனமிக வருந்துவர் தீர்ந்திடாக் குறியென்று
 வகையறிந் துரைப்பை யாலோ.

(பொ-ரை.)—தூங்குபுள்ளின் தோடத்தில் உண்டாகின்ற குறிகள், தன்மைகள், செயல்கள் முதலியவற்றைத் தொகுத்துச் சொன்னால், அத்தூங்குகின்ற புள்ளைப் போலவே குழந்தை அரைக்கண் திறந்தபடி தூங்கல், உடனே அத்தூக்கங்கெட்டு அலறி எழுந்திருத்தல், கண்களிரண்டும் இருண்டு மேலிமைக்குள் சொருகிக் கொள்ளல், பொறுக்கமுடியாத பேதி, வாந்தி, கண்டவர்கள் முகத்தையாவது தாய் தந்தையர் முகத்தையாவது பலமுறை திரும்பித் திரும்பிப் பார்த்தல், பயப்பட்டழுதல், உட்கார்ந்திருந்தாலும் படுத்திருந்தாலும் அவற்றை விட்டுத் திடீரென்று முரட்டுத் தனமாய் எழுந்திருத்தல், நீர் அடிக்கடி குடித்தல், பல்லை நரநரவென்று கடித்தல், கீழ்ப் பார்வையாகவே பார்த்தல், உடல் சோர்வடைதல், மயக்கம், தலையினுச்சி பள்ளம் விழுதல், மேல் மூச்சு வாங்கல், உடல் இளைத்தல், முகக்குறி மாறி வேறுபடல் என்னும் இவைகளாம். இக்குறிகளைக் கண்டு மருத்துவம் உணராத உலகர் இவை தீராக்குறிகளெனக் கொண்டு மனம் வருந்துவர். ஆகையால், அவர்களுக்கு நீ 'இவை தோடக்குறிகள். இது தீரும்' என்று சொல்லுவாயாக. (௩௨)

### தூங்குபுள் தோடத்திற்கு—கோரோசனை அரைப்பு.

அறுசீர் விருத்தம்.

வீசுந் தணிய ரோசனமும் மேவு மஞ்சள் வசம்பேலம்
வாச வேம்பின் ஈர்க்கோடு வகையாய் ஓமம் விளாவோடு
பாச மதுவாய் அரைப்பரைத்துப் பாலற் காட்டி நூற்றெட்டு
கோச மோதிச் சாந்திசெயக் குடிபோந் தூங்கு புட்செயலே.

(பொ-ரை.)—கோரோசனம், மஞ்சள், வசம்பு, ஏலம், வேப்பீர்க்கு, ஓமம், விளாவோடு, இவற்றைச் சரி எடையாக எடுத்து நீர் விட்டு அரைத்துக் குழந்தைக்குப் பூசி ஊரவைத்துத் தனி வெந்நீர் இளஞ் சூடாகத் தலைமுழுக வைத்துத் தோட மந்திரத்தை 108 முறை சொல்லிச் சாந்தி செய்ய மேற்படி தூங்கு புள் தோடம் நீங்கும். (௩௩)

தூங்குபுள் தோடத்திற்கு—வௌவால் இறகு குளிசம், வில்வவேர்க் கற்கம்.

அறுசீர் விருத்தம்.

வவ்வால் சிறகு தன்னிலூ மத்தம் அறுகம் வேர்சுருட்டிச்
செவ்வாய்க் கன்னிப் பெண்ணூற்ற நூலைச் சிறகு தனில்சுற்றிக்
கவ்வாய்ப் புனலும் சொரிகுளிசம் கட்டிக் கோழி பலிகொடுத்து
நவ்வி வில்வ வேரரைத்து நாட்டிற் றூங்கு புள்போமே.

(பொ-ரை.)—வேண்டிய அளவு வௌவால் சிறகில் ஊமத்தம் வேரையும் அறுகம் வேரையும் வைத்துச் சுருட்டிக் கன்னிப்பெண் நூற்ற நூலால் கட்டிச் சுற்றிச் செவ்வாய்க்கிழமையன்று கோழி பலிகொடுத்துக் குழந்தைக்கு அக்குளிசத்தைக் கட்டி வில்வவேரை அரைத்து ஒரு பணவெடை காலை மாலையாக மூன்று அல்லது ஐந்து நாள் பாலில் கலக்கிப் புகட்ட மேற்படி தூங்குபுள்தோடம் தீரும். (௩௪)

## (3) விளக்கொளிக்கண் புள் தோடக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

குடித்தபால் எடுக்கும் மெய்யும் கூர்மையாய்க் காயும் ஓயும்
அடிக்கடிக் காயும் அன்றி அரியதாய்ச் சிந்தை நோக்கும்
பிடித்துநல் முலையுண் ணுது பெருவிடாய் கொண்டு சோரும்
விடுத்திடும் விளக்கை நோக்கா விளக்கொளிக் கண்ணன் தானே.

(பொ-ரை.)—குழந்தை விளக்கொளியைப் பார்க்க முடியாமல் கண் மூடல், தான் உண்ட பாலை உடனே கக்குதல், சுரம் அதிகமாயும், விட்டு விட்டும் காய்தல், ஓய்ச்சல் உண்டாதல், தாயின் முகத்தை அடிக்கடி பார்த்தல், முலை யுண்ணுமை, பெரும் விடாய் கொண்டு சோர்ந்து படுத்தல் என்பவைகள் விளக்கொளிக்கண் புள் தோடக் குறி குணங்களாம். (௩௫)

விளக்கொளிக் கண்புள் தோடத்திற்கு—சின்னிக் குளிசம்.

நேரிசை வெண்பா.

சின்னிவசம் புள்ளி சிறுவிளா தானுங்கும்
நன்றாக வேமுடிந்து நற்சீலை—தன்னாலே
மார்பில் படக்கட்ட வாரா விளக்கொளிக்கண்
காரிழையாய் சொன்னதிது காண்.

(பொ-ரை.)—சின்னி, வசம்பு, உள்ளி, நிலவிளா இவைகளை ஒரு சீலையில் முடிந்து குழந்தையின் மார்பில் படும்படியாகக்கட்டிவைக்க மேற்படி தோடம் நீங்கும். (௩௬)

## (4) வெங்கண்புள் தோடக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

[காயும்
வெளுக்கெனக் கழியும் பால்போல் வெளிறிமெய்த் துவண்டு
குளுக்கென இரைச்சல் உண்டாம் குடித்தவவ் வணம்பே திக்கும்
அளித்திடும் வயிற்றின் உள்ளே ஆன்தோர் வலியும் ஆகும்
வெளிப்படை ஆமோ என்னில் வெங்கணன் குணம் தாமே.

(பொ-ரை.)—குழந்தை பாலினது நிறத்தைப் போல் வெளுத்து மலங் கழிதல், பிள்ளை வெளுத்துத் துவண்டுபோதல், சுரங் காய்தல், வயிற்றில் இரைச்சல் உண்டாதல், பால் குடித்த உடனே அப்படியே பேதியாதல், வயிற்று வலியுண்டாதல், வெங்கண் புள் பகலில் கண் திறவாமைபோல் பகலில் கண்திறவாமை என்பவைகள் வெங்கண்புள் தோடக் குறிகுணங்களாம். (௩௭)

வெங்கண்புள் தோடத்திற்கு—கற்றுழைநீர்.

நேரிசை வெண்பா.

கன்னியன்னத் தோடு கடுக்காய்ப் பொடிகூட்டி
உன்னிதமாய்த் தான்பிசைய ஊறுநீர்—மின்னேகேள்
திப்பிலித்தூள் இட்டருந்தச் சேர்ந்தவெங் கண்ணென்னும்
ஒப்பில்லாத் தோடமோ டும்.

(பொ-ரை.)—கற்றுழைச் சோற்றில் கடுக்காய்ப் பொடி கூட்டிப் பிசைந்து சிறிது நேரம் வைத்திருந்து ஊறிவரும் நீர் ஒரு பாலடையில், திப்பிலிப் பொடி இரண்டு குன்றி கூட்டிக் காலைமாலை இரண்டு வேளையும் மூன்று நாள் கொடுத்துவர வெங்கண் புள் தோடம் தீரும். (௩௮)

## (5) கருடக்கண்புள் தோடக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

புதுப்புனல் வடிந்து கொண்டு புகழ்முலைப் பாலெ டுக்கும்
எதுப்படக் கண்ணுந் தாழும் இருபக்கம் பீளை கட்டும்
முதிர்பிள்ளை படும்பா டாக முந்தியே பற்றி நிற்கும்
விதத்தலை வயிறு பார மிகுங்கரு டக்கண் ணற்கே.

(பொ-ரை.)—சொள்ளு வடிதல், குடித்த முலைப்பாலைக் கக்குதல், கண் பார்வை தாழ்ந்த பார்வையாதல், கண்களின் இருபக்கமும் பீளை சேர்தல், பெரிய பிள்ளைகளுக்குண்டாவது போலக் குழந்தையின் வயிற்றைப்பற்றிய பாதை படுதல், கருடக் கண் புள்ளுக் கிருப்பதுபோல் குழந்தையின் தலையும் வயிறும் கனத்தல் என்பவைகள் கருடக் கண் புள் தோடக் குறிகுணங் களாம். (௩௯)

கருடக்கண் புள் தோடத்திற்கு—கோரோசனக் கற்கம்.

தணியுங் கோரோ சனையுடனே சாற்று மதுரம் திப்பிலியும் [சங்கு
பணிவாய்த் தாயின் பால்தன்னில் பகர்ந்தே அரைத்தங் கொரு
பிணியாங் குழவிக் கிடும்போது பேரும் கருடக் கண்புள்ளின்
பிணியுந் தணியு மென்றேதான் பேதைக் கரனுர் மொழிந்தனரே.

(பொ-ரை.)—கோரோசனை, அதிமதுரம், திப்பிலி, இவைகளை வகைக்கு அரைக்கால் வராகனெடை எடுத்து முலைப்பாலால் அரைத்துக் கலக்கி ஒரு சங்காக மூன்று நாள் புகட்டக் கருடக்கண் புள் தோடம் தீரும். (சo)

## (6) செங்கண்புள் தோடக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

சிவந்துகண் ணீர்சொ ரிந்து சிரங்குனிந் திருக்கும் வெம்பித்
தவழ்ந்துபோய் நிலத்தில் வீழ்ந்து தடக்கையால் முகந்து டைக்கும்
விவந்தியாய் அழுது பாலன் வெப்புநீ ராய்ப்பே திக்கும்
சிவந்ததோர் குணங்கள் கண்டால் செங்கண்புள் தோட மாமே.

(பொ-ரை.)—மேற்படி புள்ளின் கண் சிவந்திருத்தலைப் போலப் பிள்ளையின் கண் சிவத்தல், கண்ணீர் வடிதல், தலை குனிந்திருத்தல், உடல் வெம்புதல், தவழ்ந்து நிலத்தில் படுத்தல், கையால் முகத்தைத் துடைத்தல், அழுதல், உட்டிணத்தால் உண்டாவது போல் பேதியாதல் என்னும் இவைகள் செங்கண்புள் தோடக் குறிகுணங்களாம். (சக)

செங்கண்புள் தோடத்திற்கு—அதிமதுர எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

மொழியு மதுரம் சீரகமும் முத்தம் ஏலம் பத்திரிகாய்
பொழியும் கிராம்பு சண்பகமும் பொன்னே லவங்கப் பட்டையுடன்
கிளிசேர் மொழியாய் வராகனெடை கேளு முசுக்கை யிலைநன்றாய்த்
தெளியுங் காணி சிறுகீரை சீந்தில் வேரும் பலமொன்றே.

பலமே சொல்லும் ஈருள்ளி படிகால் சாறு காரியின்வேர்
வளமா மணக்குநெய் ரண்டுபடி வாகாய் இவைகள் கலந்தடுப்பில்
நலமாய் எரித்துக் குழவிகட்கு நன்றாய்ச் சங்கு புகட்டிடவே
வலுமைச் செங்கண் புள்தோடம் வாரா தென்று வகுத்தனரே.

(பொ-ரை.)—அதிமதுரம், சீரகம், கோரைக் கிழங்கு, ஏலம், சாதிபத்திரி, சாதிக்காய், இலவங்கம், சண்பகப்பூ, இலவங்கப்பட்டை இவைகள் வகைக்கு ஒரு வராகனெடை, முசுமுசுக்கையிலை, பொன்னாங்காணியிலை, சிறுகீரை, சீந்தில்வேர், கண்டங்கத்தரிவேர் வகைக்குப் பலம் ஒன்று, இவைகளை கால் படி ஈருள்ளிச்சாற்றால் நன்றாக அரைத்து இரண்டு படி சிற்றாமணக்கு நெய்யில் கலக்கி அடுப்பிலிட்டு எரித்துப் பதத்தில் காய்ச்சி வடித்துக் குழந்தைக்குக் காலையில்மாத்திரம் ஒரு சங்கு அளவு மூன்று அல்லது ஐந்து நாள் கொடுக்க, செங்கண் புள்தோடம் போம். (சஉ)

## (7) வரட்புள் தோடக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

உடல் வரண்டு வாந்தி உறங்கிடு மேனி வற்றும்
கடலிரைந் தாற்போல் சத்தங் கண்குழி தலையு மாட்டம்
திடமுடன் நாவ ரண்டு திக்கெங்கும் பார்த்தி ருக்கும்
விடமது போலக் காயும் விரண்டிடும் வரட்புள் தானே.

வேப்பம் பூப்போல் வயிறிரைமுழுகும் விடாத கண்ணீர் தலைவலியும்
பூப்புனல் மாந்திப் புறங்கையால் பொருந்த மூக்கை யேதுடைக்கும்
கோப்பாய்த் தனக்கே யெதிரில்சலங் குடிக்கக் கண்டு பரதவிக்கும்
கோப்பன் குரலாம் விலாகுளிரும் கேளாய் வரட்புள் தோடமிதே.

(பொ-ரை.)—வரட் புள்ளின் உடல் வரண்டிருப்பதுபோல் குழந்தையின் உடல் வரளல், வாந்தி, அடிக்கடி உறக்கம், உடல் இளைத்தல், வயிற்றில் கட லொலி போல் இரைச்சல், கண் குழிவிழுதல், தலை சிறுக ஆடல், நா நீரின்றி வரளல், நாலாபக்கங்களையும் சுற்றிச் சுற்றிப் பார்த்தல், நஞ்சேறினாற்போல் சுரங்காய்தல், வெருளுதல், வேப்பம்பூ நிறத்தையும், மணத்தையும் ஒப்ப பேதியாதல், ஓயாமல் கண்ணில் நீர்வடிதல், தலைநோதல், நீரைக் குடித்தல், புறங்கையால் மூக்கையாவது (முகத்தையாவது) துடைத்தல், தனக்கெதிரில் நீர் குடிக்கக் காணில் தானுங் குடிக்கவேண்டுமென்று தவித்தல், பசுக் குரல் போல் குரல் வேறு படல், விலாக் குளிரல் என்பவைகள் வரட் புள் தோடக் குறிகுணங்களாம். (சங)

வரட்புள் தோடத்திற்கு—குளிசம்.

அறுசீர் விருத்தம்.

மென்றே வட்ட நரிமிரட்டி வியாழந் தன்னில் காப்பிட்டுத்
துன்றுஞ் சேவல் பலிகொடுத்துத் தோடந் தீர வெனப்பணிந்து
குன்றி மஞ்சள் அஞ்சோதிக் குழந்தைத் தாயைக் குளிப்பித்து
மன்றவ் வேர்ப்பிடுங் கிக்கட்ட வரட்புள் தோடம் போய்விடுமே.

(பொ-ரை.)—வரட்புள் தோடத்தால் பீடிக்கப்பட்ட குழந்தையினது தாயை, வியாழக்கிழமையில் ஐந்து கொம்பு மஞ்சளை மந்திரம் ஓதிக் கொடுத்துப் பூசிக் குளிப்பித்து வட்ட நரிமிரட்டிச் செடிக்கு மஞ்சள் நூலால் காப்புக் கட்டி சேவல் பலி கொடுத்து அச்செடியின் வேரைப் பிடுங்கிக் குளி சஞ் செய்து குழவிக்குக் கட்ட அத்தோடம் நீங்கும். (சச)

## (8) பேய்க்கண்ணன் தோடக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

பேய்க்கண்ணன் தோட மப்புள் போலக்கண் காட்டிப்பிரலா பித்தல்
வாய்க்குமட்டிக் குடித்தபா லப்படியே யெதிரெடுத்து மயக்க மாதல்
தாய்க்கமல முகங்காணி லருவருத்தல் கண்குழித லுச்சி தாழ்தல்
ஆய்க்காணு மவனிதனி லிதன்குறிக ளவைகண்டே யறைகு வாயே.

(பொ-ரை.)—பேய்க் கண் புள்ளைப் போல் குழந்தையின் கண் சுழன்று காட்டிப் பிதற்றல் வாய்குமட்டல், குடித்த பாலைக் குடித்தவண்ணமே வாந்தி யெடுத்தல், மயக்கமாய்க் கிடத்தல், தாய்முகம் பார்க்க அருவருத்தல், கண் குழிவிழுதல், உச்சி பள்ளம் விழுதல் என்பவைகள் பேய்க் கண்புள் தோடக் குறிகுணங்களாம். (சரு)

பேய்க்கண்ணன் தோடத்திற்கு—பேயத்திக் குளிசம்.

எண்சீர் விருத்தம்.

பேயத்தி முதனாளில் காப்பு கட்டிப்
பிடுங்கிவந் தைந்துநிற நூலைச் சுற்றி
நேயத்த தோடமந் திரநூற் றெட்டு
நினைவாக வோதியக் குழந்தை தன்னை

ஆயத்த மதிலெடுத் தணைக்கச் சொல்லி
அப்பொழுதே தூபதீ பங்கள் காட்டி
பேயொத்த வக்குழவி யரையிற் கட்டப்
பேய்க்கட்டுட் டோடமஃ தகலுந் தானே.

(பொ-ரை.)—பேயத்திச் செடிக்கு ஞாயிற்றுக்கிழமையன்று காப்புக் கட்டிப் பிடுங்கி ஐந்து வண்ணநூல் சுற்றி தோட மந்திரம் நூற்றெட்டுச் சொல்லி தூபதீபங்கள்காட்டிக் குழந்தையை தாய் மடியில் இருக்க வைத்துக் குளிசத்தைக் கட்டப் பேய்க்கண்ணன் தோடம் போம். (சசு)

## (9) அந்திப்புள் தோடக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

பாலகன் மேனி வாடிப் பசந்துகண் விழித்திட் டந்தி
சீலக்கை கால்கு ளிர்ந்து சீறும்பால் எதிரெ டுக்கும்
மேலெலாம் நரம்பு தோன்றி மேனியும் வெளுத்துக் காயும்
ஆலமே யுண்ட கண்ணுய் அந்திப்புள் தோடந் தானே.

(பொ-ரை.)—அந்திக் காலத்தில் குழந்தையின் மேனி வாடல், கண் பசந்து கொண்டு விழித்தவண்ணமாய் இருத்தல், கை கால் குளிர்ந்திருத்தல், சீறுதல், பால் உண்டவுடன் கக்குதல், உடலின் மேற்பாகத்திலெல்லாம் நரம்பு தோன்றல், உடம்பு வெளுத்தல், சுரங் காய்தல் என்பவைகள் அந்திப்புள் தோடக் குறிகுணங்களாம். (சஎ)

அந்திப்புள் தோடத்திற்கு—சின்னித் துவாலே.

அறுசீர் விருத்தம்.

வகுக்குந் துவாலே தனைக்கேளாய் மானே சின்னி விளாநொச்சில்
பகுக்குஞ் சீந்தில் தான்வேம்பு பைய நறுக்கி வசம்புள்ளி
தொகுக்கத் துவளை தானிடித்துத் துவாலே கெண்டைக் கால்தன்னில்
மிகுக்க முடிந்து கட்டிடவே மீளு மந்தித் தோடமதே.

(பொ-ரை.)—சிறுசின்னி, விளா, நொச்சி, சீந்தில், வேம்பு, வசம்பு, வெள்ளைப் பூண்டு, இவைகளைச் சரி எடை எடுத்து நருக்கித் துணியில் முடிந்து கெண்டைக் காலில் மூன்று நாள் கட்டினுல், அந்திப்புள் தோடம் நீங்கும். (சஅ)

## (10) நீர்ப்புள் தோடக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

நெஞ்சு வரண்டு கண்குழிந்து நீடும் பெருமூச் சுண்டாகிப்
பஞ்சு போலக் கண்வெளுத்துப் பாலுங் குடியா தேயலறித்
துஞ்சா திரவு பகலுந்தான் சுருங்கப் பண்ணி மிகவேர்க்கும்
செஞ்சொற் கிள்ளை மொழிமாதே செய்ய நீர்ப்புள் தோடமிதே.

(பொ-ரை.) நெஞ்சு வரளுதல், கண் குழி விழுதல், பெரு மூச்சுண்டாதல், கண் பஞ்சுபோல் வெளுத்தல், பால் குடியாமை, இரவும் பகலும் அலறிப்பயந்து தூங்காமை, நீரிற் குளித்த புள்போல் உடல் வேர்த்து நனைதல் என்பவைகள் நீர்ப்புள் தோடக் குறிகுணங்களாம். (சகூ)

நீர்ப்புள் தோடத்திற்கு—பலி, இயந்திரம், குடிநீர்.

எண்சீர் விருத்தம்.

பச்சோந்தி தன்னை ஸ்ரீங்காரஞ் சொல்லிப்
பாகுடனே பிடித்துவந்து மஞ்சள்நூல் சுற்றி
அச்சமறப் புறமடைநீர் எழுதரஞ் சொரிந்தே
அழகான செஞ்சேவல் பலிகொ டுத்து
நிச்சயமாய் இயந்திரம் கட்டத் தீரும்
நிகரான மருந்துதனை நிகழ்த்துங் காலை
வெச்செனவிட் ணுக்கரந்தை சீரங் கூட்டி
வெந்தநீர் கொடுத்திடவே வியாதி போமே.

(பொ-ரை.)—பச்சை ஓணானை ஸ்ரீம் என்னும் மந்திரத்தைச் சொல்லிக் கொண்டே பிடித்துவந்து அதற்கு மஞ்சள் நூலைச் சுற்றி, அதற்கு ஏழு முறை நீர் குளிப்பாட்டி, அவ்வாறே சிவப்புச் சேவலுக்குஞ் செய்து, இவ்விரண்டையும் வைத்துக் கொண்டு தோடந்தீர் சக்கரம் ஒன்று செம்புத் தகட்டில் எழுதி மஞ்சள் பூசி, அதற்கு மேற்கண்டவைகளைப் பலி கொடுத்து அச்சக்கரத்தைக் குழந்தைக்குக் கட்டி, விஷ்ணுகாந்தியையும், சீரகத்தையும் குடிநீர் செய்து வேளைக்குச் சங்களவு காலை மாலை இரண்டு வேளையும் மூன்று அல்லது ஐந்து நாள் கொடுக்க, நீர்ப்புள் தோடம் நீங்கும். (௫0)

நீர்ப்புள் தோடத்திற்கு—வட்டத்துத்திக் குளிசம், மந்திரம்.

அறுசீர் விருத்தம்.

தோத முதலைக் கொழுப்போடு துருவ வட்டத் துத்தியின்வேர்
மாதே யிதனைக் குளிசமிட்டு மருவப் போட்டுக் கட்டினபின்
ஓதே தோட மந்திரத்தால் ஒருநூற் றெட்டுச் செபித்திடுவாய்
பாதே நீர்ப்புள் தோடமது பயந்து பறந்தே ஓடிடுமே.

(பொ-ரை.)—முதலைக் கொழுப்பை வேண்டிய அளவு எடுத்து வட்டத்துத்தியின்வேரில் பூசி, அதில் ஐந்துநிற நூலைச்சுற்றிக் குளிசங் கட்டிப் புள்தோடமந்திரத்தை நூற்றெட்டுத் தரம் செபித்தால், நீர்ப்புள் தோடம் நீங்கும். (௫௧)

(1) எட்சிதோடக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

தேயும் உடம்பு மிகநாறும் செல்வன் முலைப்பால் மறந்திருக்கும்
தாயைக் கண்டா லொவ்வாது சற்றே வயிறு போஞ்சுரமாம்
பாயும் புலிபோல் பதறியழும் பாலரைக் கண்டால் பார்த்திருக்கும்
பாயும் விடையோன் தான்அறியப் பகராய் எட்சித் தோடமிதே.

மண்ணில் புரண்டே மண்ணைப்போல் மடிந்து புரளும் கண்பிசையும்
சந்நிக் குணமா மாந்தமிது தான்சண் டாள சிசுரோகம்
வெண்ணி வேதஞ் சிலநூலோர் விளம்பும் இந்நோய் கண்டுகொள
எண்ணிப் பறக்கும் எட்சியென்ற இயல்பாந் தோட மிதுதானே.

எண்சீர் விருத்தம்.

போமேதான் எட்சிதோட குணத்தைக் கேளாய்
பேரான உதிரத்தில் சூடு கொண்டு
வாமேதான் மயக்குவித்துத் தலையெ டாமல்
வரண்டுமே கண்பீளை கட்டி மூடும்

காமேதான் உடல்வற்றிக் கனலே மீறுங்
கர்மாதி வினையிதுதான் சிசுக்கட் கெல்லாம்
ஆமேதான் விதவிதமாய் மேனி மாறும்
ஆகவுநீ எட்சிதோட குணந்தான் பாரே.

(பொ-ரை.)—உடல் மிக இளைத்தல், உடல் மிக நாறல், முலைப்பாலைக்குடிக்க வேண்டுமென்கிற எண்ணமே இல்லாமல் மறந்துவிடல், தாயைப்பார்த்தால் அருவருப்பு, சிறிது சிறிதாய் அடிக்கடி வயிறுபோதல், சுரங்காய்தல், பாய்கின்ற புலியைப் போலப் பதறியழுதல், குழந்தைகள் வரக்கண்டால் அவர்களையே பார்த்திருத்தல், அடிக்கடி மண்ணில்புரண்டு உடல் மண்ணுதல், கண்களை அடிக்கடி பிசைதல், சந்நிக்குணம்போல் பலபல மாறுதல் அடைதல், உடலிலுள்ள குருதியானது சூடுகொண்டு, அச்சூடு தலையிலேறி மயக்கமுண்டாதல், தலை தூக்கமுடியாமல் பளுவாதல், கண்வரளல், அதனால் கண்கள் பீளைகட்டித் திறக்கமுடியாமல் ஒட்டிக்கொள்ளல், உடல் இளைத்தல், அழல் அதிகமாதல், பலவகையாக உடம்பின் நிறம் மாறுதல் என்பவைகள் எட்சிதோடக்குறி குணங்களாம். இதைச் சிலர் சந்நிமாந்தமாகிய குழந்தை நோயென்பர். அது பொருந்தாது. (ருஉ)

எட்சிதோடத்திற்கு—குளிசம்.

அறுசீர் விருத்தம்.

தானே சுக்கிர வாரமதில் தனித்த அசுவ கந்திதான்
மானே காப்பு மீந்திட்டு ம-ந-சி-வ-ய வென் றுருவேற்று
பானே நூற்றெட் டுருவேற்றிப் பண்பாய் வடக்கின் வேர்பிடுங்கித்
தேனே பட்டுநூல் குளிசமிட்டுத் தேவி நிறுத்தி அருகில்வையே.

வையே பூசை நியமமதாய் வாழைக் கனிகள் அவைபடைத்துத்
துய்ய செம்பில் சலமொண்டு தோட நிவர்த்தித் தான்செய்து
தையல் தேவி தனைநினைத்துத் தண்ணீர் ஓதித் தான்தெளித்து
மையக் குளிசந் தனையெடுத்து மைந்தன் தனக்குக் கட்டிவிடே.

(பொ-ரை.)—வெள்ளிக்கிழமையில் அமுக்கனுங்கிழங்குச் செடியினிடஞ் சென்று அவ்விடத்தைத் தூய்மைசெய்து மஞ்சள்நூல் காப்புக்கட்டித் தூபதீபங்காட்டி ம, ந, சி, வ, ய என்று நூற்றெட்டுமுறை சொல்லி, வடக்கே போகிற வேரைப்பிடுங்கி வேண்டிய அளவு துண்டித்துப் பட்டு நூல் சுற்றிக் குளிசமாகச் செய்து பார்வதிதேவி போல் ஒரு வடிவம் மண்ணால் செய்து அச்செடிக்கருகில்வைத்து, வாழைப்பழம் முதலிய பொருள்களால் படையலிட்டு ஒரு துலக்கமான செம்பில் நீர்மொண்டு வைத்துக் கொண்டு, அவ்வம்மையை நினைந்து தோட மந்திரத்தைச் சொல்லித் தண்ணீர் தெளித்துக் குளிசத்தை எடுத்துக்கட்டவேண்டும். இதனால் எட்சி தோடம் நீங்கும். (ருங)

எட்சிதோடத்திற்கு—குளிசம், குளிப்பாட்டல்.

எண்சீர் விருத்தம்.

வேலமரப் புழுக்கூட்டில் கன்னிநூல் சுற்றி
விளக்கு மஞ்ச ளதுபூசித் தூபங்காட்டிச்
சாலவுமே முக்குளநீர் மந்தி ரித்துத்
தலைமீதே சொரிகநீள் ஆலம் வீழ்தைப்

பாலனுக்குக் குளிசமது கட்டிக் கோழி
பலிகொடுத்துத் தலைச்சுற்றி அப்பால் போட்டு
மேலுக்கு நிலவிளா வாதல் வில்வ
இலையாதல் போட்டுநீர் குளிப்பாட்ட னன்றே.

(பொ-ரை.)—வேலமரத்திலிருக்கிற புழுவின் கூண்டிற்கு மஞ்சள்நூல் சுற்றி மஞ்சள் அரைத்துப்பூசி அதற்குத் தூபதீபங்காட்டி அக்கூட்டை எடுத்து மூன்று நல்லதண்ணீர் குளத்தில் நீர்மொண்டு ஒன்றாய் ஒரு செப்புப் பாத்திரத்திற்சேர்த்து அதில் போட்டு அந்த நீரை அக்குழந்தையின் தலையில் தெளித்துப் பிறகு ஆலம்விழுதுக்குத் தூபதீபங்காட்டி வேண்டிய அளவு துண்டித்து ஐந்துநிற நூல்சுற்றிக் குளிசமாக்கி அதைக் குழந்தைக்குக் கட்டிக் கோழி பலிகொடுத்து அக்குழந்தையின் தலையைச்சுற்றி அப்பால்போட்டு விட்டு, மேலுக்கு நிலவிளா இலையையாவது, வில்வ இலையையாவது சேர்த்துக் காய்ச்சப்பட்ட நீரால் குளிப்பாட்டினால் எட்சிதோடம் நீங்கும். (௫௪)

## (1) எச்சிற்றோடக் குறிகுணம்.

எண்சீர் விருத்தம்.

எச்சிற்றோ டக்குறியை யியம்புங் காலை
எதிரிட்ட வொருவர்கண் ணேற தாகும்
வைச்சபா லுண்ணுமை தலைதூக் காத
மயக்கமுடல் வாடலதி னிறமு மாறல்
அச்சமுறு பூதசுரம் ஒருக்கால் தாயை
அண்டினுற் சீறியழ லற்ப பேதி
விச்சலிமை யொட்டுகண் ணிமிண்டி மண்ணில்
மேல்விழுந்து புரண்டழுத லிவைக ளாமால்.

(பொ-ரை.)—எச்சிற்றோடக் குறிகளாவன : குழந்தையைக் கண்ட ஒருவரது கண்ணேறற்றோடமாம். அதனால் தாய்ப் பாலைப் பிடித்துண்ணாமை, தலை எடுக்க முடியாத மயக்கம், உடல் வாடியிருத்தல், அவ்வுடலின் இயற்கை நிறம் மாறி வேறு நிறங் காட்டல், பூதசுரம்போற் காய்தல், ஒரு வேளை தாயைப் பார்த்தால் சீறிச் சீறி அழுதல், சிறு பேதியாகப் பல தடவை பேதியாதல், கண்கள் ஒட்டிக் கொள்ள அதை நிமிண்டிக் கொண்டு மண்ணின் மேல் புரண்டு புரண்டு அழுதல் என்பவைகளாம். (௫௫)

## (1) பெண் தோடக் குறிகுணம்.

முதலாவது.

அறுசீர் விருத்தம்.

நெஞ்சு வரண்டு கண்குழிந்து நீடும் பெருமூச் சுண்டாகிப்
பஞ்சுபோலக் கண்வெ ளுத்துப் பாலுங் குடியா தேயலறித்
துஞ்சா திரவும் பகலுந்தான் சுருங்கித் தேக மும்வேர்த்து
செஞ்சொல் மயக்க முண்டாகில் செப்பும் பெண்ணின் தோடமிதே.

(பொ-ரை.)—நெஞ்சு வரளுதல், கண் குழிவிழுதல், பெருமூச்சு விடுதல், கண் பஞ்சுபோல் வெளுத்தல், பால் பிடித்துக் குடியாமை, பால் புகட்டினாலும் குடியாமை, இருந்திருந்து அலறுதல், இரவும் பகலும் தூக்கம் பிடி

யாமை, உடல் சுருங்கி உடல் நிறைய வேர்வைவிடல், அடிக்கடி மயக்க முண்டாதல் என்பவைகள் பெண் சேர்க்கையிலிருந்து வந்த ஊற்ருலுண் டாகும் தோடக் குறிகுணங்களாம். (ருசு)

மற்ருெரு வழி.

அறுசீர் விருத்தம்.

அரிவை யர்க்கும் ஆண்கட்கும் அதனில் தோட மேதென்ருல்
கருவாம் அஞ்சு மாதத்தில் காணில் கலந்த தாய்முகத்தைப்
பெறுவாள் அந்தப் பிள்ளைக்குப் பேணில் சுளுக்கும் வயிற்றுவலி
கருகு முகமும் பேயின்குணங் கண்டே யறிந்து சொல்வீரே.

(பொ-ரை.)—பெண்ணூற்றுத் தோடமும் ஆண் ஊற்றுத் தோடமும் உண் டாவதெப்படியென்ருல், ஒரு பெண் கருப்பமான அஞ்சு மாதத்தில், சேர்க்கை யிலிருந்து எழுந்துவந்த ஆணையாவது பெண்ணையாவது கண்டால் உண்டா வதாம். அப்படியுண்டான தோடம், தாய் வழியாக வயிற்றிலிருக்கும் குழந் தைக்கு முண்டாய், குழந்தை பிறந்த உடன் அதற்கு வயிறு வலித்தல், சுளுக்குதல், முகம் கருகிப் பேய்முகம்போற் காணப்படல் என்பவைக ளாம். (ருஎ)

பெண் தோடத்திற்கு—ஐந்நிறப்பூ தோடக் கழிவு.

எண்சீர் விருத்தம்.

செய்யவே பஞ்சவண்ண மலரெ டுத்துச்
சேகரமாய்ப் பஞ்சவண்ண மான அன்னம்
ஐயமில்லா ஐந்துவெள்ளிப் பணமும் வைத்தே
அதனுடன் தீபதூபம் நெய்வி ளக்கும்
வைகதலி யிலையில்உரு எழுதித் தானே
வரைதோறுஞ் சாம்பிராணி வர்த்தி நட்டு
பொய்யல்ல நான்சொன்னேன் பண்டி தர்க்குப்
பொதுவாக முச்சந்தி அதில்வைப் பீரே.

வைத்திடவே தோடமெங்கே கிரக மெங்கே
வலியெங்கே நோயெங்கே பறந்து போகும்
நைத்திடவே சிசுவுடைய பருவந் தன்னை
நாட்டமுடன் கண்டறிந்து கருத்திற் கொண்டு
மெய்த்திடமாய் வதிட்டரைப்போல் பொறுமை பூண்டு
மேலான சத்வகுணஞ் சாரு வோர்க்குப்
பைத்திடவே மோட்சமுண்டு நரகம் போச்சு
பாதகருக் கிந்நூல்தான் கிட்டி டாதே.

(பொ-ரை.)—ஒரு வாழையிலையில் அக்குழந்தை போல் மாவால் உரு அமைத்து, அதில் ஐந்து நிறப்பூவையும், ஐந்து நிறச் சோற்றுருண்டைகளை யும், ஐந்து வெள்ளித் துட்டுகளையும் வைத்து, மாவிளக்கையுஞ் செய்து நெய் விட்டுத் திரிபோட்டுக் கொளுத்தி தூபதீபங் காட்டி, அவ்வுருவின் பூட்டு கள் தோறும் சாம்பிராணிவர்த்தி கொளுத்திச் சொருகிச் சாயங்கால வேளையில் அத்தோடங்கொண்ட குழந்தைக்குச் சுற்றி, முச்சந்தில் கொண்டு போய் வைத் தால் தோடம், பாலகிரகம், வலி, நோய் இவை நீங்கும். ஆனுல், பொறுமை யுடன் செய்ய வேண்டும். அப்படி செய்யும் மருத்துவர்க்கு நன்மையுண் டாகும். (ருஅ)

பெண் தோடத்திற்கு—பருத்திக் குளிசம்—கஞ்சாங்கோரைக் குடிநீர், சின்னிகட்டு.

அறுசீர் விருத்தம்.

பாவையின் றோடந் தீரப் பருத்திவேர் குளிச மாடிப்
பூவைகேள் கஞ்சாங் கோரை புனலினிற் காய்ச்சி யேதான்
தேவைநீ குடிகேள் சின்னி சிறுவிளா வசம்போ டுள்ளி
மாவைச்சீ லேயில் முடிந்து மாறுகை காலிற் கட்டே.

(பொ-ரை.)—பெண்ணால் வந்த தோடந் தீருவதற்குப் பருத்தி வேரைக் குளிசஞ் செய்து குழந்தைக்குக் கட்டி, கஞ்சாங்கோரையை முறைப்படி செய்த குடிநீரை வேளைக்கு ஒரு சங்களவாக மூன்று அல்லது ஐந்து நாள் கொடுத்து, சின்னி இலை, சிறுவிளா இலை, வசம்பு, வெள்ளைப் பூண்டு, மா இலை இவைகளை ஒரு அளவாயெடுத்துச் சிதைத்து ஒரு வெள்ளைத் துணியில் முடிந்து, இடது கை வலது கால், அல்லது வலது கை இடது கால்களிற் கட்டவேண்டும். (௫௯)

## (2) முட்டுத்தோடக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

போமென்ற குழந்தை மேனி பொன்னிறம் வாடி வேருய்த்
தாமென்ற வயிற்றில் பாலுந் தங்காமல் வாயால் போகும்
நாமென்ற கண்கு ழிந்து நாக்குவாய் கருகித் தோன்றும்
காமென்ற மாத விடையின் கன்னிய ரெடுத்த கூறே.

(பொ-ரை.)—குழந்தையின் அழகிய தேகம் வாடி வேறுபாடு அடைதல், வயிற்றில் பால் தங்காமல் வாந்தி எடுத்தல், கண்குழிதல், நாக்கும் வாயும் கறுத்தல் என்பவைகள் மாதவிடாயாக இருக்கும் பெண்கள் குழந்தைகளை எடுத்ததனாலுண்டாம் முட்டுத் தோடக் குறிகுணங்களாம். (௬௦)

முட்டுத் தோடத்திற்கு—மந்திரம்.

எண்சீர் விருத்தம்.

கூறுன முன்மந் திரத்தி னாலே
குளிர்ந்தசல மொண்டுவேப் பிலேயா லோது
ஊரான தாய்ப்பிள்ளை யிருவ ருக்கும்
ஓதியே யிருவேளை சாந்தி செய்நீ
சீரான திப்படியே எழு நாள்செய்
சிவசிவா பறந்தோடு முட்டுத் தோடம்
வேரான மந்திரமே யதில்வே றில்லை
வெகுவான நோயெல்லாம் ஓடிப் போமே.

(பொ-ரை.)—ஒரு செம்பில் தண்ணீர் முகந்து இடது கையில் வைத்துக் கொண்டு, வலது கையில் வேப்பிலைக் கொத்தைப் பிடித்துத் தோடமந்திரத்தை யோதி அவ்வேப்பிலைக் கொத்தை அத்தண்ணீரில் நனைத்து நனைத்து, அக்குழந்தைமுகத்திலும் தாய் முகத்திலும் மும்மூன்று தரம் தெளிக்க வேண்டும். இப்படி இரு வேளையும் எழு நாள் செய்தால் முட்டுத் தோடம் நீங்கும். (௬௧)

## * (3) குளிசதோடக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

உச்சியுங் குழிந்தி ருக்கும் உயர்விழி வளைய மாகும்
மிச்சமாய் வாந்தி செய்யும் வேர்வையு மிகவே காணும்
பச்சுப்பச் சென்று தானும் பற்பல வண்ண மாக
எச்சமாய்க் கழிச்ச லுண்டா மிதுகுளிச தோடந் தானே.

தண்ணீர் குடிக்கு நெஞ்சுலரும் தளர்ந்து பிள்ளை தானுலரும்
கண்ணீர் சொரியுங் கால்வீங்கும் காயு மாசனம் புண்ணுகும்
அன்ன மேநீ யஞ்சாதே யறிந்து சொன்னேம் குளிசதோடம்
பெண்ணே சுடலை விடத்தலைவேர் பிடுங்கிக் கட்டு புகழ்பெறவே.

(பொ-ரை.)—உச்சி குழி விழுந்திருத்தல், கண் வளையம் போலாதல், பலமுறையாகவும் அளவில் அதிகமாகவும் வாந்தியாதல், அதிக வியர்வை விடுதல், சில நேரம் பச்சைப் பச்சையாகவும், சில சமயம் பல நிறமாகவும் பேதியாதல், நீர் வேட்கை அடிக்கடியுண்டாய் நீர்குடித்தல், அவ்வாறு குடித்தும் உடனுக்குடன் நெஞ்சு உலர்தல், உடல் தளர்ச்சி அடைந்து உலர்தல், அடிக்கடி கண்களிலிருந்தும் நீர் வடிதல், கால் வீங்குதல், சுரங் காய்தல், மலம் கழியும் வழி புண்ணுகுதல் என்பவைகள் குளிச தோடக் குறிகளாம்.

இதற்குச் சுடுகாட்டில் முளைத்திருக்கிற விடத்தலைவேர்க் குளிசம் செய்து கட்டவேண்டும். (சுஉ)

குளிச தோடத்திற்கு—அரைப்பு, முழுக்கு நீர், குளிசம்.

எண்சீர் விருத்தம்.

தோடமிது தழுதாழை குட்டிவிளா வேம்பு
சோம்புமஞ்சள் வசம்புடனே சுக்குங் கூட்டி
வாசமிது அரைப்பரைத்து வைத்துக் கொண்டு
வாகையிலை போட்டுநீர்க் காய்ச்சி யேதான்
தேசமிது தாய்பிள்ளை யிருவ ருக்குந்
தேய்த்துமே முழுக்காட்டிச் சொல்லு வேன்கேள்
பாசமிது முக்கிணற்றின் தண்ணீர் மொண்டு
பசுமஞ்சள் அரைத்ததிலே கலக்கி டாயே.

கலக்கிடாய் மங்ஸ்ரீயும் ஐயும் சவ்வும்
கண்மணியே அறுகாலை நூற்றெட் டோதி
வலக்கிடாய் மேல்தெளித்துக் கடுக வாரு
வாசமுறுந் தேகமோ பசும்பொன் வீசும்
அலக்கிடாய் சூரிவேர் பிடுங்கி வந்து
அன்பாகப் பஞ்சநூல் குளிச மாடி
வலக்கிடாய் பாலனுக்குக் கட்டிப் போடு
மகத்தான குளிசதோடம் பறந்து போமே.

---

*குறிப்பு :—குளிசதோடம் என்பது பிள்ளையில்லாதவள் ஒருத்தி அதை விரும்பிக் குளிசங் கட்டிக் கொள்ளுங் காலத்து எதிர்படுங் குழந்தைக்கு உண்டாகுந்தோடமாம்.

(பொ-ரை.)—தழுதாழை, குட்டி விளா, வேம்பு இவற்றின் இலைகள், சோம்பு, மஞ்சள், வசம்பு, சுக்கு இவைகளை யெல்லாம் சரி எடை எடுத்து அரைத்து வைத்துக் கொண்டு, அதைத் தாய்க்கும் குழந்தைக்கும் தேய்த்து வாகையிலை போட்டுக் காய்ச்சப்பட்ட நீரைத் தலைக்கு முழுக்காட்டிப் பிறகு மூன்று கிணற்றிலிருந்து கொஞ்சங் கொஞ்சம் தண்ணீர் மொண்டு ஒன்றாய்ச் சேர்த்து, அரைத்த பசு மஞ்சள் கொஞ்சம் அதில் கரைத்து, 'மங், ஸ்ரீயும், ஐயும், சவ்வும்' என்று நூற்றெட்டுத் தரம் ஓதி, ஆறு நாள் காலையில் மாத்திரம் அத் தண்ணீரை அக்குழந்தைக்கும் தாய்க்குந் தெளித்துத் தலைக்கும் முழுக்காட்டல் வேண்டும். அல்லாமல் சூரிவேர் பிடுங்கி வந்து ஐந்து நிற நூல் சுற்றிக் குளிசஞ் செய்து குழந்தைக்குக் கட்ட வேண்டும். இதனால் குளிச தோடம் நீங்கும். (௬௩)

குளிச தோடத்திற்கு—அறுகம் வேர்க் குளிசம், கீழாநெல்லித் துவளை.

எண்சீர் விருத்தம்.

குளிசதோ டந்தீரச் சுடலை தன்னில்
குளித்துமுளை யறுகம்வேர் குளிச மாடிப்
புளிதோடந் தனையகற்றிக் கீழ்வாய் நெல்லி
புகழம்மான் பச்சரிசி புள்ளி னோடு
வளிதோடந் தனையகற்றும் வசம்பு முள்ளி
வன்சாறு கொடுத்துமேல் துவாலை செய்யக்
குளிசதோடம் வாந்தியொடு தாகந் தீரும்
குறுமுனிவ னுரைத்தபடி கூர்ந்து செய்யே.

(பொ-ரை.)—காலையில் குளித்துச் சுடுகாட்டிற்குப் போய் அங்கு முளைத் திருக்கின்ற அறுகம்வேரைக் குளிசம்செய்து குழந்தைக்குக் கட்டி அக்குளிச தோடத்தைநீக்கிப் பின்னர், கீழ்வாய்நெல்லி, அம்மான்பச்சரிசி, சிறுபுள் ளடி, வசம்பு, வெள்ளுள்ளி இவைகளின் சாற்றை ஒன்றாய்க் கலந்து வேளைக்குக் கால் சங்காக மூன்றுநாள் காலையில் மாத்திரம்கொடுத்து மேலும் பூசினால், குளிச தோடத்தால் உண்டாகின்ற வாந்தி, தாகம் முதலியவை தீரும். (௬௪)

குளிச தோடத்திற்கு—கருடமை, நீறு.

எண்சீர் விருத்தம்.

கேளுநீ கருடனிட கூட்டுக் குள்ளே
கிடந்ததோர் முட்டையோ டெடுத்து வந்து
ஆளவே சுட்டதனைச் சாம்ப லாக்கி
அழகாகக் குழந்தைகட்குத் திலர்தம் போடு
வாளவே முன்கூட்டைச் சுட்ட சாம்பல்
மைந்தனுக்கு நெற்றியிட மயக்கந் தீரும்
தாளவே குளிசதோடம் பட்சி தோடம்
தான்பறக்குந் தப்பாது தனித்துச் செய்யே.

(பொ-ரை.)—கருடன் கூண்டுக்குள்ளிருக்கின்ற முட்டையோட்டை எடுத்து வந்து அதைச்சுட்டுச் சாம்பலாக்கி அதில் புனுகு கூட்டி மையாகவும், கூட்டைச் சுட்ட சாம்பலை வைத்துக்கொண்டு, திருநீறாகவும் நெற்றியிலிட்டால் குளிச தோடத்தால் உண்டாகும் மயக்கம் முதலியவை தீரும். அன்றிப் பட்சிதோடமும் நீங்கும். (௬௫)

குளிசதோடத்திற்கு—நன்னாரி நெய்.

எண்சீர் விருத்தம்.

சொரிந்தாவின் நெய்உரியில் நல்லெண்ணெய் பாதி
சுகமாக நன்னாரி தண்ணீர் விட்டான்
கரந்தைபொன் னாங்கண்ணி பலமொன் றாகக்
கழஞ்சியே லரிசிசீ ரகமுங் கூட்டிப்
பொருந்தவே ஆவின்பால் வார்த்த ரைத்துப்
புகழடுப்பில் ஏற்றியே காய்ச்சிக் கொண்டு
திருந்தவே குளிசதோடம் போவ தற்குச்
சிறுகரண்டி புகட்டிடவே தெளியுங் காணே.

(பொ-ரை.)—ஒரு மண்சட்டியில் பசுநெய் கால்படி, எண்ணெய் அரைக் கால்படி விட்டு, நன்னாரிவேர், தண்ணீர்விட்டான் கிழங்கு, கொட்டைக்கரந்தை, பொன்னாங்கண்ணி இவைகள் வகைக்குப் பலம் ஒன்று, ஏலரிசி, சீரகம் இவை வகைக்கு ஒரு கழஞ்சு எடுத்துப் பசுவின்பால் வார்த்தரைத்து அந்த எண்ணெயோடு கலந்து அடுப்பேற்றிச் சிறுக எரித்துப் பக்குவ பாகத்திற் காய்ச்சி வடித்துக்கொண்டு, வேளைக்கு ஒரு சிறு கரண்டியளவாக இரண்டு வேளையும் மூன்று அல்லது ஐந்து நாள் கொடுத்தால், குளிசதோடக் கெடுதிகளெல்லாம் தீரும். (கூகூ)

குளிசதோடத்திற்கு—காட்டாத்திக் குளிசம், பலி.

அறுசீர் விருத்தம்.

ஓமந் தண்ணீர் காட்டாத்தி உயர்ந்த பருத்தி பயற்றம்வேர்
ஆமே குளிச மதுகட்டி அன்பாய்ச் சொறியும் புறமடைநீர்
போமே கோழிப் பலிகொடுத்துப் புறமாய்ச் சுற்றிப் போட்டக்கால்
தாமே போகுங் குளிசதோடம் தையற் கரனார் சாற்றினரே.

(பொ-ரை.)—ஓமச்செடிவேர், தண்ணீர்விட்டான்கிழங்குவேர், காட்டாத்தி வேர், பருத்திவேர், பயற்றம்வேர், இவற்றைச் சேர்த்து முறுக்கி முறைப்படி குளிசஞ்செய்து கட்டி, வில்வம், பேயத்தி முதலிய இலைகளைப் போட்டுக் காய்ச்சப்பட்ட நீரால் குழந்தையைக் குளிப்பாட்டிப் பின்னர், கோழியைப் பலிகொடுத்து அக்குழந்தைக்குச் சுற்றிப் பின்புறமாய்ப் போட்டுவிட்டால் குளிசதோடம் தானே நீங்கிவிடும். (கூஎ)

குளிசதோடத்திற்கு—வேப்பங்கொழுந்து நீர்.

அறுசீர் விருத்தம்.

வேப்பங் கொழுந்து பிடியொன்று மிளகுபத்து வசம்பு சுக்கு
வாய்ப்ப மலையைத் தான்தாங்கி வளமாய்ச் சமனாய் அரைத்திட்டுப்
பாய்ப்ப அதனை வடித்திட்டுப் பாங்கா யுள்ளீ குளிசத்தால்
வாய்த்த தோடங் கழிச்சல்களும் வயமாய் நிற்குங் கண்டாயே.

(பொ-ரை.)—வேப்பங்கொழுந்து ஒரு பிடி, மிளகு பத்து, வசம்பு, தோல் சீவின சுக்கு, மலைதாங்கி இவை தனித்தனி பத்து மிளகெடை எடுத்து எல்லாவற்றையும் ஒன்றாய்ச்சேர்த்தரைத்துக் காய்ந்தாறின நீர் அரை ஆழாக்கிற் கலக்கி வடிகட்டி, காலைமாலை இரண்டுவேளையாக மூன்று அல்லது ஐந்து நாள் காற்சங்களவாகக் கொடுத்தால், குளிச தோடத்தால் உண்டான பேதிகளெல்லாம் நீங்கும். (கூஅ)

## (4) குளித்தபெண்கண்ட தோடக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

தாயின் முலையில் வாய்வைக்குஞ் சற்றே யுண்ணுந் திகைத்திருக்கும்
தேய்வாய்த் தேயும் மெய்வேர்க்கும் சிறுக வெதும்பும் வயிறுளையும்
சாய்வாய் உறங்குஞ் சத்திக்குஞ் சற்றே சென்றல் விரேசிக்கும்
பேய்நோய் கொண்ட தலைகுளித்த பெண்ணுள் கண்ட தோடமிதே.

(பொ-ரை.)—தாயின்முலையில் பால்குடிப்பதற்கு வாயைவைத்துக் கொஞ்ச நேரங் குடித்தல், கொஞ்சநேரம் குடியாமல் மயங்கியிருத்தல், உடம்பு மிகவும் தேய்ந்திளைத்தல், உடல்முற்றும் வேர்த்தல், அற்பமாகச் சுரங்காய்தல், வயிறு நோதல், நன்றாய் உறங்குதல், அவ்வுறக்கத்திலாவது விழித்துக் கொண்டாவது வாந்தி எடுத்தல், கொஞ்சஞ்சென்று பேதியாதல் என்பவைகள் உண்டாகும். இவை நோயின் குறிகளல்ல. தூரம்வந்து குளித்த பெண் குளித்தவுடனே வேறொருவரையும் பாராமலும், எந்தவுணவையுங் கொள்ளாமலும், அக்குழந்தையையே நேராகப்பார்த்த தோடக்குறிகளாம். (சுகூ)

குளித்தபெண்கண்ட தோடத்திற்கு—மந்திரம்.

அறுசீர் விருத்தம்.

கனமா மிதனைக் கண்டுணர்ந்து காலைமாலை மிரு வேளை
குணமாய் ஓது சடாட்சரத்தைக் குருநீர் அதனை மேல்தெளிக்க
வனமாய்க் குளித்தவள் காண்தோட மாறிப் போகு மிதுதன்றல்
தினமும் வேண்டாம் மூவைந்து தினந்தான் தெளிக்க நோய்போமே.

(பொ-ரை.)—குளித்தவள்கண்ட தோடக்குறிகள் இவையென்றுணர்ந்து காலைமாலை இரண்டுவேளையும் சடாட்சரத்தை நூற்றெட்டுமுறை ஓதி, அக்குழந்தைமேல் பதினைந்துநாள் தண்ணீர் தெளித்துவந்தால் குளித்தவள் கண்ட தோடம் நீங்கும். (எ0)

## (5) குளித்தவள் எடுத்த தோடக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

மதலையின் மேனி வாடி வயிற்றினில் பாலுந் தங்கா
சதலையிற் குழியுண் டாகிச் சத்தியும் எடுக்கு நீராய்
நுதலினிற் சலமு நண்ணி நோக்கிய விழியுந் தாழ்ந்து
குதலைவாய் கருகித் தோன்றுங் குளித்தவ ளெடுத்தக் காலே.

பாலகன் பவள வாயிற் பனியென வேர்க்கும் மூக்கு
ஆலகண் வளைய மாகும் அடிக்கடி வயிறு போகும்
காலது பின்னிக் கொள்ளுங் கதறியே யலறிச் சீறும்
சீலமாய் விழித்துத் தாவுந் தீதவ ளெடுத்த தாலே.

(பொ-ரை.)—குழந்தையின் உடல்வாடுதல், குடித்தபால் வயிற்றிற் றங்காமல் தண்ணீராய் வாந்தியாதல், தலை உச்சியில் பள்ளம் விழுதல், நெற்றி, வாய், மூக்கு இவற்றில் வேர்வைவிடல், கண் கீழ்ப்பார்வையாதல், வாய் கறுத்தல், கண்வளையமிடுதல், அடிக்கடி பேதியாதல், கால் பின்னிக்கொள்ளல், கதறுதல், அலறுதல், சீறுதல், கண்களைத்திறந்து எதிரிலுள்ளவர்களைத் தாவுதல் என்புவைகள், குளித்தவள் எடுத்த தோடக்குறிகளாம். (எக)

குளித்தவளெடுத்த தோடத்திற்கு—தூதுவளைக் குளிசம்.

எண்சீர் விருத்தம்.

ஆரியதோர் இன்னமொரு கிரியை கேளாய்
அழகான பாலனுமே மெலிந்து வாடில்
சீருடனே குளித்தபெண் ணெடுத்த தோடம்
தெறிபட்டுப் போவதற்குச் சேதி கேளாய்
வேருவகை தூதுவளை குப்பை மேனி
விளங்குகின்ற குருவிச்சி தும்பை யோடு
நீருடனே வேருவகை கொண்டு வந்து
நிச்சயமாய்க் குளிசம்நீ நிகழ்த்திக் கட்டே.

கட்டுவாய் திருகுகள்ளி வடக்கு வேரைக்
காப்பிட்டு ஞாயிறுநாட் பிடுங்கி வந்து
சிட்டுவாய்க் குளிசமுடன் நீர்சொ ரிந்து
சுகமாகக் கட்டிடவே தோடந் தீரும்
மட்டாக மூன்றுநாள் நீர்சொ ரிந்து
மதலைக்குச் சாந்திசெய்ய மயக்கந் தீரும்
தொட்டிருந்த தோடமெல்லாந் துடித்தே யோடுஞ்
சொன்னபடிக் குளிசமுநீர் சொரிந்தி டாயே.

(பொ-ரை.)—குளித்தபெண் எடுத்த தோடத்தினுல் குழந்தை மயங்கினுல் தூதுவளைவேர், குப்பைமேனிவேர், குருவிச்சிவேர், தும்பைவேர் இவைகளைத் தனித்தனியாக வேண்டிய அளவு கொண்டுவந்து எல்லா வேர்களையும், ஒன்ருய் முறுக்கி விதிப்படி குளிசஞ்செய்து கட்டல்வேண்டும். (எஉ)

திருகு கள்ளிவேர் குளிசம்.

திருகுகள்ளிச்செடியின் வடக்கேபோகிற வேருக்கு ஞாயிற்றுக்கிழமையில் காப்புகட்டி யதைப்பிடுங்கிவந்து குளிசஞ்செய்து குழந்தையை குளிப்பாட்டின பிறகு கட்டிவிட்டு மூன்றுநாள் தொடர்ச்சியாய் நீரில் முழுக்காட்டி அதற்குரிய கழிப்புச்செய்யக் குளித்தவள் தொட்டெடுத்ததனு லுண்டாகும் தோடம் நீங்கும். (எ௩)

## (6) கர்ப்பம் அழிந்த தோடக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

குடித்த பாலுந் தங்காது குஞ்சி யுடம்பு மிகநொந்து
மிடித்த நெஞ்சயர்ந் தண்ணுந்து மிகவே நோக்குஞ் சடநாறும்
படியுங் கைகால் அழுக்கேறிப் பதைத்து வருத்தப் படுமானுல்
துடிக்குச் சமனும் இடையாளே சொல்லா யழிந்த தோடமிதே.

காலும் பின்னும் உடம்பிளைக்கும் கழியுஞ் சத்த மிகவுண்டாம்
மேலும் சிவக்கும் உடல்தானும் விழியுஞ் சொருகி மிகமயங்கும்
வேலுஞ் சேல்போல் விழியாளே வில்போல் புருவ முடையாளே
கேளு மிந்தக் குணங்கண்டால் கெர்ப்பம் அழிந்த தோடமிதே.

(பொ-ரை.)—குழந்தை குடித்தபால் நெடுநேரம் வயிற்றிலிராமல் வாந்தியாதல், உடம்பு மிகவும் நோதல், நெஞ்சயர்தல், அண்ணுந்து பார்த்தல், மிகவாகக் கழுத்துநோதல், உடல் நாறல், கைகளிலும், கால்களிலும் அழுக்கு மிகுதியாய்ப் படிதல், பதைத்துத்துடித்து வருத்தப்படல், கால்பின்னல்,

உடல் இளைத்தல், இரைச்சலுடன் கழிதல், உடல்சிவத்தல், கண்சொருகல், மிக மயங்குதல் என்பவைகள், கர்ப்பம் அழிந்தவள்கண்ட தோடக்குறிகளாம். (எச)

கர்ப்பம் அழிந்த தோடத்திற்கு—காட்டாத்திக்குளிசம்,
பருத்திவேர்க்கற்கம், குடிநீர்.

அறுசீர் விருத்தம்.

கெர்ப்ப மழியுந் தோடத்தின் இலேசந் தீரக் கிரியைகேள்
கர்ப்பக் காட்டாத் தியின்வேரைக் கதிக்க வேகுளி சஞ்செய்து
அப்பப் பருத்தி வேர்அரைத்து அருந்தக் குளிர்ந்த தண்ணீரைக்
கற்பப் பனையின் வெல்லமதைக் கரைத்து நீரில் கொடுத்திடுமே.

(பொ-ரை.)—காட்டாத்திவேரை வேண்டிய அளவு கொண்டுவந்து விதிப்படி குளிசஞ்செய்து குழந்தைக்குக் கட்டிப் பருத்திவேரை நீரால் அரைத்து வேளைக்குச் சுண்டக்காயளவு இரண்டுவேளையும் மூன்று நாள் அல்லது ஐந்து நாள் கொடுத்துக் குளிர்ந்த நீரில் பனைவெல்லம் கரைத்துக் கொடுக்கவேண்டும். இப்படி செய்தால் கர்ப்பமழிந்தவள்கண்ட தோடம் நீங்கும். (எரு)

(1) ஆண் தோடக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

போமே உச்சி கண்குழியும் பொருந்துண் பாலுந் தங்காது
போமே வயிறு பச்சென்று பொருமி யழுமே பறவைக் குரல்
தாமே குறுகும் ஒருவேளை தனியே தனியே சீறியழும்
காமே கறுத்த குயிலாளே கலந்த புருட தோடமிதே.

(பொ-ரை.)—குழந்தையின் உச்சி பள்ளம் விழல், கண் குழி விழுதல், உண்கின்ற பால் தங்காமல் வாந்தியாதல், வயிறு பச்சென்று பேதியாதல், பொருமிப் பொருமி அழுதல், அவ்வழுகை பறவைக் குரல் போல் காணப்படல், கழுத்து குறுகுதல், ஒவ்வொரு வேளை சீறிச் சீறிப் பெருங்குரலாய ழுதல், என்பவைகள் படுக்கையிலிருந்து எழுந்துவந்த ஆண் தோடக் குறிகளாம். (எசா)

ஆண் தோடத்திற்கு—உடும்புநாக் குளிசம்.

எண்சீர் விருத்தம்.

புருடனென்ற உடும்பினுட நாக்கு வாங்கிப்
புகழான எருக்குநார் குளிச மாடிப்
புருடனென்ற தாம்பூல முன்னே வைத்துப்
புதுமையாய்ப் பூசைசெய்யச் சொல்வேன் கேளாய்
புருடனென்ற நயவசிம நூற்றெட் டோதி
பூமுலையாய் பாலகர்க்குக் கட்டுக் கட்டு
புருடனென்ற குழந்தைகட்குக் கட்டும் போது
புகழ்பலி ஒணன்கொடுக்கத் தோடம் போமே.

(பொ-ரை.)—ஆண் உடும்பு நாக்குக்கு வெள்ளெருக்கின் நார் சுற்றி, ஒரு தூய்மை யான இடத்தில் வைத்து அதற்கெதிரில் வெற்றிலைப் பாக்கு, பழம் வைத்துத் தூபதீபங் காட்டி " ந. ய. வ. சி. ம. " என்னும் மந்திரத்தை 108 தரஞ் சொல்லி, ஒணன் பலி கொடுத்து, அக்குளிசத்தைக் குழந்தைக்குக் கட்ட ஆண் தோடம் நீங்கும். (எஎ)

## (1) தேரைத்தோடக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

தேனேர் மொழியாய் நீகேளாய் தேரைக் குணந்தான் இயம்புகிறேன்
ஊனே வற்றி யுடம்புலரும் உயர்ந்தே நெஞ்சு தான்கூடும்
கானே கண்ணும் பொடித்திருக்கும் கையுங் காலுஞ் சுரிமுடக்கும்
மானே வயிறு புடைத்திருக்கும் மலமுந் தீயும் வாயுலரும்.

உலருந் தண்ணீர் தாகிக்கும் உந்திமலருங் குரல் வேறும்
மலர்ந்த தாமரை போல்முகமும் வாடி யொடுங்கிச் செவிதாழும்
முலையின் பாலும் உண்ணுது மூச்சு வாங்கும் இதுதீரப்
பலருஞ் சொன்ஞர் என்னுமல் பழிச்சே தென்று கேட்டிடுமே.

காலுங் கையு மிகவற்றிக் கட்டிப் போட்டால் போல்பிள்ளை
மேலும் வற்றி வெளுப்பிட்டு வேறே குணமாய்க் குரல்நெறித்துச்
சால முலைப்பால் குடித்தாலுஞ் சற்றுந் தேரு திருப்பதெனில்
நீலவட்ட மலர்க் கண்ணுய் ! நிசமாம் தேரைத் தோடமிதே.

(பொ-ரை.)—ஊன்வற்றியுடம்புலர்தல், மார்புகூடாதல், கண்சிறுத்தல், கைகால் முடக்கிக்கொள்ளல், வயிறு பக்கத்தில் புடைத்தல், மலந்நீதல், வாயுலர்தல், நீர்வேட்கை, தொப்புள் மலரல், குரல் மாறல், அழகியமுகம் வாடல், காது கேளாமை, பால் குடியாமை, மேல்மூச்சு வாங்கல், கால்கைகள் வரளல், கட்டிப்போட்டதுபோல் உடல் நேர்தல், உடம்பு வரண்டு வெளிறல், குரல் நெறித்தல், எவ்வளவு முலைப்பால் குடித்தாலும் உடம்பு தேருமை என்பவைகள் தேரைத்தோடக் குறிகளாம். (எ.அ)

தேரைத் தோடத்திற்கு—புள்ளடி நெய்.

பன்னிருசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

புள்ளடி சிறுகீரை நீராரை தன்னுடன்
புகழ்காணி நீர்முள்ளியும்
பொய்யாமல் இவ்வகை சமூலமுட னேகளா
புனமல்லி குமிள்நீலியும்
மொள்ளவரு கரிசலாங் காணியுட னேமுடக்
கொத்தானின் வேர்சமனதாய்
முந்நாழி நீர்தனை நாலிலொன் றுகவே
முதல்பாக மாயிறக்கி
மெள்ளஅதி மதுரமும் திப்பிலியி னேடேலம்
மிளகுவகைக் கால்பலமதாய்
மென்பசுப் பால்விட் டரைத்துக் கலந்துமே
யிருநாழி நெய்யினுடனே
உள்ளபடி நன்ருய் எரித்ததை வடித்தபின்
உரைத்திடு கரண்டியளவாய்
உண்டிடக் குளிதோடந் தேரையின் தோடமுடன்
ஓடியே போய்விடுவதே.

(பொ-ரை.)—புள்ளடி, சிறுகீரை, நீராரைக்கீரை, பொன்னுங்கண்ணி, நீர் முள்ளி இவைகள் சமூலமாகவும், களா, காட்டுமல்லி, குமிழ், அவிரி, கரி சலாங்கண்ணி, முடக்கொத்தான் இவைகள் வேராகவும் வகைக்குப் பலம்

ஒன்றரை எடுத்து இடித்து ஒரு மண் சட்டியிலிட்டு மூன்று படி தண்ணீர்விட்டு நாலிலொன்ருக வடித்து அதிமதுரம், திப்பிலி, ஏலரிசி, மிளகு வகைக்குக் கால்பலம் எடுத்துப் பசுவின்பால்விட்டரைத்து அதிற்கலந்து அத்துடன் இரண்டுபடி நெய்விட்டுச் சிறுக எரித்துப் பக்குவபாகத்திலிறக்கிக் காலேமாலே இரண்டுவேளையும் வேளைக்கு ஒரு உச்சிக்கரண்டியளவாக மூன்று அல்லது ஐந்து நாள் கொடுக்க, தேரைவீழ்ந்த தோடம் தீர்வதுடன் குளிதோடமும் தீரும். (எகூ)

சகல தோடத்திற்கு—மந்திரம்.

எண்சீர் விருத்தம்.

நிமையான தோடசர் வாங்க மெல்லாம்
நிமைப்போதில் தீருதற்கு மூலஞ் சொல்வேன்
வமையான வ ந சி ம ய என்று தானே
வங் சிங் என்று சி வ ய ந ம என்னத்
தமையான தோட நிவர்த்தித் தானுச்சு
சொல்லவும் போகுமோ சூட்சா சூட்சம்
கமையான தோட நிவர்த்தி தன்னுலே
கவலேநீங்கிக் காட்சி பெறுவாய் தானே.

(பொ-ரை.)—ஈண்டு சொல்லப்பட்ட எவ்வித தோடங்களும் ‘ ஓம், வநசிமய ’ என்றும் ‘ ஓம், வங், சிங், சி வ ய ந ம ’ என்றும் நூற்றெட்டுதரம்சொல்லி வேப்பிலேயில் மந்திரித்தாலும், தண்ணீர் ஓதித் தெளித்தாலும் நீங்கும். (அ0)

சகல தோடத்துக்கு—கீழாநெல்லிக் குளிசம்.

எண்சீர் விருத்தம்.

கீழ்க்காயி னெல்லிவேர் முடக்கொத் தான்வேர்
கிருபையுள்ள நாயுருவி கஞ்சாங் கோரை
தாழ்க்காயின் விடத்தலேவேர் நிலக் கடம்பு
தழைத்தசிறு புள்ளடிபேய்ச் சுரையின் வேரும்
கோழ்க் காயின் எட்டுவித வேருவாங்கிக்
குளிசமிட்டுக் குழந்தைக்குந் தாய்க்குங் கட்ட
ஊழ்க்கான சகலதோ டங்க ளெல்லாம்
ஓடிக்கட லிற்புகும் உண்மை தானே.

(பொ-ரை.)—கீழ்வாய்நெல்லிவேர், முடக்கொத்தான்வேர், நாயுருவிவேர், கஞ்சாங்கோரைவேர், விடதாரிவேர், நிலக்கடம்புவேர், சிறுபுள்ளடிவேர், பேய்ச்சுரைவேர் என்னும் எட்டுவகை வேர்களில் எதையாவது விதிப்படி குளிசஞ்செய்து குழந்தைக்குந் தாய்க்குங் கட்டினுல் எல்லாத் தோடங்களும் நீங்கும். (அக)

தோடங்களுக்கெல்லாம்—அதிமதுர மாத்திரை.

எண்சீர் விருத்தம்.

அதிமதுரம் மரமஞ்சள் முத்தக் காசும்
அதிவிடயம் வசம்புகடுக் காயும் நல்ல
புதிதேவ தாரமெலாஞ் சமனுய்ச் சேர்த்துப்
பொடுதலேநீர் விட்டரைத்துக் குன்றி போலக்

கதிபெறவே யுண்டைசெய்து முலைப்பால் தேனில்
கருணையுட னேகொடுக்க மதலை கட்குச்
சதியான தோடமெல்லாம் பறந்தே ஓடிச்
சாகரத்திற் புக்குமெனச் சாற்றி னோமே.

(பொ-ரை.)—அதிமதுரம், மரமஞ்சள், கோரைக்கிழங்கு, அதிவிடயம், வசம்பு, கடுக்காய்த்தோல், தேவதாரம் இவைகளையெல்லாஞ் சரியெடையாய்ச் சேர்த்துப் பொடுதலைச்சாறுவிட்டு நான்கு சாமம் அரைத்துக் குன்றி மணிபோல் மாத்திரைசெய்து முலைப்பாலிலாவது, தேனிலாவது காலைமாலை இரண்டுவேளையும் மூன்று அல்லது ஐந்துநாள் கொடுத்தால், எல்லாத் தோடங்களும் ஓடிக்கடலில் விழுந்துவிடும். எனவே, மீண்டும் வாராவென் பதாம். (அஉ)

## தீராத்தோடக் குறிகுணம்.

### அறுசீர் விருத்தம்.

செய்ய கண்ணு மிகச்சொருகும் சீதந் தண்ணீ ராய்க்கழியும்
மைய மேனி கறுப்பாகும் மாங்காய் போலே ஆசனமாம்
வையத் தேகம் மிகவிளைக்கும் வானம் போலே வயிறுகும்
செய்ய தோட மிதுதானே தீரா தென்று தான்உரையே.

சேமி னுடம்பு மிகநாறுஞ் செல்லா முலைப்பால் அருவருக்கும்
காயு முடம்பு கண்குழியுங் கண்டால் இதுதான் அறியாயோ
தேயு மிடையாய் சிவனுணை தீராத் தோட மென்றேதான்
ஆயுள் நூலி னளவுதனை அகத்தீச் சுரனுர் அருளினரே.

(பொ-ரை.)—குழந்தையின் கண்கள் மிகச்சொருகல், சீதமாகவும், தண்ணீராகவும் பேதியாதல், உடல்கறுத்தல், மலவாய் மாங்காய்போல் வெளிவரல், உடல் மிக இளைத்தல், வயிறு மிகுதியாக வூதுதல், உடல்மிக நாறுதல், முலைப்பாலுண்ணுமல் அருவருத்தல், சுரங்காய்தல், கண்குழிவிழுதல் என்பவைகள் காணப்படுமாளுல் தீராத்தோடக்குறிகளாம். இது அகத்தியர் ஆயுள்மறையிற் சொல்லப்பட்டதாம். (அங)

மேலே கூறப்பட்ட தோடங்களேயல்லாமல் வேறு தோடங்கள் கூறுவாருமுளர். அவை—

" திட்டி தோட முலைத்தோடம் சேரும் விடய தோடமுடன்
இட்டுஞ் சமீப தோடமவன் கிரியா தோட நிணதோடம்
வட்ட முலையாய் குளிதோடம் வருமோர் பட்சி தோடமிகு
முட்டுத் தோடந் தொடுதோடம் சுணங்கன் தோடந் தீர்ந்திடுமே.

இன்னங்கேள் தேரைத்தோட மிடறுஞ்சாத் தோடமுடன்
சொன்ன விவைதாம் தீராவாம் "

(1) திட்டிதோடம், (2) முலைத்தோடம், (3) சேரும்விடயதோடம், (4) சமீபதோடம், (5) கிரியாதோடம், (6) நிணதோடம், (7) குளிதோடம், (8) பட்சிதோடம், (9) முட்டுத்தோடம், (10) தொடுதோடம், (11) சுணங்கன் தோடம், (12) தேரைத் தோடம், (13) சாத்தோடம் என்பவைகளாம். இவற்றில் முன்விளக்கிக்கூறப்பட்டவைகள் போக (1) முலைத்தோடம், (2) கிரியாதோடம், (3) நிணதோடம், (4) சுணங்கன்தோடம், (5) சாத் தோடம் இவைகளாம்.

# 3. மாந்த வகுப்பு

## பாற்பருவ நோய்

இது மந்த இயைபுடையதால் மாந்தம் எனப்பட்டது.

மாந்த ஆண்டளவு.

ஆண்டொன்றைத் தொட்டே யகல்மூன்று மாண்டளவும்
தாண்டுமே மாந்தநோய் தான்.

(பொ-ரை.)—மாந்த நோயானது முதலாண்டிலிருந்து மூன்றுண்டுவரை தொடர்வதாம். (அச)

இதனை,

" சிழருன மாந்தமெலாம் வருடந் தொட்டுச்
செறிமூன்று வருடமட்டும் வதைக்கு மென்னே."

என்பதாலறிக. (பாலவாகடம்)

மாந்தம் வரும் வழி.

அகவல்.

மாந்த நோய்வழி வகுக்குங் காலை
வாய்ந்த தாயார் மகவினை யீன்ற
பின்ன ராண்டிற் பெயர்சரு குறுநீர்
வன்மை யெருமைப் பால்வரு புளிமோர்
அந்நெய் வாழை யருங்கனி மாங்கனி
நன்மைத் தேங்காய் நல்லிள நீரும்
கடலை வெல்லங் காட்டிற் றுவரை
அடல்மொச் சைப்புளி யம்பருப் புப்பருப்
புருண்டை மாப்பொரு ளூறுமதி ரசமரிப்
பொருளூறு சோறு போத வருந்தல்
பாகல் கள்ளுண் பரிய வுளுவை
ஏகும் வாளை யெய்வரால் கெண்டை
இவற்றை யுண்ண லெழிலுண வின்பொழு
தவத்தைச் சுரமிவை யடியாய்ப் பலசில
எய்தின் மலக்கட் டேறி யுடல்கன
முய்தி யின்றி யுண்டா மந்தப்
பாலை யுண்ட பால கர்க்கு
மேலு மயிர்க்கூச் சுண்டாய் மிகுசுரம்
சாலக் கழிச்சல் சாருங் குறிசில
மாந்த முண்டாய் வருமென்
றுய்ந்த மருத்துவ ரறிந்துரைத் தனரே.

(பொ-ரை.)—மாந்தநோய் வருவதற்குக் காரணமாவன: குழந்தை பிறந்த ஆண்டிற்குள் பழுத்துதிர்ந்த சருகூறியநீர், எருமைப்பால், எருமையின் புளித்தமோர், எருமைநெய், வாழைப்பழம், மாம்பழம், தேங்காய்,

இளநீர், கடலை, வெல்லம், காட்டுத்துவரை, மொச்சைக்கொட்டை, புளியங் கொட்டை, பருப்புருண்டை, மாவினுற் செய்யப்பட்ட பொருள்கள், அதிரசம், வாயுப் பொருள்கள், சோறு, இவைகளை மிகுதியாக அருந்தல், பாகற் காய், கள், ஊன், பெரிய உளுவைமீன், வெடித்தெழும் வாளைமீன், பன்றி, வரால்மீன், கெண்டைமீன், இவைகளையுண்பதால் சுரமடித்தல், என்னும் இவற்றிற் சில பலகாரணங்களால் குழந்தையைப் பெற்ற தாய்க்கு மலச் சிக்கல் மிகுதிப்பட்டு, அதனுல் உடம்பு கனத்து வருந்துங்காலத்து அக் குழந்தைகள் அத்தாய்களின் முலைப்பாலைக் குடிக்கின்றமையின் மயிர்க் கூச்சுடன்கூடிய சுரம் உண்டாதலன்றி, மிக்க கழிச்சலும் கண்டு, மாந்த நோய்க் குறிகுணங்களிற் சில உண்டாமென்று மருத்துவநூலை நன்ரு யாய்ந்த அறிஞர் கூறுவர்.

இதனை,

அன்னமும் பாலு நெய்யு மழகிய பழமுந் தேங்காய்
பின்னையுங் கடலை வெல்லம் பெரியதோர் கதலிப் பண்டும்
தின்னுமோர் காலந் தன்னில் நீயென வெதும்பு மாகில்
ஒன்றுறு பிள்ளைக் குத்தான் உவந்துமே மாந்த முண்டாம்.

அன்னைபால் மலக்கட் டாகி யதனுடல் கனத்துத் தோன்றித்
தின்றதால் வாயுப் பண்டம் தின்றத ருலே மாந்தம்
பிள்ளைதான் மயிர்க்கூச் சிட்டுப் பிள்ளைக்கு வெதுப்பு காணும்
மின்னுெத்த விடையாய் கேளாய் மிகுத்திடுங் கழிச்சற் ருனே.

மாதா வயிற்றின் மந்தமுலைப் பாலே யருந்தி வருமாந்தம்
சூதா மரம்பை தெங்கிளநீர் சுரபி மாமிசங் கனிகவிச்சு
பேதா மலைத்து வரைகடலை பேசு மொச்சை புளிங்கொட்டை
மாதா கொள்ளில் பிள்ளைக்கு வருங்காண் மாந்தந் தப்பாதே.

எந்த நோயும் வருவிதந்தான் இனித்த வெல்ல முந்தேங்காய்
சொந்த வுண்டை யுளுவையுடன் துள்ளு வாளை வரால்கெண்டை
சந்த மேதிப் பாலிறைச்சி சருகின் றண்ணீர் புளிமோர்தான்
வந்த பாகல் சுரைகதலி வரூஉ மாந்த மிவைதின்ருல்.

என்னும் பாலவாகடச் செய்யுள்களாலும், பின்னும் அடியிற்கண்ட செய்யுட்களாலு மறிக :—

முளைத்த பின்னன்னை கொள்ள முதிர்ந்தநோய்
வளர்த்த பிள்ளையைச் சூழ்ந்து மலிந்திடும்
இளைத்த சர்க்கரை வள்ளிக் கிழங்குடன்
தெளித்த மாங்கனி தெங்கு பலாவிற்கே.

பலம தாங்கட்டுப் பால்சுரை பீர்க்கங்காய்
அலரும் வாழை யவரை துவரையுங்
கிலம தாக்கிடுங் கீரைத்தண் டின்கறி
குலவு மாங்கட லைதனைக் கொள்ளவே.

கொள்ள வேசெம் புலித்தகர் கோழிமீ
னெள்ளற் பன்றிக் கறிபல் லிறைச்சியு
முள்ளுக் கன்னை நிதநித முண்டக்காற்
பிள்ளைக் குப்பல மாந்தம் பெருகுமே. (அடு)

## மாந்தத் தொகை.

### அகவல்.

மாந்தம் வாதம் பித்த மையம்
சேர்ந்த விடம்போர் திகழும் வாலே
சுரநீர் செரியா சூழ்கட் டுப்பால்
எரிதுலே தலேகண மிழுக்கும் வலிப்பு
சுழிமுக்கு சந்நி சோர வூதல்
கழியா வீக்கங் கண்ட விருபான்
ஒன்றென் பார்சில ரோதிய வவையுடன்
நன்ருய்த் தனித்தனி நாட்டிய வுப்பு
சத்தி வரட்சி சாருந் திட்டு
முற்று முளேமாந் தக்கர மொழிபேய்
நீர்கணந் தோட நிலேத்த கருப்ப
மார்பத் துங்கொடு வறைவா முப்பத்
தொன்றென வோதுவர் முன்ஞேர்
நன்றுறு கலேவழி நாடினே யறியே.

(பொ-ரை.)—(1) வாதம், (2) பித்தம், (3) ஐயம், (4) விடம், (5) போர், (6) வாலே, (7) சுரம், (8) நீர், (9) செரியாமை, (10) கட்டு, (11) பால், (12) எரி, (13) துலே, (14) தலே, (15) கணம், (16) (இழுக்கின்ற) வலிப்பு, (17) சுழி, (18) முக்கு, (19) சந்நி, (20) ஊதல், (21) வீக்கம் என்னும் இருபத்தொன்றென்பர் சிலர். இவற்றுடன் சில நூற்றலேவர் ஆங்காங்குத் தனித் தனியாகக் கூறிய, (1) உப்பல், (2) வாந்தி, (3) வரட்சி, (4) திட்டு, (5) உளேமாந்தம், (6) அக்கரம், (7) பேய், (8) நீர்க்கணம், (9) தோடம், (10) கருப்பம் ஆகிய மாந்தங்கள் பத்தையும் சேர்த்து முப்பத்தொரு மாந்தங்கள் உண்டெனபாருமுளர். ஆகையால் அவற்றை நல்ல நூல்வழி ஆராய்ந்தறிவாயாக.

முன்னர் சொல்லப்பட்ட இருபத்தொரு மாந்தங்களே,

“ எண்ணிய மாந்தக் கூட்டம்
இயலுறும் வாத மாந்தம்
உன்னிய பித்த மாந்தம்
உயர்செறி சேத்ம மாந்தம்
பண்ணிய விடமா மாந்தம்
பாடுறு போரின் மாந்தம்
துன்னிய வாலே மாந்தம்
சுரமாந்த மின்னங் கேளே.

கேளேநீர் மாந்தமுடன் செரியா மாந்தம்
கேடுபுரி கட்டுமாந் தத்தி ஞேடு
பாளான பால்மாந்தந் துலேயா மாந்தம்
பகரரிய வெரிமாந்தந் தலேயின் மாந்தம்
தாளான கணமாந்தம் வலிப்பு மாந்தம்
சதியான சுழிமாந்த முக்கு மாந்தம்
வேளான சந்நிமாந்த மூது மாந்தம்
வீக்கமுறு மாந்தமுட னிருபத் தொன்றே.”

என்னும் பாலவாகடச் செய்யுள்களாலறிக.

மாந்தம் இவ்விருபத்தொன்றில்—பொது மாந்தம், செரியா மாந்தம், தலை மாந்தம், போர் மாந்தம், கட்டு மாந்தம், விட மாந்தம், நீர் மாந்தம், கழி மாந்தம் ஆகிய இவற்றை எண் வகை மாந்த மென்பாருமுளர்.

இவ்வெட்டில் பொதுமாந்தம் ஒன்றும், கழி மாந்தம் ஒன்றும் ஆக இரண்டும் மேல் இருபத்தொன்றிற் சேராதவை. (அசு)

மாந்தப் பொதுத் தன்மை.

மாந்த நோயில் வரும்பொதுத் தன்மைகள்
வாய்ந்த பலவவை வழுத்தக் கேளாய்
குழந்தை யுடலங் கொள்ளல் கனதி
விழைந்து நோதல் வேர்த்தல் சோர்ந்து
இடத்தல் காய்தல் இளரழ றுற்றம்
படுதலை மயக்கம் பார்வை சேத்தல்
கண்கள் சுழலல் கண்கள் குழிதல்
நண்ணு முகம்பல வாக வெளுத்துப்
பண்ணு மொளிதரல் பகர்குர ருழ்தல்
திண்வா யுலரல் சேர்முலை யுண்ணு
தெண்ணும் வாந்தி யேற வெடுத்தல்
பசியி ராமை பலநிற பேதி
கசியுஞ் சீதமு மலமுங் காணல்
கெட்ட பால்போல் இளர்தண் ணீர்போல்
விட்ட பேதி விதமாய்க் காணல்
கைகால் பின்னல் கைகால் குளிரல்
கையிற் றங்காக் கலங்கித் துள்ளல்
என்னு மிவையே யென்றனர்
மன்னிய முன்னூல் மாண்புடை யோரே.

(பொ-ரை.)—மாந்த நோயில் பொதுக் குறிகள் பலவுள: அவற்றைச் சொல்லக் கேட்பாயாக: அவை, குழந்தை உடம்பு பளுவாயிருத்தல், நோதல், வேர்த்தல், சோர்ந்து கிடத்தல், இடைவிடாமற் சுரமடித்தல், உடம்பு வெப்பு நாற்றம் வீசல், தலை மயக்கம், கண்விழி சிவத்தல், கண்கள் சுழலல், கண்கள் குழி விழுதல், முகம் பல மாதிரியாக வெளுத்து ஒரு வகையான ஒளி வீசல், குரல் தாழ்தல், வாயுலரல், முலையுண்ணாமை, பல தடவை வாந்தி பண்ணல், பசி யெடுக்காமை, பல நிறமான பேதி, அவை சீதமும் மலமுமாகவும், கெட்டுப்போன பால் போலவும், தண்ணீர் போலவும் கழிதலுடன், கைகால் பின்னிக்கொள்ளல், கைகால் குளிர்தல், குழவி கையிற்றங்காதழுதல், துள்ளுதல், என்னும் இக்குறிகளேயாமென்று நிலைபெற்ற முன்னூலாகிய மருத்துவ நூலைக்கற்ற பெருமையையுடையவர்கள் புகன்றனர்.

இதனை,

“பிள்ளையுங் கனத்தி ருக்கும்
பிரண்டைபோற் காலும் பின்னி
உள்ளவா கண்சி வந்தே
யுடம்பினி ளேயுங் காட்டும்
துள்ளியே கையில் தங்கா
துடுக்கெனச் சுழலு மாகில்
கள்ளமாய்க் குரலுந் தாழ்ந்து
கண்குழிந் திருக்கு மாந்தம்.”

“ மாந்தத்தின் குணமே கேளாய்
வயிறுபோம் வெப்பு நாறும்
சோர்ந்துகை கால்கு ளிர்ந்து
தோகையே முலையுண் ணுது
வாந்தியு மிகவே பண்ணும்
வாயுமே யுலர்ந்து காயும்
மாந்தியே மயக்க முண்டாம்
மாந்தத்தின் குணம தாமே.”

“ மாந்தத்தின் குணமே தென்றல்
வயிறு கழியு மயக்கமதாம்
காந்து பசியு மில்லாமல்
காம விகாரங் கொண்டவர்போல்
சோர்ந்து கிடக்குங் கைகாலும்
குளிர்ந்தே காணுந் தொல்லுலகில்
காந்தள் மலர்போற் கையுடையாய்
கனத்த மாந்த குணமிதுவே.”

“ பாரே சீத மலமுடனே
பதமாய்க் கழியும் பலவிதமாய்த்
தேரே கெட்ட பாலதுபோல்
தெளிந்த தண்ணீர் போலவுமே
வாரே கழியுங் குணம்பாராய்
வளமா யுள்ளங் கைகாலும்
நேரே குளிர்ந்த தண்ணீர்போல்
நிசந்தா னென்றுந் தான்பாரே.”

“ பாரே வெதும்புங் கண்சுழலும்
பனிபோற் றேக மிகவேர்க்கும்
பாரே முகமும் பலவிதமாய்ப்
பளிங்கு போல வொளி மினுக்கும்
பாரே யிந்தக் கூறதனைப்
பருவ மறிந்து கொண்டெல்லாம்
பாரே யிந்தக் குறிதானே
பண்பாய் மாந்த மென்றுரையே.”

என்னும் பாலவாகடச் செய்யுள்களாலறிக.

குறிப்பு.—இதுவன்றி, கழிமாந்தமொன்றும், கல்மாந்தமொன்றும் மாந்தக்கடையில் எழுதப்பட்டுள. (அஎ)

## மாந்தங்களுக்குப் பொது மருந்து.

### நொச்சிச்சாறு.

வெண்பா.

நொச்சி பொடுதலையு நுண்நுணு வேலிநாற்
பச்சை யிலைசரியாய்ப் பாலருக்—கச்சமற
நீர்வரவே தானருக்கி நீகொடுக்க வேமாந்தம்
ஊர்விட்டுப் போமென் றுரை.

(பொ-ரை.)—நொச்சியிலை, பொடுதலையிலை, நுணுவிலை, உத்தாமணியிலை இவற்றைத் தனித்தனியாக இடித்துச் சாறு பிழிந்து வடிகட்டி ஒவ்வொன்றையும் சரியளவாகக்கூட்டி யாதொரு அச்சமுமில்லாமல் குழந்தைக்குக் காலைதோறும் மூன்று நாள் சிறு பாலடையளவு கொடுத்தால் மாந்தம் ஊரைவிட்டுப் போய்விடும் என்று சொல்வாயாக. (அஅ)

வேலிப்பருத்திச்சாறு.

அறுசீர் விருத்தம்.

உத்தா மணியும் பேய்மருட்டி யுவந்த சாணக் கிலையுடனே
வித்தார முள்ள வெதுப்படக்கி வேளை நொச்சி லிவையாறும்
ஒத்தே வதக்கிச் சாறுட்கொண் டுயர்ந்த வசம்பு சிறுதேக்குஞ்
சற்றே யாமை யோடுசுட்டுச் சாற்றிற் கொடுமாந் தம்போமே.

(பொ-ரை.)—உத்தாமணி, பேய்மருட்டி, சாணக்கி, வெதுப்படக்கி, வேளை, நொச்சி ஆகிய இவற்றின் இலைகளையும் தனித்தனியாகச் சரியளவா யெடுத்துப் பிட்டவியல் செய்து பிழிந்த சாற்றில், வேளைக்கு ஒரு பாலடை எடுத்து அதில் சுட்ட வசம்புப்பொடி, கண்டுபாரங்கி, ஆமையோட்டுப் பருப்பம் வகைக்கு இரண்டு குன்றியளவு வீதம் போட்டுக் கலக்கி மூன்றுநாள் கொடுக்க மாந்த நோய் நீங்கும். (அகூ)

பொடுதலைச்சுரசம்.

கலி விருத்தம்.

ஒருபிடி பொடுதலை யோர்கல் லுப்புடன்
இருவித மொன்றதா யிடித்துச் சாறுசெய்
சிறுவித சட்டியிற் சிறுகச் செய்தபின்
தருவித முண்டிடத் தணியு மாந்தமே.

(பொ-ரை.)—பொடுதலை ஒரு பிடி எடுத்து அதில் ஒரு கல் உப்பு சேர்த்து இரண்டையும் இடித்துச் சாறுபிழிந்து, ஒரு மண் சட்டியை அடுப்பிலேற்றி அச் சட்டி நன்றாய்ச் சூடேறின பின் கீழ் இறக்கிவைத்து, அதில் மேற்படி சாற்றை ஊற்றிச் சிறுகச் செய்து அதைக் குழந்தைக்குக் கொடுத்தால், மாந்த நோய்த் தணியும். (கூ0)

வெற்றிலைக்காம்பு கற்கம்.

அறுசீர் விருத்தம்.

வெற்றிலைக் காம்பு பதினொன்று மேவு வசம்பு மவ்வளவு
பற்றிய வுள்ளி தானிரண்டு பண்பாந் திப்பிலி தானொன்று
சுற்றி வெதுப்பித் தானரைத்துச் சுகமாய்ப் பருவந் தக்கபடி
வற்றிய வெந்நீர் தனிலிடவே மாந்தம் போமென் றருளினரே.

(பொ-ரை.)—வெற்றிலைக் காம்பு பதினொரு பங்கு, வசம்பு பதினொரு பங்கு, வெள்ளைப் பூண்டு இரண்டு பங்கு, சிறு திப்பிலி ஒரு பங்கு இவைகளை வெச்சென வெதுப்பி வெந்நீர் விட்டரைத்துக் குழந்தைகளின் பருவத்துக்குத் தக்க அளவு நன்றாய்க் காய்ந்த வெந்நீரிற் கரைத்துக் கொடுத்தால், மாந்த நோய்த் தீர்ந்துபோய்விடும் என்றறிவாயாக. (கூக)

குறேட்டை கற்கம்.

அறுசீர் விருத்தம்.

வல்ல குறேட்டை யிலையதனை வாட்டிப் பிழிந்து தானதிலே
கல்லி யோடு நல்வசம்பு கனத்த வட்டத் திருப்பியுடன்
சொல்லிச் சுட்டங் காட்டியதைச் சுருக்கிற் கலக்கி வார்த்திடவே
மல்லும் பொல்லா வினையான மாந்தம் போமென் றருளினரே.

(பொ-ரை.)—குறேட்டை இலையை வதக்கிப் பிழிந்து அதில் ஆமை ஓடு, வசம்பு, வட்டத்திருப்பி இவைகளைத் தனித்தனி சுட்டு அரைத்து விரைவிற் கலக்கிக் குழந்தைக்கு வார்த்தால், கொடிய நோயான மாந்த நோய் போய்விடும்.

இதில் அளவு சொல்லப்படாமையால் இலைச் சாறு ஒரு பலமானல் மற்றவை தனித்தனி ஒவ்வொரு வராகனெடையெனக் கொள்க. (௬௨)

வேலிப் பருத்திக்கற்கம், துவளை.

அறுசீர் விருத்தம்.

வேலிப் பருத்தி மேனியுடன் வேளை யிண்டு பொடுதலையும்
ஆலித் தின்னு மகத்தியிலை யாறும் வதக்கிச் சாறுகொடு
கோல வசம்பு மாமையோடுங் குலவு மோமஞ் சுட்டரைத்துக்
காலிற் கையிற் றுவளையிட்டுக் கடுகக் கொடுமாந் தம்போமே.

(பொ-ரை.)—உத்தாமணி, குப்பைமேனி, வேளை, ஈயக்கொழுந்து, பொடுதலை, அகத்தி இவ்வற்றின் இலைகளையும் சரியளவாகவெடுத்துப் பிட்டவித்துச் சாறு பிழிந்து வசம்பு, ஆமை ஓடு, ஓமம் இவற்றில் ஆமையோட்டையும் வசம்பையும் சுட்டுக் கரியாக்கிக் கொண்டும், ஓமத்தை வறுத்துக் கொண்டும், மேற்படி சாற்றால் அரைத்துக் கால்களிலும் கைகளிலும் பூசியும், உள்ளுக்குக் கொடுத்தும் வர, மாந்த நோய் நீங்கும்.

சாறு முதலியவற்றிற்கு அளவு சொல்லப்படாமையால் சாறு ஒன்றுக்கு சரக்குப் பத்துக்கொன்று சேர்க்க வேண்டுமென்றறிக. (௬௩)

ஓமக் குடிநீர்.

அறுசீர் விருத்தம்.

விடுமே யோம முள்ளியுடன் மீறு மிளகு திப்பிலியும்
நடுமே சீலை தனில்முடிந்து நன்றாய் நாழி நீர்தன்னில்
இடுமே யடுப்பி லெட்டொன்றாய் இதமாய்க் காய்ச்சிக் குடிநீரைக்
கொடுமே மாந்த முள்ளவெலாம் குடிபோ மென்று கூறினரே.

(பொ-ரை.)—ஓமம், வெள்ளைப் பூண்டு, மிளகு, திப்பிலி இவற்றைத் தனித்தனி ஒவ்வொரு பலம் எடுத்து இடித்துச் சீலையில் முடிந்து ஒரு படி தண்ணீரிற் போட்டு அடுப்பிலிட்டு எட்டொன்றாய்க் காய்ச்சிக் குழந்தைப் பருவத்திற்கும், நோய் வன்மைக்குந் தக்க அளவில் கொடுத்து வந்தால், மாந்த நோயானது அக்குழந்தையின் உடலை விட்டு ஓடிப்போய் விடும்.

வேளையும், நாளும் சொல்லப்படாமையால், காலை மாலை இரண்டு வேளையும், நோய் வன்மைக்குத் தக்க நாளும் கொள்ளவேண்டும். (௬௪)

சின்னித் துவளை.

கலி விருத்தம்.

ஆவுஞ் சின்னி யடவிவெண் ணொச்சிலை
ஏவு வேப்பிலை சீந்தி லிடித்துநீர்
மேவு மூன்றுநாள் மேற்றுவ ளைசெய்
நோவு மாந்த நொடிக்குளே நீங்குமே.

(பொ-ரை.)—சின்னி, நொச்சி, வேம்பு, சீந்தில் இவற்றின் இலைகளை வெதுப்பி யிடித்துச் சாறு பிழிந்து, அவற்றை ஒன்ருய்க் கலந்து மூன்று நாள் கை கால்களில் துவளையிட, மாந்த நோய் நொடிக்குள் நீங்கும். (கூரு)

வேளைக் குடிநீர்.

வெண்பா.

வேளைவேர் சுக்குடனே வெந்தயமும் வெள்ளுள்ளி
பாளை வசம்பு பகரோமம்—வாள்விழியாய்
ஒன்ருகக் காய்ச்சி யுடன்குழவிக் கீந்துவிடக்
கண்டவுடன் மாந்தம்போங் காண்.

(பொ-ரை.)—வேளைவேர், சுக்கு, வெந்தயம், வெள்ளைப் பூண்டு, வட்டத் திருப்பி, வசம்பு, ஓமம், இவற்றை வகைக்கு அரைவராகனெடையாக வெடுத்து இடித்த பொடிக்குப் பதினறு பங்கு தண்ணீர் விட்டு எட்டுக் கொன்ருகக் காய்ச்சி, சுடுகை வெச்சென்றிருக்குங் காலத்திலேயே அதைக் குழந்தைக்குத் தக்க அளவாக காலை மாலை இரண்டு வேளையும் வார்த்தால், மாந்த நோய் நீங்கும். (கூசு)

(வீரமா முனிவர் நசகாண்டம்.)

மஞ்சணத்திக் குடிநீர்.

அறுசீர் விருத்தம்.

என்றே மஞ்ச ணத்திநொச்சில்
இனிய வேலி கழற்கொடியும்
ஒன்றே யொவ்வொன் றொருபிடியாய்
ஒக்க வறுத்துச் சட்டிதனில்
நன்ருய்க் கருக்கி நீர்நாழி
நயந்து விட்டு மடுப்பேற்றிக்
கன்று வோமம் வசம்புசுக்கு
மிளகு பொடுதலைக் காயாமே.

ஆமே திப்பிலி யதனேடே
யருநல் லெண்ணெ யிற்சிவக்கத்
தாமே வறுத்துப் பொட்டணமாய்ச்
சமைந்த நீரி னுடன்போட்டு
வேமே காய்ச்சி யோர்சங்கு
விரைவிற் கொடுக்கப் படுமாயின்
போமே மாந்த முள்ளவெலாம்
புறம்போய்க் கடலிற் புக்கிடுமே.

(பொ-ரை.)—நுணவிலை, நொச்சித்துளிர், உத்தாமணி யிலை, கழற்சியிலை இந்நான்கு இலைகளையும் தனித்தனி ஒவ்வொரு பிடி எடுத்துக் குறுக அரிந்து

சட்டியிலிட்டுக் கரியாக்கி ஒருபடி தண்ணீர் விட்டு அடுப்பேற்றி அந்நீரினுடன், ஓமம், சுட்ட வசம்பு, சுக்கு, மிளகு, பொடுதலைக்காய், திப்பிலி ஆகிய இவைகளை வகைக்கு ஒரு வராகனெடை நல்லெண்ணெய் விட்டு வறுத்துப் பொடித்து ஒரு சீலையில் முடிந்து அம்முடிச்சைப் போட்டுக் குடிநீர் முறைப் படி எட்டொன்றாகக் காய்ச்சி வடித்து, வெச்சென்றிருக்கும்போது ஒரு சங்கு அளவு, காலை மாலை இரண்டு வேளையும் கொடுத்தால், எல்லா மாந்தங் களும் உடலை விட்டுப் புறம்போய்க் கடலில் கலந்துவிடும் (என்றால் நோய் விரைவில் நீங்கும் என்பதாம்). (கள)

உத்தாமணிக் குடிநீர்.

அறுசீர் விருத்தம்.

உத்தா மணியிலை வேளையின்வேர்
உவந்த நொச்சில் பொடுதலையும்
சித்தா முருங்கை நுணாவீர்க்கு
சேர வறுத்து நீர்விட்டு
ஒத்த வோமந் திரிகடுகும்
உயர்ந்த வசம்பு முடிந்ததனை
வைத்தெட் டொன்றாய்க் காய்ச்சிகொடு
மாந்த மெல்லா மோடிடுமே.

(பொ-ரை.)—உத்தாமணியிலை, வேளைவேர், நொச்சித் துளிர், பொடுதலை யிலை, முருங்கை ஈர்க்கு, நுணா ஈர்க்கு ஆகிய ஆறையும் தனித்தனி ஒவ் வொரு பிடி எடுத்துக் குறுக அரிந்து இளவறுப்பாய் வறுத்து, அதில் ஒரு படி தண்ணீர் விட்டு, ஓமம், சுக்கு, மிளகு, திப்பிலி, சுட்ட ஆண் வசம்பு இவைகள் வகைக்கு ஒரு கழஞ்சு எடுத்து இடித்து ஒரு சீலையில் முடிந்து அந் நீரிற் போட்டுக் குடிநீர் காய்ச்சும் முறைப்படி எட்டொன்றாய்க் காய்ச்சி, காலை மாலை இரண்டு வேளையும் ஒவ்வொரு சங்கு குழந்தைக்குக் கொடுத்து வந்தால், எல்லா மாந்தங்களும் தீர்ந்து விடும். (கஅ)

முக்கடுகு குடிநீர்.

அறுசீர் விருத்தம்.

சுக்கு மிளகு திப்பிலியும் தூய வோம முள்ளியுடன்
ஒக்க நறுக்கிச் சீலையினி லுவந்து முடிந்து நீருழக்காய்ச்
செக்கச் செவக்கக் காய்ச்சியபின் சீராய்ச் சங்கு புகட்டிடவே
மிக்க மாந்தப் பிணிதோடம் விட்டே யோடுங் கண்டாயே.

(பொ-ரை.)—சுக்கு, மிளகு, திப்பிலி, ஓமம், வெள்ளைப்பூண்டு இவ் வைந்து சரக்குகளையும் தனித்தனி ஒன்றேகால் வராகனெடை எடுத்து நன் றாயிடித்து ஒரு துணியில் முடிந்து கால்படி தண்ணீரிற் போட்டு நன்றாய்த் தண்ணீர் சிவக்கும்படி காய்ச்சி வேளைக்கு ஒரு சங்களவு கொடுத்தால், மாந்த நோய், தோடம் இவைகள் விட்டொழியும். (கக)

மாசிப்பச்சைக் குடிநீர்.

எண்சீர் விருத்தம்.

கியாழத்தால் மாந்தங்கள் போகக் கேளாய்
கேடற்ற மாசிப்பத்ரி பர்ப்பா டகந்தான்
கயாழத்தால் நாயுருவி முட்காய் வேளை
கருஞ்சீர கத்துடனே கோழி யெச்சம்

இயாழத்தாற் பற்பமாய்ச் செய்து கொண்டந்
இருவேலி சங்குசுக் குடனே யேலம்
சியாழத்தால் ரோகணியும் பறங்கிச் சக்கை
சீக்கராம் பட்டைகா வட்டம் புல்லே.

புல்லான கடுக்காயு மாசிக் காயும்
புகழான வசம்போடு தான்றி முத்தம்
வில்லான நீர்படியி ரண்ட தாகும்
விதமாக வெட்டொன்றுய்க் காய்ச்சி யேதான்
கல்லான மாந்தமொடு சுழிமாந் தங்கள்
கைப்பினிப்பால் வந்ததொரு கழிச்சல் மாந்தம்
மல்லான மாதாவாய்ச் சிறுபண் டத்தால்
மருவிவந்த மாந்த மெல்லா மயங்கிப்போமே.

(பொ-ரை.)—மாசிப்பத்திரி, பர்ப்பாடகம், நாயுருவி, முக்காவேளை, கருஞ்சீரகம், கோழிக்காரம் இவைகளையெல்லாம் வகைக்கு அரை பலம் எடுத்திடித்துச் சட்டியிலிட்டுச் சாம்பலாக்கி அத்துடன் வெட்டிவேர், சங்கம்பட்டை, சுக்கு, ஏலரிசி, கடுகுரோகணி, பறங்கிச்சக்கை, சீக்கராம்பட்டை, காவட்டம்புல், கடுக்காய், மாசிக்காய், வசம்பு, தான்றிக்காய், கோரைக்கிழங்கு இவை வகைக்குக் கழஞ்சு எடுத்து இடித்துப் போட்டு, இரண்டு படி தண்ணீர் விட்டு எட்டொன்றுய்க் காய்ச்சிக் காலைமாலை இருவேளையுமாக மூன்று, ஐந்து அல்லது ஏழு நாள் கொடுக்க, மாந்தம், சுழிமாந்தம், கழி மாந்தம் இவைகளும், பொதுவாக மற்ற மாந்தங்களும் தீரும். (௧00)

ஓமாதியுருண்டை.

அறுசீர் விருத்தம்.

என்றே யோமம் திப்பிலிசுக் கிருசீ ரகமுங் கொத்துமலி
பண்ணுமை யோடு குரோசானி பகர நிறுத்த தோர்நிறையாய்த்
துன்னு நீரிற் றுனரைத்துத் துதித்த நல்ல துவரையென
உண்டை மாந்த முள்ளவெலா மோடுங் கண்டா யுண்மையிதே.

(பொ-ரை.)—ஓமம், அரிசித்திப்பிலி, சுக்கு, சீரகம், கருஞ்சீரகம், கொத்துமல்லி, ஆமையோட்டுக் கரி, குரோசானி ஓமம், ஆகிய இவைகளைச் சரி எடையாக நிறுத்துத் தண்ணீரால் அரைத்து, மெழுகு பதத்தில் வழித்துத் துவரை யளவு உருட்டி, அந்தந்த மாந்தத்துக்குத் தக்க குடிநீரில் வேளைக்கு ஒரு மாத்திரையாக மூன்று அல்லது ஐந்து நாளைக்குக் கொடுத்தால், எல்லா மாந்தங்களும் நீங்கும். இஃதுண்மை. நீ இதை அறிவாய். (௧0௧)

வாய்விளங்க உருண்டை.

அறுசீர் விருத்தம்.

மாசிலார்க்கு மாந்த வுண்டை
வண்மை யுடனே தானுரைக்க
ஆசையாக வாய் விளங்கம்
ஆமை யோடு நன்மிளகு
வாசமான பொடுத லேக்காய்
வசம்பு திப்பிலி கழற்பருப்புக்
கூசலின்றிச் சரிநி றையாய்க்
கூட்டி நீவைத் தரைத்திடுமே.

அரைத்த மருந்து பொடுதலைச்சா
றம்மி தனிலே விட்டரைத்து
நிரைத்த சூரைக் காயளவு
நிழலி லுலர்த்திக் குளிகைதனைச்
சுரத்தின் கழிச்ச லிருமலுக்குச்
சொற்சிறு வழுதலைக் குடிநீரில்
உருத்து ருண்டை தனைகொடுக்க
உடம்பிற் பிணியுந் தீர்ந்திடுமே.

வாந்தி பொரும லுக்கெல்லாம்
வளரும் வேலிக் கியாழத்தில்
ஓய்ந்த வெகுவாய்க் கழிச்சலுக்
கோமக் கியாழந் தன்னிலிடக்
கேந்தி யாமாந் தத்துக்குக்
கியாழ மறிந்தே யிடுவீரேல்
மாந்தம் விட்டுத் தானகலும்
வளரும் பிள்ளை யாமென்றே.

(பொ-ரை.)—வாய்விளங்கம், ஆமையோட்டுக்கரி, கெட்டி மிளகு, பொடுதலைக்காய், வசம்பு, திப்பிலி, கழற் பருப்பு, இவைகளைச் சரி எடை யெடுத்திடித்துக் கல்வத்திட்டுப் பொடுதலைச் சாற்றால் அரைத்து மெழுகு பதத்தில் வழித்துச் சூரைக்காயளவு உருட்டி நிழலில் உலர்த்தி, வேளைக்கொரு மாத்திரை கொடுக்க வேண்டும்.

சுரம், கழிச்சல், இருமலுக்கு.—சிறு வழுதலைக் குடி நீரில் வேளைக்கு ஒரு மாத்திரை கொடுக்க வேண்டும். அப்படி கொடுத்தால் மேற்படி நோய்கள் தீர்வனவன்றி, மற்றும் உடம்பிலுள்ள நோய் யாவுந் தீரும்.

வாந்தி, வயிற்றுப் பொருமலுக்கு.—உத்தாமணிக் கியாழத்திலும், கழிச்சலுக்கு.—ஓமக்கியாழத்திலும், மாந்தங்களுக்கு.—அவ்வவற்றிற்குரிய கியாழத்திலும் கொடுக்கவேண்டும். (௪0உ)

## பூர மாத்திரை.

### அறுசீர் விருத்தம்.

உரைப்பேன் பூரம் பலமரைதான்
ஓகோ லவங்க மேலமுடன்
திரைப்பேன் வசம்பு சீரகந்தான்
திறமாய் மாசி யதிவிடயம்
கரைப்பேன் வகைக்குக் காற்பலமாய்க்
கனமாய்ப் பூரஞ் சுத்திசெய்து
மறைப்பேன் கல்வ மதிற்போட்டு
மாசிப் பத்திரி வேர்ச்சாறே.

வேர்ச்சாற் சாம மொன்றரைப்பாய்
விட்ணு கரந்தைச் சாற்சாமம்
வேர்ச்சாற் வார்த்தரைத் துக்கொண்டு
விதமாய்க் கொத்து மல்லியைப்போல்

வேர்ச்சாற் குளிகை செய்துகொண்டு
விளங்கு நிழலி லுலர்த்தியபின்
வேர்ச்சாற் குளிகை செப்பில்வைத்து
வேதப் பொருளை மனதிலெண்ணே.

எண்சீர் விருத்தம்.

எண்ணவே குளிகை யொன் றெடுத்துக்கொண்டங்
கெழிலான மாந்தத்தின் இயாழத் தீய
எண்ணவே யோடிவிடு மாந்த மெல்லாம்
இயம்பினேன் முன்சொன்ன தெல்லாம் போகும்
எண்ணவே யிம்மொழிபோ லார்தான் சொல்வார்
எடுத்தமுறை யாடுமிந்த முந்நூறு பாரு
எண்ணவே முன்சொன்ன மாந்த மெல்லாம்
என்சொல்வேன் பறந்தோடு மிதனுற் பாரே.

(பொ-ரை.)—தூய்மை செய்த இரசகர்ப்பூரம் பலம் அரை, இலவங்கம், ஏலரிசி, சுட்ட வசம்பு, சீரகம், மாசிக்காய், அதிவிடயம், வகை ஒன்றுக்குப் பலம் கால் ஆக நிறுத்தெடுத்துப் பொடிசெய்து வைத்துக்கொண்டு, முன்னர் பூரத்தைக் குழிக்கல்லிலிட்டரைத்து, நன்குய் நுண்ணிய பொடியாக்கிப் பின்னர் மற்ற பொருட் பொடியைக் கூடச்சேர்த்து நன்குய் உறவாக்கி, மாசிப் பத்திரி வேர்ச் சாற்ருல் ஒரு சாமம் வரைக்கும் அரைத்துப் பின்னர் விட்ணு கரந்தைச் சாற்ருல் ஒரு சாமம் வரைக்கும் அரைத்து, மெழுகு பக்குவத்தில் கொத்துமல்லியைப் போல் மாத்திரை செய்து, நிழலில் உலர்த்திவைத் துக் கொண்டு, வேளைக்கு ஒரு குளிகையாக மூன்று அல்லது ஐந்து நாள்வரை அவ்வம்மாந்தக்குறிகளை யுணர்ந்து அததற்குத் தக்க குடி நீரில் இழைத்துக் கொடுத்தால், எல்லா மாந்தங்களுந் தீரும். (க0௩)

(சிமிட்டு ரத்தினச் சுருக்கம்.)

உத்தாமணி நெய்.

கட்டளைக்கலித் துறை.

சுத்தா வினெய்யு மொருநாழி யோமந் துதிபலந்தான்
உத்தா மணியிலை வெற்றிலைக் காம்பொவ் வொருபிடியாய்
வித்தா னசுக்குட னேவசம் புள்ளி விராகனெடை
எத்தா யரைப்பித் தெரியிடு மாந்தங்க ளேகிடுமே.

(பொ-ரை.)—பசுவின் நெய் படி ஒன்று, ஓமம் பலம் ஒன்று, உத்தாமணி யிலை, வெற்றிலைக் காம்பு இவ்விரண்டும் வகை ஒன்றுக்கு ஒவ்வொரு பிடி, தோல் சீவின சுக்கு, சுட்ட வசம்பு, வெள்ளைப்பூண்டு இவை வகை ஒன்றுக்கு வராகனெடை ஒன்று இவைகளில் நெய் நீங்க, மற்றவற்றை யெல்லாம் வெந்நீர் விட்டு நன்கு யரைத்து மேற்படி நெய்யிற் கலக்கி அடுப்பிட்டெரித்து பக்குவபாகத் தெடுத்து வடித்து, மாந்த நோய்களுக்குத்தக்க (மருத்துவர் அறிந்த வண்ணம்) அளவாகக் கொடுத்து, நோய்க்கும் மருந்துக்கும் தக்க பத்தியம் வைத்தால், மேற்படி நோய்கள் நீங்குவனவாம். (க0௪)

அகத்தி எண்ணெய்.

கட்டளைக்கலித் துறை.

ஏகு மகத்தியும் சாரணை வேலியெண் ணேருழக்காய்
வேகம தாகவும் கூனன் முதுகுள்ளி வெள்வசம்பு
ஆகம தாக வராக னெடையு மரைத்ததனைப்
பாகம தாக வெரியிட மாந்தம் பறந்திடுமே.

(பொ-ரை.)—அகத்திக் கீரைச்சாறு, சாரணை யிலைச்சாறு, உத்தாமணி யிலைச்சாறு, ஆமணக்கெண்ணெய் இந்நான்கும் வகைக்குக் கால்படியாக எடுத்து ஒரு மட்சட்டியிலிட்டு அதில் சுட்ட ஆமை ஓடு, வெள்ளைப்பூண்டு, சுட்ட வெள்ளைவசம்பு, இவைகள் வகைக்கு வராகனெடை ஒன்றாகக் கொண்டரைத்து மேற்படி சாற்றிற் கலந்து அடுப்பேற்றி எரித்துப் பக்குவத்தில் இறக்கிக் குழந்தைகளுக்குக் கொடுத்தால், மாந்த நோய்கள் பறந்தோடும். (கO௫)

சண்பகப்பூ குளிகை.

கலி விருத்தம்.

போகுஞ் சண்பகப் பூவிலா மிச்சம்வேர்
ஏகுங் கோஷ்டமோ டேலங்கோ ரோசனம்
வேகுஞ் சாத்திர வேதி மதுரமும்
வாகு வெட்டிவேர் மாசிப்பச் சொன்பதே.

ஒன்பது வகைக் கொன்று கழஞ்செடை
மின்பது வெட்டி வேர்த்தண்டுச் சாற்றினில்
நன்பது வெழு நாழிகை யாட்டிநீ
பின்பது குன்றிப் போலத் திரட்டியே.

திரட்டி யுலர்த்தி யொருமாத் திரையை
விரட்டி முலைப்பா லிளவெந் நீரினில்
குரட்டி யிழைத்தே கொடுப்பாய்மூன் றேநாள்
கரட்டி டும்பின் கடும்பிணி யாவுமே.

(பொ-ரை.)—சண்பகப்பூ, விலாமிச்சம் வேர், உயர்ந்த கோஷ்டம், ஏலம், கோரோசனம், சாத்திரபேதி, அதிமதுரம், வெட்டிவேர், மாசிப்பத்திரி, என்னும் ஒன்பதும் வகைக்கு ஒரு கழஞ்செடை எடுத்திடித்து, வெட்டிவேர்த் தண்டின் சாற்றினால் ஏழு நாழிகை யரைத்துக் குன்றிமணியளவாக உருட்டி உலர்த்தி, வேளைக்கு ஒரு மாத்திரையாக முலைப்பாலிலாவது, இளவெந்நீரிலாவது இழைத்து மூன்று நாள் கொடுத்தால் (மாந்த நோயான) கடிய நோய்கள் நீங்கும். (கO௬)

பூண்டு எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

கஞ்சாங் கோரை பிரமியிலை கனத்த துளசி பழம்பாசி
செஞ்சா நிலவிளா வல்லாரை சீந்திற் றண்டு சமூலமுடன்
மிஞ்சா வசம்பு ரோகணியும் வெண்கா வுளியோர் வராகனெடை
அஞ்சா வெண்ணெ யாழக்கு அதிலிட் டெரித்துப் பதம்பாரே.

பாரே யிறக்கி வடிகொண்டு பரிவாந் துட்டெடை யொன்ருகக்
கூரே பாலர் உள்ளுக்குக் கொடுக்க மாந்தம் போமிப்பால்
காரே யிச்சாப் பத்தியமாய்க் காத லனைப்பெற் றத்தாயை
நீரே வைக்க நலமாகும் நீல விழிமா மடமயிலே.

(பொ-ரை.)—கஞ்சாங்கோரையிலை, பிரமியிலை, துளசி, பழம்பாசி, நில விளா, வல்லாரை, சீந்திற் சமூலம், வசம்பு, கடுகுரோகணி, வெள்ளைப் பூண்டு என்னும் பத்துச் சரக்குகளும் வகைக்கோர் வராகனெடை எடுத்து வெந்நீர் விட்டரைத்து சிற்றுமணக்கு நெய் ஆழாக்கில் கலக்கி அடுப்பேற்றிச் சிறுக எரித்துப் பக்குவத்திலிறக்கி வடிகட்டிக் குழந்தைக்குக் காலை, மாலை இரு வேளையும் துட்டெடை வீதங் கொடுத்தால், மாந்தம்போம், இச்சாப்பத்தியம். தாயை பத்தியமாக வைக்கவேண்டும். (கOஎ)

## (1) வாத மாந்தக் குறி குணம்.

அறுசீர் விருத்தம்.

ஒன்ரும் வாத மாந்தகுணம் உரைக்கக் கேளாய் திருக்கறவே [மழும்
பொன்ருக் கால்கை குளிர்ந்துதரம் பொருமும் விழியாற் பார்த்து
குன்ரு மெய்யில் வேர்வையுமாம் குழிய வலிக்கும் பலவிதமாய்த்
துன்ருத் துடிக்குங் கொட்டாவி தொளையி ஞசிப் புண்ணுமே.

(பொ-ரை.)—வாதமாந்தத்தில் கை கால் குளிரல், வயிறு பொருமல், கண்ணல் பார்த்துப்பார்த்து அழுதல், உடல் வியர்த்தல், பலவிதமாய் வலித்தல், பலவிதமாய்த் துடித்தல், கொட்டாவி விடுதல், நாசித் தொளையில் புண்ணுண்டாதல், என்னும் குறிகுணங் காண்பனவாம். (கOஅ)

## (2) பித்தமாந்தக் குறி குணம்.

அறுசீர் விருத்தம்.

ஆமே பித்த மாந்தகுணம் அடுத்தே வாந்தி பேதியுமாய்த்
தாமே மூர்ச்சை யாய்க்குரலுந் தயங்கிக் கம்ம லாகிவிடும்
போமே மேனி மஞ்சளித்துப் பொசியும் வேர்வை யாங்கடுக்கும்
வாமே குழவி தேகமெங்கும் வலிக்குங் குளிரு மயக்கிடுமே.

(பொ-ரை.)—அடுத்தடுத்து வாந்தியும் பேதியுங் காணல், மூர்ச்சை யுண்டாதல், குரற்கம்மல், உடல் மஞ்சளித்தல், உடலில் வியர்வை கசிதல், உடல் கடுத்தல், உடல் முழுமையும் நோக்காடு காணல், குளிர், மயக்கம் உண்டாதல் என்னும் இவைகள் பித்தமாந்தக் குறிகுணங்களாம். (கOகூ)

## (3) கபமாந்தக் குறி குணம்.

அறுசீர் விருத்தம்.

மயக்கிடுஞ் சேட்ம மாந்த வகையினைத் தகையக் கேளாய்
முயக்கிடு நளிருண் டாகு முழுதுடல் சிலிர் சிலிர்ப்பாம்
பயக்குநா வெளுக்கும் பின்னர் பயந்தோர் அழலைத் தந்தும்
சயக்கும் வயிறு போகி தளர்தரு பொருமு மாகும்.

(பொ-ரை.)—உடல் குளிர்தல், உடல் முழுமையும் சிலிர்சிலிர்த்தல், நா வெளுத்தல், பயந்து பயந்து (அதாவது) திடுக்கிட்டபின் சுரமடித்தல், வயிறு பேதியாதல், வயிறு பொருமல் என்னும் இவைகள் கபமாந்தக் குறிகுணங் களாம். (கக0)

வாத-பித்த-கப மாந்தம் இவைகட்குப் பரிகாரம்.

இம்மூன்று மாந்தங்களுக்கும் பொது மாந்த மருத்துவங்களே கொள் ளக்கிடக்கின்றன.

## (4) விடமாந்தக் குறி குணம்.

அறுசீர் விருத்தம்.

சிறியவன் வயிறி ரைந்து சினத்திடும் உருட்டிப் பார்க்கும்
கருவுடன் பெற்ற தாயார் கையினிற் றங்காப் பிள்ளை
அறிவுள மேனி வாடி அரைக்குக்கீழ்க் குளிர்ந்தி ருக்கும்
வெறியென வெருவும் வேர்க்கும் விடமுள மாந்தந் தானே.

அன்றியும்,

வாந்தியும் வயிறு போகும் வாகுசேர் விழியுஞ் சோரும்
மாந்தியே சோர்ந்து வீழ்ந்து வயிற்றிலே வலியுண் டாகும்
சேர்ந்திடு மலமுந் தானுஞ் சிக்கியே வயிறு போகும்
ஆய்ந்திடு நூல்வல் லோர்க ளதுவிட மாந்த மென்றார்.

மேலும்,

சீறி யலைபோல் வயிறிரையும் சிறக்கப் பார்க்குங் கண்சொருகும்
பாறி வயிற்றில் நோயதனுல் பறந்து பிள்ளை ஓய்ந்திருக்கும்
ஆறி யாறிச் சுரங்காணும் அடுத்து வாந்தி வயிறோடும்
தேறி ரிதுவிட மாந்தமெனச் செப்பீ ருலகிற் பண்டிதரே.

(பொ-ரை.)—குழந்தை வயிறு இரைதல், விம்முதல், கண்களையுருட்டி யுருட்டிப் பார்க்குதல், பயங்கொள்ளல், தாய் கையில் தரியாமை, உடல்வாட் டம், இடுப்பின்கீழ் குளிர்ந்திருத்தல், வியர்த்தல், வாந்தியாதல், வயிறு கழிதல், கண்சொருகல், சோர்ந்து சோர்ந்து விழுதல், வயிறு நோதல், மலச்சிக்கலுடன் வயிறுபோதல், அழுதழுது அயர்ந்துபோதல், விட்டுவிட்டுச் சுரங்காய்தல் என்னும் இவைகள், விடமாந்தக் குறிகுணங்களாம்.

இக்குறிகளல்லாமல் பிதற்றலும் உண்டெனக் கூறுவாருமுளர் ; அதை,

ஏக வாந்தியும் பிதற்றலும் வயிற்றுநோ யிடைக்கீழ்
ஆகச் சீதளக் குளிர்ச்சியு மாந்துத லரிக்கண்
காகம்போ லுள்ளிற் சொருகுதல் மலஞ்சிக் கிக்கழிதல்
வேக மாய்ச்சுர மடிக்குத லிதுவிட மாந்தம்

என்னும் செய்யுளாலறிக. (ககக)

விடமாந்தத்துக்கு.

சுக்காதிச் சுரசம்.

கலிநிலைத் துறை.

விடத்தினேர் விழியாய் சுக்கு வசம்பு வெள்ளுள்ளி
திடத்தினிந் துப்புச் சாரணை வேர்திரள் குரட்டை

படைத்து வாழ்கடு ரோகணி பாச்சொத்தி யெட்டும்
அடைத்த சார்முரித் தருத்திட மாந்தமு மறுமே.

(பொ-ரை.)—(1) தோல்சீவின சுக்கு, (2) சுட்ட வசம்பு, (3) வெள்ளைப் பூண்டுத்திரி, (4) இந்துப்பு, (5) சத்திச்சாரணைவேர், (6) மூக்குரட்டைவேர், (7) கடுகுரோகணி, (8) பாச்சொத்தி, ஆகிய இவ்வெட்டுச்சரக்குகளைச் சரி எடையாய் எடுத்துத் தண்ணீர் விட்டரைத்துப் பிழிந்தெடுத்துச் சாற்றைச் சிறுதீயில் கொதிக்கவைத்துக் குழந்தைகளுக்குச் சிறுபாலடைவீதம் காலை மாலை இருவேளையும் கொடுக்க, விடமாந்தந் தீரும். (கசஉ)

ஓமக் குடிநீர்.

அறுசீர் விருத்தம்.

கூறும் ஓமம் பொடுதலையுங் குளிர்ந்த மஞ்ச ணுத்திநொச்சில்
வேறு வேளை வேர்சமனாய் வெளுத்த உள்ளி வசம்பினுடன்
ஆற நறுக்கி வறுத்தவற்றை அளவாய்க் காய்ச்சி யுண்டிடவே
பார மான விடமாந்தம் பறந்தே யோடுங் கண்டாயே.

(பொ-ரை.)—(1) ஓமம், (2) பொடுதலையிலை, (3) நுணாயிலை, (4) நொச்சியிலை, (5) வேளைவேர், (6) வெள்ளைப்பூண்டு, (7) வசம்பு, இவ்வேழு சரக்குகளையும் சமவெடை எடுத்து அவற்றுள் வசம்பைக் கரியாக்கியும், பொடுதலையிலை, நுணா யிலை, நொச்சி யிலை, வேளைவேர், வெள்ளைப்பூண்டு இவற்றைச் சிறுவறுப்பாக வருத்தும், பிறகு ஓமத்தை வெடிக்கவிட்டும் ஒன்று சேர்த்துப் போதுமான நீர்விட்டு எட்டொன்றுகக் காய்ச்சி வடித்து இருவேளையும் வேளைக்கு ஒரு பாலடைவீதம் கொடுத்தால், விடமாந்தந் தீரும். (கசந)

## (5) போர்மாந்தக் குறி குணம்.

வெண்பா.

பொருமுங் கழியும் புரண்டுவலி யுண்டாம்
மருவிமுலை யுண்ணு மயங்கும்—வெருவிமிகச்
சத்திசெயுங் கட்குழியுந் தாக மிகவெதும்பும்
வற்றியிடும் போர்மாந்த மாம்.

(பொ-ரை.)—வயிறுபொருமிக் கழியும், வயிற்றில் புரட்சிகண்டு வலிக்கும், தாய்ப்பாலை யுண்ணாது மயங்கும், அடிக்கடி மிரளும், வாந்தியெடுக்கும், கண் குழியும், அதிக நாவரட்சி கொள்ளும், சுரங்காயும், உடல் இளைக்கும், ஆகிய இக்குறிகுணங்கள் போர்மாந்தத்தில் காணும்.

இம்மாந்தத்தில் காணும் குறிகுணங்கள் வேறுசிலவுண்டு. அவைகளைப் பின்வரும் செய்யுட்களால் அறிக :—

அறுசீராசிரிய விருத்தம்.

போர்மாந் தத்தின் குணங்கேளாய்
பொருமிப் பொருமி வயிறுறுமும்
மார்பிற் றுடிக்குந் தலையசைக்கும்
வயிறு வலிக்கு மிகச்சோரும்

நேரே சத்தி யுண்டாகும்
நெற்றி நரம்பு புடைத்திருக்கும்
பாரோர் அறியப் பாலகர்க்குப்
பரிந்தே யிதனைப் பார்ப்பாயே.

வாயுட னெஞ்சு லர்ந்து
வயிறது கழிச்ச லாகும்
சாயவே யுடம்பு சோர்ந்து
சடுதியிற் பொருமி யூதும்
காயமும் வாடித் தானுங்
கண்களு மலர்ந்து மூடும்
மாயப்போர் மாந்த மென்று
வகுத்திடு தெரியத் தானே.

ஏற்றே யிருந்து மிகக்கழியும்
இடையிற் சுரமுந் தான்தோன்றும்
தோற்றும் உடலைத் தான்உருக்கும்
தோன்றும் விலாவு முதுகெலும்பும்
வேற்றோர் உடலாய்ச் சத்தியுண்டாம்
மிகுந்த மலமு மேயொழிக்கும்
கூற்ற னுகும் போர்மாந்தக்
குணமாஞ் சுதற்குப் பொல்லாதே.

கலி நிலைத்துறை.

பூச லாய்ச்சுர மடித்துடல் கரைந்துபோங் கூடாய்
வாச மாய்க்கழிந் துதடுக ளுலர்ந்துவாய் நுரையாய்
நீச வாந்தியுங் கண்குழி யுடனெஞ்சு புண்ணாய்
ஊச லாகும்போர் மாந்தமென் றேயறி முனமே.

இதற்குப் பொடுதலையாதிக் குடிநீராகும். இதை ௮0-ஆம் பக்கத்தில் வரும் ஊதுமாந்தத்தினடியிற் காண்க. (கக௪)

போர்மாந்தத்துக்கு—ஓமப்பொடி.

வெண்பா.

தின்னசம தாகத்தைச் செவ்வறுப்பாய்த் தூளாக்கி
வெந்நீர் முலைப்பாலில் மேற்பொடியிட்—டுண்ணப்
பொருமல் கழிச்சலுறு போர்மாந்தம் வாந்தி
ஒருநொடியிற் போமென் றுரை.

(பொ-ரை.)—ஓமத்தை இளவறுப்பாய் வறுத்துத் தூள்செய்து, வெந்நீரிலாவது, முலைப்பாலிலாவது போட்டுக்கொடுக்க போர்மாந்தத்திற்காணும் வயிற்றுப்பொருமல், கழிச்சல், வாந்தி இவை உடனே நீங்கும். (ககரு)

பாவட்டை அரைப்பு.

நேரிசை வெண்பா.

பாவட்டை கச்சக்காய் பண்பா மிலையுடனே
போவெட்டி வேருடன் பொங்கமாய்—நீவட்டைப்
பாக்களவு வெந்நீரிற் பாலகருக் கீந்திடவே
போக்கும்போர் மாந்தம் புறம்.

(பொ-ரை.)—(1) பாவட்டை யிலை, (2) கழற்சிக்காய், (3) கழற்சிக் கொழுந்து, (4) வெட்டிவேர், இந்நான்கையும் சம எடை சேர்த்து அரைத்துக் கொட்டைப் பாக்களவு வெந்நீரில் கரைத்துக் குழந்தைகளுக்குக் காலைமாலை இருபொழுது கொடுக்கப் போர்மாந்தம் போம். (கககூ)

கோழிக்கல்லீரற்கல் அரைப்பு.

நேரிசை வெண்பா.

கோழிக்கல் லீரற்கல் கூறுநற் சீரகமுந்
தாழ்வி லிலவங்கந் தானேராய்—தோழிகேள்
பாலில் அரைத்துண்ணப் பாரீர்போர் மாந்தமஃ
தார்க்கும்போ யோட்டமிடு மாம்.

(பொ-ரை.)—(1) கோழியின் கல்லீரற்கல், (2) நற்சீரகம், (3) இலவங்கம் இம்மூன்றையும் சரி எடை எடுத்துப் பாலில் அரைத்துக் குன்றியளவு பாலில் கரைத்துக்கொடுக்கப் போர்மாந்தம் போம். (ககஎ)

உத்தாமணிச் சாறு.

அறுசீர் விருத்தம்.

உப்பை வறுத்துக் கொட்டியபின் உத்தா மணியுந் தும்பையிலை
செப்ப மான வெற்றிலையும் சேரச் சமனாய் வதக்கியதை
நுட்ப மாக நீர்வாங்கி நொடியிற் கூனன் வசம்புரைத்து
அப்போ தீயப் போர்மாந்தம் அகலு மென்றே அருளினரே.

(பொ-ரை.)—உப்பை வறுத்துக் கொட்டிய சட்டியில், உத்தாமணி, தும்பை யிலை, வெற்றிலை இம்மூன்றின் சாறும் சமன் விட்டு, அது வெதும்பித் தெளிந்தபின் அதில் சுட்ட ஆமை ஓடு, சுட்ட வசம்பு இவைகளை குன்றி யெடை தேய்த்துக் கொடுக்கப் போர்மாந்தம் குணமாகும். (ககஅ)

காட்டுமல்லிகை எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

காட்டு மல்லிகை ஈருள்ளி கருஞ்சீ ரகமும் கடுக்காயும்
நாட்டுக் கடுகு ரோகணியும் நல்வச் சிரப்பால் விளக்கெண்ணெய்
கூட்டி எரித்துப் பாலகர்க்குக் கொடுக்க மாந்தம் போர்மாந்தம்
ஓட்டி விடுங்காண் இந்தெண்ணெய் உலகோர்க் குண்டு செய்து
[கொடே.

(பொ-ரை.)—(1) காட்டுமல்லிகை இலைச்சாறு கால் படி, (2) ஈருள்ளிச் சாறு கால் படி, (3) கருஞ்சீரகம் கால் பலம், (4) கடுக்காய்த்தோல் கால் பலம், (5) கடுகுரோகணி கால் பலம், (6) கள்ளிப்பால் கால் படி, (7) விளக் கெண்ணெய் கால் படி, கூட்டி எரித்துப் பக்குவ பாகத்தில் வடித்துப் பால கர்க்குக் காலையில் மாத்திரம் மூன்று நாள்கள் துட்டெடை கொடுக்கப் போர்மாந்தம் நீங்கும். (ககக)

சத்திச்சாரணை எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

ஏறுஞ் சத்திச் சாரணைவேர் இதமாய் எண்ணெய் ஒருழக்கு
தாறுங் கூனன் முதுகுள்ளி தனித்த வசம்பு வராகனெடை
ஏற அரைத்தங் கெண்ணெயுடன் எரித்துப் பாலர்க் கீந்திடவே
சோரு மாந்தம் போர்மாந்தம் சொல்லா தோடிப் போய்விடுமே.

(பொ-ரை.)—(1) சத்திச்சாரணைவேர்ச் சாறு ஒரு உழக்கு, (2) ஆமணக்கு எண்ணெய் ஒரு உழக்கு இவையிரண்டையுங்கலந்து அதில், (3) ஆமை ஓடு பற்பம், (4) வெள்ளுள்ளி, (5) சுட்ட வசம்பு இவை வகைக்கு வராகனெடை ஒன்று, அரைத்துச் சேர்த்துக் காய்ச்சிப் பாலகர்க்குக் காலைதோறும் உச்சிக் கறண்டி வீதம் மூன்று நாளைக்கு ஈந்திடப் போர்மாந்தம் நீங்கும். (கஉ0)

ஆமையோடு கருக்குக் குடிநீர்.

அறுசீர் விருத்தம்.

கூனன் முதுகு வசம்புள்ளிக் கூறும் ஓம நுணுவேலி
மானே பொடுதலை வாரடையும் வளரும் வெற்றி லையின்காம்பும்
கானே கிராம்பு கருக்கியிட்டுக் காய்ச்சிச் சவலைப் பிள்ளைக்குத்
தானே கொடுக்கப் போர்மாந்தம் தங்கா தோடிப் போய்விடுமே.

(பொ-ரை.)—(1) ஆமை ஓடு, (2) சுட்ட வசம்பு, (3) வெள்ளுள்ளி, (4) ஓமம், (5) நுணு, (6) வேலிப்பருத்தி, (7) பொடுதலையிலை, (8) வெற்றிலைக் காம்பு, (9) கிராம்பு, இவைகளை வகைக்கு ஒரு வராகனெடை எடுத்துச் சட்டியி லிட்டுக் கருக்கி விதிப்படி குடிநீர்செய்து காலைமாலை இருவேளையும் மூன்று அல்லது ஐந்து வேளை கொடுக்கப் போர்மாந்தம் நீங்கும். (கஉக)

போர்மாந்தத்துக்கும் வாந்திக்கும்—வேப்பீர்க்குப் பால்.

எண்சீர் விருத்தம்.

வசம்புடனே மயிலிறகு சாம்ப லாக்கி
வசமாக வேப்பீர்க்கில் முலைப்பால் வார்த்துக்
கசமாக நறுக்கி யதைப் பிழிந்துசற்றே
காதலுடன் தேனுமொரு துளியே குத்தி
நிசமாகச் சீரகமுங் கிராம்பு சேர்த்து
நிண்ணயமாம் நிம்பவிரைப் பொடிமேல் தூவி
வசமாக வேயருந்து மருந்தில் மாந்தம்
வல்லப்போர் மாந்தமொடு வாந்தி போமே.

(பொ-ரை.)—(1) வசம்புச்சாம்பல் இரு குன்றி, (2) மயிலிறகுச் சாம்பல் இரு குன்றி, (3) வேப்பம் ஈர்க்கில் முலைப்பால்வார்த்து நறுக்கிப் பிழிந்தப்பால் உச்சிக்கரண்டி, இப்பாலில் மேற்படி சாம்பலைத்தூவி, ஒரு துளி தேன் விட்டு, சீரகம், கிராம்பு, வேப்பம் விரை இவற்றைத் தனித்தனி ஒவ்வொரு குன்றி பொடித்துத் தூவிக் கலந்து கொடுக்கப் போர்மாந்தம் நீங்கும். (கஉஉ)

சர்க்குக் குடிநீர்.

அறுசீர் விருத்தம்.

நொச்சி ஈர்க்கு நுணாஈர்க்கு நுவல்மா ஈர்க்கு புளியீர்க்கு
மிச்ச மான வேப்பீர்க்கு மீறுங் கொடிவே லியினீர்க்கு [பிடியும்
இச்சைப் பொடுதலை யின்கொடியும் இதமாய் வகைக்கோ ரொரு
செச்சைப் பூண்டு துட்டெடைதான் திப்பிலி துட்டெடை யொன்
றுமே.]

## (7) சுரமாந்தக் குறிகுணம்.

இதை மாந்த சுரம் என்றும் கூறுவர்.

கலிநிலைத் துறை.

உகந்த மெய்முக மினுமினுப் பாமுயர் சுரமும்
பகர்ந்த பாலருந் தாதுநீர் சிவந்திடும் பார்க்கும்
வகிர்ந்த மாமலஞ் சிக்கியு மயக்கமும் வலியுஞ்
சுகந்த மாயடி குளிர்ந்திடில் சொல்சுர மாந்தமே

(பொ-ரை.)—மாந்தசுரத்தில் உடலும், முகமும் மினுமினுப்பாயிருக்கும், அதிக சுரங்காயும், பால் அருந்தாது, நீர் சிவந்திறங்கும், எதிரிலுள்ளவர் முகத்தைப் பலகாலும் பார்க்கும், மலஞ்சிக்கும், மயக்கமும் வலியும் மிகுந்து பாதம் குளிர்ந்திருக்கும். (கஉசு)

சீந்தில் குடிநீர்.

அறுசீர் விருத்தம்.

சீந்தில் தண்டும் களிப்பாக்கும் சிவதை வேரும் கடுக்காயும்
காய்ந்த சுக்கு ரோகணியும் காயும் நீரில் தகர்த்திட்டே
ஏந்து மூலையா யிந்நீரை யெட்டொன் றுக்கிக் கொடுப்பீரேல்
மாந்த மான சுரமும்போம் வயிறுங் கழியுங் கண்டீரே.

(பொ-ரை.)—(1) சீந்தில் கொடி, (2) களிப்பாக்கு, (3) சிவதை வேர், (4) கடுக்காய்த்தோல், (5) தோல்சீவின சுக்கு, (6) கடுகுரோகணி இவைகளை வகைக்கொரு வராகனெடை எடுத்துப் பொடித்து உழக்கு நீரில் போட்டு எட்டில் ஒன்றாகக் குடிநீர் இறக்கிக் காலை மாலை பாலடைவீதம் மூன்று நாள் கொடுக்க, மாந்த சுரம் நீங்கும். (கஉஎ)

தும்பைச் சுரசம்.

கலிநிலைத் துறை.

சுரச மேபிழி தும்பையுத் தாமணி துளசி
தரணி மேல்வெதுப் படக்கிநா யுருவிசா ணக்கி
விரைவில் பேய்தனை மருட்டியும் விட்டுணு கரந்தம்
புரிவொ டாமையின் பற்பமிட் டருந்தப்போந் தெளிந்தே.

(பொ-ரை.)—(1) தும்பை, (2) உத்தாமணி, (3) துளசி, (4) வெதுப்படக்கி, (5) நாயுருவி, (6) சாணக்கி, (7) பேய்மருட்டி, (8) விஷ்ணுகரந்தை, இவ்விலைகளின் ரசம் சரியளவு பிழிந்து வெதுப்பி ஒரு உச்சிக்கரண்டி யளவெடுத்து அதில் ஒரு குன்றி ஆமை ஓட்டுப் பற்பம் கூட்டி ஒருநாளைக் கிருவேளையாக இரண்டு மூன்றுநாள் கொடுக்கச் சுரமாந்தம் நீங்கும். (கஉஅ)

கடுக்காய் எண்ணெய்.

எழுசீர் விருத்தம்.

கடுக்காய்தான் பதினாறு விரைகள் போக்கிக்
கத்தூரி மஞ்சள்கரு டன்கிழங்கு
முடுக்காக மூன்றுவகைச் சரியாய்க் கொண்டு
முறையுடனே பொடிசெய்து தைலந்தானும்

அடுக்காக நாழியதிற் பொடியைப் போட்டங்
கனலின்முகம் வைத்துள்ளுக் குங்கொடுத்துச்
சடுக்கெனவே உச்சியிடப் பொரும லோடுந்
தணியாத மாந்தசுரம் தணியுமன்றே.

(பொ-ரை.)—பதினாறு கடுக்காயின் கொட்டை நீக்கி, நிறுத்துக் கொண்டு அதற்குச் சரியெடை கத்தூரிமஞ்சள், கருடன்கிழங்கு எடுத்து தனித்தனியாகச் சூரணஞ் செய்து இம்மூன்றும் ஒன்றுபடக்கலந்து ஒரு படி நல்லெண்ணெயில் தூவிச் சுடவைத்தெடுத்து, வேளைக்குத் துட்டெடையளவு இரு வேளையும் போதுமான நாள் உள்ளுக்குங் கொடுத்து உச்சியிலும் தடவ மாந்த சுரம் தீரும். (கஉகூ)

நெல்லியீர்க்குக் குடிநீர்.

எண்சீர் விருத்தம்.

நெல்லியுடன் வேம்புபுளி கரந்தை தானும்
நேயமிரு முட்டிநிரை நிரையொன் றாகச்
சொல்லுமோ ரிதழின்தா மரையுங் கூட்டிச்
சுகமாக வேநறுக்கித் தோகாய் நீகேள் !
உள்ளபடி சீரகம்கி ராம்பு திப்பிலி
ஒன்றாகக் கூட்டியே உழக்காய்க் காய்ச்சி
மெல்லவே சிறுவர்க்குக் கொடுக்க வேதான்
வெதும்பாது மாந்தசுரம் விட்டுப் போமே.

(பொ-ரை.)—(1) நெல்லி ஈர்க்கு, (2) வேம்பு ஈர்க்கு, (3) புளி ஈர்க்கு, (4) விஷ்ணுகரந்தை, (5) சிற்றாமுட்டி, (6) பேராமுட்டி, (7) ஓரிதழ்த்தாமரை (8) சீரகம், (9) கிராம்பு, (10) திப்பிலி, இவை வகைக்கு ஒரு வராகனெடை எடுத்து ஈர்க்குகளைக் குறுக அரிந்து சட்டியிலிட்டுச் சிவக்க வறுத்து, மற்ற வற்றை நறுக்கிப் போட்டு அரை படி நீர்விட்டு அரைக்கால் ஆழாக்காகக் காய்ச்சிக் காலை, மாலை இரு வேளையும் மூன்று அல்லது ஐந்து நாள் கொடுக்க, மாந்தசுரம் போம். (கரு௦)

ஈருள்ளிக் குடிநீர்.

அறுசீர் விருத்தம்.

போமே ஈருள்ளி பத்து பொடியா யரிந்து வில்வமுடன்
ஆமே யவிரி பூமிவிளா அரிந்து சிவக்க வறுத்ததனை
வேமே காய்ச்சிச் சிறுவோர்க்கு விதமாய் மூன்று நாள்கொடுக்கத்
தாமே யணுகு மாந்தசுரந் தணியுங் கணமுந் தரியாதே.

(பொ-ரை.)—(1) ஈருள்ளி பத்துத்திரி, (2) வில்வயிலை, (3) அவுரியிலை, (4) நிலவிளாயிலை, இவைகளை ஈருள்ளி எடை எடுத்து அரிந்து சிவக்க வறுத்து அதற்கு எட்டுபங்கு நீர் விட்டு ஒரு பங்காகக் காய்ச்சிக் காலை மாலை ஒரு பாலடைவீதம் மூன்று நாள் கொடுக்க, மாந்த சுரம் தணியும். (கருக)

## (8) நீர்மாந்தக் குறி குணம்.

நீர் மாந்தம் : உடம்பு முற்றிலுமாவது அல்லது சிறப்பிடங்களிலாவது நீர்கோத்து உடம்பு பருத்தலால் அப்பெயரிடப்பட்டது.

அறுசீர் விருத்தம்.

நளிர்ந்து குளிருஞ் சிலிர்த்துவரும் நாவில் நீரும் ஒக்காளம்
கழிந்து வயிறு மிகப்பொருமுங் கைகால் மெய்யுந் தினவெடுக்கும்
மெலிந்தே யுடம்பு மிகப்பருக்கு மெதுவாய்ப் பேசும் உறக்கமதாய்த்
தெளிந்து சிரிக்கு நீர்மாந்தஞ் செய்யுங் குணங்க ளிவையாமே.

'தலையது நோவாய் முகமது மினுக்குந்
தவிக்கவே மலஞ்சிறுத் திட்டு
முலையது முகவா துடம்பெலாங் குளிர்ந்து
மூத்திரம் குறிகடுத் திறங்கும்.'

(பொ-ரை.)—உடம்பு நளிருடன் குளிர்ந்து சிலிர்க்கும், தலைவலிக்கும், முகம் மினுமினுக்கும், நாவில் நீர் ஊறும், ஓக்காளிக்கும், உடலிலும் கையிலும் காலிலும் தினவெடுக்கும், மெதுவாய்ப் பேசும், உறக்கமாயிருந்து தெளிந்து சிரிக்கும், மெலிந்து உடல் மிகப்பருக்கும், முலையுண்ணுது, மலம் சிறுகக் கழியும் அல்லது வயிறு கழிந்து பொருமும், மூத்திர தாரையில் கடுப்புடன் நீரிறங்கும். இவைகள் நீர்மாந்தக் குறி குணங்களாம்.

இவைகளன்றி உடல் முழுதும் வேர்வை விடல், வேர்வை விட்ட பிறகு தலைவலித்தல், வயிற்று வலி, குலைவலி இவைகளுமுண்டாமெனக் கூறுதலுமுண்டு ; அதை,

அறுதி யாகமெய் முழுவதும் வேர்வையே மிகுந்து
இறுதி யாய்த்தலை வலிமுக மினுமினுப் பிரைச்சல்
உறுதி யாய்க்கழிந் திடுதனீ ரிறங்குத லுதரங்
குறைவி லாக்குலை வலிகள்நீர் மாந்தத்தின் குணமே.

என்னும் இச்செய்யுளாலறிக. (கநஉ)

மிளகு எண்ணெய்.

எழுசீர் விருத்தம்.

மலைமருந் தீர உள்ளிமூக் குரட்டை
வயங்குசா றெவ்வொன்றே ருழக்காய்க்
குலவிளக் கெண்ணெய் தனிலெரித் தருந்தக்
கொட்டுநீர் மாந்தமுங் குணமே.'

(பொ-ரை.)—(1) மிளகிலைச்சாறு அல்லது கஷாயம் உழக்கு, (2) வெங்காயச்சாறு உழக்கு, (3) மூக்குரட்டைச் சாறு உழக்கு, (4) விளக்கெண்ணெய் உழக்கு, இவைகளை ஒன்றுய்க்கூட்டி எரித்து பக்குவத்தில் வடித்துக் காலையில் காலையில் மூன்று நாள் கரண்டியளவு ஈய நீர் மாந்தம் குணமாகும். (கநந)

நொச்சிச் சுரசம்.

எண்சீர் விருத்தம்.

நொச்சியிலை வேளையிலை குப்பை மேனி
நுணுவிலையும் பேய்மருட்டி தும்பை யோடு
பச்சிலையாய்க் கொண்டுவந்து வெதுப்பி யேதான்
பதமாகச் சாறுவரப் பிழிந்து கொண்டிங்
குச்சிதமாய் மிளகுள்ளி வசம்போ டோமம்
உகந்துவரு முதற்சாற்றி லரைத்துக் காய்ச்சி
நிச்சயமாய்ப் பாலகர்க்குக் கொடுக்க வேதான்
நீர்மாந்தம் போகுநித்த முனிசொன் னுரே

(பொ-ரை.)—(1) நொச்சியிலை, (2) வேளையிலை, (3) குப்பைமேனியிலை, (4) நுணுவிலை, (5) பேய்மருட்டியிலை, (6) தும்பையிலை, இவைகளை ஒவ்வொரு பிடி வெதுப்பிச் சாறு பிழிந்து, ஒன்றுகூட்டியதில் ஒரு பலம் எடுத்து (7) மிளகு, (8) வெள்ளுள்ளி, (9) சுட்டவசம்பு, (10) ஓமம், இவைகளை வகைக்கு இரு குன்றி எடுத்து நொச்சிச் சாற்றிலரைத்துக் கலந்து கொதிக்கவைத்துக் காலை மாலை இரு வேளையும் கொடுக்க, நீர் மாந்தம் குணமாகும். (கநச)

கருநீலிக் குடிநீர்.

அறுசீர் விருத்தம்.

மாந்தம் போகக் கருநீலி மகத்தாஞ் செவ்வியங் கியாழமிட
வாய்ந்த நோயு நீர்மாந்தம் வணங்கி யோடும் பண்டிதரே
தோய்ந்த விதுதான் அறிவீர்கள் சொன்ன மொழியுந் தப்பாதிங்
கேந்து மிழையீ ரிந்நூல்போல் எவருஞ் சொல்லார் அறிவாயே.

(பொ-ரை.)—(1) அவுரிவேர், (2) செவ்வியம், இரண்டும் வகைக்கு ஒரு வராகனெடை எடுத்து நறுக்கி இரண்டு ஆழாக்கு நீரிலிட்டு காலாழாக்காகக் குறுக்கி, ஒரு பாலாடைவீதம் நாளைக்கிருவேளையாக, நான்கு நாள் கொடுக்க, நீர் மாந்தம் குணமாகும். (கரு)

வெதுப்படக்கி எண்ணெய்.

எண்சீர் விருத்தம்.

பார்க்கவே வெதுப்படக்கி சிற்றம் மானின்
பச்சரிசி பீநாறி நுணுசா ணுக்கி
வார்க்கவே வகைக்குநீர் படிகா லாகும்
வளமாக எண்ணெயது நாழி யொன்று
தீர்க்கவே வசம்புள்ளி மஞ்ச ளுந்தான்
சேர்த்துவகைக் கரைப்பலமாய்க் கூடக் கூட்டிக்
காக்கவே கடுகுதிரள் பதத்திற் காய்ச்சிக்
கரண்டியிட மூன்றுநாட் சலமாந் தம்போம்.

(பொ-ரை.)—(1) வெதுப்படக்கிலைச்சாறு, (2) சிறிய அம்மான்பச்சரிசியிலைச் சாறு, (3) பீநாறியிலைச்சாறு, (4) நுணுயிலைச்சாறு, (5) சாணுக்கியிலைச்சாறு வகைக்குக் கால்படி (6) ஆமணக்கு எண்ணெய் நாழி ஒன்று, (7) சுட்ட வசம்பு, (8) உள்ளி, (9) மஞ்சள், வகைக்குப் பலம் அரை இவற்றை மேற்படி சாற்றாலரைத்து எண்ணெயைச் சாறுகளிற் கலக்கி எரித்துக் கடுகுதிரளும் பாகத்தில் வடித்து, ஒரு உச்சிக் கரண்டி வீதம் காலையில் மாத்திரம் மூன்று நாள் கொடுக்க, நீர்மாந்தம் குணமாகும். (கருசா)

சீதேவி செங்கழுநீர் எண்ணெய்.

இண்டு பிட்டவிநீர்.

கலி விருத்தம்.

சீறிய ராக்ஷசன் சிறையினில் வைத்த
நாரியின் நல்லிலை நாட்டினுள் ளோரை
மீறிய மருட்டிலை வீறுடன் இரண்டுங்
கூறிய இதனைக் குணமுடன் நம்பே.

எண்சீர் விருத்தம்.

நம்புவது வெதுப்படக்கி காக்கை மல்லி
நல்லிலையுஞ் சமனுகச் சாறு வாங்கி
வெம்பியதோர் வேல்விழியாள் மீதுறையும் வேரும்
வெகுவாச முடையோகி குதிரைப் பல்லன்
துண்டமதாய் நறுக்கிடுவாய் கழஞ்சு வீதம்
தூக்கிடுவா யெண்ணெய்சேர் சமனுய்ச் சேர்த்துத்
தென்புடனே எரியிலிடு மெழுக தாகத்
தினமுமொரு காசெடையாய்க் குலுக்கி டாயே.

குலுக்கிடுவாய் முலைப்பாலில் மூன்று நாளுங்
கூப்பிட்டே யோடிவிடுஞ் சலமாந் தந்தான்
அலக்கமுறும் பிள்ளைமாந் தளிர்போ லாகும்
அதனைவிட் டின்னமோ ரடைவு கேளாய்
கலக்கமறத் திப்பிலியு மிளகுத் தூளுங்
கணமான இண்டிலையும் பிட்டவியல் செய்து
நலக்காமல் திரிபொழுது வார்த்தா யானல்
நாடிவந்த சலமாந்த நடுங்கிப் போமே.

(பொ-ரை.)—(1) சீதேவியார் செங்கழுநீர்ச் சாறு, (2) இரட்டைப் பேய்மருட்டிச்சாறு, (3) வெதுப்படக்கியிலைச்சாறு, (4) காக்கைமல்லிகைச்சாறு, இவைகள் தனித்தனி ஒரு சேர் வாங்கி ஒரு மட்பாண்டத்திலூற்றி, அதில் (5) மஞ்சள், (6) சுட்ட வசம்பு, (7) வெள்ளைப்பூண்டு, வகைக்கு ஒரு கழஞ்சு எடுத்து மேற்படி சாற்றுலரைத்துக் கலக்கி அத்துடன், (8) ஆமணக்கெண்ணெய் ஒரு சேர் சேர்த்துக் காய்ச்சிப் பக்குவத்தில் வடித்துக் கொள்ளவும்.

இதில் ஒரு கரண்டி எண்ணெய் எடுத்து முலைப்பால் கூட்டி, மூன்று நாள் காலையில் மாத்திரம் கொடுக்க, நீர்மாந்தம் குணமாகும்.

இண்டு பிட்டவிநீர்.

(பொ-ரை.)—(1) திப்பிலி, (2) மிளகுத் தூள், (3) இண்டங்கொழுந்து, இம்மூன்றில் இண்டங்கொழுந்து ஒரு பிடியைப் பிட்டவித்துப் பிழிந்த நீர் ஒரு உச்சிக் கரண்டியளவில் மற்ற இரண்டையும் தனித்தனிப் பொடித்த தூள் இரண்டிரண்டு குன்றி சேர்த்துக் கலக்கி, நாளைக்கிருவேளையாக மூன்று அல்லது ஐந்து நாள் கொடுக்க, நீர் மாந்தம் தீரும். (கருஎ)

சலமாந்தத்திற்கு.

வெள்ளெண்ணெய் (பூரநெய்).

அறுசீர் விருத்தம்.

சிற்று மணக்கெண்ணெய் பலம்பத்து திகழும் பூரம் வராகனென்று
வற்றுச் சுத்தி தான்செய்த வாளம் வராக னெடையிரண்டு
பற்று வெள்ளை மிளகதுவும் பகரும் வராக னெடையிரண்டு
கற்றைக் குழலா ளேலவங்கங் கதித்த வராக னெடைரண்டே.

[யிற்கலந்து
எடையே கொஞ்சம் எண்ணெயைவிட் டிதமா யரைத்தெண் ணெ
தடையில் லாம லொருகரண்டி தானேமூன்று நாட்கொடுக்க
மடைபோல் திறந்த சலமாந்தம் மாறிப் போகு மடவன்ன
நடையாய் பொரிமிள கின்னீரும் நல்ல சாதமு முண்டுவிடே.

(பொ-ரை.)—(1) பூரம் வராகனெடை ஒன்று (2) சுத்திசெய்த வாளம் வராகனெடை இரண்டு (3) வெண் மிளகுத் தூள் வராகனெடை இரண்டு (4) இலவங்கத்தூள் வராகனெடை இரண்டு, இவற்றில் பூரத்தையும், வாளத்தையும், ஒன்றின்பின் ஒன்றுகக் குழிகல்லிலிட்டு கொஞ்சம் ஆமணக்கு நெய் விட்டரைத்துப் பிறகு, (5) பத்துப் பலம் ஆமணக்கெண்ணெயில் கலந்து அத்துடன் தூள்களையும் சேர்த்து, காலையில் மாத்திரம் ஒரு கரண்டி வீதம் மூன்று நாள் புகட்டச் சலமாந்தம் போம். மிளகுநீர், பொரிக்கறி அல்லது பொரிக்குழம்பு அன்னம் கொடுக்கவும். (கருஅ)

நுணா இலைச் சாறு.

அறுசீர் விருத்தம்.

குணநுணா நொச்சி குப்பை மேனியும் பேய்ம ருட்டி
இணர்தும்பை நல்ல வேளை யிந்தவா றையுங்க சக்கிக்
கணவசம் புள்ளி யோம மின்னுன் கையும் கரைத்து
மணங்கொள்பிள் ளைகட் கீயக் கடுமாந் தங்கள் தொடராதே.

(பொ-ரை.)—(1) நுணாவிலை, (2) நொச்சியிலை, (3) குப்பைமேனியிலை, (4) பேய்மருட்டியிலை, (5) தும்பையிலை, (6) நல்வேளையிலை இவைகளைத் தனித் தனி எடுத்துக் கசக்கிச் சாறு பிழிந்துச் சமபாகம் கூட்டி வேளைக்கு உச்சிக் கறண்டியளவெடுத்து, அதில் அரிசிதிப்பிலி, சுட்ட வசம்பு, பூண்டு, ஓமம், இந்நான்கும் வகைக்குக் குன்றியளவு ஷை சாற்றிலரைத்துச் சேர்த்துக் காலை, மாலை இருவேளையுமாக மூன்று அல்லது ஐந்துநாள் கொடுக்க நீர்மாந்த முதலிய கடுமையாகிய மாந்தங்களுந் தீரும். (கஙக)

(9) செரியாமாந்தக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

மிக்க காய்ச்சல் தலைவலித்தல் மிகவே வயிறு நொந்தழுதல்
தக்க மலமாக் கரைத்தாற்போல் சாலக் கழிதல் கண்ணரைக்கண்
தொக்க பக்கந் தான்படுத்துச் சோர்தல் கீரைத் தண்டதுபோல்
சிக்கென் றிலங்கு முகமாதே செரியா மாந்த குணமிதுவே.

(பொ-ரை.)—மிக்கசுரங் காய்தல், தலை வலித்தல், வயிறு பொருமி நொந்து அழுதல், மாக்கரைத்தாற்போல் அடிக்கடி கழிதல், ஒருபுறமாய்ப் படுத்து அரைக்கண் தூக்கங் கொள்ளல், கீரைத்தண்டைப்போலச் சோர்ந்து கிடத்தல் என்னும் இவைகள் செரியா மாந்தக் குறிகுணங்களாம்.

இவையன்றிப் பால்போற் கழிதல், உடல்வீங்கல், குளிர்தல், சோகம், வாந்தி இவையுமுண்டென்பாருமுளர். இதை,

கலிநிலைத் துறை.

போகுமே வயிறு பாலெனக் கழிந்திடும் பொருமுந்
தேக முஞ்சுர மாய்க்குளிர் கண்டிடுந் தெவுட்டிச்
சோகமுந் தலைவலி யின்வலி வாந்தியுந் தோன்றி
யேக மாயமுஞ் செரித்திடா மாந்தமென் றெண்ணே. (கசo)

வசம்புக் குடிநீர்.

அறுசீர் விருத்தம்.

ஆமே வசம்பு சடாமாஞ்சில் ஆன உள்ளி திரிகடுகு
பூமே ஓமம் கருஞ்சீரம் புகழும் ஆமை யோடெல்லாம் [வே
தாமே இடித்துப் பொடியாக்கித் தண்ணீர் காய்ச்சிக் கொடுத்திட
போமே செரியா மாந்தமெலாம் புறத்திட் டோடுங் கண்டாயே.

(பொ-ரை.)—(1) சுட்ட வசம்பு, (2) சடாமாஞ்சில், (3) உள்ளி, (4) சுக்கு, (5) மிளகு, (6) திப்பிலி, (7) ஓமம், (8) கருஞ்சீரகம், (9) ஆமையோட்டுக் கரி இவைகள் வகைக்கு வராகனெடை ஒன்று, இவைகளில் வெள்ளைப் பூண்டின் திரிகளை சிவக்கவறுத்தும், ஓமம், கருஞ்சீரகம், இவ்விரண்டையும்

பொரியவிட்டும், மற்றவற்றை நறுக்கிப்போட்டும், போடும் சரக்குகளின் மொத்த எடைக்கு எட்டுப்பங்கு தண்ணீர்விட்டு, ஒரு பங்காகக் காய்ச்சிய குடிநீரில், வேளை ஒன்றுக்கு, ஒரு சங்காகக் காலைமாலை இருவேளையும் கொடுக்க செரியா மாந்தம் நீங்கும். (கசக)

## வேலிப்பருத்தி நெய்.

### அறுசீர் விருத்தம்.

வேலிப் பருத்தி யிலைவாட்டிப் பிழிந்து மிளகு வசம்புள்ளி
சால அரைத்து நெய்விட்டுத் தானே யருந்தக் குணமாகும்
ஏலும் எருமை வெண்ணெயுடன் இசைந்த மருந்தி னுடனிஞ்சிக்
கோலங் கேளும் பெருந்தும்பை கூட்டி யருந்தக் குணமாமே.

(பொ-ரை.)—உத்தாமணியிலையைப் பிட்டவித்துப் பிழிந்து உச்சிக்கரண்டி வீதமெடுத்து அதில் மிளகு, சுட்ட வசம்பு, உள்ளி, இவைகளின் பொடி தனித்தனி குன்றி சேர்த்தரைத்துத் துளி நெய்விட்டுக் குழப்பிக் கொடுக்கச் செரியாமாந்தம் போம். இத்துடன் எருமை வெண்ணெய், பெருந்தும்பைச் சாறு, இஞ்சிச்சாறு இவையும் கூட்டிக் கொடுக்கலாம். (கசஉ)

## செரியாமாந்தம், உப்பல், வயிற்றுவலி இவைகட்கு

## ஓமக் குடிநீர்.

### எண்சீர் விருத்தம்.

ஓமமுடன் கனகோஷ்டங் காசு தானும்
உயர்வசம்பும் கருக்கிட்டுக் கியாழ மாக்கிக்
காமமுடன் அருந்திடவே செரியா மாந்தம்
கழிச்சலுமே போமென்று கருதிச் சொன்னேம்
சாமமுட னுப்பலும்போம் வலியுந் தீர்ந்து
சதிருடனே யுண்டதெல்லாம் செரிக்கும் பிள்ளை
நாமமுள்ள சொற்கேட்டு நாமுஞ் சொன்னேம்
நலமாகும் புவியோர்க்கு நன்மை தானே.

(பொ-ரை.)—(1) ஓமம், (2) சாதி கோஷ்டம், (3) கோரைக்கிழங்கு, (4) சுட்ட வசம்பு வகைக்கு இருவராகனெடை வறுத்துப்பொடித்து அரைக்கால் படி நீர்விட்டு அரைக்கால் ஆழாக்கு கியாழம்செய்து காலைமாலை பாலடை யளவாக இரண்டுமூன்றுநாள் கொடுக்க, செரியாமாந்தம் நீங்கும். (கசங)

## பொடுதலைக் குடிநீர்.

### அறுசீர் விருத்தம்.

பொடுதலை வேம்பு மாவும் புளிநுணா நொச்சில் வேலி
சடுதியில் ஈர்க்கிவ் வேழும் சமன்கொண்டு கியாழம் வைத்தே
இடுவகை ஓமம் உள்ளி திப்பிலி கூடக் கூட்டி
அடுதல்நீர் நாழி தன்னில் அடுப்பினில் எட்டொன் றுக்கே.

ஆக்கிடுங் குடிநீர் தன்னை ஆனதோர் சங்கு வார்க்கப்
போக்கிடு மூது மாந்தம் போர்மாந்தம் சத்தி மாந்தம்
தேக்கிடுஞ் செரியா மாந்தம் சிறந்திடுங் கட்டு மாந்தம்
தாக்கிடு மாந்தம் ஐந்தும் தரணிவிட் டோடு மன்றே.

(பொ-ரை.)—(1) பொடுதலை, (2) வேம்பு, (3) மா, (4) புளி, (5) நுணா, (6) நொச்சில், (7) வேலிப்பருத்தி இவைகளின் ஈர்க்கு வகைக்குப் பலம் கால், (8) ஓமம், (9) உள்ளி, (10) திப்பிலி இவைகள் வகைக்குக் கழஞ்சு ஒன்று, இவற்றில் ஈர்க்குகளைக் குறுக அரிந்தும், வெள்ளைப்பூண்டைத் தோல் உரித்துச் சிவக்க வறுத்தும், ஓமத்தைப் பொரியவிட்டும், திப்பிலியை நறுக்கியும் ஒரு படி நீர்விட்டு ஆழாக்காகக் காய்ச்சி வேளைக்கொரு சங்களவு வார்க்க, செரியா மாந்தம் முதலிய ஐவகை மாந்தங்கள் நீங்கும். (கசச)

## (10) கட்டுமாந்தக் குறி குணம்.

அறுசீர் விருத்தம்.

[கும்
தாயார் முலையில் வாய்வைத்துச் சற்றே யுண்ணும் திகைத்திருக்
ஓயா தழுகை சிற்றிருமல் உள்ளே சுரமு மிகவுண்டாம்
சேயா மலமுஞ் சலங்கட்டிச் சிக்கப் பண்ணும் பசியில்லை
மாயா மசக்கு மிதுகட்டு மாந்த மென்று வகுத்தனரே.

(பொ-ரை.)—பசி மந்தப்பட்டு தாயின் பாலைச்சற்று உண்டு திகைக்கும், ஓயாமலழும், சிற்றிருமலுண்டாகும், உட்சுரங்காயும், மலசலம் கட்டும், பசியிராது, சோர்வு ஆகிய இவைகள் கட்டுமாந்தக் குறிகுணங்களாம்.

இக்குறிகளன்றிக் கொட்டாவி, தலைநோய், குறுவேர்வை, வயிற்றுவலி, குடலிரைச்சல், தூக்கம் போலிருந்து சோர்ந்துபோதல் என்னும் இவைகளு முண்டாமென்பாருமுளர். அதை

எண்சீர் விருத்தம்.

கொட்டாவி தலைநோயு மலம்போ காமல்
குறுவேர்வை வயிற்றுவலி குடலி ரைச்சல்
தொட்டாலு முடலெங்குங் கனல்போல் காயுந்
தூக்கமது போலிருந்து சோர்ந்து மாந்திப்
பட்டாலே வயிறுமிகக் கழிந்தி டாமற்
பலநாளு மிப்படியே மலச்சிக் குண்டாம்
மட்டாருங் குழல்மடவீர் கட்டு மாந்த
வகையறிவீர் வாகடநூல் வல்லீர் தானே.

கலிநிலைத் துறை.

பறந்த மெய்யினில் வெப்புட னுறக்கமும் பலகால்
உறைந்த வேர்வைகொட் டாவியு முதரத்தில் வலியும்
நிறைந்த நாள்மலஞ் சிக்கியுங் கழியுநே ரிரைச்சல்
அறைந்த சீர்க்கட்டு மாந்தமென் றேயறி யனமே.

என்னுஞ் செய்யுள்களாலறிக. (கசரு)

நீர்மாந்தம், கட்டுமாந்தம், தலைமாந்தங்களுக்கு—இஞ்சி எண்ணெய்.

நிலமண்டில ஆசிரியப்பா.

செய்திட மாந்த எண்ணெயைச் சொல்வேன்
வைதிட விஞ்சி சங்குடன் சின்னி
கைதிடக் காணி கரந்தையும் வன்னி
நெய்திட வெல்லாம் நேராய்ப் பிழிந்திடே.

பிழிந்து சிற்றே ரண்டத்தி னெண்ணெய்
கலந்திட் டேயொரு கட்டையாற் றீயிடு
செலமறக் காய்ச்சிச் சிறுக இறக்கிடு
மெலிந்தநோய் தீர விளம்புவேன் கேளே.

கேளிடு மாந்த மலபந்த மாந்தம்
சேவிடு சலத்திற் செனிசிர மாந்தம்
பாலக ருண்ணப் பறந்திடும் பாரு
சீலக் கொடிய சீதளம் போகுமே.

(பொ-ரை.)—(1) இஞ்சிச்சாறு, (2) சங்கிலைச்சாறு, (3) சிறுசின்னியிலைச்சாறு, (4) கரிசாலைச்சாறு, (5) விஷ்ணுகரந்தைச்சாறு, (6) வன்னியிலைச்சாறு என்னும் ஆறு வகைச் சாறுகளும் வகைக்குக் கால்படி, (7) சிற்றாமணக்கு நெய் கால்படி எல்லாவற்றையுங் கலந்து ஒரு மண் சட்டியில் ஊற்றி அடுப்பேற்றி, ஒரு சாதி விறகால் எரித்து நீர்வரள மெழுகு பக்குவத்தில் வடித்து, இறக்கிவைத்துக்கொண்டு, நோயளவு முதலியவை தெரிந்து, கொடுக்கவேண்டிய அளவாகக் கொடுத்தால், மாந்தம், கட்டுமாந்தம், நீர்மாந்தம், சிரமாந்தம் என்னும் இவைகள் தீரும். (கசசு)

குறிப்பு.—கட்டுமாந்தம், தலைமாந்தம் இவைகளின் குறி குணங்கள் பின்னர் வரும்.

## சுக்குநெய்.

### கலிநிலைத் துறை.

அனமே சுக்குசிற் றரத்தைவெற் றிலையுட னோமங்
கனமு ருங்கையின் தோலிவை சுரசமாய்க் கண்டே
இனிய நிம்பநெய் சேரரை விட்டெரித் திட்டால்
முனிவ தாங்கட்டு மாந்தங்க ளகலுமொய் குழலே.

(பொ-ரை.)—(1) சுக்கு, (2) சிற்றரத்தை, (3) வெற்றிலை, (4) ஓமம், (5) முருங்கைப்பட்டை இவை எல்லாவற்றையும் தண்ணீர் விட்டரைத்துச் செய்த சுரசம் கால் படி, வேம்பு நெய் படி கால் கலந்து எரித்து வடித்துக் காலையில்மட்டும் துட்டெடையாக மூன்று நாள் கொடுக்கக் கட்டுமாந்தந் தீரும். (கசஎ)

## சீந்தில் குடிநீர்.

### அறுசீர் விருத்தம்.

சீந்தில் தண்டுங் களிப்பாக்கும் சிவதை வேருங் கடுக்காயும்
காய்ந்த சுக்கு ரோகணியுங் கன்னிச் சருகுங் கலந்துகொண்டிங்
கேந்து மூலையாய் நீரினைவிட் டெட்டொன் றாக்கிக் கொடுகட்டு
மாந்த மான சுரமும்போம் வயிறுங் கழியுங் கண்டாயே.

(பொ-ரை.)—(1) சீந்தில்தண்டு, (2) களிப்பாக்கு, (3) சிவதைவேர், (4) கடுக்காய்த்தோல், (5) சுக்கு, (6) கடுகுரோகணி, (7) கற்றாழஞ்சருகு, இவைகளை வகைக்கு ஒரு வராகன் எடை எடுத்திடித்து உழக்குநீரிற் சேர்த்து காலாழாக்காகக் காய்ச்சிக் காலைமாலை ஒரு பாலடையளவு கொடுக்க, வயிறு கழிந்து கட்டு மாந்தசுரம் போகும். (கசஅ)

## கட்டுமாந்தத்திற்கு—அகத்தி எண்ணெய்.

### அறுசீர் விருத்தம்.

1. அடுமே சிற்று மணக்கின்னெய் அளந்து கால்படி தானதிலே
கடுமே அகத்தி துளசியுடன் கதித்த தகரை கழற்கொடியும்
வடுமே நொச்சில் செம்முள்ளி மணத்தக் காளி சமனுகக்
கொடுமே யிடித்து நீர்படிகால் கூட்டிக் கடைச்சரக் கைக்கேளே.

2. கேளே கடுகு ரோகணியும் இளருங் கடுக்காய் சீரகமும்
வேளே கரிய சீரகமும் வெங்கா யமும்வெள் ளைப்பூண்டும்
பாளே வசம்பு பூதகரப் பாணின் பட்டை சாறுவளை
ஏளே வராக னெடைமூன்று மிடித்துப் போட்டின் னம்பாரே.

3. பாரே சதுரக் கள்ளிப்பால் பரிவா யொருகரண் டிக்கூட்டித்
தாரே காய்ச்சி வடிகொண்டு தனயர்க் கொருதுட் டெடைகொடுக்க
வாரே கழியும் அந்திதனில் மரீசி சாம்ப லுஞ்சுக்கும்
நீரே காய்ச்சி யொருசங்கு நீயிடு கட்டு மாந்தம்போம்.

(பொ-ரை.)—(1) சிற்றுமணக்குநெய் கால் படி, (2) அகத்தி, (3) துளசி, (4) தகரை, (5) கழற்கொடி, (6) நொச்சில், (7) செம்முள்ளி, (8) மணத்தக் காளி இவற்றின் சாறு வகைக்குக் கால் படி, (9) கடுகுரோகணி, (10) கடுக் காய்த்தோல், (11) சீரகம், (12) கரியசீரகம், (13) வெங்காயம், (14) வெள் ளைப்பூண்டு, (15) வசம்பு, (16) பூதகரப்பான்பட்டை, (17) சாறுவேளைவேர் வகைக்கு வராகனெடை மூன்று. இவற்றுள் சாறுகளையும் எண்ணெயும் கலந்து கற்க சரக்குகளையும் மேற்படி சாற்றிலொன்றுல் அரைத்துக் கூட்டிச் சதுரக்கள்ளிப்பால் ஒரு கரண்டிக்கூட்டிக் காய்ச்சிக் கொண்டு, காலையில்மட்டும் மூன்று நாள்களுக்கு ஒரு துட்டெடை கொடுக்கப் பேதியாகும். சாயங்காலம் மிளகைச் சாம்பலாக்கிச் சுக்கு தட்டிக் கூட்டி நீர்விட்டுக் காய்ச்சி ஒரு பாலடை கொடுக்க கட்டுமாந்தம் தீரும். (கசக)

## கள்ளிப்பால் எண்ணெய்.

### எண்சீர் விருத்தம்.

அடவியினில் திருடிமலை வரக்கா லிப்பால்
அவையொவ்வொன் றேருழக் களந்து கொண்டு
திடமுடன்ஆ மணக்கெணெய் நாழி கூட்டித்
திரிபலைவெள் ளுள்ளி வராகனெடை இரண்டு
பொடிசெய்தே எண்ணெயதிற் போட்டுடனே யெரித்து
புகட்டுமோர் காசெடைமேல் வயிற்றில் பூசத்
தடமுடைய கட்டுமாந்தங் கணபே தங்கள்
சாராதென் றுமைக்கரனுர் சாற்றி னுரே.

(பொ-ரை.)—(1) சதுரக்கள்ளிப்பால் உழக்கு, (2) வெள்ளாட்டுப்பால் உழக்கு, (3) ஆமணக்கெண்ணெய் நாழி இவற்றைக் கலந்து, அதில் (4) திரிபலை, (5) வெள்ளுள்ளி வகைக்கு இரண்டு வராகனெடை பொடிசெய்து கூட்டி அதைப் பக்குவபாகமாய்க் காய்ச்சி வடித்து, காலையில் மாத்திரம் மூன்று அல்லது ஐந்து நாள் காசெடை உள்ளுக்குப் புகட்டியும், ஒரு காசெடை விலாவின் மேல் தடவியும்வரக் கட்டுமாந்தம் குணமாகும். (கடுo)

## (11) பால்மாந்தக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

கண்ணுங் குழியும் செவிதாழும் கருத்து மயங்கிக் கோழையுண்டாம்
புண்போல் உதரந் தானொந்து புளித்தே கழியும் வயிறூதும்
பண்ணார் மொழியும் பால்மாந்தம் பாரில் இந்நோய் தீரவென்றால்
அந்நாள் ஆவின் நெய்தனிலே அன்பாய் வைக்குந் திறஞ்சொல்வாம்.

எழுசீர் விருத்தம்.

பாலதைக் கழியும் பாலதை யெடுக்கும் பரதவித் திடும்பல விதமாய்ச்
சாலவே கரங்கால் வெதும்பிடுங் குளிருந் தலையெடுத் திராமலே மயங்கும்
சீலமாய்த் தாயார் லங்கன மிருந்து திகழ்பொடு தலையின்காய் வறுத்துக்
கோலவிந் துப்பு வசம்புள்ளி மிளகு கொள்சமன் கொடுத்திடக் குணமே.

(பொ-ரை.)—பால் மாந்தத்தில் கண்குழியும், செவிதாழும், அறிவு மயங்கும், கோழை யுண்டாகும், வயிறு புண்போல் நோவும், புளித்த நாற்றத்துடன் பேதி ஆகும். அல்லாமல் வயிறு உப்பி உப்பிப் பாலைப்போலவே கழியும், குடித்தப்பாலை அப்படியே வாந்தி எடுக்கும், பலவிதமாய்த் தவிக்கும், கை கால்கள் வெதும்பும், குளிர் எடுக்கும், தலைதூக்கமுடியாமல் மயக்கமாயிருக்கும்.

கலிநிலைத் துறை.

மெய்கொள் பாலுபா லாய்க்கழிந் திடுமுகம் வேறாகக்
கைகள் கால்களும் வெதும்பிடும் வாந்திபால் காணுஞ்
செய்யக் கண்களும் வளையமாஞ் சிரமெடுத் திராது
உய்ய மாந்தும்பால் மாந்தமென் றேயறி யுடனே.

என்னும் இச்செய்யுளாலறிக.

இக்குணங்களன்றி முகம் வேறுபடுதல், கண்கள் உள் விழுந்து வளையமிடுதல் என்னுங் குணங்களுமுண்டெனக்கூறுவாருமுளர்; இந்நோய்க்கு,

பொடுதலைக்காய்க் கற்கம்.

பொடுதலைக்காயை வறுத்து அதற்குச் சரியாக இந்துப்பு, வசம்பு, உள்ளி, மிளகு இவைகளைப் பங்கிட்டுச் சமன்சேர்த்து அரைத்து, வேளைக்குப் பாக்களவாகக் காலைமாலை மூன்று அல்லது ஐந்து வேளை (வெந்நீரில்) கொடுத்தால் தீரும். தாய் இலங்கனமிருத்தல் நலம். (கருக)

உத்தாமணிக் குடிநீர்.

கலிநிலைத் துறை.

உடனுத் தாமணி சுக்குடன் வசம்புள்ளி மிளகு
திடம தாஞ்சடா மாஞ்சிலுங் குட்டியின் விளாவுங்
கடம தாங்கியா மூங்களாய்ச் செய்கம டத்தின்
வடிகொள் பற்பமிட் டருந்தப்பால் மாந்தமு மகலும்.

(பொ-ரை.)—(1) உத்தாமணியிலை, (2) குட்டிவிளாவிலை இவ்விரண்டிலைகளையும் ஒவ்வொரு பிடி எடுத்துக்குறுகவரிந்து சட்டியிலிட்டுச் சிவக்க வறுத்து அத்துடன் (3) சுக்கு, (4) வசம்பு, (5) பூண்டு, (6) மிளகு, (7) சடாமாஞ்சில் இவைகளை வகைக்கு ஒரு வராகனெடை நறுக்கிக் கூட்டி நீர்

விட்டு இயாழமிட்டு ஆமையோட்டுப் பற்பம் வயதிற்குத் தக்கபடி கால் முதல் அரை குன்றி கூட்டி மூன்று அல்லது ஐந்து நாள் காலைமாலை கொடுக்கத் தீரும். (கருஉ)

## (12) எரிமாந்தக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

பிள்ளை யுடலம் தானெரிந்து பெறுமே யுழலை மிகவாகக்
கள்ள மாகச் சுரமடித்துக் கனக்கும் பளுவா நீர்போக
மெள்ள மெள்ளத் தானிறங்கும் விடும்போ துறுமே துயரமிகக்
கொள்ளு முக்கி மலம்போகும் மொழிவ ரெரிமாந் தக்குறியே.

(பொ-ரை.)—குழந்தையின் உடம்பானது மிகவும் எரிச்சல் உண்டாதல், உழலை, திருட்டுச் சுரமாயடித்தல், உடல் பளுவாதல், நீர்விடும்போது மெதுவாக இறங்கல், அப்படியிறங்கும்போது மிகவும் வருந்தல், மலம் முக்கி முக்கிப் போதல் என்னுமிவைகள் எரிமாந்தக் குறிக்குணங்களெனச் சொல்லுவார்கள். (கருஙு)

இதற்குப் பொது மாந்த மருத்துவமே செய்ய வேண்டும்.

## (13) துலை மாந்தக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

அடக்கிடாப் பெருகும் வாந்தி அதிகமாய்ச் சுரமுந் தோன்றும்
முடக்கிடு முகக்க டுப்பாய் மூரிக்கொட் டாவி யுண்டாம்
விடக்குமேல் வலிப்பெ டுக்கும் விரைவிரைத் திருக்கும் வேர்க்கும்
அடக்கிடாத் துலைமாந் தத்தை அறிந்துநீ ரடக்கு வீரே.

(பொ-ரை.)—துலை மாந்தத்தில் அடங்காத வாந்தியும், உடம்பு நோக்காடுடன் கடுஞ்சுரமும், முடக்கலும், முகக்கடுப்பும், கொட்டாவியு முண்டாகும். தசை நோக்காடும், விரை விரைத்து வேர்வையுங்காணும். அன்றியும்-தாகம், முகத்தைப் பார்த்துப் பார்த்தழுதல், விலாப்புறம் வீங்கல், குப்புறக் கவிழுதல் முதலிய குணங்களுமுண்டு. (கருச)

துலைமாந்தத்திற்கு—காந்தாதிக்குடி நீர்.

எண்சீர் விருத்தம்.

விரண்டோடக் காந்தாதிக் குடிநீர் சொல்வோம்
மெய்யுதகம் பெருமருந்து சிற்றே ரண்டம்
மிரண்டோட நரிமருட்டி கோட்டான் சின்னி
மேலான கடுக்காயு மாசிப் பத்திரி
திரண்டோடப் பர்ப்படகந் தான்றி முத்தம்
திரிகடுகு அதிவிடய மூசிப் பாலை
கரண்டோடக் கருக்கியிவை கொட்டிப் போட்டுக்
கருநீலி நிலவேம்பு போஸ்தக் காயே.

காயோடு பத்திரியின் தாளீ சந்தான்
கரியவேப் பிலைமுத்தம் சிற்று முட்டி
ஈயேகத் தூளிடித் ததனிற் போட்டங்
கிரண்டுபடி தண்ணீர்விட் டெட்டொன் றுக்கிக்

காயோடு வயிரவனுங் கூடச் சேர்த்துக்
 கக்கநீ யெடுத்தீயக் கணரோ கங்கள்
வாயோடே பேசாமல் சர்வ ரோகம்
 வணங்கியே யோடுமிதில் வண்ணம் பாரே.

(பொ-ரை.)—(1) சிறுநீரில், (2) ஈசுரமூலி, (3) சிற்றுமணக்கு. (4) இலுஇலுப்பை, (5) நாய்க்கோட்டான், (6) சின்னி, (7) கடுக்காய்த் தோல், (8) மாசிப்பத்திரி, (9) பர்ப்பாடகம், (10) தான்றி, (11) கோரைக் கிழங்கு, (12) சுக்கு, (13) மிளகு, (14) திப்பிலி, (15) அதிவிடையம், (16) ஊசிப்பாலை, இவைகளைச் சரி எடையெடுத்து நனைத்து இடித்துச் சட்டியிலிட்டுக் கருக்கிக் கொட்டிப்போட்டு அச்சட்டியில், (1) நீலி, (2) நிலவேம்பு, (3) போஸ்தக்காய், (4) தாளீசபத்திரி, (5) கறிவேப்பிலை, (6) கோரைக் கிழங்கு, (7) சிற்றுமுட்டி, இவைகளின் துகள் தனித்தனி ஒரு வராகனெடை ஒன்று கூட்டி இரண்டுபடி தண்ணீர் விட்டு எட்டில் ஒன்றுக்கி அத்துடன் காலையில் வயிரவ மாத்திரை இழைத்தும் (மாலையில் குடிநீர் தனியாகவும்) புகட்டத் துலைமாந்தம் நீங்கும். (கருரு)

வேறு.

பாக்களவு வெண்உயவை வேர ரைத்துப்
 பாவையிட முலைப்பாலில் கலந்தே யீயத்
தாக்கவே வயிறுபே திக்கும் பின்பு
 தயங்குவிளக் கெண்ணெயுடன் வசம்பு வேளை
ஆக்கொத்தான் திரிபலையுந் திரிகடுகு தானும்
 அங்கோலப் பொடியைப்போட் டெரித்து நக்க
மூர்க்கமுடன் சந்துதலை நெஞ்சில் தேய்க்க
 முறிந்தோடிப் போந்துலையின் மாந்தந் தானே.

(பொ-ரை.)—பாக்களவு வெள்ளைக்காக்கணம் வேரை, வெந்நீரில் அரைத்து முலைப்பாலில் கலந்து காலையில் கொடுக்கப் பேதியாகும். பிறகு, (1) விளக்கெண்ணெய் பலம் பத்து, (2) வசம்பு சுட்டகரி வராகனெடை ஒன்று, (3) வேளைச் சாறு பலம் பத்து, (4) கொத்தான் சாறு பலம் பத்து, (5) திரிபலை, (6) திரிகடுகு, (7) அழிஞ்சில்விரை வகைக்கு வராகனெடை ஒன்று, இவைகளில் சாற்றையும் எண்ணெயையும் கலந்து, மேற்படி சரக்குகளைத் தூள் செய்து அதிலிட்டு எரித்த எண்ணெயை நாக்கிலும் தடவி, சந்துகள், தலை, நெஞ்சு, இவ்விடங்களிலும் தடவித் தேய்க்க, துலைமாந்தம் நீங்கும். (கருசு)

விஷ்ணுகாந்திச் சுரசம்.

கலிநிலைத் துறை.

கண்ணே சுக்குசிற் றரத்தையும் விட்டுணு கரந்தை
வெண்ணற் சானகி லவங்கப்பூ குட்டியின் விளாவும்
நண்ண வேசுர சத்திற்கத் தூரியை நாட்டி
யுண்ண வேதுலை மாந்தமு மொழிந்திடு முகந்தே.

(பொ-ரை.)—(1) தோல்சீவினசுக்கு, (2) சிற்றரத்தை, (3) விஷ்ணு கரந்தை, (4) சானகிப் பூண்டு, (5) இலவங்கம், (6) குட்டிவிளா, இவைகளைச் சரியளவாக எடுத்து வெந்நீரால ரைத்துப் பிழிந்து சுரசம் பண்ணி, அதில் வேளைக்குக் கால் குன்றி கத்தூரி கலந்து, மூன்று வேளை கொடுக்கத் துலை மாந்தம்நீங்கும். (கருஎ)

## (14) தலைமாந்தக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

கைகால் குளிர்ந்துத ரம்பொருமிக் கனக்கப் பார்வை யுண்டாகி
மெய்தான் வேர்வை முகத்திலெழும் விரைந்தே வலிக்கும் பலவிதமாய்ப்
பொய்யேப் பம்கொட் டாவியுடன் புண்போல் நாசி நீர்வடியும்
மைசேர் விழியாய் தலைமாந்தம் வந்த குணமிது கண்டாயே.

(பொ-ரை.) கைகால் குளிர்ந்து வயிறு பொருமும், கண்களை நன்றாய்த் திறந்துப் பார்க்கும், உடலிலும் முகத்திலும் வேர்க்கும், உடல் பலவிதமாய் விரைத்து வலிக்கும், பொய் ஏப்பம் உண்டாகும், கொட்டாவி விடும், புண்ணி லிருந்து நீர்வடிவதுபோல் நாசியிலிருந்து நீர் வடியும். இக்குறிகளன்றி, தலைப்பளுவு, உடல் ஊதல், குலையில் வலியுண்டாய்த் துள்ளித்துள்ளி விழு தல், குளிர்தல், சுரமடித்தல், தலை நிமிர முடியாமை, பலவிதமாகச் சேட் டை செய்தல், பூட்டுகளில் நோய், உடலை இப்படியும் அப்படியும் அசைய வொட்டாமற் பிணம்போற் கிடத்து வித்தல் என்னும் இக்குறிகுணங்களும் தலைமாந்தத்தில் உண்டாம் எனக் கூறுவாருமுளர். அதை,

அறுசீர் விருத்தம்.

தலையுங் கனத்தே யுடலூதிச் சரீரந் தனிலே வலியுண்டாம்
குலையும் வலித்துத் துள்ளிவிழும் குளிருஞ் சுரமும் வேர்வைவிடும்
சிலையின் புருவத் தலைநிமிரா சேட்டை மிகவே செய்விக்கும்
மலையி னுயர்ந்த தனத்தாளே! வாதைப் படுத்துந் தலைமாந்தம்.

கலிநிலைத் துறை,

கூட்டுச் சந்துகள் தலைவலி வேர்வை கொட்டாவி
சாட்டி யத்தொடு தலைகனங் குலைவலி சவம்போல்
ஆட்ட மில்லாது குளிர்சுர மதிக மெய்யூதற்
காட்டி னுல்தலை மாந்த மென்றதை யறிமாதே.

என்னும் செய்யுள்களால் அறிக. (கரு-அ)

வெதுப் படக்கிச் சுரசம்.

எண்சீர் விருத்தம்.

வெதுப்படக்கி பேய்மருட்டி தும்பை தானும்
வேலியிலை வெள்ளறுகு வேரோ டுள்ளி
மதிப்புசத குப்பியுடன் தேசந் திப்பிலி
வசம்புடனே ஓரெடையாய் வாகாய்க் கூட்டிக்
கதிப்பவிவை நறுக்கியசா றுள்ளுக் கீந்து
காய்ந்தசலத் தேபிழிந்து கைகா லங்கங்
கொதிப்புடனே வலிப்பகலுந் துவாலை செய்யக்
கூசாமல் தலைமாந்தம் குணம தாமே.

(பொ-ரை.)—(1) ஆமணக்கிலை, (2) இரட்டைப் பேய்மருட்டியிலை, (3) தும்பையிலை, (4) வேலிப் பருத்தியிலை, (5) வெள்ளறுகு வேர், (6) உள்ளி, (7) சதகுப்பி, (8) திப்பிலி மூலம், (9) திப்பிலி, (10) வசம்பு, இவைகளை சரி எடையாய் எடுத்து இலைகளைச் சாறு பிழிந்தும் அச்சாற்றாலேனும் அல்லது வெந்நீராலேனும் மற்ற சரக்குகளை அரைத்துப் பிழிந்த சாறும் ஒன்றாய்க்

கூட்டிச் சுட்டவைத்துக் காலை மாலை இருவேளையாக உள்ளுக்குங் கொடுத்து, இதையே மேலிலும் துவாலை செய்யத் தலைமாந்தம் குணமாகும். (கருகூ)

குப்பைமேனிச் சாறு.

கலிநிலைத் துறை.

அறியும் மேனியுத் தாமணி யகத்தியீர் வேளை
நெறிகொ ளைந்தையுஞ் சாறுசெய் தாமையி னீறும்
முறியும் நல்வசம் பின்கரி கலந்துண்ணின் மூடி
வெறிகொண் மெய்யினிற் றடவிட மாந்தமே இடுமே.

(பொ-ரை.)—(1) குப்பைமேனி, (2) உத்தாமணி, (3) அகத்தி, (4) நல்வேளை, (5) நாய் வேளை, இவைகளைத் தனித்தனி இடித்துப் பிழிந்த சாறுகளைச் சரியளவாய்க் கூட்டி ஒரு பாலடை எடுத்து இதில் ஆமையோட்டுப் பற்பமும், வசம்பு சுட்டகரியும் வகைக்கு ஒரு குன்றி சேர்த்து, உள்ளுக்குக் கொடுத்து உடம்பிலும் பூசத் தலைமாந்தந் தீரும். (கசுo)

## (15) கணமாந்தக் குறிகுணம்.

கலிநிலைத் துறை.

அருந்து மெய்யிளைத் திருமலு மடிக்கடிச் சுரமுந்
திருந்து மூக்கில்நீர் வடிதலும் வயிறுப்பும் சிரநோய்
புரிந்தி ரைச்சலும் பலவிதம் வயிறுபோக் குடனே
வருந்து கண்ணினில் மயக்கமு மாங்கண மாந்தம்,

(பொ-ரை.)—கணமாந்தத்தில் உடம்பிளைத்து இருமி அடிக்கடி சுரங்காயும், மூக்கில் நீர் வடியும், வயிறுப்பும், தலைவலிக்கும், வயிறு இரைந்து பலவிதக் கழிச்சல் காணும், கண் மயக்கம் முதலியன உண்டாகும். (கசுக)

உத்தாமணி எண்ணெய்.

கலிநிலைத் துறை.

கணம்வசம் புள்ளி சாரணை கடியநாய் வேளை
குணஉத் தாமணி நிலவிளா கொட்டைநெய் சமனுய்த்
தணியக் காய்ச்சிபெண் தனத்தின்பால் சேர்த்துரைத் தூட்ட
அணிகொ ளுங்கண மாந்தமு மகனுமா ரணங்கே.

(பொ-ரை.)—(1) வசம்புச் சாம்பல், (2) வெள் உள்ளி, (3) சாரணைவேர், (4) நாய்வேளைவேர், (5) உத்தாமணிவேர், (6) நிலவிளாவேர், வகைக்குக் கால் பலம் (7) ஆமணக்கெண்ணெய் பலம் பத்தில், அவற்றை வெந்நீரில் அரைத்துக் கூட்டிக் காய்ச்சி வடித்துக் காலையில் காலையில் கரண்டி வீதம் முலைப்பாலுடன் கலந்து புகட்டக் கணமாந்தந் தீரும். (கசுஉ)

கணமாந்தம், கழிமாந்தம்.

வேறு.

வெங்காய எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

விளக்கெண்ணெ யரையா ழாக்கு வெங்காயம் பெரும்பூண் டைந்து
தளுக்குறு மணத்தக் காளிச் சாறஃ துழக்க தாகும்
களக்கமாய்ச் சாறு மெண்ணெய் கலந்துவெங் காயந் தன்னை
அளக்கவே யரிந்து போட்டங் கடுப்பில்வைத் தெரித்தி டாயே.

எரித்துப்பொன் னிறம தானால் இறக்கிநீ வடித்துக் கொண்டு
விரித்திடுங் கடுகு ரோணி விளம்பிய வராக னென்று
தரித்துமே வறுத்துத் தூளாய்த் தானதிற் போட்டொன் றுகப்
பிரித்தொரு கரண்டி யெண்ணெய் பிள்ளைக்குக் கொடுப்ப தாமே.

கொடுக்கவே தானுட் காய்ச்சல் கொடுங்கணக் காய்ச்சல் மாந்தம்
முடுக்கிய தொண்டை வாய்ப்புண் மூலத்தின் சூடு மற்ற
படுக்கவே மிகப்பொல் லாத பலவகைக் கழிச்ச லெல்லாம்
அடுக்குட னோடிப் போமென் றறைந்தனர் நூல்வல் லோரே.

(பொ-ரை.)—சிற்றாமணக்கு நெய் பலம் இரண்டரை, வெங்காயம் ஐந்து, பெரிய வெள்ளைப்பூண்டு ஐந்து, மணத்தக்காளிச்சாறு படி கால், இவற்றில் வெங்காயம், உள்ளியை நீக்கி மற்றவற்றை ஒன்றாய்க்கலந்து ஒரு மண்பாண் டத்திலூற்றி அதில் ஷெ வெங்காயம் உள்ளியை சிறுக அரிந்துப் போட்டு அடுப்பேற்றி எரித்துப் பொன்னிறம் வரும்போது வடிக்கட்டி, அதில் கடுகு ரோகணி வறுத்துப்பொடிசெய்த பொடி வராகனெடை ஒன்று போட்டு, குழந்தைக்கு ஒருகரண்டி வீதம் கொடுத்தால் உட்காய்ச்சல், கணக்காய்ச்சல், மாந்தம், தொண்டைப்புண், வாய்ப்புண், மூலச்சூடு, பலவகைக் கழிமாந்தம், இவையாவும் தீரும். (கசுந)

## (16) வலிமாந்தக் குறிகுணம்.

கலிநிலைத் துறை.

அயருங் கால்கையு மடிக்கடி யிசிப்புக் காணும்
வயிறுபல் விதங்க ழிந்து மார்பினில் வலித்துத்
தியக்கும் பல்கிட்டிக் கடித்திடும் வாந்தியுஞ் சேர்ந்து
மயக்கு மேவலிப் பாகிய மாந்தமா மாதே.

(பொ-ரை.)—வலிமாந்தத்தில் கைகால்கள் அயர்ந்திருக்கும், அடிக்கடி இசிவுகாணும், பலவிதமாய்க் கழியும், மார்பில் வலி அதிகரித்தியங்கும், பல் கிட்டி பல்லை நரநரவென்றுகடிக்கும், வாந்தி பண்ணும், மயக்கமாய்க் கிடக்கும்,

வேறு அடியிற்கண்டபடி கூறுவதையும் அறிக. (கசுச)

வேறு.

அறுசீர் விருத்தம்.

வயிறு கழியும் விதவிதமாய் மார்பை வலிக்கும் பற்கிட்டும்
பயறு கடித்தாற் போல்தந்தம் பற்றிக் கடிக்கும் இசிப்பெடுக்கும்
கயிறு முறுக்கி விட்டாற்போல் காலுங் கையுந் தானிழுக்கும்
எயிறு திறக்க வொட்டாதிங் கிறங்கா தன்னந் தண்ணீரே.

கயிற்றை முறுக்கினால்போல் காலும் கையும் இழுக்கும். வாயைத் திறக்கவொட்டாது. அன்னமும் தண்ணீரும் இறங்காது. (கசுடு)

மயிலிறகுப் புகை.

அறுசீர் விருத்தம்.

சேட்டை பரிஉகிர் மயிலிறகு தின்னு மிளகு வசம்புசுக்கு
கூட்டக் கடுகு பேயத்தி கூறும் அழிஞ்சில் வேப்பெண்ணெய்
போட்டங் கம்பள முஞ்சமனுய்ப் புகழ்செம் மறியின் கோட்டுடனே
வாட்டிப் புகைக்க வேபிணியு மாறி யிசிவு மாறிடுமே.

(பொ-ரை.)—(1) குரங்கு மயிர், (2) குதிரைக் குளம்பு, (3) மயிலிறகு, (4) மிளகு, (5) வசம்பு, (6) சுக்கு, (7) கடுகு, (8) பேயத்திவேர், (9) அழிஞ்சில்பட்டை, (10) வேப்பெண்ணெய், (11) கம்பளம், (12) செம்மறியாட்டின் கொம்பு, இவைகளில் எண்ணெய் நீங்க மற்றவற்றைச் சரியளவாக எடுத்துப் பொடிபண்ணி வைத்துக்கொண்டு, அப்பொடியில் எண்ணெய் கலந்து பிசறிக் கரிநெருப்பில் கொஞ்சங் கொஞ்சமாக போட அதனால், வரும் புகையைப் பிடித்தால், வலி மாந்தம்நீங்கும். (கசுசு)

வேறு.

கொடிவேலிக்குடிநீர்.

எண்சீர் விருத்தம்.

கொடிவேலி வேர்ப்பட்டை சங்கம் வேர்த்தோல்
குன்றெருக்கம் வேர்ப்பட்டை இவைதா மூன்றும்
வடிவான வராகனெடை தூக்கிக் கொண்டு
வளமான வெந்நீரை விட்டு நன்றாய்ப்
பொடியாக நறுக்கிவடி கட்டி யந்தப்
புனலதனில் வராகனெடை குங்கு மப்பூ
துடியாக அரைத்தீவாய் வலிப்பு மாந்தத்
தொடுகாக்கை வலிப்புமுன் தொலைந்து போமே.

(பொ-ரை.)—(1) கொடிவேலி வேர்ப்பட்டை, (2) சங்கம்வேர்த்தோல், (3) மலைஎருக்கம் வேர்ப்பட்டை, இவை மூன்றையும் வகைக்கு வராகனெடை ஒன்றாகவெடுத்து நன்றாய் நறுக்கி, அரையாழாக்கு வெந்நீரிலிட்டு ஊற வைத்து வடித்து அதில் ஒரு வராகனெடை குங்குமப்பூவை அரைத்துக் கலக்கியதை அடிக்கடி கொடுத்துவர வலிமாந்தம் நீங்கும். (கசுஎ)

மாந்தவலி 18 எனக்கூறினருமுளர். அவற்றின் பேர்கள் மாத்திரம் கிடைத்தன. அவையும் ஒழுங்குடனில்லை. குறி குணங்களும் காணப்படவில்லை. ஆகையால் அவை விடப்பட்டன.

## (17) சுழி மாந்தக் குறிகுணம்.

எண்சீர் விருத்தம்.

துறப்புமிகும் காய்ச்சலுடன் சுவாசந் தோன்றல்
தூக்கமது பிடியாது தொங்கிக் காய்தல்
இறைப்பெடுத்து விக்கலுடன் விலாவிற் பள்ளம்
ஏந்துகொங்கை குடியாது வீங்கி னாற்போல்
வெறுப்பார்கள் சிறுவன்மேல் இனியே தென்பார்
வேறேநீ மனந்தவிக்க வேண்டாஞ் சொன்னேன்
உறப்பான குறிகளிவை தாமுங் கண்டால்
ஓஓஓ சுழிமாந்த மென்று சொல்லே.

(பொ-ரை.)—சுரம் விட்டுவிட்டுக் காய்தல், சுரத்தோடுசுவாசங் காணல், தூக்கம் பிடியாமை, இறைத்தல், விக்கல், மூச்சின் விரைவால் விலாவிற்பள்ளம் விழல், பால் குடியாமை, பார்த்தவர்கண்களுக்கு உடல் வீங்கினதுபோற் காணல், கண்டோர் இறப்பானோ இருப்பானோ என்றெண்ணற் கிடமாகக் காணப்படல் முதலியவைகள் சுழிமாந்தக் குறிகுணங்களாம். (கசுஅ)

கோடகசாலை எண்ணெய்.

நாலடிமேல் வைப்பு.

சொல்லவே சாலைதுழாய் தோடை தும்பை
தோகைகுழல் முடிப்பிலையுங் குறுகு நாதம்
வல்லியுடன் சிட்டியுமே நறுந்தை கூட்டி
வாகான விலையெல்லாம் சாறு வாங்கிச்
சொல்லுமே சாதிக்காய் திப்பிலி காயம்
சேர்கடுகு ரோகணிரோ சனையு முள்ளி
வெல்லுதற்கு வகைக்கழஞ்சு வெதுப்பித் தட்டி
வீறான எண்ணெய்ரசம் சமனாய்ச் சேர்த்து
நல்லகம லாக்கினியில் மெழுக தாக்கி
நாவிலெண்ணெய் காசெடைதா னூட்டிப் பாரே.

(பொ-ரை.)—(1) கோடகசாலையிலை, (2) துளசியிலை, (3) ஆடாதோடை யிலை, (4) தும்பை யிலை, (5) முதியார்கூந்தல் யிலை, (6) சிறுசங்கிலை, (7) சீந்திற் கொடி (8) நெய்ச்சிட்டி யிலை, (9) நாறுகரந்தை, இவைகளின் சாறுவகைக்கு ஆழாக்கு, எண்ணெய் சாறுக்குச் சமன் சேர்த்ததில், (1) சாதிக்காய், (2) திப்பிலி, (3) காயம், (4) கடுகுரோகணி, (5) கோரோசனை, (6) வெள்ளுள்ளி, வகைக்கு அரைக்கால் பலம் எடுத்து வெதுப்பித் தூளாக்கிக் கூட்டி, மெழுகு பதமாய்க் காய்ச்சி, காலையில் காசெடை நாவில் தடவிவரச் சுழிமாந்தம் நீங்கும். (கசுகூ)

சுழிமாந்தத்திற்கு—ஈருள்ளி எண்ணெய்.

கலி விருத்தம்.

தாளு மீருள்ளிச் சாறுவெள் ளிண்டின்சார்
கேளு மாமணக் கெண்ணெய் வகைக்குச்சேர்
சூளா வேயெரித் துப்பலம் கொண்டிடில்
வாளா வேசுழி மாந்தமு நீங்குமே.

(பொ-ரை.)—(1) வெங்காயச்சாறு, (2) வெள்ளிண்டஞ்சாறு, (3) ஆமணக்கு நெய், வகைக்கு ஒரு சேர் எடுத்து எரித்து, காலையில் காலையில் ஒரு பலமளவு புகட்ட, சுழிமாந்தம் நீங்கும். (கஎ0)

கத்தூரி எண்ணெய்.

கலி வெண்பா.

ஏகநா யகன்ற னிணையடியைப் போற்றிசெய்து
வாகுடனே யெண்ணெய் வசனிப்பேன்—யோகமுள்ள
கோரோ சனமோடு கோட்ட மதிமதுரம்
சீராகுந் திப்பிலி தேவதாரம்—பேரான
சந்தனமு மேலமும் தன்னுடனே மாசிக்காய்
வெந்தயமுஞ் சுக்குவெள் ளுள்ளியும்—அந்தமுள்ள
பேரான கத்தூரி பேர்வசம்பு ரோகணியும்
பாரமுள மூங்கிலின் பச்சைத்தோல்—சீராய்
வகைக்கு வராகனெடை வாட வறுத்துத்
தொகையா யரைப்பதற்குச் சொல்லத்—தகையாய்

எருமுட்டைப் பீநாறி யேற்றதொரு சாற்றில்
வருந்தி யரைத்து வழித்துத்—திரும்ப
விளக்கெண்ணெய் ஓர்படியும் விட்டெரித்துத் தானே
மலைக்காம ஞேய்க்கெல்லாம் வைப்பாய்—கலக்கமறப்
பிள்ளைப் பிணிகட்குப் பேறுகத் தான்கொடுக்க
உள்ளநோய் போகுமிஃ தோதக்கேள்—கள்ளமுள்ள
மாந்தவயிற் றுப்பிசமும் வாடா விளந்தேகஞ்
சோர்ந்து கிடக்குஞ் சுழிமாந்தம்—சார்ந்துவரு
நாவரட்சி யார்கணமு நன்றுங் குளிர்காய்ச்சல்
தூவி யிரத்தத்தின் தொந்தசுர—மேவுகின்ற
முக்குக் கணமும் முதிர்பால் கிரிச்சரமும்
பக்கியின் தோடம் பழங்காய்ச்சல்—அக்கணமே
இத்தனைநோ யெல்லா மிருப்பிடத்தை விட்டுவிட்டுக்
கத்தி விழுந்தோடுங் காண்.

(பொ-ரை.)—(1) கோரோசனம், (2) கோட்டம், (3) அதிமதுரம், (4) திப்பிலி, (5) தேவதாரம், (6) சந்தனம், (7) ஏலம், (8) மாசிக்காய், (9) வெந்தயம், (10) சுக்கு, (11) வெள்ளுள்ளி, (12) கஸ்தூரி, (13) பெருவசம்பு, (14) கடுகுரோகணி, (15) மூங்கில் பச்சைத் தோல், இவைகள் வகைக்கு ஒரு வராகனெடை நிறுத்து, கத்தூரி நீங்கலாக, மற்றவைகளை வறுத்து, எருமுட்டைப் பீநாறிச் சாற்றை விட்டரைத்து வழித்து, ஒருபடி விளக்கெண்ணெய் விட்டெரித்து இறுத்து, இதில் கத்தூரியை அரைத்துக் கலக்கி நோய் வன்மை, உடல் வன்மைக்குத்தக்கபடி காலையில் காலையில் துட்டெடை வீதம் மூன்று அல்லது ஐந்து நாள் கொடுக்க, பிள்ளை நோய்கள், மாந்த உப்பிசம், சுழி மாந்தம், நாவரட்சி, கணம், நளிர் காய்ச்சல், இரத்தத்தைப்பற்றிய தொந்த சுரம், முக்குகணம், பாற்கிரிச்சரம், பட்சிதோடம், பழையசரம் தீரும். (கஎக)

## (18) முக்குமாந்தக் குறி குணம்.

அறுசீர் விருத்தம்.

அதுவா முக்கு மாந்தகுறி அறையக் கேளாய் திருக்கறவே
நீதமுங் குழவி முக்கிமுக்கி நின்றே கழியுஞ் சீமலமும்
புதிய சுரமு மேலாகிப் பின்கால் வீங்கு முழலையுமாய்ச்
சதைதோ லெலும்பு நரம்புருகத் தழலா யுலர்த்தி யுருக்கிடுமே.

(பொ-ரை).—குழந்தை முக்கிமுக்கிச் சீயும் மலமும் கழியும், திடீரென்று சுரங்காயும், பின்கால் வீங்கும், அயர்ச்சியோடு சதை, தோல், எலும்பு, நரம்பு இவைகள் வெதும்பி உருக, உடலையும் உருக்கும் ; இது முக்கு மாந்தக் குறி குணங்களாம். (கஎஉ)

முக்கு மாந்தத்திற்கு-ஓமக்குடி நீர்.

அறுசீர் விருத்தம்.

ஓமந் திப்பிலி மிளகுள்ளி யொடுங்கி யோடும் சமனுக
நாமச் சீலை தனில்முடிந்து நாழி நீர்விட் டெட்டொன்றாய்
வாமம் காய்ச்சி முன்முடிந்த மருந்தை அவிழ்த்துத் தானரைத்துத்
தாம மூன்று வேளைநல்கச் சகல மாந்த மும்போமே.

(பொ-ரை).—(1) ஓமம், (2) திப்பிலி, (3) மிளகு, (4) வெள்ளுள்ளி, இவைகளின் சூரணம் (5) ஆமையோடு பற்பம், சரி எடை எடுத்து வெள்

ளைச் சீலையில் முடிகட்டிச் சட்டியிலிட்டு, நாழி நீர் விட்டு எட்டொன்ருய்க் காய்ச்சிப் பிறகு முடிப்பை அவிழ்த்து, அக்குடி நீர் விட்டரைத்து, அதை மூன்று வேளை காலை மாலை கொடுக்க, மாந்தம் எல்லாம் குணமாகும். (௧௭௩)

## (19) சந்நிமாந்தக் குறிகுணம்.

(இது மாந்த சந்நி எனவுங்கூறப்படும்.)

அறுசீர் விருத்தம்.

பத்தியத் தாழ்வால் மாந்தம் பகைசெயும் விதங்கள் மெத்த
சுற்றிய மயக்க முண்டாய்ச் சொல்லொணுச் சந்நி யெய்தும்
முற்றிய சுரமுந் தாக முதிர்ந்திடு நாவின் முள்ளு
புத்தியுங் கலங்கிக் கண்ணும் போதவே தாழுந் தானே.

உருக்குஞ் சந்நி மாந்தகுணம் ஓயா தலறும் வாய்பிதற்றும்
ஒருகண் திறந்து மொருகண்ணை யுருட்டி விழித்துப் பார்த்துமழும்
துருக்கு மூசி போல்கழுத்து துவள நொந்தே யுடலமெலாம்
பெருக்க நரம்புந் தான்தெறித்துப் பிழியும் பாசி போல்விழியே.

அன்றியும்

தொலைவில் தாகமு மயக்கமு மறிவுதொந் தித்தல்
தலைபு ரட்டல்கால் குளிர்ந்திட ஞவில்முள் தடித்தல்
மலைவு செய்வெறும் வாந்தியு மேப்பமும் வலிப்பும்
சிலைநு தற்கணே சந்நிமாந் தம்மெனச் செப்பே.

(பொ-ரை.)—பத்தியக் கெடுதியினுல் மாந்தம் மிகுதிப்பட்டுப் பகைக்கும் வகைகள் மெத்தவுண்டாகும். அவை மயக்க முண்டாய் அதனுல், சந்நி யுண்டாம். ஆகையால், மாந்தசந்நி அல்லது சந்நிமாந்தம் என்னும் பெயர் பெறும், அதன் குறிகளாவன : சுரம், தாகம், நாவில் முள், புத்தி கலக்கம், கண்தாழ்வு, உடல் இளைப்பு, இடை விடாமல் அலறுதல், வாய்பிதற்றல், ஒரு கண் திறந்தேயிருக்க மற்றொருகண்ணை உருட்டிப் பார்த்து அழுதல், கழுத்து ஊசிபோல் நேர்தல், உடம்பெல்லாம் நோதல், நரம்பு விண் விண எனத்தெறித்தல், பாசிபோல் கண்ணிற் பீளைசாரல், அன்றியும் தலைபுரட்டல், கால் சில்லிடல், நாவில் முள்தடித்தல், வாந்தி, ஏப்பம், வலிப்பு இவைக ளும் சந்நிமாந்தத்தில் உண்டாம்.

மாந்த சந்நியானது மாந்த மிகுதியால் உண்டாம் என்றும், அதில் காணும் குறிகள் இவையென அடியிற் கூறப்பட்ட செய்யுள்களாலறிக.

அறுசீர் விருத்தம்.

மாந்தமே கோபித் தக்கால் வயிறுபோ முப்பிக் கொள்ளும்
மாந்தமே கோபித் தக்கால் வாய்தனை வெருவிச் சீறும்
மாந்தமே கோபித் தக்கால் மயங்கியே குளிர்ந்து காணும்
மாந்தமே கோபித் தக்கால் வலிப்புடன் சந்நி தானே.

மாந்தமே கோபித் தக்கால் * * *
காந்தல் போல் மேனி தானும் கருகியே வெருவிச் சோரும்
சேர்ந்ததோர் பச்சை வெள்ளை சிவந்துமேல் மலமுந் தீயும்
வாந்தியே பண்ணுங் கண்டாய் வலிப்புடன் சந்நி தானே ! (௧௭௪)

சந்நிமாந்தத்திற்கு—வெற்றிலைச் சுரசம்.

கலிநிலைத் துறை.

செப்பு வெற்றிலை முயிறுதன் முட்டைசிற் றரத்தை
வெப்பு சுக்குடன் முருங்கைமா விலிங்கமுஞ் சுரசம்
ஒப்பில் லாதகத் தூரிசேர்த் துட்கொடு மேலி
லப்பு வாயுள்ளி யண்டத்தின் தயிலமா ரணங்கே.

(பொ-ரை.)—(1) வெற்றிலை, (2) முயிற்றெறும்பின் முட்டை, (3) சிற்ற ரத்தை, (4) சுக்கு, (5) முருங்கைப் பட்டை, (6) மாவிலிங்கப் பட்டை, இவை களைச் சரி எடை எடுத்து அரைத்துப் பிழிந்து, சுரசம் பண்ணி, அதில் வேளைக்கு அரைக்கால் குன்றி கஸ்தூரி சேர்த்து, காலை மாலை இரு வேளை மூன்று நாள் உள்ளுக்குக் கொடுத்து, அண்டம், வெள்ளைப் பூண்டு இவ்விரண்டையும் சேர்த்துக் கருத்தயிலம் வாங்கி மேலிலும் பூச, சந்நி மாந்தம் தீரும். (௧௭௫)

மாந்த சந்நிக்கு—வேர்ப் புகை.

அறுசீர் விருத்தம்.

கஞ்சா வேரு மூமத்தை கடிய தராவின் தன்வேரும்
பஞ்சா மிவைகள் வேப்பெண்ணெய்ப் பைய வறுத்துப் பொடியாக்கித்
துஞ்சா நெருப்புப் புகைகாட்டத் தோற்றும் சந்நி அத்தனையும்
மஞ்சார் குழலாய் அடிதொழுது மாய்ந்தே போகுங் கண்டாயே.

(பொ-ரை.)—(1) கஞ்சாவேர், (2) ஊமத்தைவேர், (3) தராவேர், இவைகளைச் சரி எடை எடுத்து இடித்து, வேப்பெண்ணெய் விட்டு வறுத்துச் சூரணித்து, நெருப்பில் போட்டுப் புகை பிடிக்க, மாந்தசந்நி தீரும். (௧௭௬)

வேளைவேர்ச் சுரசம்.

கலி விருத்தம்.

ஓடும் வேளைவே ருத்தாம ணியின்வேர்
மூடு மாவிலிங் கைமுருங் கைப்பட்டை
யோடு நால்வகைக் கோர்பல மேரசத்
தோடு வாங்கிமு ரித்துச்சூ டாற்றிடே

ஆற்றி டாய்பி னரிசியின் திப்பிலி
கோற்றி டாய்மிள கோடுசுக் கானதூ
ளேற்றி டாய்நவ லோகமி ழைத்துடன்
வார்த்தி டாய்சந்நி மாந்தம்போம் பாரிதே.

(பொ-ரை.)—(1) வேளைவேர், (2) உத்தாமணிவேர், (3) மாவிலிங்கப் பட்டை, (4) முருங்கைப்பட்டை, இவைகளின் சாறு தனித்தனி ஒரு பலமெடுத்துக் கலந்து சுடவைத்தாற்றி சுக்கு, மிளகு, திப்பிலி இவைகளின் சூரணம் கொஞ்சஞ் சேர்த்து, நவலோக பூபதி மாத்திரையை இழைத்துக் கலந்து கொடுக்க, மாந்த சந்நி தீரும். (௧௭௭)

உள்ளுக்கும், துவாலைக்கும்—பூண்டாதிச்சாறு.

அறுசீர் விருத்தம்.

சிறுகளா இலையும் வெள்ளுள்ளி சேர்ந்த வசம்பு மோமமுடன்
அறிவா யிடித்து நீர்வாங்கி அரிய துவலையிட் டுள்ளுக்கும்
நெறியாய்க் கொடுக்க நாள்மூன்று நிகழ்பதி னெட்டு மாந்தசந்நி
தெறிபட் டோடு நோயெல்லாம் சிரசு முதல்தோ டமும்போமே.

(பொ-ரை.)—(1) சிறுகளாவிலை, (2) வெள்ளுள்ளி, (3) சுட்டவசம்பு, (4) ஓமம், இவற்றைச் சரியாக எடுத்து இடித்துச் சாறு வாங்கிக் காலை மாலை மூன்று நாள் உள்ளுக்குக் கொடுக்கப் பதினெட்டு வகை மாந்த சந்நியும் தீரும். இதையே துவாலை செய்யவும். (கஎஅ)

கஸ்தூரி மாத்திரை.

நேரிசை வெண்பா.

கத்தூரி யொன்று கமழ்ஞாழற் பூவிரண்டு
சத்தாவின் கோரோ சனமூன்று—முத்தார
மெல்லியர் தம்முலைப்பால் விட்டரைத்துக் குன்றியெனச்
சொல்லுருண்டை செய்வாய் துணிந்து.

(பொ-ரை.)—(1) கஸ்தூரி ஒன்று, (2) குங்குமப்பூ இரண்டு, (3) கோரோசனம் மூன்று பங்காகவெடுத்து, இம்மூன்றையும் முலைப்பால் விட்டரைத்து குன்றியளவு மாத்திரை செய்து நிழலில் உலர்த்திக்கொள்ளவும். (கஎகூ)

நேரிசை வெண்பா.

துணிந்துருண்டை வைத்திட்டால் தோடசந்நி மாந்தம்
மணிமாந்த பித்தசுரம் வாந்தி—தணிந்தோடும்
முத்தாரம் பூண்ட முகிழ்முலையாய் யோகப்பேர்
கத்தூரி மாத்திரையாங் காண்.

(பொ-ரை.)—இந்த மாத்திரைக்குக் கத்தூரி மாத்திரை என்று பெயர். இதை முலைப்பாலில் கொடுக்க மாந்தசுரம், வாந்தி, சந்நிமாந்தம், முதலியவை நீங்கும். (கஅ0)

கோரோசனை மாத்திரை.

நேரிசை வெண்பா.

சீர்சிறந்த மாசிக்காய் திப்பிலிகோ ரோசனமும்
கார்சிறந்த கோட்டம் கருஞ்சீரம்—பேர்சிறந்த
அக்கரா காரம் அரைத்துமுலைப் பாலிலிட
இக்கணமே தீரும் இது.

(பொ-ரை.)—(1) மாசிக்காய், (2) திப்பிலி, (3) கோரோசனம், (4) கோட்டம், (5) கருஞ்சீரகம், (6) அக்கராகாரம், இவற்றைச் சரி எடை எடுத்து முலைப்பால் விட்டரைத்துக் குன்றியளவு உருட்டி, வேளைக்கு ஒரு மாத்திரையாக முலைப்பாலில் இழைத்து மூன்று அல்லது ஐந்து நாள் கொடுக்க மாந்த முதலியவை நீங்கும். (கஅக)

மாந்த சந்நிக்குப்—புகை.

அறுசீராசிரிய விருத்தம்.

குக்கிலு மகிலுங் கூட்டிக் குருசந்நி நாய கந்தான்
சிக்கெனச் சாம்பி ராணி திகழ்புகைக் கூட்டிப் பின்னர்
தக்கதோர் வேளை வேரும் சாறணை தானுங் கொண்டு
அக்கணம் புகைக்கச் சந்நி மாந்தமு மகலுந் தானே.

(பொ-ரை.)—(1) மைசாட்சிகுக்கில், (2) அகிற்கட்டை, (3) சந்நிநாயகம், (4) சாம்பிராணி, இவைகளை சமவெடை யெடுத்துப் பொடித்துப் புகையூட்டி, பிறகு, (1) வேளைவேரும், (2) சத்திச்சாறணைவேரும், நேர் நேர் கூட்டி புகைகாட்ட, மாந்த சந்நி தீரும். (கஅ௨)

## (20) ஊதுமாந்தக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

உடலெல்லா மூதிக் காணும் உவாந்தியுங் கழிச்ச லுண்டாம்.
குடலெல்லா மிரைச்ச லாகிக் கூப்பிடுஞ் சமுத்தி ரம்போல்
தொடையெலாம் வலிக்கு மிக்க சுரமுடன் கடுப்பு மாகும்
அடைவிலூ லூது மாந்தம் அதுசெயுங் குறிக டாமே.

(பொ-ரை.)—குழந்தையின் உடல் முழுமைக்கும் ஊதல், வாந்தி, கழிச்சல், குடலில் இரைதல், தொடையில் வலித்தல், சுரங்காய்தல், உடல் கடுத்தல் என்னும் இவைகள் ஊதுமாந்தக் குறிகுணங்களாம்.

இதனை அடியிற்கண்ட மேற் கோளாலும் அறிக.

அகண்ட வாந்தியுங் கழிச்சலுஞ் சுரங்களு மாகிச்
சுகந்த மேனியில் வீக்கமுந் துண்டித் துப்படிந்
திகந்த தாமுத ரத்தினி லிறைச்சலுண் டாகில்
உகந்த சேய்க்கிது ஊதுமாந் தங்களென் றிசைப்பாய். (கஅ௩)

ஊது மாந்த மாத்திரை.

கலி விருத்தம்.

ஓதுங் காரம் அரைரண்டு ரோகணி
நீதி யாய்க்கருஞ் சீரக நீண்முலை
மாது பாலினில் மாத்திரை செய்திட
ஊது மாந்தம்விட் டோடுவ துண்மையே.

(பொ-ரை.)—பொரித்த வெங்காரம் பலம் அரை, கடுகு ரோகணி பலம் இரண்டு, கருஞ்சீரகம் பலம் இரண்டு, இவற்றை நன்ருய்ப் பொடி செய்து குழிக்கல்லிலிட்டு, முலைப்பாலால் மெழுகு பக்குவமாகும் வரையில் அரைத்து மாத்திரை செய்து, குழந்தைக்கு வேளைக்கு ஒரு மாத்திரையாக முலைப் பாலில் இழைத்து மூன்று நாள் கொடுத்தால், ஊது மாந்தமானது விடும். (கஅ௪)

ஊதுமாந்தத்திற்கு—பேதிபூபதி மாத்திரை.

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

வேதிபூ பதிபா லர்க்கு விளம்பிடும் வகையைக் கேளாய்
சேதிசே ரிரதஞ் சுக்கு சேர்ந்தவெங் காரங் கந்தி
நீதிசேர் நாண்கு நேராய் நிறையினேர் வாளங் கூட்டி
ஆதியாஞ் சுத்தி யைச்செய் தறிந்துதண் ணீரைக் கூட்டே.

கூட்டிடு மைந்துஞ் சுத்தி குளிர்ந்தநீர் விட்ட ரைத்துப்
பாட்டிடும் பனியிற் பாசிப் பயற்றள வாக்கிக் கொண்டு
தீட்டிடு முரைத்து நீரில் சிறியவர் தமக்கே யீயப்
போட்டிடு மூது மாந்தம் பொருமல்வா தங்கள் போமே.

(பொ-ரை.)—பேதிபூபதியாவது : இரசம், கந்தகம், சுக்கு, வெங்காரம், இந்த நான்கும் சரி எடை. இந்த மொத்தத்திற்குச் சரி எடை வாளம், ஆகிய இவற்றைச் செய்ய வேண்டிய முறையிற் பொடியாக்கல் முதலியவை செய்து குழிக்கல்லிலிட்டுத் தண்ணீர் விட்டு மெழுகாகும் பக்குவமாக வரைத்துப் பாதிப் பணிப்பயற்றி னளவாக வுருட்டி நிழலில் உலர்த்தி வைத்துக் கொண்டு, குழந்தைகளுக்குக் காலையில் மாத்திரம் வெந்நீரில் ஒரு மாத்திரை யுரைத்துக் கொடுத்தால், ஊது மாந்தம், பொருமல், வாயு இவை நீங்கும். (கஅரு)

ஊதுமாந்தத்துக்கு.

பொடுதலையாதிக் குடிநீர்.

அறுசீர் விருத்தம்,

பொடுதலை வேம்பு மாவும் புளிநுணா நொச்சி வேலி
சடுதியி லீர்க்கிவ் வேழும் சமங்கொண்டு குடிநீர் வைத்தங்
கிடுவகை யோமம் முள்ளி திப்பிலி கூடக் கூட்டி
அடுதனீர் நாழி தன்னி லடுப்பினி லெட்டொன் றுக்கே.

ஆக்கிடுங் குடிநீர் தன்னை யானதோர் சங்கு வார்க்கப்
போக்கிடு மூது மாந்தம் போர்மாந்தம் சத்தி மாந்தம்
தேக்கிடுஞ் செரியா மாந்தம் சிறந்திடுங் கட்டு மாந்தம்
தாக்கிடு மாந்த மைந்தும் தரணிவிட் டோடு மன்றே.

(பொ-ரை.)—பொடுதலை, வேம்பு, மா, புளி, நுணா, நொச்சி, வேலி இவ் வேழின் ஈர்க்குகளும் ஓமம், வெள்ளைப் பூண்டு, திப்பிலி இவைகளும் சரி எடை எடுத்து இவற்றில் வெள்ளைப் பூண்டைச் சிவக்க வறுத்து, ஓமத்தைப் பொரிய விட்டு, அதில் திப்பிலியையும் மற்ற ஈர்க்குகளையும் இடித்துப் போட்டு, அவற்றின் மொத்த எடைக்கு எட்டுப் பங்கு தண்ணீர் விட்டு ஒரு பங்காகக் காய்ச்சிக் குழந்தைக்குக் காலை மாலை இரு வேளையும், வேளைக்கு ஒரு பாலடைவீதம் வார்க்க, சிறப்பாக ஊது மாந்தந் தீரும்.

அன்றி, பொதுவாகப் போர்மாந்தம், சத்திமாந்தம், செரியாமாந்தம், கட்டுமாந்தம் ஆகிய இவைகளும், இக்குடிநீரால் தீரும். (கஅசு)

## (21) வீக்கமாந்தக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

தப்புறு வீக்க மாந்தந் தன்னையே பன்னக் கேளாய்
கப்புறு காதுங் கண்ணுங் கனக்கவே வீங்கும் வற்றும்
ஒப்புறு நாவும் புண்ணா யோய்விலாச் சுரமு முண்டாம்
வெப்புறு கைகால் நொந்து வெறுத்திடு மன்னந் தானே.

(பொ-ரை.)—காதும், கண்ணும் மிக வீங்கும், பிறகு வற்றும், நா புண் படும், ஓயாது சுரங்காயும், கைகால் நோவும், அன்னத்தை வெறுக்கும், இவைகள் வீக்க மாந்தக் குறிகுணங்களாம். (கஅஎ)

பூவரசுக் குடிநீர்.

எண்சீர் விருத்தம்.

பாடுவோம் பூவரசம் பழுப்பு சங்கம்
பட்டைசீந் திற்கொடியுந் துளசி சுக்கு

நீடுவோம் வரள்முள்ளி முருங்கை யீர்க்கு
நீர்முள்ளி சார்வேளை யின்றன் வேரும்
சூடுவோம் பிரமியிலை மருள்கி ழங்கு
தூதுவளை சிறுகுறிஞ்சான் சத்தி மூலம்
கோடுவோங் கருஞ்சீர மிவைவ கைக்குக்
கொண்டுசம னெடையாகத் தூக்கி டாயே.

தூக்கியே கியாழமிட் டெட்டொன் றுக்கிச்
சுகமாக நல்கினுல் மாந்த வீக்கம்
வீக்கவிஷ வீக்கவிஷ பாக வீக்கம்
மீறுசுரம் நீர்க்கட்டு மலக்கட் டும்போம்
ஆக்கவே முறையறிந்து செய்தா னன்மை
அல்லாட்டால் கர்மம்வந் தெய்து மெய்தும்
தாக்கவே பண்டிதரே நூலைத் தேடிச்
சாயுச்ய ரகசியத்திற் சார்ந்தி டீரே.

(பொ-ரை.)—(1) பூவரசம் பழுப்பு, (2) சங்கம் பட்டை, (3) சீந்திற் கொடி, (4) துளசி, (5) சுக்கு, (6) வரள்முள்ளி, (7) முருங்கை ஈர்க்கு, (8) நீர்முள்ளி வேர், (9) சாறுவேளை வேர், (10) பிரமி யிலை, (11) மருள் கிழங்கு, (12) தூதுவளை, (13) சிறுகுறிஞ்சான், (14) சத்திச்சாரணைவேர், (15) கருஞ்சீரகம் ஆகிய இவற்றையெல்லாம் சரியெடை கொண்டு இடித்துக் குடிநீரிட்டு எட்டில் ஒன்ருய்க் குறுக்கிக் கொடுக்க,வீக்க மாந்தம், விஷவீக்கம், விஷபாகம், சுரம், நீர்க்கட்டு, மலக்கட்டு இவை நீங்கும். இக்கியாழமே சிறுவர்க்கும் பெரியவர்க்கும் கொடுக்கலாம். (கஅஅ)

## (22) உப்பு மாந்தக் குறிகுணம்.

கலிநிலைத் துறை.

தெளிந்த தாகமுஞ் சுரமுடன் பிதற்றலுஞ் செருமிக்
களங்க மாயிரைந் துப்பிறப் பிக்கழிந் துடனே
வளர்ந்த வாந்தியு முலையைநந் தாமலு மயக்கந்
தளர்ந்த தாலுப்பு மாந்தமென் றறிவாய்நீ தானே.

(பொ-ரை.) தாகம், சுரம், பிதற்றல், வயிறு உப்பி இறைந்து கழிந்து உடனே வாந்திபண்ணல், முலையுண்ணுமை, மயக்கம் முதலியன உப்புமாந்தக் குறிகுணங்களாம். (கஅகூ)

கலிநிலைத் துறை.

குப்பைமேனிச்சாறு, முக்காவேளைக் குடிநீர்

தானே மேனியுப் பிரண்டுமே கசக்கிக்கொள் சாற்றைப்
பான மாகவே பருகினுல் தீர்ந்திடு மின்னம்
கானமார் முக்கா வேளைசுக் கோமமுங் கருக்கி
யான தானநா யுருவியு மாமைநீ றருந்தே.

(பொ-ரை.)—(1) குப்பைமேனியும் உப்பும் கசக்கிப் பிழிந்து கொடுக்க உப்பு மாந்தம் நீங்கும், (2) அல்லது, முக்காவேளை, சுக்கு, ஓமம், இவைகளைக் கருக்கி அதில் நாயுருவியும் போட்டுக் குடிநீரிட்டு அக்குடிநீரில் ஆமையோட்டுப் பற்பமும் கூட்டிக்கொடுக்கத் தீரும். (ககூ0)

## (23) வாந்தி மாந்தக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

பிள்ளையின் வயிற்றில் மந்தம் பெருகிடக் கபமார் பாகிக்
கள்ளமா யடைந்தி ருந்து கவளிக்குந் தாய்ப்பா றன்னை
உள்ளிடந் தங்கப் பண்ணு துடனது வாந்தி யாகி
மெள்ளவே வேர்த்துச் சோங்கி விழல்வாந்தி மாந்த மாமே.

(பொ-ரை.)—குழந்தையின் வயிற்றில் மிகவும் மந்தமுண்டாவதால், மார்பில் கோழையதிகஞ் சேர்தல், அதனால், குடிக்கின்ற தாய்ப்பாலை வயிற்றில் இருக்கப் பண்ணாமல் உடனே வாந்தியாதல், அதனால், வியர்வை மிகுந்து சோர்வடைந்து விழுந்துவிடல், வாந்தி இவைகள் வாந்திமாந்தக் குறிகுணங்களாம். (கசுக)

வாந்திக்கு மருந்து.

அறுசீர் விருத்தம்.

கடுக்காய் சுக்கு வெங்காரம் கடிய சீன காரமுடன்
அடுக்காய் சீனி தேன்கூட்டி யரிதா மிச்சஞ் சாற்றரைத்துக்
கொடுக்க வாந்தி விட்டோடும் கூறு நாக்கிற் றேய்த்துவிட்டால்
தடுக்கா ரிந்தக் கிரியைதனைச் சதுராய்ச் செய்து முடிப்பீரே.

(பொ-ரை.)—கடுக்காய்த் தோல், தோல் சீவின சுக்கு, தூய்மை செய்த வெங்காரம், படிகாரம், வெள்ளைச் சர்க்கரை இவைகளை ஒரு வராகன் எடை எடுத்து ஐந்து பலம் எலுமிச்சஞ்சாற்றாலரைத்துக் குழம்பாக்கி, அடுப்பிட்டுப் பக்குவத்திற் கொஞ்சம் தேன் விட்டு இறக்கி சிறிதெடுத்து, நாக்கில் தடவினால், வாந்தி மாந்தம் தீரும். (கசுஉ)

வாந்திக்கு மருந்து.

எண்சீர் விருத்தம்.

பூட்டுகிறேன் குழந்தைகட்கு வாந்தி கண்டால்
பூவென்ற கிராம்புமதி விடயந் திப்பிலி
நாட்டுகிறேன் மயிலிறகு சுட்ட சாம்பல்
நன்றாகப் பொடிசெய்து தேனிற் சேர்த்தே
ஊட்டவே வாந்தியஃ தொழிந்து போகும்
உண்மையது தவறுதிங் குறுதி மெத்த
ஆட்டமிகும் போகரிட கடாட்சத் தாலே
அன்பாகப் புலிப்பாணி யறைந்திட் டேனே.

(பொ-ரை.)—பொட்டு நீக்கின இலவங்கம், அதிவிடயம், சிறுதிப்பிலி, மயிலிறகு சுட்ட சாம்பல் என்னும் இவைகள் சரி எடை எடுத்துச் சேர்த்துத் தேனில் இழைத்துக் கொடுக்க, வாந்தி நிற்கும். (கசுரு)

## (24) வரள் மாந்தக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

தோலுந் திரங்கி யுடல்வெளுத்துச் சுழலு மயக்க முண்டாகும்
பாலு மடுக்கு மெய்யிளைக்கும் பார்க்கும் போது பலகுணமாம்
காலுங் கையுந் தான்வற்றிக் கடுப்பும் வலிப்புங் காண்பித்தே
வாலர் தம்மை யுருவழிக்கும் வரள்மாந் தத்தின் குணமிதுவே.

(பொ-ரை.)—வரள் மாந்தத்தில் தோல் சுருங்கி, உடல் வெளுத்து மயக்கம் காணும், பால்குடிக்கும், உடம்பு இளைக்கும், பலவிதமான குறிகுணங்களுண்டாம், காலும் கையும் வரண்டு, உடல் கடுப்பும் வலிப்புமா யிருக்கும், குழந்தையின் உருவத்தை மாற்றும். இவைகளன்றி, உடல் சில்லென்றிருத்தல், கைகால்கள் ஊதல் என்னும் குறிகளும் உண்டென்பாருமுளர். (கசுச)

### வரட்சுண்டி எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

வரட்சுண்டி சாறு வேளை மணித்தக்கா ளிக்க ழற்சி
கரிசாலை துளசி நீலி கனசத்தம் சமனுய்க் கூட்டி
அரற்றியே இடித்த சாறு ழாக்குமொன் றுவின் நெய்தான்
உரற்றிய வோரா ழாக்கு முண்மையாய்க் கூடச் சேரே.

கூடக்கத் தூரி மஞ்சள் கோஷ்டமுங் கரிய சீரம்
வாடவே கடுகு ரோணி வகைக்கரை வராகன் கூட்டிப்
போடவே பொடிதான் செய்து புனிதமா கக்க லந்து
நாடவே அடுப்பி லேற்றி நலமொடு காய்ச்சிக் கொள்ளே.

கொள்ளவே சந்தி தன்னில் கொடுமேதுட் டெடைஉள் ளுக்குத்
துள்ளவே சகல தோடஞ் சுருக்கினில் தீர்ந்து ரத்தம்
உள்ளவே பரவிப் பிள்ளை உடலது பருக்கும் பின்பு
எள்ளலின் றிக்கு ளிர்ந்தே யின்புடன் வளருந் தானே.

(பொ-ரை.)—(1) வரட்சுண்டி, (2) சாறுவேளை (3) மணித்தக்காளி, (4) கழற்சி (5) கரிசாலை, (6) துளசி, (7) அவுரி இவைகளை சமவெடை எடுத்து இடித்துப் பிழிந்த சாறு ஒரு ஆழாக்குடன், பசுவின் நெய் ஒரு ஆழாக்குச் சேர்த்து, (8) கத்தூரி மஞ்சள், (9) கோட்டம், (10) கருஞ்சீரகம், (11) கடுகு ரோகணி, வகைக்கு அரை விராகனெடை இடித்துப் பொடிபண்ணிக்கூட்டிக் காய்ச்சிப் பக்குவமாய் வடித்து, காலையில் மாத்திரம் மூன்று நாள் துட்டெடை உள்ளுக்குக் கொடுக்கச் சகல தோஷமும் போம், இரத்தம் பரவித் தேக புஷ்டி உண்டாகும். (கசுரு)

### சடாமாஞ்சிக் குடிநீர்.

கொச்சகம்.

மானனுய் சடாமாஞ்சில் வேர்க்கொம் புளிவசம்பு
ஆனதோருத் தாமணி நிலவிளா மிளகுவித்து
பானமாங் கியாழத்தினிற் கமடமாம் பற்பந்
தானுமேகலந் துள்ளிடத் தாழ்ந்துபோ மாந்தம்.

(பொ-ரை.) (1) சடாமாஞ்சில், (2) சுக்கு, (3) வெள்ளைப்பூண்டு, (4) வச ம்பு, (5) உத்தாமணிவேர், (6) நிலவிளா, (7) மிளகு, இவைகள் சரிஎடை எடுத்திடித்த எடைக்கு எண்பங்கு நீர் விட்டு நாலில் ஒன்ருய்க் குடிநீர் செய்து, ஆமையோட்டின் பற்பம் வயதுக்குத் தக்கபடி கூட்டிக் காலை மாலை யாக மூன்று நாள் கொடுக்க, வரள்மாந்தம் தீரும். (௧௬௬)

## (25) திட்டுமாந்தக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

வயிற்றினில் மலமுஞ் சிக்கி வரண்டது போலே யாகும்
சயித்திய முள்ளே யாகிச் சார்ந்திடுஞ் சுரமு மிக்க
குயிற்றிடு மதனுற் பிள்ளை கூவிடும் பலகா லாக
வயித்திய நீய றிந்து மருந்துசெய் திட்டு மாந்தம்.

(பொ-ரை.)—மலக்குடலில் மலஞ்சிக்கல், வரட்சி, உள்ளே குளிர்ச்சி, மிக்க சுரம், குழந்தை அச்சுரம் தாளாது அடிக்கடி கூவல் என்னும் இவை கள், திட்டுமாந்தக் குறிகுணங்களாம். (௧௬௭)

திட்டுமாந்தம், கிருமி, சுழிகண உட்காய்ச்சல், நளிர் மாந்தம்,

புரளிக்கு—தகரை எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

வெந்தவித் தூற்று கின்ற விளக்கெண்ணெய் நாழி தன்னில்
அந்தந்த கரையின் சாறும் அதுபடி யேதா னென்று
தந்தநா யுருவி வேரும் தைவேளை நாயின் வேளை
முந்தவே கொழுஞ்சி வேரும் மூக்கரைசா ரணையின் வேரே.

வகைக்கொரு வெலுமிச் சங்காய் அளவுசாந் தரைத்துக் கொண்டும்
பகைப்பிலா வசம்பு மோமம் பண்புகத் தூரி மஞ்சள்
மிகப்புடன் சரிவி ளங்கம் மிகுவகைக் கரைய தாகத்
திகைத்தவெள் ளுள்ளி தானுஞ் சேர்ந்திரு பங்கு கூட்டே.

கறுத்தசீ ரகமும் வெந்தயங் கடுகுரோ கணிவ கைக்கு
நிறுத்தொக்க வொருபங் காக நீர்விட்டுத் தான ரைத்து
மறுத்தசட் டியிற்க லந்து வகையுட னென்று யூற்றிப்
பெருத்திடு மெழுகு பாகம் பிழையற வடித்துக் கொள்ளே.

பிள்ளைக்குத் தக்க எண்ணெய் தானது புகட்ட இந்தப்
பிள்ளைத்தாய் தனக்கே உப்புக் கைப்புடன் தவிர்த்திட் டாக்கால்
தெள்ளிய திட்டு மாந்தம் சீரிய சுழிக ணந்தான்
நள்ளிரு வாயுட் காய்ச்சல் நளிர்மாந்தம் புரளி போமே.

(பொ-ரை.)—(1) ஊற்றின ஆமணக்கு நெய் நாழி ஒன்று, (2) தகரைச் சாறு நாழி ஒன்று, ஒன்றுசேர்த்து அதில் (3) நாயுருவி வேர், (4) தைவேளை வேர், (5) நாய்வேளை வேர், (6) கொழிஞ்சி வேர், (7) மூக்குரட்டை வேர், வகைக்கு எலுமிச்சங்காயளவு அரைத்துக் கலக்கி, (8) வசம்பு, (9) ஓமம்,

(10) கத்தூரி மஞ்சள், (11) வாய் விளங்கம், வகைக்கு அரை பலம், (12) வெள்ளுள்ளி இரண்டு பலம், (13) கருஞ்சீரகம், (14) வெந்தயம், (15) கடுகு ரோகணி, வகைக்கு ஒரு பலம், எல்லாவற்றையும் நீர் விட்டரைத்துக் கலக்கிக் காய்ச்சி வடித்துக் குழந்தைக்குக் காலையில் மாத்திரம் மூன்று அல்லது ஐந்து நாள்வரை புகட்டிவர ஷெ நோய்கள் நீங்கும். (கசஅ)

## (26) உளமாந்தக் குறிகுணம்.

எண்சீர் விருத்தம்.

வஞ்சியே கருவாலே யறிந்து பாராய்
　　வண்மையுடன் வாயுவந்து குடலேப் பற்றி
மிஞ்சியே மலஞ்சிக்கிக் கருகி யேதான்
　　மிகுந்தசல மலம்இரண்டுங் கட்டிக் கொண்டங்
கஞ்சியே அலறிஅழும் தேம்பித் தேம்பி
　　அன்னையை மிகுதிபெறத் தேடு மெத்த
ஒஞ்சிப்பா லுண்ணுது மருண்டு பார்க்கும்
　　உளமாந்தக் குணமிதென் றுணர்ந்து கொள்ளே.

(பொ-ரை.)—வாயுவானது மிகுந்து குடலேப்பற்றிக் கொண்டு மலத்தைச் சிக்கிக் கருகச் செய்யும். சில காலத்தில் மலம், சலம் இரண்டும் கட்டிக் கொள்ளும்படிச் செய்யும், குழந்தை அலறித்தேம்பித் தேம்பி அழும், அன்னையைத் தேடியும் அழும், முலேயுண்ணுது, மருண்டு மருண்டு பார்க்கும், இவைகளே உளமாந்தத்தின் குறிகுணங்களாம். (கசக)

பூநாக எண்ணெய்.

எண்சீர் விருத்தம்.

கொள்ளவே வியாதியென்ருல் கொஞ்ச மல்ல
　　கொடுங்கார மேற்றுதற்கு வகையைக் கேளாய்
விள்ளவே நிலவேருஞ் சிவயோகி வாளம்
　　விரைவான நிம்பவேர் உள்ளி காயம்
கள்ளவே ஒன்றுக்குக் கழஞ்சு சேர்த்துக்
　　கருத்துறவே யெண்ணெய்அரைப் படியில் வெந்திங்
குள்ளதொரு காசெடையாய் உள்ளே வாரு
　　ஒருமித்திங் குளமாந்தம் ஓடிப் போமே.

(பொ-ரை.)—(1) பூநாகம், (2) வசம்பு, (3) வாளம், (4) வேப்பம் வேர், (5) பூண்டு, (6) பெருங்காயம், வகைக் கொரு கழஞ்சு எடுத்து இடித்து, வெந்நீர் விட்டரைத்து, விளக்கெண்ணெய் படி அரையில் கூட்டி பக்குவமாக எரித்து, நாள் ஒன்றுக்குக் காசெடை வீதம் காலையில் மாத்திரம் மூன்று அல்லது ஐந்து நாள் உள்ளுக்குக் கொடுக்க, உளமாந்தம் தீரும். (உ00)

சிறுநாகப்பூ எண்ணெய்.

அம்போதரங்கம்.

உளமாந் தெண்ணெய்
தளசிறு நாகம்
வளபெரு மருந்து
நளின மருந்தே.

எண்சீர் விருத்தம்.

மருந்தான வசம்புசீ ரகமி ரண்டும்
மானேநா ரத்தம்வேர் பூண்டு காயம்
விருந்தான திவைவகைக்குப் பலங்கால் வீதம்
வீண்போகத் தக்காளிச் சாறிட் டாட்டிக்
குருந்தான எண்ணெய்சே ரதிற்க லக்கிக்
குருவைய வணித்தியமும் போற்றிப் போற்றித்
திருந்தான வடுப்பேற்றிக் காய்ச்சிக் கொண்டு
திறமையாய்க் கரண்டிநிறை மூன்று நாளே.

நேரிசை வெண்பா.

மூன்றுநாள் வார்த்திடவே மூரி யூளைமாந்தம்
ஊன்றி முறிந்தோடும் உண்மையே—மூன்றுநாள்
பத்தியந்தான் உப்புபுளி பாவையே யாகாவாம்
இத்தலத்திற் காணு மிது.

(பொ-ரை.)—(1) சிறு நாகப்பூ, (2) ஈசுரமூலி, (3) வசம்பு, (4) சீரகம், (5) கருஞ்சீரகம், (6) நாரத்தம் வேர், (7) பூண்டு, (8) பெருங்காயம், இவை வகைக்குக் கால் பலம் வீதம் எடுத்து மணித்தக்காளிச் சாறு விட்டரைத்து, ஆமணக்கெண்ணெய் சேர் ஒன்றை ஒரு மட்பாண்டத்தில் ஊற்றி, அதில் மேற்படி அரைத்த மருந்தைக் கூட்டிப் பக்குவமாய்க் காய்ச்சி, மூன்று நாள் காலையில் மாத்திரம் ஒரு உச்சிக் கரண்டி வீதம் கொடுக்கவும். உப்பு, புளி, கட்டாயமாய் நீக்கி பத்தியம் இருக்க, ஊளை மாந்தம் நீங்கும். (உ0௧)

வேறு.

சங்கம்வேர்க் குடிநீர்.

எண்சீர் விருத்தம்.

சங்கம்வேர் கொடிவேலி ஆடா தோடை
தண்கொன்றை வேர்இந்துப் புடனே காயம்
புங்கினுட பட்டைஇரு நாழித் தண்ணீர்
புகழ்பெறவே வார்த்துழக்காய்க் காய்ச்சிக் கொண்டு
துங்கமிகு குழந்தைகட்குக் கொடுக்க வேதான்
தொடர்ந்துநின்ற ஊளைமாந்தந் தீருந் தீரும்
பங்கயப்பூ வானன்வேல் விழிப ருத்துப்
பணைத்துயர்ந் திறுகுதனப் பாவாய் செய்யே.

(பொ-ரை.)—(1) சங்கம்வேர், (2) கொடிவேலிவேர், (3) ஆடாதோடை வேர், (4) கொன்றைவேர், (5) இந்துப்பு, (6) காயம், (7) புங்கம்பட்டை இவைகள் வகைக்குப் பலம் கால் இடித்து ஒரு படி நீர்விட்டு, எட்டொன்றாய்க் காய்ச்சி வடித்துக் குழந்தைகட்குக் காலை மாலை இரு வேளையும் மூன்று அல்லது ஐந்து நாள் கொடுக்க, ஊளைமாந்தம் தீரும். (உ0உ)

குருவிச்சி எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

குருவிச் சிலையுங் கருப்புட்டி கூட வேயரைத் தெண்ணெயிலே
மருவிக் குழப்பி விழுங்கவூளை மாந்த முட்சுர மெலும்புருக்கி
உருவித் தீரும் சொன்னபடி யுண்மை யிதுதான் கண்டாயே
கருவி நிகரள கத்தாளே கால காலனடிபணியே.

(பொ-ரை).—(1) ஆலமரத்துப்புல்லுருவி கால் வராகனெடை, (2) பனை வெல்லமும் கால் வராகனெடை ஆகிய இரண்டையும் கூட்டி அரைத்துக் கரண்டி எண்ணெயிலே கலந்து, காலையில் மாத்திரம் மூன்று நாள் கொடுக்க ஊளைமாந்தம், உட்சுரம், எலும்புருக்கி இவை தீரும். (உ0ங)

(27) அக்கர மாந்தக் குறிகுணம்.

எண்சீர் விருத்தம்.

நாடுமே அத்தியிலே சூடு கொண்டு
நல்லுடம்பு குளிர்ந்துசுரங் காயும் ஒயும்
ஓடியதோர் சுவாசத்தில் அனல்பு டைக்கும்
உதடுகளும் வெடித்துவாய்ப் புண்ணும் நெஞ்சு
தேடிஅன்னை அழுமப்பால் துயர மெத்தத்
தேம்பிவாய் திறப்பதற்கு அருமை யாகி
வாடுமே சிறுவனுக்குத் தேக மெல்லாம்
வழும்புடனே பேதியக்ர மாந்த மென்னே.

(பொ-ரை.)—குழந்தைகட்கு அத்தியில் சூடு உண்டாகும், உடம்பு குளிரும், சுரங்காயும், உடம்பு ஓய்ச்சலாக விருக்கும், சுவாசத்தில் அனல் வீசும், உதடுகள் வெடித்து வாயில்புண் உண்டாகும், நெஞ்சு உலரும், குழந்தை அன்னையைத் தேடி அழும். வாய்திறக்கவொட்டாது. குழகுழ வென்று பேதியாகும்; இவைகள் அக்கரமாந்தக் குறிகுணங்களாம். (உ0ச)

மணித்தக்காளி எண்ணெய்.

எண்சீர் விருத்தம்.

மாந்தையது களரிமுனி குமரிச் சார்சேர்
வாங்குவது எண்ணெய்சேர் உள்ளிச் சாறும்
சேர்ந்தகாரை பூலா துத்தி வேர்த்தோல்
செயமெழுகு போல்அரைப்பாய் பலம தாக
வாய்ந்ததொரு வெந்தயமும் பலம தாக
வறுத்திடித்து ஏகமாய்க் கலக்கிக் கொண்டு
சாந்தமாய்த் தீயெரித்து மெழுக தாக்கிச்
சாதகமாய்ப் புண்வாயில் தடவி டாயே.

(பொ-ரை.) மணித்தக்காளிச்சாறு (2) அகத்திச்சாறு (3) கற்றாழைச்சாறு (4) விளக்கெண்ணெய் (5) உள்ளிச்சாறு வகைக்குச் சேர் ஒன்றாக ஒரு மட்பாண்டத்தில் ஒன்றுசேர்த்து, (6) காரைவேர்ப்பட்டை (7) பூலாவேர்ப் பட்டை (8) துத்திவேர்ப்பட்டை வகைக்குப் பலம் ஒன்று (9) வெந்தயம் வறுத்துப் பலம் ஒன்று, இச்சரக்குகளை நன்றாய்ப்பொடித்து மேற்படிச் சாற்றால் அரைத்துச் சேர்த்துப் பக்குவமாக எரித்து மெழுகு பதத்தில் வடித்து, வாயில் புண்ணுள்ளவிடத்தில் தடவி வரப் புண்ணாறும். (உ0ரு)

(28) பேய்மாந்தக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

இடுப்புடன் கைகால் நெற்றி இம்முகம் விழியு மூக்குப்
பிடித்திடும் பிடரி தன்னைப் பின்னித்தாள் நரம்பைப் பற்றி
வடிப்புடன் வலிப்பி முப்பு வாயினால் நுரைநீர் வீழும்
படத்தகல் அல்கு லாளே பாருபேய் மாந்தந் தானே.

(பொ-ரை.)—இடுப்பு, கைகால், நெற்றி, முகம், கண், மூக்கு முதலிய இடங்களில் பிடிப்பு உண்டாகி வலிக்கும், பிடரியில் பின்னி வலிக்கும், தாள்நரம்பைப்பற்றி இழுக்கும், வாயிலிருந்து நுரைநீர் விழும்; இவைகள் பேய்மாந்தக் குறிகுணமென்று சொல்லப்படும்.

இதனை அடியிற்கண்ட மேற்கோளாலுமறிக—

கலிநிலைத் துறை.

அணங்கி டுப்புகை கால்துடை யானன மூக்கு
வணங்கு பின்பிடர் நரம்பிவை யெட்டிலும் வலிக்கும்
இணங்கும் வாய்நுரை மயக்கமும் பிதற்றல்கீ ழிழுத்தல்
கணங்கொள் பூதப்பேய் மாந்தமென் றுகந்துகண் டறியே. (உ0சு)

காட்டாத்திப்பூ சுரசம்.

கலிநிலைத் துறை.

கண்ட காட்டாத்திப் பூத்தும்பை விட்டுணு கரந்தை
விண்ட மேனியுத் தாமணி துளசிபேய் மருட்டி
கொண்ட சுக்குடன் சுரசமாய் கோமதங் கூட்டி
யுண்ட போதுபேய் மாந்தங்க ளகன்றிடு முதிர்ந்தே.

(பொ-ரை.)—(1) காட்டாத்திப்பூ, (2) தும்பையிலை, (3) விஷ்ணுகரந்தையிலை, (4) குப்பைமேனியிலை, (5) உத்தாமணியிலை, (6) துளசியிலை, (7) பேய்மருட்டியிலை, (8) சுக்கு, இவைகளில் காட்டாத்திப்பூ, சுக்கு தவிர மற்றவற்றை வகைக்கு ஒரு பிடியும், காட்டாத்திப்பூ, சுக்கு இரண்டும் வகைக்குக் கால் பலமும் எடுத்து எல்லாவற்றையும் ஒன்றுய்ச்சேர்த்து அரைத்துப் பிழிந்து வெதுப்பிய சாற்றில் ஒரு உச்சிக்கரண்டி எடுத்து, அதில் வேளைக்கு அரை குன்றி கோரோசனத்தை இழைத்துச்சேர்த்துக் காலைமாலை இருவேளையாக மூன்று நாள் கொடுக்கப் பேய்மாந்தம் தீரும். (உ0எ)

## (29) நீர்க்கணமாந்தக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

இருமு மூக்கில் நீர்வடியும் இடையில் இடையில் சுரங்காயும்
பொருமி வயிறு இரைச்சலுண்டாம் போதப் பலவித மாய்க்கழியும்
சொருகுங் கண்ணும் உடம்புமுகம் சோர்ந்து தலையும் புரட்டலுண்
[டாம்
மருவி மயக்கம் உண்டாகும் வருகு நீர்க்கண மாந்தமுமே.

(பொ-ரை.)—இருமல், மூக்கில் நீர் வடிதல், இடை இடையே விட்டுவிட்டுச் சுரம் காய்தல், வயிறு பொருமி இரைதல். பலவிதமாய்ப் பேதியாதல், கண் சொருகல், உடம்பு முகம் இவை சோருதல், தலைப்புரட்டல், மயக்கம் உண்டாதல் என்னும் இவைகள் நீர்மாந்தக் குறிகுணங்களாம். (உ0அ)

அமுதாதிக் குளிகை.

எண்சீர் விருத்தம்.

அருளினர் அமுர்தமெனும் குளிகை தானும்
அதிமதுரம் சண்பகப்பூ ஏல மோடு
திருவுகோ ரோசனையுஞ் சாத்திர பேதி
சிறந்தவெட்டி வேர்கோட்ட மாசிப் பச்சை

த்ருவெனவே விலாமிச்சம் வேருங் கூட்டிச்
சரியாக ஆதொண்டைச் சாறு விட்டுப்
பருவமதாய் ஒருசாம மரைத்துக் குன்றிப்
பருமனுய் முலேப்பாலில் பருகி டீரே.

பருகிடில்லூர் உண்டைதனே முலேப்பால் தன்னில்
பகைத்துவருங் கணமாந்தம் எட்டுந் தீரும்
திருகுகுடல் படுவன்நீர்ப் பாடுந் தீரும்
சேர்கர்ப்பப் பாடுநா வரட்சி தீரும்
குருவெனவே இக்குளிகை சுரமுந் தீரும்
குலேயெரிவு வெப்புமுதல் தோஷந் தீரும்
அருளெனவே முனியுரைத்தார் பாரின் மீதே
அமுர்தாதிக் குளிகைதனே அரைத்தி டாயே.

(பொ-ரை.)—(1) அதிமதுரம், (2) சண்பகப்பூ, (3) ஏலம், (4) கோரோசனம், (5) சாத்திரபேதி, (6) வெட்டிவேர், (7) கோட்டம், (8) மாசிப்பத்திரி, (9) விலாமிச்சம்வேர், இவைகளேச் சரியெடை எடுத்து ஆதொண்டைச்சாறு விட்டு ஒரு சாமமரைத்துக் குன்றியளவாக மாத்திரைசெய்து, வேளேக்கு ஒரு மாத்திரையாக மூன்று நாள் முலேப்பாலில் இழைத்துக் கொடுக்க, நீர்க்கண மாந்த முதல் எண்வகைக் கண மாந்தம், குடற்படுவன், நீர்ப்பாடு, கர்ப்பப் பாடு, நாவரட்சி, சுரம், குலேயெரிவு, தோஷம் ஆகிய இவை நீங்கும். (௨0௧)

## (30) தோடமாந்தக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

செய்ய கண்கள் மிகச்சொருகும் சீதந் தண்ணீ ராய்க்கழியும்
மைய மேனி கறுப்பாகும் மாங்காய் போல ஆசனமாம்
வையந் தேக மிகவிளேக்கும் வானம் போலே வயிருகும்
செய்ய தோட மிதுதானே தீரா தென்று தானுரையே.

சேயி னுடம்பு மிகநாறும் செல்லா முலேப்பா லருவருக்கும்
காயு முடம்பு கண்குழியும் கண்டா லிதுதா னறியாயே.

*  *  *  *

(பொ-ரை.)—குழந்தையின் கண்கள் மிகச்சொருகுதல், சீதமாய்க் கழிதல், ஒரு வேளே தண்ணீராய்க் கழிதல், உடல்கறுத்தல், மலவாய் மாங்காய் போல் வெளிப்படல், உடல் மிக இளேத்தல், வயிறு வானம்போற் பெருகல், குழந்தை உடம்பு மிகநாறுதல், முலேப்பால் குடியாமை, குடித்தாலும் அருவருத்தல், உடம்பு காய்தல், கண்குழிவிழுதல், என்னும் இவைகள் தோடமாந்தக் குறிகளாம். இது தீராதென்று அறிவாய். (௨௧0)

தோடமாந்தத்துக்கு முருங்கை நெய்.

கலி விருத்தம்.

அன்ன மேமுருங் கைப்பட்டை யத்துடன்
மின்ன மேவெண் கருவும்வெள் ளுள்ளியும்
இன்ன மும்வேம்பி னெய்யிவை நாலுடன்
சன்ன மேசெய்து தைலமி றக்கிடே.

இறக்கி டுந்தயி லம்மிதிற் குத்தியே
உறக்கி டுங்கண்ணி லிட்டுற நாவினில்
துறக்கி டுந்தட வத்தோட மாந்தமும்
மிறக்கி டும்மிது மெய்ம்முறை கண்டிடே.

(பொ-ரை.)—முருங்கைப்பட்டைத்தூள் பலம் ஒன்று, வெண்கரு இரண்டு, வெள்ளைப்பூண்டு பலம் ஒன்று, இவைகளை ஐந்து பலம் வேப்பெண்ணெயி லிட்டு அடுப்பேற்றித் தயில பக்குவத்திற் காய்ச்சி வைத்துக்கொண்டு, அத் தயிலத்திற் கொஞ்சம் கண்களிலுமிட்டு, காலைமாலை இருவேளையாக மூன்று நாள் நாவினிலுந்தடவினுல், தோடமாந்தம் தீரும். இது உண்மையான முறையாம். ஆகையால், மருத்துவரான நீர் இத்தயிலத்தை மாந்த நோ யின் மேல் ஆண்டு அதன் செயலை அறிந்துகொள்வாய். (உகக)

மாந்ததோடத்துக்கு—வெங்காயச்சாறு.

நேரிசை வெண்பா.

ஈரவெங் காய மெழுமுடக்கொத் தானிலையும்
பேர வெதுப்பிப் பிழிந்திட்டுச்—சேரவே
மூன்றுகா சூட்ட முனைமாந்த தோடமஃ
தூன்றுதலில் லாமலோ டும்.

(பொ-ரை.)—வெள்ளை வெங்காயம், முடக்கொத்தானிலை என்னும் இர ண்டையும் தனித்தனியாக வெதுப்பிச் சாறு பிழிந்து, ஒரே அளவாய்க் கலந்து, ஒரு வேளைக்கு மூன்று காசெடையளவு குழந்தைக்குக் கொடுத் தால், மாந்ததோடம் குழந்தையைப் பீடித்து வருத்தாமல், உடனே நீங்கிப் போய்விடும். (உகஉ)

## (31) கர்ப்பமாந்தக் குறிகுணம்.

நேரிசை யாசிரியப்பா.

கர்ப்ப மாந்த நுட்பங் கேளாய்
கர்ப்ப வண்ணைக் கவள வுண்டி
மிகினே மந்த மகடார் பிள்ளைக்
கிகலி மாந்த மெய்து மென்பர்

அதுவே ;

தாய்ச்சூ லிற்புது தானியக் கொழியல்
ஆய்வர கரிசி யளவின் றுண்ணின்
பிறக்கும் பிள்ளை பேரழ லுண்டாய்ச்
சுரக்கும் வாயு தோன்று மதனுல்
உடலிற் பலநோ யுண்டாய் மிக்க
உடற்று மென்ன வோதின ராமால்
கருவில் வளியும் வன்னியுங் கலந்தங்
குறவா யுற்று லோத மேற்பட்
டந்நா டியுமே யதிகப் படினும்
மூலச் சூடு முடுகி யிருப்பினும்
காலப் புணர்ச்சி மேலு மிகினும்
தோன்றுங் குழவிக் கான்ற வலியும்

தோன்றி நாடி தோன்றுப் பாம்பின்
இரைச்சல் போலு மியலோந் தித்தலை
தரையிற் றூக்கல் போலவுஞ் சார்ந்து
பிள்ளை வாயிற் பெரும்புண் ணாகி
மெள்ள வுடல மிகவே யிளைக்கும்
இவ்வா றிருந்தே யிரண்டாண் டகன்றால்
ஒவ்வா வரையி லொருகட் டியதாய்
நெரித்துக் கட்டி நெஞ்சம் வருந்த
எரிந்தெப் போது மிடைவிடாக் காய்ந்து
வீங்கி யுடலம் வெளுத்த பின்னர்
மும்மதி சென்றால் முன்னஞ் சுணல்போல்
அம்மகை கால்க ளாழ்ந்த புண்ணாய்
வன்றலை சுற்றி வாய்நீர் வரண்டு
நெஞ்சினிற் காரல் நேர்தலை நடுக்காம்
மூவாண் டின்மேல் மொழிந்த நாடி
ஓவா தயர்ந்தே யுடல்பாய் படுக்கை
யாகக் கிடக்கு மக்கா லத்தில்
மாந்தும் பாலும் வாந்தி யாகும்
சார்ந்த வயிறு நேர்ந்த நோவோ
டிரைத லாகு மியல்வாந் தியிலும்
அரைமஞ் சள்போ லாங்கொடி வீழும்
கண்க டேனிறம் காட்டு முடலம்
தேவாங் கைப்போற் றேயும் பார்த்தோர்
ஓவா தறைவர் பட்சி
ஆகா தோட மென்றறி குவையால்.

(பொ-ரை.)—கர்ப்ப மாந்தத்தை யறியவேண்டிய நுட்பமான வழியைச் சொல்லக் கேட்பாயாக. சூலாயிருக்கின்ற தாயானவள் உண்ணும் உண்டி மிக்க மந்தமுள்ளதானால், அக்கருப்பையிலுள்ள குழந்தைக்கு அது பொருந்தாததாய் மாந்த மென்னு நோய் உண்டாகுமென்று சொல்லுவார்கள். அது :

1. தாய் சூலாயிருக்கும்பொழுது புது தானியக் கொழியலரிசி, வரகரிசி இவற்றை அளவில்லாமல் உண்டால், பிறக்கும் பிள்ளைக்கு மிக்க அழலுண்டாய், அதனால் வாயு மிகுதிப்படும். அதனால், அக்குழவியின் உடலிற் பல நோய்களுண்டாய் மிகவும் வருத்தும் என்று கூறுவர்.

2. தாய் சூலாயிருக்கும்பொழுது வாயுவும், வன்னியுங்கலந்து மிகுந்திருந்து அதனால் ஐயம் ஏற்பட்டு அந்நாடியும் மிகுந்திருந்தாலும், மூலச்சூடு மிகுந்திருந்தாலும், இயற்கைப் புணர்ச்சி அளவுக்கு மீறினாலும், பிறந்த குழந்தைக்கு வாயு மிகுந்தாலும், அதனால் அந்நாடியானது நாகத்தின் இரைச்சல் போலவும், ஒன்றன்தலை தூக்கல் போலவும் ஏற்பட்டுக் காணப்படின், பிள்ளையின் வாயில் அளவற்ற புண்ணுண்டாய் உடல் மிகவுமிளைத்து விடும். இப்படி யிரண்டாண்டிருந்து பின்னர், குழந்தையின் அரையில் ஒரு கட்டியாய் நெரிகட்டி மனம் மிகவும் கவலைப்படும்படியாய் உடலமெல்லா மெரிந்து இடைவிடாதபடி காய்ச்சலுண்டாய், உடலும் வீங்கி வெளுத்த பிறகு மூன்று திங்கள் சென்றால் நஞ்சுண்டாற்போல் விடமுண்டாய்க் கைகால்களில் ஆழமான புண்கள் உண்டாகித் தலைசுற்றி, வாயில் நீர் வரண்டு

நெஞ்சில் ஒரு வகையான காரல் உண்டாய்த் தலை நடுக்கலுமுண்டாகும். இக்குழந்தைக்கு மூன்றுண்டின்மேல் நாடியானது நன்றாய்த் துடியாமல் அயர்ந்து, உடலானது பாயும் படுக்கையுமாகக் கிடக்கும். அக்காலத்தில், குடிக்கும் பால் முழுமையும் மஞ்சளாகவும் கொடிக் கொடியாகவும் வாந்தி யாகும். மேலும் வயிறு நோய், வயிறு இரைதல், கண்கள் தேனிறமாதல், உடலம் தேவாங்கைப்போல் இளைத்தல் என்னும் இவைகளுமுண்டாகும். இதனைக் கண்டோர் பட்சி தோஷமென்று சொல்லுவார்கள். இதனை, நீ நன்றாய் அறிவாய். இதனை

## கர்ப்ப மாந்தம்.

### அறுசீர் விருத்தம்.

மொழிகிறேன் கர்ப்ப மாந்தக் குறிதனை முயலக் கேளாய்
பொழிகிறேன் பெண்ணால் தானும் புதுவர கரிசிக் கொழியல்
விழிகிறேன் மிதமற் றேதான் விளம்பர முண்ட தாலே
கழியிளங் கருவுக் கேதான் கனலதாற் சூடுண் டாமே.

சூடதால் வாத வாயு தோன்றிடுங் குணத்தைக் கேளாய்
பாடதாற் கருவிற் பற்றிப் பலபல நோய்தான் காணும்
வாடலோ டுறுத்தி வாயு வன்னியுங் கூடச் சேர்ந்து
தேடவே பிறந்த பிள்ளைத் தேகத்தி னுலையைப் பாரே.

தேகத்தின் மேலே நோய்தான் சிலேத்தும நாடி தானும்
ஆகத்தின் மூலச் சூடு மருகியே மிகுத்த தானால்
போகத்தாற் புணர்ச்சி செய்த பொருட்டதாற் சிசுவுக் கேதான்
நாகத்தி னிரைச்சல் போல நடுக்கிடும் நாடி தானே.

நாடியில் வாத நாடி நடுக்குமே சர்ப்பம் போல
ஓடியே சரச ரென்றே யோந்தியைப் போலே பாய்ந்தால்
வாடிடும் பிள்ளைத் தேகம் வாயெல்லாம் புண்ணாய்ப் போகும்
பேடுவின் முலைப்பால் சுண்டிப் பிள்ளையு மிளைக்குந் தானே.

பிள்ளையும் பிறந்தி ரண்டே ழுண்டது சென்ற தானால்
கிள்ளையே யரையிற் கட்டிக் கிலேசமாய் வரட்சி காணும்
விள்ளவே தேக மெல்லாம் மிகுத்ததோர் கனலி னாலே
துள்ளவே பாலன் தானும் துடித்ததோர் வீக்க மாமே.

துடித்திடும் வெளுக்குந் தேகம் தொண்ணூறு நாட்சென் றக்கால்
கடித்ததோர் விடம்பட் டாற்போல் கைகால்கள் புண்ணாய்ப் போகும்
வடித்திடுஞ் சுழற்றல் வாய்நீர் வரண்டிடு மதன்பி னெஞ்சில்
தடித்திடுங் காரல் காணும் தலையது நடுக்கந் தானே.

நடுக்குமே மூன்றுண் டின்மேல் நாடியு மசதி காணும்
படுக்குமே பாயல் மீதே பாலது குடித்திட் டாலும்
எடுக்குமே வாந்தி யாகு மிரைச்சலும் வயிறு நோயாம்
குடிக்கிற சார மெல்லாம் குடங்கொண்டு பாயுந் தானே.

பாயுமே கறுக்கும் போது பசுமையாய்க் கொடிபோல் வீழும்
வாயுமே தவறிக் கண்கள் மதுவெனச் சிவந்து காணும்
தேயுமே தேவாங் கைப்போல் செகத்தினர் சொல்லு வார்கள்
நோயுமே பட்சி தோட மிதுவென வருளு வாரே

என்னும் பாலவாகடச் செய்யுளாலறிக. (௨௧௩)

## கர்ப்பமாந்தத்திற்கு—புன்கு நெய்.

### அறுசீர் விருத்தம்.

வாங்கிடு புன்கங் கொட்டை யதனுடன் பருப்பை வாங்கித்
தீங்கிலா ரவிநாள் மூன்று தினந்தின முலர்த்தித் தானும்
பாங்குட னெடுத்தி டிந்தப் பருப்பையு முரலிற் றக்கித்
தாங்கவே யிடித்து மாப்போல் தானதைப் பாண்டத் தூட்டே.

ஊட்டிடு தூணி நீரி லொருமையாய்ச் சொல்லக் கேளாய்
நாட்டினிற் கருட மூலி நன்னிலப் பனையு மத்தி
சாட்டிடு சங்கு சின்னி சாரணை குன்றி வெள்ளை
மாட்டிடு கண்டங் கா்ரி மாதுளை நிலவேம் பன்றே.

வேம்புடன் குப்பை மேனி வில்வவேர் கீழ்க்காய் நெல்லி
காம்பஃ தழிஞ்சி றுவல் கரிசலாங் கண்ணி துத்தி
ஆம்பஃ தாடா தோடை யல்லியுங் கொத்தான் சூரை
வேம்பது சிவனார் வேம்பு வெண்ணொச்சி துளசி வேரே.

வேருடன் வகையொன் றுக்கு விளங்கவே பலந்தான் கொண்டு
சீருடன் ரவியில் மூன்று நாள்களே யுலர்த்திச் சேர
நேருட னுரலிற் றக்கி நிலைபெற விடித்துத் தூளாய்க்
கூறுடன் தோண்டி வேறே குணமதாய் வடிதான் கட்டே.

கட்டிய மாவைக் கொண்டு கருதிடு முன்பு நீரில்
அட்டிசெய் யாதே பின்ன ரருளுவோ மூலிச் சாறு
தட்டிடு பிரமிச் சாறு தைவேளை யவிரி சூரி
ஒட்டிய தும்பை காட்ட கத்தியும் பொன்மு சுட்டை.

அகத்தியு மணித்தக் காளி யடைவுடன் வகைவ கைக்கு
துரத்திய சாற்றில் வீதம் துரிதமாய்ப் பலமி ரண்டாம்
சகத்திய மாக விந்தச் சாறதை நீரி லிட்டங்
ககத்திய மின்னஞ் சொல்வோ மகத்திய னுரைக்கக் கேளே.

உரைக்கவே கடுக்காய் கண்ட திப்பிலி செவ்விய முற்ற
விரைக்கவே மதுரங் கோட்டம் வெட்பாலை யரிசி கோலம்
நிரைக்கவே தேவ தாரம் நிகழ்பெறு மாஞ்சில் சிங்கி
தரைக்கவே சாதிக் காயும் தான்றியு மேல மாமே.

ஏலமும் புழுகு தானு மிருவிநா வியுமே யாகும்
வாலரோ சனையு மாகும் கத்தூரி பண்பாய் வீதம்
ஞாலமே வகைவ கைக்கு நளினமாம் வராகன் மூன்று
சாலவே வாங்கி நீயுஞ் சட்டியில் வறுத்துக் கொண்டே.

கொண்டுநீ யிடித்துத் தூளாய்க் கொட்டிடு முன்ச லத்தில்
நன்றுநீ சொல்லக் கேளாய் நவிலுவோங் கடைச்ச ரக்கு
வண்டது வாளம் வீரம் மஞ்சளுங் கந்தி சூதம்
துண்டது பூரம் சாதி லிங்கங்கர்ப் பூர மாமே.

பூரமு முதலாய் வாங்கிப் புகலக்கேள் வகைவ கைக்குத்
தீரவே வராக னுலு திருத்தமாய்த் தூளாய்ச் செய்து
கூறவே முன்ச லத்திற் கொட்டியே பின்பு கேளாய்
ஆரப்பே ராம ணக்கி னவ்வெண்ணெய்ப் படிரண் டாமே.

படியஃ திரண்ட தாகும் பாங்குட னீரில் தாக்கி
வடிபெற மூன்று நாளும் வன்னியாம் ரவியில் வைத்துக்
கடிபெற வடுப்பி லேற்றிக் கமலாக்கினி மூன்று சாமம்
துடிபெறக் கொதிக்கக் காய்ச்சிச் சுண்டியே படிரண் டாமே.

இரண்டதாம் பாக மாகு லிறக்கியே யாற வைத்துக்
கண்டுநீ வடிதான் கட்டிக் கலசத்தி லதனைத் தாக்கி
நன்றதாய்க் கமலம் வைத்து நாயகி பூசை செய்தே
என்றிடு நோய்த னக்கே யெண்ணெயைக் கொடுத்துப் பாரே.

கொடுக்கிற விதமே தென்றால் குழந்தைகட் கதிகா லத்தில்
நடுக்கிற எண்ணெய் தன்னில் நாலது கழஞ்சு வாங்கித்
துடுக்குட னவநா ளுந்தான் துலங்கவே கொடுத்து நீயும்
வெடுக்கென வதீத பத்யம் விளங்கிடுங் குணத்தைக் கேளே.

குணங்குறி குழந்தை பெற்ற தாய்தனக் கென்ன பத்தியம்
மணங்கமழ் பீர்க்கங் காயும் வறுத்ததோ ருப்பு மாகும்
புணங்கலாம் வெந்நீ ராகும் போசனம் மாற லாகா
விணங்கவே லவங்கப் பூவு மிளகுடன் காரங் கூட்டே.

கூட்டலா மிருபோ தன்னம் கொள்ளுட னகத்திக் கீரை
நாட்டவே புகையும் போகம் நவையுறும் புளியு மாகா
தேட்டமாம் பெண்ணு டன்னைத் தெளிவுறப் பத்தியஞ் சொல்லு
வீட்டைவிட் டுழல வேண்டாம் மிகுத்தநோய் சிதறிப் போமே.

போகுமே யெண்ணெ யுண்டு பின்புமே நவநா டன்னில்
ஆகுமே தேக வஜ்ரம் அதீதமாம் பொன்போ லாகும்
நாடுமே பத்திய மாறி நாளது சென்ற தானல்
வேகமே நீங்கிப் போகும் விளங்கொளி சடல மாமே.

(பொ-ரை.)—புன்கங்கொட்டையை உடைத்து உள்ளிருக்கும் பருப்பை எடுத்து ஞாயிற்றுக்கிழமை முதல் மூன்று நாள் வெய்யலில் உலர்த்திப் பிறகு நன்ருயிடித்து மாவைப் போலாக்கி, ஒரு மண் குடத்திற்போட்டு ஒரு தூணி நீர்விட்டு ஊறவைத்து, அதில் ஆகாசகருடன் கிழங்கு, நிலப்பனங்கிழங்கு, அத்திப்பட்டை, சங்கம்பட்டை, சிறுசின்னிப்பட்டை, சாரணைவேர், வெள்ளைக் குன்றிமணிவேர், கண்டங்கத்தரிவேர், மாதுளைவேர், நிலவேம்பு, குப்பை மேனி, வில்வவேர், கீழ்க்காய்நெல்லி, அழிஞ்சிற்பட்டை, நாவற்பட்டை, கரிசலாங்கண்ணி, துத்திவேர், ஆடாதோடைவேர், அல்லிக்கொடி, கொத்தான் கொடி, சூரைவேர்ப்பட்டை, வேப்பமரப்பட்டை, சிவனார்வேம்பு, வெண்நொச்சி வேர், துளசிவேர் வகை ஒன்றுக்குப் பலம் எடுத்து வெய்யிலில் மூன்று நாள் உலர்த்தி இடித்துத் தூள்பண்ணி, வேறுகுடத்தில் தூணியில் வடிகட்டி அத்தூளை முன் புன்கங்கொட்டைத்தூள் போட்டு வைத்திருக்கும் குட நீரிலேயே போட்டு, அத்துடன் பிரமிச்சாறு, தைவேளைச்சாறு, அவுரிச்சாறு, சூரிச்சாறு, தும்பைச்சாறு, காட்டகத்திச்சாறு, பொன்முசுட்டைச்சாறு, அகத்திச்சாறு, மணித்தக்காளிச்சாறு என்னும் இவைகள் வகை ஒன்றுக்கு இரண்டு பலம் சாறுவிட்டு, கடுக்காய்த்தோல், திப்பிலிக்கட்டை, செவ்வியம், அதிமதுரம், கோட்டம், வெட்பாலையரிசி, தக்கோலப்பொட்டு, தேவதாரச்சக்கை, சடாமாஞ்சில், கடுக்காய்ப்பூ, சாதிக்காய், தான்றிக்காய்த்தோல், ஏலரிசி, புழுகு, இருவி, நாபி, கோரோசனம், கத்தூரி என்னும் இவைகள் வகை ஒன்றுக்கு மூன்று வராகனெடை எடுத்து வறுக்கக் கூடியதை வறுத்துத் தூள்செய்து முன்

நீரிற் கொட்டிப் பின்னர், வாளம், வீரம், மஞ்சள், கந்தகம், சூதம், பூரம், சாதிலிங்கம், பச்சைக்கர்ப்பூரம், என்னும் இவைகள் வகைக்கு நான்கு வராகனெடை எடுத்துத் தூள்செய்து, முன் தண்ணீரிற் கொட்டி, அத்துடன் ஆமணக்கு நெய் இரண்டுபடிவிட்டுச் சட்டி வாயில் மெல்லிய துணி சுற்றி, மூன்று நாள் வெய்யலில் வைத்து, நான்காவது நாள் அடுப்பேற்றி மூன்று சாமம் கமலாக்கினியாக எரித்து, கடுகு திரண்ட பக்குவத்தில் வடி கட்டிக் கடவுளை எண்ணிக் குழந்தைகளுக்கு அதிகாலையில் அரைப் பலம் எண்ணெய் வீதம் ஒன்பது நாள் கொடுத்துத் தாய்க்குப் பீர்க்கங்காய், வறுத்தவுப்பு, வெந்நீர், இலவங்கம், மிளகு இவைகூட்டி இருபோதும், சோறுண்ணும் பத்தியம் வைக்கவும். கொள், அகத்திக்கீரை, புகை, போகம், புளி இவைகள் ஆகா. இப்படியிருந்தால் பின் ஒன்பது நாட்களில் உடல் வச்சிரம் போலிறுகும். பொன்போல் ஒளியுண்டாம். (உ௧௪)

## கழிமாந்தக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

வாந்தி பிராந்தி மூர்ச்சையதாய் வாயுங் குரலுஞ் சீரணித்துக்
காய்ந்து மேனி வெதுவெதுப்பாய்க் கைகால் குளிர்ந்து வலியுண்டாம்.
சேர்ந்து கழியு மலந்தானும் சீர்கெட் டிருக்கும் பலவிதமாய்ப்
போந்த மாந்தக் கழிச்சலிது பொல்லா தெனவே புகன்றனரே.

(பொ-ரை.)—வாந்தி, மயக்கம், மூர்ச்சை, வாய்ஓய்வு, குரல் தாழ்வு, சுரமடித்தல், எப்போதும் உடல் சூடாகவேயிருத்தல், கைகால்கள் சில்லிடல், கைகால்கள் நோதல், சேர்ந்து சேர்ந்து மலங்கழிதல், குழந்தை பலவகையாய்ச் சீர் குலைந்திருத்தல் என்னும் இவைகள் கழிமாந்தக் குறிகளாம். (உ௧௫)

வேளைப்பச்சிலைச்சாறு.

அறுசீர் விருத்தம்.

நல்ல வேளை நாய்வேளை நாறும் வேலிப் பருத்தியுடன்
சொல்லுங் குப்பை மேனியிலை துதிக்கு மகத்திப் பழுப்புடனே
வெல்லும் வசம்பு வெள்ளுள்ளி வேண்டும் படியே நீவாங்கி
உள்ளுங் கொடுத்துத் துவாலையிட வோடுங் கழிமாந் தந்தானே.

(பொ-ரை.)—(1) நல்வேளையிலை, (2) நாய்வேளையிலை, (3) வேலிப் பருத்தியிலை, (4) குப்பைமேனியிலை, (5) அகத்திப்பழுப்பு இவ்வைந்தும் வகைக்கு ஒரு பிடியும், வசம்பு, வெள்ளைப்பூண்டு வகைக்கு வராகனெடை ஒன்று, எல்லாவற்றையும் ஒன்றாய்ச் சேர்த்திடித்துச் சாறு வாங்கிக் குழந்தைக்குக் காலை மாலை இரு வேளையாக மூன்று நாள் உச்சிக்கரண்டியளவு உள்ளுக்குக் கொடுத்து மேலுக்கும் பூசக் கழிமாந்தம் தீரும். (உ௧௬)

மாந்தம், கட்டு மாந்தம், கழி மாந்தம், வலி மாந்தத்திற்கு
முக்கடுகாதி மாத்திரை.

அறுசீர் விருத்தம்.

திரிகடு கோம முள்ளி சீர்பெருங் காய மற்ற
கரியசீ ரகம்வ கைக்குக் கணக்கது வராக னொ
மரியதோர் வசம்பு மூன்று மரிதகி பதினைந் தாகும்
புரியசா ரணைவே ரைந்து பொடுதலைக் கொழுந்து மாமே.

ஆம்பெருந் தும்பை யின்துளிர் அந்நிறை வேலிப் பத்திரம்
ஓம்பெறத் தான்வெ துப்பி ஒன்ருக வேயி டித்துத்
தாம்பெருந் தும்பைச் சாற்றில் தனிப்பொடு தலையின் சாற்றில்
காம்பட வரைத்துச் சுண்டைக் காயள வுண்டை செய்யே.

செய்ததோர் குளிகை தன்னைத் திகழ்நிழ லுலர்த்திக் கொண்டு
வையக பாலர் தங்கள் வளர்பரு வத்தைப் பார்த்துக்
கொய்யகா லரைமுக் காலோர் குளிகைவெந் நீரி லீய
மைமாந்தங் கட்டு மாந்தம் கழிச்சலும் வலிப்பும் போமே.

(பொ-ரை.)—தோல் சீவின சுக்கு, மிளகு, திப்பிலி, ஓமம், வெள்ளைப் பூண்டு, பெருங்காயம், கருஞ்சீரகம், ஆகிய ஏழு சரக்குகளும் வகைஒன்றுக்கு நான்கு வராகனெடை, வசம்பு, மூன்று வராகனெடை, கடுக்காய்த் தோல் பதினைந்து வராகனெடை, சத்திச் சாட்டரணை வேர் ஐந்து வராக னெடை, பொடுதலைக் கொழுந்து, பெருந்தும்பைத் துளிர், வேலிப் பருத்தி யிலை ஆகிய இவைகள் மூன்றும் வகைக்கு ஐந்து வராகனெடை ஆக, நிறுத் தெடுத்து இவைகளில் கடைச் சரக்குகளை இளவறுப்பாய் வறுத்து மற்றவை களைக் கூடச் சேர்த்து பெருந்தும்பைச் சாற்றினாலும், பொடுதலையின் சாற்றி னாலும் அரைத்துச் சுண்டைக் காயளவு உருண்டை செய்யவேண்டும். அப்படி செய்த மாத்திரையில் குழந்தையின் பருவவிகற்பங்களையும் நோய்வன்மை மென்மைகளையும் அறிந்து வேளைக்கு கால், அரை, முக்கால், முழு மாத் திரைகளாக வெந்நீரில் உரைத்து மூன்று நாள் கொடுக்க வேண்டும்.

அப்படி கொடுத்தால் மாந்தம், கட்டு மாந்தம், கழி மாந்தம், வலி மாந்தம் என்னும் இவைகள் தீரும். (உகஎ)

## கல்மாந்தக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

நாடு சுரமு மிகவடித்து மெய்யும் வெளுத்து நாவுலர்ந்து
நீடுகால் குளிர்ந்துங் கையான் முகத்தினை நெருடி யேதான்
வாடும்பற் பலகு ணங்க ளாக்கழிந் துடல்வ டிந்து
கூடு மாஞ்சிர வேர்வை கல்மாந் தத்தின் குறியே.

(பொ-ரை.)—சுரமடிக்கும், மெய் வெளுக்கும், நாவுலரும், கால் குளிர்ந் திருக்கும், கையால் முகத்தை நெருடும், வாடும் பற்பல விதமாய்க் கழியும், உடல் வடிந்து சிரம் வேர்க்கும். இவை கல்மாந்தக் குறி குணங்களாம்.

இதனை அடியிற்கண்ட மேற்கோளானு மறிக :—

கலிநிலைத் துறை.

நாடி யேசுர மடித்துமெய் வெளுத்துநா வுலர்ந்து
நீடுகால் குளிர்ந்து கையான் முகத்தினை நெருடி
வாடும்பற் பலகு ணங்க ளாய்க்கழிந் துடல்வடிந்து
கூடு மாஞ்சிர வேர்வைகல் மாந்தத்தின் குறியே. (உகஅ)

## திப்பிலி எண்ணெய்.

### கலிநிலைத் துறை.

குறிகொள் திப்பிலி வசம்புள்ளி கூட்டுபேய் மருட்டி
நறுநி லாவரை கடுகுரோ கணியுநா யுருவி
வெறிகொணிம் பத்தினெய் விட்டெரித் தாமைபற் பத்தை
மறிவ தாயிடப் பறக்குங்கல் மாந்தமா நோயே.

(பொ-ரை.)—(1) திப்பிலி, (2) வசம்பு, (3) பூண்டு, (4) பேய் மருட்டி, (5) நிலாவாரை, (6) கடுகுரோகணி, (7) நாயுருவி இவைகள் வகைக்கு கால் பலம் (8) வேப்பெண்ணெய் பலம் பத்து, இவைகளில் வேப்பெண்ணெய் தவிர, மற்றவற்றையெல்லாம் இடித்துத் துணியில் வடிகட்டி அத்தூளையும் எண்ணெயையும் ஒரு மண் சட்டியிலிட்டுப் பக்குவமாக எரித்து வடித்துக் காலையில் மட்டும் ஒரு துட்டெடை எண்ணெயில் அரை குன்றி ஆமை யோட்டுப் பற்பம்கூட்டி மூன்று நாள் கொடுக்கக் கல்மாந்தம் தீரும். (உகக)

---

# 4. கணம்

கணம் என்றால் கர்ப்பச் சூடு என்பது பொருள். இது பாலுங் குடித்துச் சோறு முண்ணும் குழவிப்பருவ நோய். இந் நோய் குழந்தைகளை மூன்றும் ஆண்டு முதல் ஏழாமாண்டு வரை வதைக்கும் இதனை,

"என்னவே கணமூன்று வருடந் தொட்டே
ஏழாண்டு மட்டுக்கு மிருக்குங் காலம்"—என்பதாலறிக.

## கணம்வரும் விதம்.

அறுசீர் விருத்தம்.

ஐயது கூடிற் றென்றால் அரிவையர் துயரந் தன்னால்
செய்யபற் புனல ருந்திச் செறிசல தோடந் தன்னால்
பையர வல்கு லாளும் பசியுட னிருந்த தாலும்
துய்யதோர் குழவி கட்குக் கணங்களுந் தோன்று மன்றே.

(பொ-ரை.)—மிக்க சூட்டால் சிலேத்தும மிகுதியாய்ச் சேர்ந்தும், துயர மடைந்தும், பலநீர்களை அருந்தியும், ஜலதோஷமணுகியும், பசியுடனு மிருக்கும் தாயின் பாலையுண்ட குழந்தைகட்குக் கண நோய் வரும் இதனைத்,

"தொகையான கணங்களெல்லாங் கர்ப்பச்சூடு"
என அயோத்திதாசர் பாலவாகடம் 27-வது செய்யுள் கூறுவதாலறிக.

(உஉ0)

## கணத் தொகை.

எண்சீர் விருத்தம்.

கணங்கட்பேர் விரித்துறையக் கேள்நன் றாகக்
கனவாத கணம்பித்த கணங் குளிர்ந்த
மணமான சேத்மகணம் பிள்ளை கட்கு
மாந்தகணம் அதிற்பிரிவு ஐந்தாம் இப்பால்
துணமாநீர்க் கணம்பிரளிக் கணமு நல்ல
சூலிகணஞ் சுழிகண மகா கணந்தான்
குணமான ஊதுகணம் வரட்க ணந்தான்
கொதிப்புகணம் வீக்ககணம் இன்னங் கேளே.

கேளேநீ பிறக்கணமும் அந்த கன்தன்
கணமும்மந் தாரகணம் எரிக ணந்தான்
மூளேநீ ராமகணம் ஆமகண மெத்த
முக்குகணம் மூலகணம் போரா மத்தின்
வாளேசிங் கியோடிரத்த கணமாம் எல்லாம்
வகுத்துரைத்த திருப்ஃது நான்கு மாகக்
கோளேது இவைதானே மருத்து நூலின்
குறிப்பறிந்தார்க் கல்லாமல் மற்றோர்க் கேதே.

## கணங்களின் தொகுப்பு.

(பொ-ரை.)—கணமானது: (1) வாதகணம், (2) பித்தகணம், (3) சேத்துமகணம், (4) மாந்தகணம், (5) நீர்க்கணம், (6) பிரளிக்கணம்,

(7) சூலிகணம், (8) சுழிகணம், (9) மகாகணம், (10) ஊதுகணம், (11) வரள்கணம், (12) கொதிப்புகணம், (13) வீக்கக்கணம், (14) பிறக் கணம், (15) அந்தகக்கணம், (16) மந்தாரகணம், (17) எரிகணம் (18) நீராமகணம், (19) ஆமகணம், (20) முக்குகணம், (21) மூலகணம், (22) பேராமகணம், (23) இரத்தகணம், (24) சிங்கிமாந்தகணம் என இருபத்து நான்கு வகையாம். (உஉக)

கணத்தின் பொது குணம்.

அறுசீர் விருத்தம்.

மாந்த முதிர்ந்து சுழிக்குங்கால் வயிறு நொந்து நாவெந்தும்
ஏந்த வெதிரே மூச்செறிந்தும் இரும லிருமிச் சத்திக்கும்
போந்த வுடம்பு பலவிதமாய்ப் பொறுத்துப் பொறுத்துச் சுரமுண்டாம்
காந்தண் மலர்போற் கரமுடையீர் கணத்தின் வகையென்
[றுரையீரே.

(பொ-ரை.)—கணம் வரும் வகையாவது, மாந்த நோயால் பலமுறை வருந்தி அம்மாந்தம் நன்ருய்த் தீராமையால் அது, முற்றிச் சேர்ந்து உடலில் சுற்றிக் கொண்டே யிருத்தலினுல் உண்டாவது. இதின் குறிகள்—வயிறு நோதல், நா வேக்காடாதல், மேல் மூச்சு, கர்கர் என்னும் ஒலியுடன் இருமல், உடம்பு சொல்ல முடியாத பலவகை வேறுபாட்டை யடைதல், பொறுத்துப் பொறுத்துச் சுரங் காய்தல்,

விழிநிறம் வேற தாகும் வெறுத்துட னுருட்டிப் பார்க்கும்
குழிவிழுந் துச்சி தாழ்ந்து குணுகுணம் பலவுஞ் செய்யும்
மொழிவது மிடறு கம்மி முகங்குறு வேர்வை யுண்டாம்
கழிவது வயிறு காய்ந்தால் கணமெனக் கருது வாயே.

(பொ-ரை.)—கண்களின் நிறம் இயற்கை நிறத்திற்கு மாறி யிருத்தல், கண் வெருண்டு பார்த்தல், உச்சியில் குழி விழுதல், தொண்டைக் கம்மலாய்ப் பேசல், முகத்தில் அற்ப வேர்வை யுண்டாதல், வயிறு கழிதல், காய்தல்,

எண்சீர் விருத்தம்.

நடுங்கியதோர் பித்தமது கோபங் கொண்டு
நல்லவா யுவைப்பற்றி யழுத்திக் கொள்ளும்
கடிந்திருந்த பிள்ளைக்குக் கதித்த சூடு
கனகனப்பு மெந்நேரங் கைவி டாது
ஒடுங்கியே வாயுலர்ந்து தண்ணீர் கேட்கும்
உண்மையாய் மலபேதி வழும்பாய் வீழும்
மடங்கியே யூன்கழுநீ ரபான வாசல்
மாறும லெப்போதும் வரூஉம் பாரே.

(பொ-ரை.)—பித்தம் மிகுந்து வாயுவைப்பற்றி அழுத்திக் கொள்ளும், அதனுல் பித்தந் தணிதற்கு வழியின்றிக் குழந்தைக்கு மிக்க சூடுண்டாய் உடல் கனகனப்புக் காணல், எப்போதுந் தாயை விட்டு விடாமற் பிடித்துக் கொள்ளுதல், வாய் உலருதல், தண்ணீர் வேட்கை, பேதி யாகும் மலம் எண் ணெய் கசிவுள்ளதாயிருத்தல், அன்றி ஊனைக் கழுவின நீரின் நிறம் போல மலவாயிலில் நீர் எப்போதும் கசிந்து கொண்டே யிருத்தல்,

அறுசீர் விருத்தம்.

சீத ரத்த மாய்க்கழியும் திரும்பக் கெட்ட பால்போலப்
பேதக் கறித்தண் ணீரதுபோல பின்னும் கழியும் வயிறுப்பும்
ஏதங் கைகால் முகங்கருகி எரிந்து குளிர்ந்து வெதுப்புண்டாம்
கோதை யிருமலுண்டாகும் குறிதா னறிவாய் கணங்கட்கே.

(பொ-ரை.)—சிலர்க்கு முன் சொல்லப்பட்ட பேதியாதலன்றி, சீதமாயும், இரத்தமாயும், சீதமும் இரத்தமுங் கலந்து பேதியாதல், சிலர்க்குக் கெட்டுப் போன பால், தண்ணீர்வேறு திப்பிவேறு ஆய்விடுதல் போல, வெள்ளை நிறத்துடன் தண்ணீர் வேறு, மலம் வேறுகவும் கழிதல், சிலர்க்கு ஊன் கழுவின தண்ணீர் போலப் பேதியாதல், வயிறு உப்புதல், கைகள், கால்கள், முகம் இவை கறுத்துச் சில சமயத்தில் எரிந்தும், குளிர்ந்தும், வெதுப் புண்டாதல், இருமல் என்னும் இவைகள் உண்டாதல்,

பாரே கணத்தைப் பகரக்கேள் பகரு முடம்பிற் சுரம்வீசும்
பாரே யுட்சுர மிதுதானே பகருங் கணமல முட்சேரும்
பாரே மார்பு கூண்டெழும்பிப் பதமாய்த் தேக மிகவற்றிப்
பாரே வாயு மிகநாறும் பதமாய் மலமும் வெட்டையன்றே.

(பொ-ரை.)—கணத்தில் உடம்பு சுரமடித்தாற்போல் அனல் வீசுதல், அதுவும் உட்சுரமாக வீசுதல், கணச்சுரத்தில் மலமானது உள் தங்குதல், மார்பு கூண்டுபோல் எழும்பி உடல் மிகவும்வற்றி வாய் மிகவும்நாறுதல், மலம் வெட்டையாதல் என்னும் இவைகள் உண்டாதல்,

மலமுஞ் சலமு மிகத்தீய்ந்து மார்பி லதிக சுரங்காயும்
மலமும் வயிறு மிகவெரியும் வளமாய்த் தலையு மிகமயக்கும்
சலமும் வரள்தீ தான்குறையும் சண்டா ளம்போ லுட்சுரமாம்
தலமே பனிரண் டாண்டுமட்டும் தனதாய் வரூஉங் குணமிதுவே.

(பொ-ரை.)—மலம் தீய்ந்தும் நீர் சுருங்கியுமிருத்தல், மார்பில் சுரம் மிகக் காய்தல், மலம் வரும் வழியும் வயிறும் மிகவும் எரிதல், மயக்க முண்டா தல், நாவரளல், பசித்தீ குறைதல், உட்சுரமாகக் காய்தல் இப்படி பன் னிரண்டாண்டு வரையில் தொடர்தல் என்னுங் குணவேற்றுமைகளைப் பெறும். (உ௰உ)

## (1) வாதகணத்தின் குணம்.

அறுசீர் விருத்தம்.

வாத கணத்தின் குணத்தியல்பை வகுப்போம் உடலும் பாரமதாய்ப்
போத இரைக்கும் நாவரளும் புகைந்தே இருமுந் தாகமுடன்
பாத வரைக்கும் சுரங்காயும் பசியு மெடுக்கா மலங்கறுக்கும்
பேத மாக நீர்சுருக்காம் பித்த கணத்தின் குணங்கேளே.

(பொ-ரை.)—உடல் கனக்கும், வயிறு இரையும், நாவரளும், புகைச்சலுடன் இருமலுண்டாகும், தாகமுண்டாகும், பாதம் வரை சுரங்காயும், பசியிராது, மலங்கறுக்கும், நீர்ச்சுருக்குண்டாகும். இவை வாத கணத்தின் குறிகுணங்களாம். (உ௰௩)

## (2) பித்தகணத்தின் குணம்.

(வேறு)

கேளே பித்த கணத்தியல்பைக் கெடியா யுடலும் எரிச்சலுண்டாம்
நாளே உலர்த்தி மார்பிடிக்கும் நாக்குங் கடைவாய் புண்ணுகும்
பாளே சுரமுங் காய்ந்தெரிக்கும் பருகக் கழியு மஞ்சளேப்போல்
தானே மயக்கும் தலேகிறுக்கும் சாற்றுஞ் சேட்ப குணங்களே.

(பொ-ரை.)—உடலெரியும், நாளடைவில் உடல் உலரும், மார்பிடிக்கும், நாக்கு, கடைவாய் இவ்விடங்களில் புண்ணுண்டாகும், சுரங் காய்ந்து உடல் எரியும், மஞ்சளாய் வயிறு மிகக் கழியும், மயக்கத்துடன் தலே கிறுகிறுக்கும். இவை பித்த கணத்தின் குறிகுணங்களாம். (உஉச)

## (3) சேட்ப கணத்தின் குணம்.

(வேறு)

குணமாஞ் சேட்ப கணத்தியல்பைக் கூறக் கேளாய் உடலமெலாம்
உணவாய்த் தினவு மெடுத்துசொறி ஊறிக் கரங்கால் வீக்கமதாம்
மணவாய் நாறும் வெப்புடனே மார்பிற் கோழை இருமலுடன்
* அணமே வெடித்துப் புண்ணுகும் ஆறுத் தவன மிகுத்திடுமே.

(பொ-ரை.)—உடலெங்கும் தினவும் சொரியு முண்டாகும், அது உடம்பில் ஊறிக் கைகால்களில் வீக்கம் தோன்றும், வாய் நாற்றமுண்டாகும், சுரங் காயும், மார்பில் கோழை கட்டி இருமல் உண்டாகும், மேல் வாய் வெடித்துப் புண்ணுண்டாகும், நீங்காத ஆயாசம் மிகுக்கும். இவை சேட்ப கணத்தின் குறிகுணங்களாம். (உஉரு)

### குமிழ்வேர் எண்ணெய்.

எண்சீர் விருத்தம்.

பாருமே யிக்குணத்தால் கணங்க ளென்று
    பரிவாகக் கண்டறிநீ புத்தி யாகச்
சாருதற்குக் குமிழ்வேருஞ் சித்ரப் பாலே
    சார்ந்தருக்கன் காந்திவேர் பொன்னும் பூவேர்
போரான மதிமயக்கி கணப்பூண்டு வேரும்
    போதரவாய்ப் பட்டைவகைப் பலமே தூக்கு
மீறிஅரை மெழுகதுபோல் எண்ணெய் நாழி
    வெந்தபின்பு பீங்கானில் இறுத்தி வையே.

இறுத்திட்ட எண்ணெய்க்குப் பொடியைச் சொல்வேன்
    ஏலம்சீ ரகம்மதுரம் பலமே வாங்கி
வறுத்திடித்துப் பொடித்திடுவாய் மயனம் போல
    வாரிஎண்ணெய் மேல்தூவிக் குலுக்கி வைப்பாய்
நிறுத்துமொரு காசெடையாய் மூன்று நாள்தான்
    நேராக முலேப்பாலில் கலந்து வாரு
துரத்திவிடும் அபானத்தால் சொரிந்த ரத்தம்
    தோன்றினதோர் கணமெல்லாந் தூரப் போமே.

* மேல் வாய்.

(பொ-ரை.)—நிலக்குமிழ்வேர்ப் பட்டை, அம்மான்பச்சரிசிவேர்ப் பட்டை; சூரியகாந்திவேர்ப் பட்டை, ஆவாரைவேர்ப் பட்டை, மதிமயக்கிவேர்ப்பட்டை, கணப்பூண்டுவேர்ப் பட்டை, இவைகள் வகைக்கு ஒரு பலம் எடுத்துத் தண்ணீர் விட்டு மெழுகு போல் அரைத்து, நாழி ஆமணக்கு எண்ணெயில் கலக்கிப் பக்குவபாகமாய்க் காய்ச்சி எடுத்துக் குளிர்ந்தபின் அத்துடன், ஏலம், சீரகம், அதிமதுரம், வகைக்கு ஒரு பலம் வறுத்துப் பொடித்துத் தூவிக் கலக்கிக் குலுக்கிவைத்துக் கொள்ளவும். இதை ஒரு காசெடை காலையில் மாத்திரம் முலைப் பாலில் கலந்து மூன்றுநாள் கொடுக்க கணம், ரத்தங் கொட்டும் ரத்த கணம் நீங்கும். (உஉசு)

## வல்லாரை நெய்.

### எண்சீர் விருத்தம்.

கணமான கணமதற்கு மருந்து சொல்வேன்
    கிரியையென்ற வல்லாரை மாசிப் பத்திரி
கணமான வில்வமொடு விளாவின் சாறும்
    கடியான அத்திப்பா லாலம் பாலும்
திணமான வுள்ளிநீர் நிம்பச் சாறும்
    திரமான முலைப்பாலு மாவின் பாலும்
கிணமான வாவினெய் வெள்ளாட் டின்பால்
    கேள்சிவந்த கொம்புத்தேன் கொவ்வைச் சாறே.

சாறிதெலாம் வகைப்படியோ வரைதான் வாங்கிச்
    சமர்த்தான தெங்கங்காய்ப் பாலு நாழி
சாறிதெலா மொருசட்டி தனிலே யூற்றிச்
    சாதிக்காய் சாபத்திரி யேலங் கிராம்பு
சாறிதிலே திரிகடுகு திரிப லாதி
    சடாமாஞ்சி லதிவிடய மாசிக் காயும்
சாறிதிலே வகைப்பலமோ வொன்று வாங்கிச்
    சன்னமாய்த் தூளிடித்து வைத்துக் கொள்ளே.

வைத்துக்கேள் சந்தனத்தூ ளறுகங் கட்டை
    வலிவான வெட்டிவேர் விலாமிச் சோடு
கைத்திறமா யிடித்துவகைப் பலந்தான் வாங்கிக்
    காற்படிதா னீரதிலே யிதனைப் போட்டு
மற்றுப்பார் கஷாயமது பாதி வாங்கி
    மகத்தான சாறதிலே யொன்ருய் வார்த்து
வைத்துப்பா ரடுப்பேற்றி யெரித்து மேதான்
    மச்சமாய் நீர்சுண்டி நெய்போ லாமே.

நெய்போலாம் பதத்திலே மருந்தைக் கொட்டி
    நேசமுடன் பூரணமாய்க் கிண்டு கிண்டு
நெய்போலாங் குழம்பாகும் பதத்தைக் கண்டு
    நேசமா யிறக்கிவைத்துத் தேவி தன்னை
நெய்யென்ற வாலையைத்தான் போற்றிப் போற்றி
    நினைவாக லட்சமுரு நீதா னோது
நெய்யான நெய்யிதுதான் வலுத்துப் போச்சு
    நிகரில்லாச் சஞ்சீவி யிதுதான் பாரே.

பாரேதான் கரண்டிநிறை மண்டலமே கொண்டால்
　　பாழாக்கு முன்சொன்ன கணமெல் லாம்போம்
பாரேதான் வாதத்தா லெழுந்த நோய்கள்
　　பன்னிமுன் னோடுமே பின்பா ராமல்
பாரேதான் புளிகசப்பு வாதப் பண்டம்
　　பற்றறவு மாகாது தள்ளிப் போடு
பாரேதான் தேரைகணம் தேரை போலப்
　　பழுதில்லை யெட்டாண்டு மட்டுண் டாமே.

உண்டாகு மந்நோய்க்கு மிந்த நெய்யை
　　உற்பனமாய்க் கொடுத்துவிடு பறந்து போகும்
உண்டாகும் வாதபித்த சேத்ம மூன்றும்
　　ஒடுங்கியே மூலத்திற் கணமே யாகி
உண்டாமே யுறுதிபற்றிக் கமல மெல்லாம்
　　ஓ ஓ ஓ புண்ணுயுட் சுரமும் வீசும்
உண்டாமே யுடம்பிளைக்கும் பித்த வெட்டை
　　உத்தமமா யெரிகுன்ம முயர்ந்து போமே.

உயர்ந்துபோந் தாதுடைந்து தேகம் பாழாம்
　　உற்பனமா யன்னரச மற்ப மாகும்
உயர்ந்துபோ முப்பானி ரண்டாண் டளவும்
　　விட்டுவிடா திக்கணமே ஓஓ பாரு
உயர்ந்துபோ யாறுண்டு பிராய மட்டும்
　　உறுதிபடு முப்பத்தி ரண்டிற் குள்ளே
உயர்ந்துபோ மிந்தநோய்க் கிந்நெய் யைத்தான்
　　உட்கொள்ள மண்டலத்தி லோடிப் போமே.

ஓடிப்போம் பத்தியந்தா னிச்சாப் பத்யம்
　　ஓ ஓ ஓ நெய்யினிட அதீத மெத்த
ஓடிப்போங் கணரோகம் தேரைக் கூறும்
　　உயர்ந்தகண மிந்நெய்யி லயர்ந்து போகும்
ஓடிப்போ மிந்தவகை யாருஞ் சொல்லார்
　　ஓங்காரப் பித்தத்தி னதீதப் போக்கால்
ஓடிப்போம் யானுரைத்தே னெவருஞ் சொல்லார்
　　உத்தமியா ளம்பிகைத னதீதம் பாரே.

(பொ-ரை.)—வல்லாரையிலை, மாசிப்பத்திரி, வில்வயிலை, விளாவிலை, இவற்றின் சாறு, அத்திப்பால், ஆலம்பால், வெங்காயச்சாறு, எலிமிச்சம் பழச்சாறு, முலைப்பால், பசுவின் பால், பசுநெய், வெள்ளாட்டின் பால், கொம்புத்தேன், கோவைச் சாறு, இவைகள் வகைக்கு அரைப்படி, தேங் காய்ப்பால் ஒருபடி இவைகளையெல்லாம் ஒரு மண் சட்டியிலூற்றிக் கலந்து அதில், சந்தனத்தூள், அறுகங்கட்டை, வெட்டிவேர், விலாமிச்சம்வேர், இவைகள் வகைக்கு ஒரு பலமாக எடுத்திடித்து ஒரு மண்பாண்டத்திற் போட்டுக் காற்படி தண்ணீர் விட்டு அறைக்காற் படியாகக் காய்ச்சி வடித்து அச்சாறுடன் சேர்த்து, அதில் சாதிக்காய், சாதிப்பத்திரி, ஏலரிசி, இலவங்கம், சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய்த் தோல், தான்றிக்காய்த் தோல், நெல்லி வற்றல், சடாமாஞ்சில், அதிவிடயம், மாசிக்காய், இவைகள் வகைக்கு ஒரு பல மாய் எடுத்து இடித்து வடிகட்டி வைத்துக் கொண்டு, மேற்படி கலந்து வைத்

தலைகளை அடுப்பிலேற்றி எரித்து, நெய்ப்போலாம் பதத்தில் மேற்படி தூளைத் தூவிக் கிண்டிக் குழம்பாகும் பக்குவத்தில் இறக்கி வடித்துக் கொண்டு, காலை மாலை இரண்டு வேளையும் உச்சிக் கரண்டியளவாக, ஒரு மண்டலம் என்னும் நாற்பது நாள் கொடுத்தால், எல்லாக் கணங்களும் நீங்கும்.

அன்றியும், வாதத்தால் உண்டான கணங்களும் அதனால் உண்டாகும் பிறநோய்களும் போம்.

அன்றியும், எட்டாண்டு வரைக்கும் யாதோர் பழுது நேரிடாதபடி தேரை போல் நேர்ந்து போகின்ற தேரைக் கணத்துக்கும், இந்நெய்யை நோய் வன்மைக்குத் தக்க நாளளவு கொடுத்தால் அந்நோயும் தீரும்.

இந்நெய்யைக் கொடுக்குங் காலத்தில் புளியையும் புளிப்புப் பொருள்களையும், வாதநோயை விளைவிக்கும் பொருள்களையும் கட்டாயமாக நீக்கி விட வேண்டும். (உஉஎ)

மேற்படி கணங்களுக்கு—கீழாநெல்லிப்பால்.

அறுசீர் விருத்தம்.

கீழ்க்காய் நெல்லி வேர்ப்பட்டை கேள்கறி வேப்பிலை சீரகமும்
வாழ்க்காய்ப் பச்சை நெல்லுமிதான் வகைக்கு வராகன் ஒன்றாக
மூழ்க்காய்க் *குயப்பா லிற்போட்டு முழுதும் இரவில் ஊறியபின்
காழ்க்காய்க் கால மேஅரைத்துக் கடுகப் பிழிந்து முக்காலே.

காலை மூன்று மேகொடுத்துக் கதிக்கச் சாயங் காலத்தில்
ஆலை மிளகு பற்பமதாய் ஆக்கிச் சீரக மும்சற்றே
சாலப் பொரிய வேவிட்டுத் தண்ணீர் ஊற்றிக் காய்ச்சிகொடு
வேலைப் பழித்த விழியாளே மிகுத்த கணமும் போமன்றே.

(பொ-ரை.)—கீழாநெல்லி வேர்ப்பட்டை, கறிவேப்பிலை, சீரகம், பச்சை நெல்லுமி, இவைகள் வகைக்கு ஒரு வராகன் எடுத்து இவைகளை இடித்துப் போதுமான முலைப்பாலில் ஓரிரவு ஊறவைத்து, மறுநாள் காலை அரைத்துப் பிழிந்து கொடுக்கவும். இப்படி மூன்று நாள் காலையில் மாத்திரம் கொடுக்கவும். சாயுங்காலங்களில் மிளகு பத்து சாம்பலாக்கி, அரை வராகனெடை சீரகம் பொரிய விட்டு; அரை ஆழாக்கு நீர் விட்டு இரண்டு கொதி வந்தவுடன் வடிகட்டிக் கொடுக்கவும். (உஉஅ)

வில்வஇலைக் குடிநீர்.

கலி விருத்தம்.

வில்வ பத்திரி துத்திவெண் காயமும்
நல்ல வெந்தயம் ஒக்கநன் றாய்வறு
வல்ல நல்லநீர் வார்த்துப்பின் சீரகம்
சொல்லக் காய்ச்சிக் கொடுகணம் சோருமே.

(பொ-ரை.)—வில்வயிலை, துத்தியிலை, வெள்ளை வெங்காயம், வெந்தயம் இவைகள் வகைக்குப் பலம் கால் எடுத்து அவற்றில் வெந்தயத்தை நீக்கி

* முலைப்பால்.

மற்றவற்றைக் குறுக அரிந்து சிவக்க வறுத்து, அரைக்கால்படி நீர்வார்த்துப் பின் வெந்தயமும், சீரகம் அரை வராகனெடையுஞ் சேர்த்து, வீசம் படியாகக் காய்ச்சி, மூன்று அல்லது ஐந்து நாள் காலை, மாலை இருவேளையும் கொடுக்கவும். (உ௨௯)

கணம், இருமல், வாய் நாற்றத்திற்கு—மணித்தக்காளிக்குடி நீர்.

அறுசீர் விருத்தம்.

மணித்தக் காளி ஒருபிடியும் மானே வெந்தயம் பலம்நாலு [மாய்க்
துணித்தீ ருள்ளி தான்மூன்று துட்டெடை யெல்லாம் பொன்னிற [காய்ச்சிக்
குணித்து வறுத்தே யிரண்டுபடி குசம்விட் டெட்டொன் றுய்க்
கணித்து மூன்று நேரங்கொள் கணம்வாய் நாற்ற மிருமல்போம்.

(பொ-ரை.)—மணித்தக்காளி இலை பிடி ஒன்று, வெந்தயம் பலம் நாலு, ஈருள்ளி துட்டெடை மூன்று, இவற்றில் வெந்தயம் நீங்க மற்ற இரண்டையும் குறுக அரிந்து சிவக்க வறுத்துப் பின் வெந்தயம் சேர்த்து இரண்டுபடி சலம் விட்டுக் கால்படியாய்க் காய்ச்சிக் காலை மாலையாக மூன்று நாள் கொடுக்க கணம், வாய்நாற்றம், இருமல் தீரும். (உ௩௦)

## (4) மாந்தகணக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

செடலமாம் கருவி லான சிசுவதற் கின்னங் கேளாய்
விடலமாம் கணமாந் தந்தான் மிகுங்குறி குணத்தைப் பாராய்
அடலம் தாகப் பெண்ணுள் அடைவதாய்த் தலைக்கு எண்ணெய்
தடமதாய்த் தேய்த்துச் சுத்த சலத்தினில் முழுகி னாலே.

முழுகியே அன்ன முண்டு முடுக்கென எழுந்த போது
அழுகிய மயக்க சோப தாபமு மிகுதி யாலே
தழுவியே படுக்க மாது சடுதியில் உறக்கங் காணில்
விழுகியே உதான வாய்வால் விரகலா கிரிதா னாமே.

நாகுமே அவள்மோ கத்தால் நாயக னோடே சேர்ந்து
நோகவே தேக மெல்லாம் நுசிதமல் லாரும் போது
தாகபோ கத்தால் அந்தச் சமானனும் வாய்வெ மும்பி
ஏகிடுங் கமலம் புக்க இருத்திடுங் குளிர்மை வந்தே.

குளுமையாய் ஏழு நாளும் கூறிய தலையி டிக்கும்
எளுமையாம் பெண்ணு ளுக்கும் எழும்பிடுங் கபால சூலை
வளுமையாம் பின்னும் ஏழு வளம்பெற நாள்சென் றக்கால்
வெளுமையாய்த் தேக மெங்கும் வெளுத்துடன் வயிறு நொந்தே.

நொந்தத்தால் சூத கத்தில் நோயிஃ தென்று சொல்வார்
பந்துபோல் நாபி தன்னில் பாசிபோல் இருக்கும் என்பார்
வெந்துதான் பித்தச் சூட்டால் மிகுந்ததோர் நோயி தென்பார்
தந்திர வாய்வி னாலே சந்நியும் இதுவென் பாரே.

இதுவே கணமாந் தந்தான் ஏறியே பெண்ணு ளுக்கு
வதுவெனக் கருவின் பற்றி மஞ்சனும் பிறந்த தானால்
பதுவென மாதுக் கேதான் பாலது மிகுதி யாகும்
அதுபத்து நாளுந் தானும் அமிர்தமே பெருகுந் தானே.

பெருகிடும் பத்து நாளும் பின்புநாள் மேலே சென்றல்
கருகிடும் மூலச் சூட்டால் கல்லுபோல் கட்டும் பாலும்
மருகிடும் அதுநாள் கொண்டு மஞ்சனுக் கிளேக்கும் தேகம்
தருகிடும் வாந்தி வாய்நீர் தலையது சுழற்ற லாமே.

தலையது சுழற்றல் காணும் தான்வரும் நாளே கேளாய்
கொலையது தந்தை தாயார் கொடுமைசெய் வினையி னலே
நிலையதாய்க் கரும நோய்தான் நிலத்திடுஞ் சிசுவுக் கேதான்
அலையுறப் பிறந்த பிள்ளை அஃதிரண் டாண்டு பின்பே.

பின்புமே வருகு நோய்தான் பிலத்ததோர் வினையைக் கேளாய்
தென்புடன் தேங்காய் வாழை தித்திப்பு வடைபா யாசம்
அன்பலாச் சுளையும் மீனும் அரிசியின் அடையுந் தானும்
நன்பது குழந்தைக் கேதான் நாட்டிடில் கணந்தா னமே.

கணம்வரு மாந்தத் தாலே காதலன் குணத்தைக் கேளாய்
துணம்எட்டு நாளை தன்னில் துலங்கிடுஞ் சத்தி காணும்
பணவயி றிரைச்ச லாகிப் பாசிப்போல் பேதி யாகும்
விணவழி சுழன்று சோர்ந்து விடவிடென் றுலரும் நாவே.

நாவதில் சலமி ராது நடைமுதல் அசதி காணும்
காவது என்று பாலன் கதறிடும் எடுக்குந் தாகம்
கூவது என்று நாலு நாளது கோட மாகும்
தாவது கணமாந் தந்தான் தாயினல் அணுகும் வாறே.

(பொ-ரை.)—தாயானவள் தலைக்கு எண்ணெயிட்டுச் சுத்த சலத்தில் முழுகி அன்னமுண்டு எழுந்தபின் மயக்கம், சோபம், தாகம் இவைகளின் மிகுதியால் படுத்து, உடனே உறக்கங் கொண்டால் உதான வாயு மிகுதிப்பட்டு விரக வேதனை நேரிடும். இதன் காரணமாகப் புருடசையோகஞ் செய்வதால், தேகம் நொந்து சமானவாயு வெளிப்பட்டு உந்தியிற்புகுந்து குளிர்மை யுண்டாக்க, எழு நாள் வரை தலையிடிப்பு, கபால சூலை உண்டாகும், அதன் பிறகு எழு நாள் சென்றல் தேகம் வெளுக்கும், வயிறு நோவும், இதைச் சூதக நோயென்றும், பாசிபோல் நாபியில் அழுக்கு சேர்ந்து இருக்குமென்றும், பித்தச் சூட்டால் உந்திமுதல் வெந்துபோன நோயென்றும், தந்திர வாயுவால் உண்டான சந்நி என்றுங் கூறுவர். இப்படிப்பட்ட காலத்திற்றங்கிப் பிறக்கும் குழவிக்குப் பத்து நாள் வரை பால் கிடைக்கும். பிறகு மூலச்சூட்டால் பாலானது கல்போல் கட்டும். இதைப்பருகிய குழந்தைக்கு உடம்பு இளைத்தல், தலைவலி, வாந்தி, வாய்நீர் பெருகுதல், தலைச்சுற்று, உண்டாம். இரண்டு ஆண்டு ஆனபிறகு, அப்பிள்ளை தேங்காய், வாழைப்பழம், தித்திப்பு வடை, பாயசம் பலாப்பழம், மீன், அரிசி அடை இவைகளைச் சாப்பிடுவதால் அதற்குக் கணநோய் உண்டாகும்.

மாந்த நோயால் கணம் பற்றிய குழந்தை, அவ்வியாதி கண்ட எட்டு நாளைக்குள் வாந்தி பண்ணும், வயிறு இரைச்சலுடன் பச்சையாகக் கழியும், விழி சுழன்று நாக்கு உலரும், நடப்பதில் அசதி, அழுதல், அதிதாகம் கொள்ளலால் வருந்தும். இவைகள் முதல் நான்குநாள் மிகக் கொடுமையாயிருக்கும். (உகூக)

கணமாந்தத்திற்கு—வெள்ளாட்டுப் பால் நெய்.

பன்னிருசீர்க் கழிநெடிலடி விருத்தம்.

திறமான வெள்ளாட்டுப் பாலுமோ விருநாழி
திகழ்விளக் கெண்ணெய்நாழி
திருகுகளி யோர்பலம திண்டங் கொழுந்துபிடி
செண்பகப் பூமதுரமும்
உரமான சாதிக்காய் பத்திரி லவங்கேல
மொருபூடு வெள்ளுள்ளியும்
ஓதுமிரு சீரகம் வசம்பிலா மிச்சமும்
உறுவெட்டி நன்னாரியும்
சிறுநாக முத்தமொடு பூலாங் கிழங்குடன்
சீருலவு கோரோசனம்
சேர்கடுகு ரோகணியுங் கோட்டமுட னேபச்சை
திருநாக ரஞ்சமனதாய்ச்
சரமாக வேயரைக் காசெடை அரைத்துவிடு
தணலிலெரி பதமதாக்கித்
தையலே பால்எண்ணெ யுண்டிடிற் கணமாந்தம்
தரணிவிட் டோடிவிடுமே.

(பொ-ரை.)—வெள்ளாட்டுப்பால் இரண்டு படி, ஆமணக்கு நெய் ஒரு படி, திருகுகள்ளிப்பால் ஒரு பலம், இண்டங்கொழுந்து ஒரு பிடி, செண்பகப்பூ, அதிமதுரம், சாதிக்காய், சாதிபத்திரி, இலவங்கம், ஏலரிசி, ஒருதலே வெள்ளுள்ளி, சீரகம், கருஞ்சீரகம், வசம்பு, விலாமிச்சம்வேர், வெட்டிவேர், நன்னாரிவேர், சிறுநாகப்பூ, கோரைக்கிழங்கு, கிச்சிலிக்கிழங்கு, கோரோசனம், கடுக்காய்த் தோல், கடுகுரோகணி, கோட்டம், பச்சிலே, சுக்கு வகைக்கு அரை காசெடை சேர்த்துக் கோரோசனம் நீங்க மற்றவற்றை யெல்லாம் இடித்து மேற்படி பாலாலரைத்துக் கலக்கி, அத்துடன் கோரோசனத்தைத் தூள்செய்து கூட்டி, அடுப்பேற்றிப் பக்குவத்திற் காய்ச்சி வடித்துக்கொள்ளவும். இதை குழந்தைகளுக்கு முலேப்பாலுடன் கலந்து ஒரு உச்சிக்கரண்டியாகக் காலேயில் மாத்திரம் மூன்று அல்லது ஐந்து நாள் கொடுக்கக் கணமாந்தம் நீங்கும். (உ௩உ)

கணமாந்தத்திற்கு—பாலசஞ்சீவி மாத்திரை.

பன்னிருசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

சீர்கொண்டதுத்தம்வெங்காரமொடுரோசனம்திகழ்கின்றநற்கொழுஞ்சி
சிக்குமலம்வீழ்கடுகுரோகணிகழஞ்சுதிரிசேரவேசேர்த்துநன்ருய்
வேர்கொண்டசத்தியிலேநீர்விட்டரைத்துமேமெள்ளஒருசாமமட்டும்[செய்து
விசைகொண்டமுத்திஅரைசிறுபயறுபோலவேமேன்மைபெறவுண்டை
கார்கொண்டகுழலழகுபெண்ணணங்கேயழற்காய்ந்தநீர்துணேமருந்தாம்
கற்கம்அறிநல்லதொருபத்திரிப்பிட்டிலுங்கன்னிஇளமாதுசித்ர
வார்கொண்டமென்முலேப்பாலிலும்இடுவதிதுவன்பிணிச்சகலசுரமும்
வயிறுளேவுபொருமல்கணமாந்தமும்வாராதுவாலசஞ்சீவியென்றே.

(பொ-ரை.)—பால்துத்தம், வெங்காரம், கோரோசனம், கொள்ளுக்காய் வேளைவேர், கடுகுரோகணி இவைகள் வகைக்கு முக்கழஞ்சு, அகத்திக்கீரைச் சாறுவிட்டு ஒருசாமமரைத்துச் சிறுபயறளவு உண்டைசெய்து, வெந்நீரில் அல்லது மாந்தகணத்தை நீக்க வல்லசில இலைகள் பிட்டவித்த நீரில் அல்லது முலைப்பாலில் வேளைக்கு ஒரு மாத்திரையாகக் காலைமாலை இரண்டுவேளையும் மூன்று நாள்கொடுக்க, கணமாந்தம் முதலிய சகல வியாதிகளும் நீங்கும். (உருரு)

வல்லாரை எண்ணெய்.

கலி விருத்தம்.

மாற்றிடு பொன்னுங் காணிவல் லாரையோ
டேற்றி டும்புளி யாரைகீழ் வாய்நெல்லி
சேர்த்தி டுந்துள சிச்சாறு புள்ளடி
போற்றி டும்வரட் பூலா தகரையே.

தகரை ஓரிதழ்த் தாமரை புங்கிலை
அவரை தூதுளை யம்மானும் பச்சிலை
துவரை பீர்க்கிலை சூரைவெண் ணொச்சிலை
அவரை செந்நா யுருவிகா வேளையே.

வேளை முத்திருக் கன்செவி ஆடுணைப்
பாளை வேலிப் பருத்தி மிளகுதக்
காளி ஆடாதோ டைக்கரு நொச்சிநு
வேளை சின்னிவேம் புவட்டப் புல்லிதே.

புல்லி தூகணப் பூண்டு நுணுத்துளிர்
சொல்லி துபரி வாலிச் சிறுகீரை
வெல்லி துமுசுக் கைவேர் முருங்கிலை
சொல்லி துபொன் முசுட்டையும் பாங்கிடே.

பாங்கி டத்தி நரிப்பயற் றங்கொடி
நீங்கி டத்தி நிலக்குமி ழாவாரை
வேங்கி டத்தி சுரைவிட்ணு காந்தியும்
தாங்கி டத்திசங் கங்குப்பி தாக்கிடே.

தாக்கி டாய்சங்கு தாளிநா வல்துளிர்
மேக்கி டாய்கண்டங் கத்திரி வில்வமும்
தேக்கி டாய்சீந்தில் குட்டிவி ளாசமன்
ஒக்கி டாய்இடித் தோர்படிச் சாறுமே.

சாறுஞ் சீரகங் கிராம்பு வசம்பொடு
சேறு உள்ளியுந் திப்பிலி பர்ப்படம்
ஊறு மேகடு ரோகணி மஞ்சளும்
பாரும் பூவந்திப் பழமும் ஈருள்ளியே.

உள்ளி டாமைஓ டுங்கருஞ் சீரகம்
வள்ளி டாழி நுரைவகைக் கேபலம்
தெள்ளி டாட்டிச்சிற் றுமணக் கெண்ணெய்சேர்த்
துள்ளி டாய்ப்படி தோற்றிரண் டேற்றிடே.

ஏற்றிட் டேளரித் தேஇறுத் தேஉடன்
தேற்றிட் டேழ்தினந் துட்டெடை உள்ளுக்கு
வாற்றிட் டேகண மாந்தம்ஓர் ஏழையும்
சாற்றிட் டேபுளி உப்பிலே கண்டிடே.

(பொ-ரை.)—பொன்னுங்காணிக்கீரை, வல்லாரைக்கீரை, புளியாரைக்கீரை, கீழாநெல்லியிலை, துளசியிலை, சிறுபுள்ளடியிலை, வரட்பூலாயிலை, தகரையிலை, ஓரிதழ்த்தாமரையிலை, புங்கிலை, கோழியவரையிலை, தூதுவளையிலை, அம்மான்பச்சரிசியிலை, துவரையிலை, பீர்க்கிலை, சூரையிலை, வெண்ணொச்சியிலை, அவரையிலை, செந்நாயுருவியிலை, முட்காய்வேளை, நிலக்கடம்பிலை, ஆடுதின்னாப்பாளை யிலை, உத்தாமணியிலை, மிளகுதக்காளியிலை, ஆடாதோடையிலை, கருநொச்சியிலை, நாய்வேளையிலை, சிறுசின்னியிலை, வேப்பிலை, காவட்டம்புல், கணப்பூண்டிலை, நுணத்துளிர், முதியார்கூந்தல் இலை, சிறுகீரையிலை, முசுமுசுக்கைவேர், முருங்கையிலை, பொன்முசுட்டை, அத்தியிலை, நரிப்பயற்றங்கொடி, நிலக்குமிழ், ஆவாரையிலை, சுரையிலை, விட்டுணுகிரந்தியிலை, சங்கங்குப்பியிலை, பீச்சங்குயிலை, தாளியிலை, நாவல் தளிர், கண்டங்கத்திரியிலை, வில்வயிலை, சீந்தில்கொடி, குட்டிவிளாயிலை, இவை சமன்கூட்டிப் பிழிந்த சாறு ஒரு படி, ஆகிய இவற்றை ஒரு மட்சட்டியில் விட்டு, அதில் சிற்றாமணக்குநெய் படி இரண்டு கலந்து, அதில் சீரகம், கிராம்பு, வசம்பு, வெள்ளுள்ளி, திப்பிலி, பர்ப்பாடகம், கடுகுரோகணி, மஞ்சள், பூவந்திப்பழம், ஈருள்ளி, ஆமையோடு, கருஞ்சீரகம், கடல்நுரை வகைக்கு ஒரு பலம், இவைகளை இடித்து மேற்படி சாற்றாலரைத்து, அடுப்பேற்றி எரித்துப் பக்குவத்தில் இறக்கி, ஒரு துட்டெடையாகக் காலையில் மாத்திரம் ஏழு நாளைக்குத் தினங்கொடுத்துவர, மாந்தகணம் நீங்கும். (உ௲ச)

மாந்தகணத்திற்கு—விட்டுணுகாந்திக் குடிநீர்.

வெண்பா.

மாந்த கணம்போகும் வல்லப் பொருமல்போம்
சேர்ந்திருமல் போகுஞ் சிலேஷ்மம்போம்—காந்தி
துளசியும் திப்பிலியும் சொல்லும்மா புல்லுரீஇ
களசி எரித்திருந்தக் கால்.

(பொ-ரை.)—விட்டுணுகாந்தி, துளசி, திப்பிலி, மாமரத்துப் புல்லுருவி இவைகள் வகைக்கு ஒரு வராகனெடையாக எடுத்து நீர் உழக்குவிட்டு அரையாழாக்காகக் குடிநீர் செய்து, ஒரு சங்களவு காலை மாலைக் கொடுக்க மாந்தகணம், பொருமல், இருமல், கபம் போம்.

குறிப்பு.—நோய்க்குத்தக்கபடி, திப்பிலியின் எடையைக் கணித்துக் கொள்ளவும். (உ௲ரு)

மாந்தகணத்துக்கு—பச்சிலைச்சாறு.

எண்சீராசிரிய விருத்தம்.

நொச்சியிலை துளசியிலை முசுமு சுக்கை
நோக்கியே மூன்றுமொரு சமனாய்க் கொண்டு,
கச்சமுடன் பிட்டவிய லாகச் செய்து
சாறெடுத்தே ஒருசங்கு பால கர்க்கே,
இச்சையுடன் தான்கொடுக்க மாந்த மேதே
எழிலான மாந்தகண மோடிப் போகும்,
கச்சணிந்த பொற்சயில நகிலத் தாளே
கடல்சூழ்ந்த மண்டலத்திற் கருதிப் பாரே.

(பொ-ரை.)—நொச்சியிலை, துளசியிலை, முசுமுசுக்கையிலை வகைக்கு ஒரு பிடியெடுத்து பிட்டவியலாகச்செய்து சாறுபிழிந்து ஒரு சங்கு வீதம் காலை மாலை இருவேளையும் கொடுத்துவர மாந்தம், மாந்தகணம் தீரும். (உ௩௬)

மாந்தகண சுரதோஷம், வயிற்றுக்கழிச்சல் பித்தம், இருமல், வாந்தி, நாமுள்ளு, இரத்தகணமூலம், சுவாசகணதோடம், இவைகட்கு பாலசஞ்சீவி மாத்திரை.

எண்சீர் விருத்தம்.

திரிகடுகு வெங்காரஞ் சாதி லிங்கம்
சிறந்திடவே யைமருந்துஞ் சமன தாக
நெறிபடவே யெலுமிச்சம் பழத்தின் சாற்றால்
நெடுவரைத்தே ஒருசாம நிறைய தாகக்
குறியுடனே யுண்டைதனைப் பயற்றிற் பாதி
குளிர்ந்தநிழல் தனிலுலர்த்திக் குழவிக் கீய
மறிபடவே பாலசஞ் சீவி யென்று
வகுத்துரைத்தார் மலையின்முனி மண்ணுள் ளோர்க்கே.

மலையின்முனி தானுரைத்த வகையே தென்னில்
மாந்தகண சுரதோடம் வயிற்றி னோட்டம்
கொலைசெய்யும் பித்தமுதி ரிருமல் வாந்தி
குலைந்திடுநோ யுள்ளதுவுங் குடிதான் போக
நிலைபெறவே பத்திரியைப் பிட்ட தாக்கி
நீர்வாங்கித் திரிகடுகு கற்க மாக்கி
உலையுயர்ந்த பிழிநீரில் கற்கத் தோடே
உண்டையொன்று தானெடுத் துரைத்தி டாயே.

உரைத்திடவே சுரமிருமல் கணநா முள்ளு
முகந்தகோ ரோசனமு மொக்கக் கூட்டிக்
கரைத்திடுங்கா லிரத்தகண மூலங் கண்டால்
கடுகவே சாதிக்காய் புளிவித் தோடே
அரைத்திடுமே யுண்டையொன்று சுக்குங் கூட்டி
அருந்திடவே வில்வப்பழச் சதைக்குள் வைத்து
வரைத்திடுமென் றருள்முனிவன் விபரஞ் சொன்ன
வாலசஞ் சீவியென்றே வகுக்க லாமே.

வகுக்குங்கால் பத்திரிதன் வகையைக் கேளாய்
மணித்துளசி செம்முள்ளி ஆடா தோடை
பகுத்திடுவாய் தூதுவளை விட்ணு காந்தி
பண்புசெறி கண்டங்கத் திரியி னோடு
நிகழ்த்திடுமே வெதுப்படக்கி பேய்ப்பு டோலும்
நின்றசங்கின் இலைநொச்சி நிறைதான் கூட்டிச்
செகுத்திடுமே சுவாசசுர கணதோ டங்கள்
தெரிந்துரைத்தார் மாமுனிசஞ் சீவி யென்றே.

(பொ-ரை.)—(1) தோல்சீவின சுக்கு, (2) மிளகு, (3) சிறுதிப்பிலி, (4) வெங்காரம், (5) சாதிலிங்கம், இவ்வைந்தும் சரிஎடைஎடுத்து, இலிங்கம் நீங்கலாக மற்றவைகளை இடித்துத் துணியில் வடிகட்டி, இலிங்கத்தூள்கூட்டி க்கல்வத்திட்டு எலுமிச்சம்பழச் சாற்றால் ஒரு சாமமரைத்து அரைப்பயறளவு மாத்திரை யுருட்டி நிழல் உலர்த்தி, துளசியிலை, செம்முள்ளி, ஆடா

தோடை, தூதுவளை, விஷ்ணுகாந்தி, கண்டங்கத்திரி, வெதுப்படக்கி, பேய்ப் புடல், சங்கிலை, நொச்சியிலை, இவைகள் சரியெடைக் கூட்டிப் பிட்டவித்துச் சாறுபிழிந்து, வேளைக்கு ஒரு உச்சி கரண்டியளவில் திரிகடுகுதூள் குன்றி யளவுகூட்டி, அதில் வேளைக்கு ஒரு மாத்திரையாக மூன்று நாள் கொடுத் தால் மாந்தகண சுரதோடம், பேதி, பித்தம், முதிர்ந்தவிருமல், வாந்தி இவைகளும், மேற்படி சாற்றில் வேளைக்குக் கோரோசனம் அரை குன்றி ஷெ மாத்திரை ஒன்றும் சேர்த்துக்கொடுக்க சுரம், இருமல் கணம், நாமுள் இவைகளும், சாதிக்காய், புளியம்விதைத்தோல், சுக்கு இவைகளைச் சரி எடைக்கூட்டித் தூளாக்கி அத்தூளில் கால் வராகனெடையுடன் ஒரு மாத் திரை தூள்செய்து சேர்த்து வில்வப்பழச்சதையில் வைத்துக் கொடுக்க இரத்தகணமூலமுந் தீரும். (உஙஎ)

மாந்தகணத்துக்கு—புள்ளடி எண்ணெய்.

அறுசீராசிரிய விருத்தம்.

புள்ளடிப் பொடுத லைச்சாறு புசிப்பதோர் தகரைச் சாறு
மெள்ளமி ளகுத்தக் காளி மிகுகரு நொச்சில் பாசி
வெள்ளைப்பூண் டும்வ சம்பு வெண்காயச் சாறு தானும்
தெள்ளிதாய்ச் சமன்கொண் டெண்ணெய்ச் சேர்த்தெரி யாயுங்
காலே.

கியாழம்.

காலமே இந்த எண்ணெய் கடியசாய்ங் காலந் தன்னில்
சீலமாஞ் சுக்கோ டோமம் சேர்ந்தபொன் முசுட்டை வேளை
ஏலமாம் நாட்டு மூலம் இதமாய்த்திப் பிலியுங் கூட்டி
கோலநீர்க் காய்ச்சிக் கொள்ளக் கொடுமாந்த கணமும் போமே.

(பொ-ரை.)—புள்ளடி, பொடுதலை, தகரை, மிளகுத்தக்காளி, கருநொச் சில், பழம்பாசி, வெள்ளுள்ளி, வசம்பு, வெண்காயம் இவைகளின் சாறு வகைக்கு ஒரு ஆழாக்கு, சிற்றுமணக்கெண்ணெய் ஒன்பது ஆழாக்கு ஒன்றுகூட்டி எரித்துப் பக்குவ பாகத்தில் வடித்து உச்சிக்கரண்டிவீதம் காலையில் மாத்திரம் கொடுத்து, மாலையில் கீழ்க்கண்ட குடிநீரைக் கொடுக்க மாந்தகணம் போம்.

சுக்கு, ஓமம், வட்டத்திருப்பி, வேளைவேர், ஏலரிசி, சித்திரமூலவேர்ப் பட்டை, திப்பிலி, வகைக்குக் கால் வராகனெடைக் கூட்டிச்செய்த குடி நீர். (உஙஅ)

மாந்தகணத்துக்கு—வேலிப்பருத்திநெய்.

அறுசீராசிரிய விருத்தம்.

வேலிப் பருத்தி சமூலமுடன் வெள்ளைச் சாரணைக் குட்டிவிளா
மூலி வேளை வேர்வசம்பு முதிய வெள்ளை வெண்காயம்
கோலி நறுக்கிச் சாற்மேதி கொடுத்த வெண்ணெய் தனிலெரித்து
சீல முலைப்பால் தனில்கொடுக்க சேர்ந்த மாந்த கணம்போமே.

(பொ-ரை.)—எருமை வெண்ணெய் பலம் ஐந்து எடுத்துச் சட்டியிலிட்டுக் காய்ந்து வருநேரத்தில், உத்தாமணி சமூலம், வெள்ளைச்சாரணைவேர், குட்டி விளாவேர், வேளைவேர், சுட்டவசம்பு, வெள்ளை வெங்காயம் வகைக்கு ஓர் கழஞ்சு அரைத்துச் சேர்த்துப் பதமாய்க் காய்ந்தபின் வடித்துவைத்துக்

கொண்டு, ஒன்றுமுத விருதுட்டெடை ஒரு சங்கு முலைப்பாலில் கூட்டி நோய் வன்மைக்குத் தக்க நாளளவு கொடுத்தால், மாந்தகண ரோகங்கள் தீரும். (உ௩௯)

மாந்தகணத்துக்கு—நன்னாரிக்குடிநீர்.

கட்டளைக்கலித் துறை.

நன்னாரி யும்சிறு கீரை வனமல்லி நாவல்இண்டு
பொன்னாருஞ் சங்கம்வேர் பாவட்டை நீலிபொ ருந்துகொஞ்சி
எந்நாளும் காய்க்கின்ற வட்டக் கிலுப்பை இவைகளெல்லாம்
மின்னார்பின் ளைக்கீய மாந்த கணம்விரண் டோடிடுமே.

(பொ-ரை.)—நன்னாரிவேர், சிறுகீரைவேர், காட்டுமல்லிகைவேர், நாவற் பட்டை, ஈயத்தண்டு, சங்கம்வேர், பாவட்டைவேர், அவிரிவேர், கொஞ்சி வேர்ப்பட்டை, வட்டக்கிலுகிலுப்பை இவைகளெல்லாவற்றையும் வகைக்குக் கால்பலம் எடுத்து இடித்து, ஒரு மண் சட்டியிற்போட்டு அரைப்படி தண்ணீர் விட்டு எட்டொன்றாய்க் காய்ச்சி, வேளைக்கு இரண்டு சங்களவாக மூன்று அல்லது ஐந்து நாள் கொடுத்தால், மாந்த கணம் விடும். (உ௪0)

கணமாந்தத்திற்கு—வால்மிளகு கற்கம்.

நேரிசை வெண்பா.

வாலரிபூண் டோமம் வசம்புகருஞ் சீரகமும்
சாலக் கிராம்புடனே சண்பகப்பூ—கால்சரியாய்த்
தூக்கிப் பொடுதலைநீர் சேரவரைத் துக்கொடுக்கப்
போக்குங் கணமாந்தம் போம்.

(பொ-ரை.)—வால்மிளகு, வெள்ளைப்பூண்டு, ஓமம், வசம்பு, கருஞ்சீரகம், கிராம்பு, சண்பகப்பூ இவைகள் வகைக்கு கால் வராகனெடை எடுத்துப் பொடுதலைச்சாற்றா லரைத்துக் காலைமாலை இரண்டு வேளையும் தக்க அள வில் மூன்று அல்லது ஐந்து நாள் அல்லது நோய்வன்மைக்குத் தக்க நாள ளவு கொடுத்தால், மாந்த கணம் என்னும் நோய் நீங்கும். (உ௪க)

மாந்தகணத்துக்கு—மருள் எண்ணெய்.

கலி விருத்தம்.

போகவே இன்னம் புகலுவோங் கேளு
ஆகம ருளின்கி ழங்குடன் உள்ளி
தாகவே நிம்பச் சாறது வாங்கி
ஏகவே எண்ணெய் எரித்துநீ உண்ணே.

உண்ணக் கணங்கள் ஓடுமே மெய்யா
மண்ணில் மாந்த கணநோய்ச் சேத்துமம்
கண்ணிற் காணு கதறிடும் பாரு
எண்ணுமே இந்த எண்ணெயைச் செய்திடே.

(பொ-ரை.)—மருட்கிழங்கு, வெள்ளுள்ளி வகைக்குப் பலம் ஒன்று, எலு மிச்சம் பழச்சாறு படி அரைக்கால், சிற்றாமணக்கெண்ணெய் படி கால், இவைகளைச் சேர்த்துக் காய்ச்சி வடித்த எண்ணெயில், காலையில் ஒரு வேளை உச்சிக்கரண்டி வீதம், வேண்டிய நாள் மட்டும் கொடுத்துவர, கணம், மாந்த கணம், கபம் நீங்கும். (உ௪உ)

மாந்தகணத்திற்கு—நுணா எண்ணெய்.

எண்சீர் ஆசிரிய விருத்தம்.

விளக்கெண்ணெய் ஒருநாழி நுணாஇலைச் சாறு
விருப்பமுடன் ஒருநாழி தானே ஆகும்
இளக்கமாய் ஈருள்ளிச் சாறு நாழி
எழில்வில்வத் தின்கொழுந்து பிடியி ரண்டு
துளக்கநற்சீ ரகம்இரண்டு விராகன் தானும்
துவர்க்கடுக்காய் நாலதுவும் பொடியே செய்து
விளக்கமாம் வெண்காரம் வராகன் ரண்டு
விபரமுட னேபொரித்து அதனிற் கூட்டே.

கூட்டியே கொதிக்கையிலே சரக்கைப் போட்டுக்
குணமாக பதம்பார்த்து தானி றக்கி
ஆட்டியே வடித்துவைத்துக் கொண்டு நீயும்
அழகாக சங்கெடையாய்ப் புகட்டி வந்தால்
வாட்டியே எழுந்தபொல்லா வியாதி யான
மாந்தகணஞ் சொல்லாமல் ஓடிப் போகும்
காட்டியே கைப்புபுளி கவிச்சி றைச்சிக்
கருதாமல் பத்தியத்தில் தாயை வையே.

(பொ-ரை.)—சிற்றாமணக்கெண்ணெய் நாழி ஒன்று, நுணா இலைச்சாறு ஒரு நாழி, வெங்காயச்சாறு ஒரு நாழி, ஆகியவிவற்றை அடுப்பேற்றிக் காய்ந்து வருநேரத்தில், வில்வக் கொழுந்து இரண்டு பிடியும், சீரகம், பொரித்த வெண்காரம் வகைக்கு விராகனெடை இரண்டும், நாலு கடுக்காய்த் தோல் பொடியும் சேர்த்துப் பதத்தில் வடித்துவைத்துக்கொண்டு, ஒரு சங்களவாகக் கொடுக்க மாந்தகண நோய் நீங்கும். தாய் புளி கவிச்சு இறைச்சி நீக்கிப் பத்தியமாய் இருத்தல்வேண்டும். (உசரு)

மாந்தகணத்துக்கு—வல்லாரை எண்ணெய்.

எண்சீர் ஆசிரிய விருத்தம்.

வல்லாரைப் பிரமிசெருப் படைநீர் முள்ளி
மணக்குமணித் தக்காளி முசுமு சுக்கை
சொல்லெருமைத் தக்காளி துளசி தானும்
துடிகோழி அவரைநெய்ச் சிட்டி யெல்லாம்
நல்லதோர் வகைவகைக்குப் பிடியொன் றுக
நவைஇல்லா இலைகளெல்லாங் கொண்டு வந்து
கல்லதுவைத் துப்பிழிந்து படிகால் சாறு
கனமான எண்ணெய்படி அரைய தாமே.

அரையதாம் துமட்டிக்காய் துவைத்த சாறும்
அரியவெண்கா யச்சாறும் ஒருசெ ரங்கை
நிரையதாம் விட்டெல்லாங் கலந்து காய்ச்சி
நேர்கடுகு பதமாகும் போதி லேகேள்
கரையதாம் கார்போக அரிசி பூண்டு
கருஞ்சீரம் வசம்புவகை வகைக்குத் தானே
விரையதாம் வராகனென்று நறுக்கிப் போட்டு
மெழுகுபத மானவுடன் இறக்கி டாயே.

கலி விருத்தம்.

இறக்கி யேவடி கட்டி இதமுற
சிறக்க வேகொடு செம்மலுக் கன்புடன்
வறக்கி டும்நல்ல மாந்த கணமுடன்
திறக்கும் அட்சரம் தீருமி துண்மையே.

(பொ-ரை.)—(1) வல்லாரை, (2) பிரமி, (3) சிறுசெருப்படை, (4) நீர் முள்ளி, (5) மணித்தக்காளி, (6) முசுமுசுக்கை, (7) பெரியதக்காளி, (8) துளசி, (9) கோழியவரை, (10) நெய்ச்சிட்டி இவைகள் வகைக்குப் பிடி ஒன்று எடுத்து, இடித்துப் பிழிந்த சாறு படி கால், சிற்றுமணக் கெண்ணெய் படி அரை, வெண்காயச் சாறும், தூமட்டிக்காய் சாறும் வகைக்கு ஒரு சிரங்கை, இவை யாவற்றையும் ஒன்றுகக்கலந்து காய்ச்சி, கடுகு பதத்தில் (1) கார்போகி, (2) பூண்டு, (3) கருஞ்சீரகம், (4) சுட்டவசம்பு வகைக்கு வராகனெடை ஒன்று பொடித்துச் சேர்த்து, மெழுகு பதத்தில் இறக்கி வடி கட்டி, உச்சிக்கரண்டி வீதம் காலையில் கொடுத்துவர, மாந்தகணம், அட்சரம் தீரும். (உசச)

மாந்தகணத்துக்கு—புங்குரர்க்கு முடிக்குடிநீர்.

எண்சீராசிரிய விருத்தம்.

புங்குபுளி நொச்சில்மா வேம்போ டொக்கப்
பொடுதலைவே லிக்கருவேப் பிலைநா ரத்தை
சங்கவுரி பொன்னவரைப் பிடிவொவ் வொன்று
தானும்இலை ஈர்க்கெடுத்துச் சட்டி யிட்டு
தங்குரோ கணியுமிந் தோமமு முடிந்து
தான்போட்டுத் தண்ணீரும் நாழி வார்த்து
அங்கெரித்து வற்றமுடிந் தம்ம ருந்தை
அரைத்துகொடு மாந்தகணம் அகன்றுப் போமே.

(பொ-ரை.)—(1) புங்கு, (2) புளி, (3) நொச்சில், (4) மா, (5) வேம்பு, (6) கருவேப்பிலை, (7) நாரத்தை, (8) பொன்னவரை, இவைகளின் ஈர்க்கு, (8) பொடுதலை, (9) வேலிப்பருத்தி, (10) சங்கன், (11) அவுரி, இவைகளின் இலை—வகைக்குப் பிடியொன்று சட்டியிலிட்டு, அதில் (1) கடகரோகணி, (2) ஓமம், (3) இந்துப்பு வகைக்கு வராகனெடை ஒன்று, சீலையில் முடிந்து வைத்து, ஒருபடி நீர்விட்டு சுண்ட எரிந்தபின், சீலை முடிச்சியை எடுத்து அதற்குள் வெந்திருக்கும் மருந்தை அரைத்து, தங்கியுள்ள கியாழத்தில் கரைத்து வேண்டிய நாளளவு, வேளைக்கு இரண்டு சங்களவு கொடுத்தால், மாந்தகணம் நீங்கும். (உசரு)

மாந்தகணப்பொருமலுக்கு—சாரணை லேகியம்.

கட்டளைக் கலித்துறை.

விட்டிடுஞ் சாரணை வேர்ப்பட்டைத் தட்டி விதமுடனே
இட்டிடுந் தேசா புரஞ்சமன் கூட்டிக் கிளர்பொடியாய்
மட்டிடுந் தேனில் இலேகிய மாக்கி மதலைக்கிட
பொட்டென மாந்த கணத்தின் பொருமலும் போய்விடுமே.

(பொ-ரை.)—சாரணைவேர்ப்பட்டையும், திப்பிலி மூலமும் சமன் எடை யெடுத்து இடித்து வடிகட்டி, இலேகிய முறைப்படி போதுமான தேன்விட்டு இலேகியமா யரைத்து, நோய்வன்மைக்குத் தக்க அளவு குழந்தைகட்குக் கொடுத்தால், மாந்தகணப்பொருமல்நோய் நீங்கிவிடும், (உசசு

## (5) நீர்க்கணக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

நீர்க்கணக் குணமே கேளாய் நீர்வேட்கை யுடலி லன்றி
வேர்க்குங்கை கால்க டம்மில் வெதுப்புறுங் கண்க டாழும்
நாக்குவாய் வரண்டு புண்ணும் நாவெடிப் புறுநீர்ப் பேதி
பார்க்கிலோ நீர்க்க ணத்தின் பற்பல குணங்கள் தாமே.

முகமும் புறங்கால் புறங்கையும் மோதி மினுமினுப் புண்டாகும்
தகைசேர் மயக்க முடல்சோர்வு தணியா வயிற்று நோயுண்டாம்
மிகவே சோகம் வெதுப்புண்டாம் விட்டு விட்டுச் சுரங்காயும்
மகமே ரொத்த மனத்தாளே வருநீர்க் கணத்தின் வகையாமே.

(பொ-ரை.)—நீர் வேட்கை (தாகம்), உடலிலாவது, கை கால்களிலாவது வேர்வை, உடனே அவ்விடங்களில் சுடுகை, கண்கள் நன்ருய்ப் பார்க்கமுடியா மல் தாழ்தல், நாக்கு, வாய் இவைகளில் நீர் வரண்டு புண்ணுதல், நாவெடிப்பு, நீராகக் கழிதல், முகத்திலும், புறங்காலிலும், புறங்கையிலும் மிக்க மினுமினுப்பு, மயக்கம், உடலிற் சோர்வு, நீங்கா வயிற்று நோய், சோகம், முன்னர்ச் சிறு வெதுப்புண்டாய் அச்சுரம் அப்படியே காயாமல் விட்டு விட்டு காய்தல், என்னும் இக்குறிகுணங்கள் கண்டால் (நோய்களைக் காணின் மேரு மலையை யொத்த வன்மையையுடைய அஞ்சாத நெஞ்சையுடைய பெண்ணே!) நீர்க்கணம் என்று அறிவாயாக. (உசஎ)

நீர்க் கணத்திற்கு—சாரணைக் குடிநீர்.

நேரிசை வெண்பா.

சாரணைக்காய் மூக்குறட்டை தன்காய் பொடுதலைக்காய்
பூரணமா முக்கடுகு பூந்துளசி—வாரணியும்
மங்கையரே சீரகமு மாட்டிக் குடிநீராய்
உண்கவே நீர்க்கணந்தான் ஓடும்.

(பொ-ரை.)—சாரணைக்காய், மூக்குறட்டைக்காய், பொடுதலைக்காய், சுக்கு, மிளகு, திப்பிலி, துளசியிலை, சீரகம் இவைகளை வேளை ஒன்றுக்கு ஒவ்வொரு வராகனெடை எடுத்து இடித்து, மண் சட்டியிலிட்டு அரைக்கால் படி தண்ணீர்விட்டு, அரை ஆழாக்காகக் குறையக் காய்ச்சிக் கொடுக்கவும். இப்படி வேளைவேளைக்குப் புதிதாய்ப் போட்டு மூன்று நாள் காலை மாலை இரு வேளையுங் கொடுக்க, நீர்க்கணந் தீரும். (உசஅ)

## (5-A) நீர்க்கணமாந்தக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

இருமும் மூக்கில் நீர்வடியும் இடையில் இடையில் சுரங்காயும்
பொருமி வயிறு இரைச்சலுண்டாம் போதப் பலவித மாய்க்கழியும்
சொருகுங் கண்ணும் உடம்புமுகம் சோர்ந்து தலையும் புரட்டலுண்டாம்
மருவி மயக்கம் உண்டாகும் வருகு நீர்க்கண மாந்தமுமே.

(பொ-ரை.)—இருமல், மூக்கில் நீர்வடிதல், இடை இடையே விட்டுவிட்டுச் சுரம் காய்தல், வயிறுபொருமி இரைதல், பலவிதமாய்ப் பேதியாதல், கண் சொருகல், உடம்பு முகம் இவை சோர்தல், தலைபுரட்டல், மயக்கம் உண்டாதல் ஆகிய இவைகள் உண்டானுல், நீர்க்கண மாந்தம் என்று அறிவாய். (உசக)

நீர்க்கணமாந்தத்திற்கு—அமுர்தாதிக் குளிகை.

எண்சீர் விருத்தம்.

அருளினுர் அமுர்தமெனும் குளிகை தானும்
அதிமதுரம் சண்பகப்பூ ஏல மோடு
திருவுகோ ரோசினையுஞ் சாத்திர பேதி
சிறந்தவெட்டி வேர்கோஷ்டம் மாசிப் பச்சை
தருவெனவே விலாமிச்சம் வேருங் கூட்டிச்
சரியாக ஆதொண்டைச் சாறு விட்டுப்
பருவமதாய் ஒருசாமம் அரைத்துக் குன்றிப்
பருமனுய் முலைப்பாலிற் பருகி டீரே.

பருகிடில்ஓர் உண்டைதான் முலைப்பால் தன்னில்
பகைத்துவருங் கணமாந்தம் எட்டுந் தீரும்
திருகுகுடல் படுவன்நீர்ப் பாடுந் தீரும்
சேர்கர்ப்பப் பாடுநா வரட்சி தீரும்
குருவெனவே இக்குளிகை சுரமுந் தீரும்
குலையெரிவு வெப்புமுதல் தோடந் தீரும்
அருளெனவே முனியுரைத்தார் பாரின் மீது
அமுர்தாதிக் குளிகைதனை அரைத் திடாயே.

(பொ-ரை.)—அதிமதுரம், சண்பகப்பூ, ஏலம், கோரோசனம், சாத்திர பேதி, வெட்டிவேர், கோஷ்டம், மாசிப்பத்திரி, விலாமிச்சம்வேர், ஆகிய இவைகளைச் சரியளவா யெடுத்திடித்து ஆதொண்டைச்சாறுவிட்டு ஒரு சாமம் அரைத்துக் குன்றியளவாக மாத்திரை செய்து, வேளைக்கு ஒரு மாத்திரை யாக மூன்று நாள் முலைப்பாலில் காலை, மாலை கொடுக்க, கண மாந்தம் எட்டு, குடற்படுவன், கணத்தாற்பெருகுநீர், கர்ப்பப்பாடு, நாவரட்சி சுரம், குலையெரிவு, உடல் எப்போதும் சூடாயிருத்தல், தோஷம் இவை நீங் கும். (உ௰)

## (6) பிரளிகணத்தின் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

மிகுத்த பிரளிக் குணத்தியல்பை விரிக்கக் கேளு செருக்கறவே
விகுத்த மாக வயிறுவிம்மி மேலே யேப்ப முண்டாகும்
சுகித்த வுடல்புண் போனெந்து துடித்தே யேங்கி யழுதலுறும்
பகுத்த மலமும் மாப்போலப் பரக்கக் கழியுந் தவித்திடுமே.

போதா பிரளிக் குணங்கேளாய் பொருமி வயிறு மதைப்புண்டாம்
கோதா மலமும் போகாது குடலைப் புரட்டித் தான்வலிக்கும்
மாதா முலையு முண்ணுது வலிவைக் குலைக்கும் வாயுலரும்
மீதா மேல்மூச் சுண்டாகும் விழியுஞ் சுழலு மேசித்தம்

நேரிசை வெண்பா.

சித்தாக வேயிளைக்கும் திட்டுத்திட் டாமுக்கும்
முத்தாக மூக்கினீர் மூண்டோடும்—தெத்தாரம்
மஞ்சட் பவுர மணக்கும் மதிவதன
வஞ்சிப் பிரளிகுண மாம்,

(பொ-ரை.)—வயிறு விம்முதல் அல்லது பொருமுதல், வீங்கல், ஏப்பமுண்டாதல், சிலவேளை மலச்சிக்கல், சில வேளை மாவைப்போல் கழிதல், உடல் புண்போல் நோதல், உடலில் அங்கங்கு துடித்தல், அன்றி துடித்துத் துடித்து மயங்கி அழுதல், தவித்தல், குடலைப் புரட்டி வலித்தல், பால் உண்ணுமை, உடம்பு வலிவை கெடுத்தல், வாயுலர்தல், மேல் மூச்சு உண்டாதல், கண்கள் சுழலுதல், மனம் திகைத்தல், உடல் இளைத்தல், அடிக்கடி முக்குதல், மூக்கிலிருந்து முத்துப்போல் நீர் வடிதல் இவைகள் பிரளிக் கணத்தின்குறி குணங்களாகும். (உருக)

பிரளிக்கணத்திற்கு.

துூம்மட்டிக்காய் எண்ணெய்.

எண்சீர் விருத்தம்.

அவித்தசிற்று மணக்கெண்ணெய் படிதான் ஒன்று
அதில்நாலு குமட்டிக்காய் அரிந்து போடே
இவித்தீர வெண்காயம் படியி ரண்டு
இதமாக அரிந்துபோட் டின்னங் கேளாய்
கவித்தகருஞ் சீரகந்தான் பணமா காணி
கடுகுரோ கணிபணம் அரைக்கா லாகும்
நவித்தகத் தூரிமஞ்சள் பணமா காணி
நறுக்கிப்போட் டடுப்பேற்றிக் காய்ச்சிக் கொள்ளே.

கொள்ளவே பதமறிந்து கரண்டி வீதம்
கூறவே துட்டெடைதான் குடிக்கும் போது
கள்ளமில்லா விரேசனமாம் இதற்குத் தானே
கதறியே பிரளிகணங் காணு தோடும்
தள்ளவே வயிற்றுவலி பொரும லோடு
சலக்கழிச்சல் இவையெல்லாஞ் சாந்த மாகும்
விள்ளவே பத்தியந்தான் பிடித்தல் வேண்டும்
விரும்பாதே மாங்கிசந்தான் கிட்டா காதே.

(பொ-ரை.)—சிற்றுமணக்கெண்ணெய் ஒரு படியில், நாலு தும்மட்டிக்காயும், இரண்டுபடி வெங்காயமும் சிறுக அரிந்து போட்டு, கருஞ்சீரகம் மாகாணிப் பணவெடை, கடுகு ரோகணி அரைக்கால் பணவெடை, கத்தூரி மஞ்சள் மாகாணிப் பணவெடை பொடித்துப்போட் டடுப்பேற்றிக் காய்ச்சிப் பதத்தில் இறக்கி, நோய் வன்மைக்குத்தக்கபடி துட்டெடையாவது, ஒரு உச்சிக் கரண்டியாவது, காலையில் மாத்திரம் மூன்று நாள் கொடுக்க வேண்டும். அவ் வெண்ணெயால் பேதியாகும், அதனுல், வயிற்றுவலி, பொருமல், நீர்ப்பேதி இவைகளோடு கூடிய பிரளி கணம் தீரும். இதற்கு இச்சாப் பத்தியம் இருப்பது நல்லது. ஆனுல் மாமிசம் கொடுக்கக்கூடாது. (உருஉ)

## (7) சூலிக்கணக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

உண்டாஞ் சூலிக் கணங்கேளாய் உற்ற சுவாச மேலெழும்பித்
தண்டா இருமல் மிகஉண்டாம் தன்மை நெஞ்சு வாய்மட்டும்
தொண்டை நாவு மேவெந்து சோரும் பொருமி வயிறுப்பும்
வண்டார் முலையுங் குடியாது வகையாய் முகமும் நாறுமன்றே.

(பொ-ரை.)—மேல் மூச்சு விடுதல், ஓயாமல் இருமுதல், நெஞ்சு, வாய், தொண்டை, நா இவைகள் வேதல், சோருதல், வயிறு பொருமி உப்புதல், பால் குடியாமை, முகம் நாறுதல் என்னும் குறிகுணங்கள் கண்டால், சூலிக் கணம் என்றறிவாய். (உடுரு)

சூலிக்கணத்திற்கு—துளசி எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

முகமாம் எண்ணெய் கால்படிதான் முகிழ்சேர் துளசி நீர்சாரம்
தகமாய் நிலத்தின் துளசிச்சாறு தண்மை அரைக்காற் படிகூட்டு
வகமாங் கஞ்சாங் கோரையுடன் வண்மை மாசிப் பத்திரியும்
அகமாம் வில்வம் உள்ளியுடன் அன்பாய் இடித்துச் சாறுபிழியே.

[ருக்கி
அன்பாய் அரைக்கால் படிவகைக்கே அளந்து நிறுத்திங் கொன்
வன்பாய்த் திரிகடு குடனேதான் வறுத்தே இடித்துச் சூரணஞ்செய்
தென்பாய் இரண்டு வராகனெடை தேனும் வார்த்துக் கலந்துவிடு
உன்பாய் எண்ணெய் அடுப்பேற்றி உருளுங் கடுகின் பதந்தனிலே.

தனிலே இந்தக் கடைமருந்தைத் தயவாய்ப் போட்டுக் கிண்டிடுநீ
வனியே இறக்கிக் கணபதியை வகையாய்த் தொழுது மடிவணங்கி
மணியே சூலிக் கணந்தனக்கு மைந்தன் தாயைச் சாந்திசெய்து
தொனியே மைந்தன் தொண்டைதனில் தொடுநீ காசெடை
[யேயிரண்டு.

எடையே ஐந்து மாதமென்றால் எண்ணெய் ஐந்து நாள்மட்டும்
தடையாம் இச்சாப் பத்தியமிது தனதாய்ப் பிராயம் ஐந்துமட்டும்
இடையாய் இருக்கும் சூலிக்கணம் இதனைக் கண்டு தீர்ந்திடுங்காண்
படையாய் வருடம் ஆனகணம் பலிக்கும் ஒருமண் டலங்கொள்ளே.

(பொ-ரை.)—சிற்றாமணக்கு எண்ணெய் கால் படி, துளசிச் சாறு, நிலத் துளசிச்சாறு, கஞ்சாங்கோரைச் சாறு, மாசிப்பத்திரிச் சாறு, வில்வ இலைச் சாறு, ஈருள்ளிச் சாறு வகைக்கு அரைக்காற்படி, இச்சாறுகளையும் எண்ணெயும் கலந்து ஒரு மட்பாண்டத்திலிட்டு, அதில் தோல் சீவின சுக்கு, அரிசித்திப்பிலி, மிளகு வகைக்கு வராகனெடை இரண்டு, இவற்றை இளவறுப்பாகத் தனித்தனி வறுத்து இடித்து துணியில் வடிகட்டின தூள் அதிற் கலந்து, தேன் அரைக்காற் படி விட்டு அடுப்பேற்றிப் பக்குவமாய் எரித்துக் கடுகுதிரளுஞ் சமயத்தில் வடித்து, காலையில் மாத்திரம் இரண்டு காசெடையளவாக ஐந்து மாதக் குழந்தைக்கு ஐந்து நாளும், ஒரு ஆண்டு குழந்தைக்கு ஒரு மண்டலமென்னும் நாற்பது நாளும் கொடுத்து இச்சாப்பத்தியம் வைக்க வேண்டும். இக்கணமானது ஐந்தாண்டு வரைக்கும் தொடர்வதாகும். (உடுசு)

## (8) சுழிகணக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

சுழியெனுங் கணமே சொல்லின்
  சுழியவே சுவாசம் வாங்கும்
நளிருடன் சுரமுந் தோன்றும்
  நயனம்பஞ் சடைந்துக் காணும்

தெளிவுடன் சந்து நொந்து
திகைக்கநெஞ் செரிப்புக் காணும்
குழியுமே யுச்சி தாழிற்
குணமிஃ தறிந்து சொல்லே.

மின்னே கேளாய் சுழிகணந்தான்
மேவும் வாந்தி யிருமலுண்டாம்
பொன்னே முகமு மார்புகண்டம்
புடைத்துக் காணு முண்மையிது
சொன்னேம் வயிறு மீரல்நெஞ்சு
தொண்டை நாவு மிவைவெந்து
அன்னை முலைப்பால் குடியாமல்
அலறி யழுமீ தறிவாயே.

செருமு நாரை போற்றுவளும்
சேர்கை காலுங் குளிர்ந்திருக்கும்
பொருமும் வயிறு தானூதும்
பொல்லாச் சுரமு மிகவுண்டாம்
அரிவாய் நுரையுங் கோழையுமாம்
அருநா வரளுங் கண்சொருகும்
தருமே மஞ்சள் முகமயக்கம்
தலையு நோவாஞ் சுழிகணமே.

(பொ-ரை.)—மேல் மூச்சு சுழித்து வாங்கல் (திணறி விடுதல்), குளிருடன் சுரங்காய்தல், கண்பஞ்சடைதல், உடம்பிலுள்ள பூட்டுகளெல்லாம் முடக்கினாலும் நீட்டினாலும் நோதல், மனம் ஒரு வகையாக வெறுத்துக் கலங்கும்படி நெஞ்செரிதல், தலையிலுள்ள உச்சியானது பள்ளமாய்க் குழி விழுதல், வாந்தி, இருமுதல், முகம், மார்பு, கழுத்து இவைகள் வீங்கல், வயிறு, ஈரல், நெஞ்சு, தொண்டை, நாக்கு, இவைகள் வெந்து முலைப்பால் குடிக்க முடியாமல் அலறியலறி அழுதல், நாரை துவளல் போல் உடம்பு துவளல், கைகளும், கால்களும் குளிர்ந்து சில்லென்றிருத்தல், வயிறு பொருமி ஊதல், மிகவும் சூடாகச் சுரங்காய்தல், வாயில் நுரையாகவும், கோழையாகவும் நீர் வெளிப்படல், நாவரளல், கண் சொருகல், முகம் மஞ்சள் போல் நிறம் மாறல், மயக்கம், தலைநோ மிவைகள் காணில், சுழி கண மென்றறிவாய்.
(உருரு)

சுழிகணத்திற்கு—சண்பகப்பூ எண்ணெய்.

கட்டளைக் கலிப்பா.

பத்து காசெடை சண்பகப் பூவுடன்
பகருஞ் சாதியின் பத்திரி காசெடை
முற்றுங் கேளரைக் காசெடை ஆவினில்
முளைத்தெ ழுந்தகோ ரோசனை மூன்றுமாய்
எத்துங் கேளிவை நுண்பொடி யாய்விளக்
கெண்ணெ யானதில் ஓர்படி தன்னிலே
சற்றுத் தீயிற் கொதியிட் டிறக்கியே
தனைய னூர்க்கிடுந் தான்விதங் கேளுமே.

(பொ-ரை.)—சண்பகப்பூ பத்து காசெடை, சாதிபத்திரி ஒரு காசெடை, கோரோசனை அரை காசெடை, ஆகிய இவைகளைப் பொடித்து, ஒரு படி விளக்கெண்ணெயில் சேர்த்துக் காய்ச்சிப் பக்குவத்தில் இறக்கி, காலையில் துட்டெடை கொடுக்க, சுழிகணம், இருமல் நீங்கும். (உருசு)

சுழிகணத்திற்கு—உள்ளிக் குடிநீர்.

கட்டளைக் கலிப்பா.

கேளுந் துட்டெடை இட்டிட வேசுரம்
இறுகி றென்ன வயங்குஞ் சுழிகணம்
சூழு நோயும் இருமலும் தீர்ந்திடும்
சுழிக ணத்தின் சஞ்சீவிஇ தாமெண
வாழும் உள்ளி வசம்பும் உசிலையின்
வாய்த்த பட்டைஇம் மூன்று நறுக்கியே
நாழி நீரினில் ஊற்றி இறுத்திடு
தணியு மேசுழி தன்கணம் இன்றுமே.

(பொ-ரை.)—உள்ளி, வசம்பு, சீக்கராம்பட்டை, ஆகிய இவற்றைத் தனித் தனியே பொடித்து, வகைக்குப் பலம் ஒன்று எடுத்து, ஒருபடி நீரில் போட்டு எட்டொன்றுய்க் காய்ச்சி இறக்கி, வேளைக்கு இரண்டு சங்கு வீதம், காலை மாலை இருவேளையாக ஐந்து நாள் கொடுக்க, சுழி கணம் போம். (உருஎ)

ஈயக்கொழுந்து ரவிபுட எண்ணெய், குன்றிமணி வேர் ரவிபுட எண்ணெய்.

கட்டளைக் கலிப்பா.

இண்டு காரிஇம் பூரலின் வேர்கடு
இதைப்பொ டித்துழக் கெண்ணெயி லேற்றியே
மண்டு பானு புடம்வைத் தெடுத்ததை
மதலை யோர்சுழி மாந்தம் அறுக்கவே
கொண்ட குன்றி மணிவேர் கிலுப்பைவேர்
சுர்மு சுக்கை துளசிநற் கூவிளை
கண்டு கொண்டுமுன் போலே புடமிட்டுக்
கலந்துணச் சுழி காணுது பாருமே.

(பொ-ரை.)—இண்டங் கொழுந்து, கண்டங்கத்திரி வேர், இம்பூரல் வேர், கடுக்காய்த் தோல், இவைகள் வகைக்கு அரை பலம் எடுத்துப் பொடித்து, உழக்கு முத்தெண்ணெயில் கலக்கி, பத்து நாள் சூரியபுடம் வைத்தெடுத்து, காலையில் மாத்திரம் மூன்று அல்லது ஐந்து நாள் கொடுக்க, சுழி கணம் நீங்கும்.

(2) குன்றி, கிலுகிலுப்பை, முசுமுசுக்கை, துளசி, வில்வம், இவ்வேர்கள் வகைக்கு அரை பலம் எடுத்துப் பொடித்து, முன்போல எண்ணெயிற் கலந்து சூரியபுடம் வைத்து எடுத்து, காலையில் மாத்திரம் மூன்று அல்லது ஐந்து நாள் கொடுக்க, சுழிகணம் தீரும். (உருஅ)

சுழிகணத்திற்கு ஈருள்ளிக் கற்கம்.

தூதுவளை நெய்.

கட்டளைக் கலிப்பா.

பாரும் உள்ளி துருசுடன் வெந்தநீர்
பாலி றக்கிஇ லுப்பைப்புண் ணுக்கையும்
நீரி லேகரைத் தேகுழ விக்கிய
நீங்கும் இருமல் இளைப்பு சுழிகணம்
காரு தூது துளசி நுணுசங்கு
கருதும் இண்டுப் பொடுதலைச் செம்முள்ளிச்
சாறும் ஆவின்நெய் சீரக கற்கமும்
தணலெ ரிக்கச் சுழிகண மாறுமே.

(1) (பொ-ரை.)—ஈருள்ளி பலம் ஒன்று, துருசு பலம் ஒன்று இவ்விரண்டையும் பொடித்து அரை படி நீரிலிட்டு அரைக்கால் படி குடிநீராக்கி, அதில் இலுப்பைப் புண்ணுக்கு பலம் கால் கரைத்துக் குழவிக்கு காலை மாலை, இரு வேளையாக மூன்று நாள் கொடுத்தால், சுழிகண இருமல் நீங்கும்.

(2) தூதுவளை, துளசி, நுணு, சங்கு, இண்டு, பொடுதலை, செம்முள்ளி, இவைகளின் சாறுகள் வகைக்கு அரைக்கால் படி எடுத்து, பசுவின் நெய் அரைப்படியிற் கூட்டி, சீரகம் கால் பலத்தைக் கற்கமாய்ப் பசுவின் பாலில் அரைத்துக் கூட்டிக் காய்ச்சி, காலை மாலை இரு வேளையும் மூன்று நாள் உச்சிக் கரண்டி வீதம் கொள்ள, சுழிகணம் நீங்கும். (உருக)

சுழிகணம், உப்பிசம், கோழைக்கட்டுக்கு
குப்பைமேனி எண்ணெய்க் கற்கம்.

அறுசீர் விருத்தம்.

குப்பை மேனிச் சாற்றில்உப்பைக் கூடக் கலந்து வேப்பெண்ணெய்
செப்ப மாக மத்தித்துத் தேனே மூன்று நாள்புகட்டத்
தப்பில் லாம லேஇளைப்புத் தானே சுழிகணம் உப்பிசமும்
துப்பு நெஞ்சிற் கோழையுடன் துயரங் கெட்டோ டுமன்றே.

(பொ-ரை.) குப்பை மேனிச் சாற்றில் போதுமான உப்பை யரைத்துக் குழைத்துக் குழைப்பிக் கொஞ்சம் வேப்பெண்ணெய் கூட்டிக் கலந்து, காலை மாலை இரண்டு வேளையாக, வேளைக்கு அரைக்கால் வராகனெடையாக மூன்று நாள் புகட்ட, இளைப்பு, சுழிகணம், உப்புசம், கோழை, இவைகள் தீரும். (உரு0)

முலைப்பால் எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

முலைப்பால் கடுக்காய் காட்டுமல்லி முதிர்ந்த ஆலின் புல்லுருவி
இலைப்பால் இண்டு ஈருள்ளி இவையா மணக்கின் எண்ணெயுடன்
துலைப்பால் கருக்கி யெரித்ததனைச் சொன்ன படியே கொடுத்திடவே
சொலிப்பாய் வந்த சுழிகணங்கள் சொல்லா தோடிப் போய்விடுமே

(பொ-ரை.)—கடுக்காய்த் தோல், காட்டு மல்லியிலை, ஆலின் புல்லுருவியிலை, இண்டங் கொழுந்து, ஈருள்ளி இவைகள் வகைக்குக் கால் பலம். இவற்றை முலைப்பால் விட்டு நன்றாய் அரைத்து, ஆமணக்கெண்ணெய் **கால்** படியிற் கூட்டிக் காய்ச்சி, காலையில் மாத்திரம் தக்க அளவிற் கொடுக்க, கழி**கணம்** நீங்கும் **(உருக)**

### சுழிகணத்திற்கு—கடுக்காய் எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

கடுக்காய் காட்டு மல்லிகையும் கடிய குமரி வெந்தயமும்
மிடுக்காய்ச் சீரகம் இத்துடனே மேவுஞ் சாரணை ஈருள்ளி [ரேல்
முடுக்காய் ஆமணக் கெண்ணெயுடன் முடுகா தெரித்துக் கொடுப்பீ
துடுக்காய் வந்த சுழிகணந்தான் சொல்லா தோடிப் போய்விடுமே.

(பொ-ரை.)—கடுக்காய்த் தோல், காட்டு மல்லிகை, கற்றாழை, வெந்தயம், சீரகம், சாரணைவேர், ஈருள்ளி இவை வகைக்கு பலம் அரை எடுத்து, வெந்நீர் விட்டு நன்றாயரைத்து, ஆமணக்கெண்ணெய் அரைப்படியிற் கலந்து பக்குவமாகக் காய்ச்சி வடித்து, காலையில் மாத்திரம் உச்சிக் கரண்டி யளவு மூன்று அல்லது ஐந்து நாள் கொடுத்தால், சுழிகணம் நீங்கும். (உகூஉ)

### சுழிகணத்திற்கு—துளசி நெய்.

அறுசீர் விருத்தம்.

நாடுந் துளசி தூதுநுணா நல்ல சங்க னிண்டோடு
பூடும் பொடுதலை செம்முளிநீர் புகழு மாவி னெய்தனிலே
சாடுந் தணலி லிட்டுநன்றாய்த் தானே கொடுக்க வேமாறும்
ஆடுஞ் சுழிகண மானதெலாம் ஆறிப் போகுங் கண்டாயே.

(பொ-ரை.)—துளசிச்சாறு, தூதுவேளைச்சாறு, நுணாச்சாறு, நற்சங்கஞ் சாறு, ஈயக்கொழுந்தின் சாறு, பொடுதலைச்சாறு, செம்முள்ளிச் சாறு, இவைகள் வகைக்கு அரைக்காற்படி ஒரு மண் சட்டியில் ஊற்றி, அத்துடன் பசு நெய் அரைப்படி சேர்த்து அடுப்பேற்றிச் சிறுக எரித்துப் பக்குவத்தில் இறக்கி, காலையிலும் மாலையிலுமாக மூன்று அல்லது ஐந்து நாள் கொடுக்க, சுழிகணந் தீரும். (உகூங)

### சுழிகணத்திற்கு—நந்தியாவட்டை எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

நந்தியா வட்ட வேரு நல்லநாய்த் துளசி வேரும்
கந்திய சிவதை வேருங் காட்டுமல் லிகையின் வேரும்
அந்திய புன்னைக் காயின் அளவரைத் திப்பால் கேளாய்
சுந்தர கண்டங் கத்திரி தூதுளை சின்னி யாமே.

சின்னியு மணித்தக் காளி செறிந்தகொட் டைக்க ரந்தை
கொன்னிய குப்பை மேனி கோழியின் அவரைப் பத்ரம்
இன்னிவை சமன தாக இடித்தரைப் படிச்சா றுகும்
மின்னிய மாசி லாத விளக்கெண்ணெய் படியொன் றுமே.

ஒன்றதாய்க் கலந்தெ ரித்தே உண்மையாய் வடித்து வைத்துத்
துன்றிய பால கர்க்குத் துட்டெடை புகட்ட வேதான்
கொன்றிடுஞ் சுழிக ணத்தைக் குலவிய தொண்டைக் கட்டு
என்றதுந் தீரும் பத்யம் இன்பமாய்க் காத்தி டாயே.

(பொ-ரை.)—நந்தியாவட்டை வேர், நாய்த் துளசி வேர், சிவதை வேர், காட்டுமல்லிகை வேர், இவைகள் வகைக்குப் புன்னைக்காய் அளவு அரைத்து, கண்டங்கத்தரி, தூதுவளை, சின்னி, மணித்தக்காளி, கொட்டைக் கரந்தை,

குப்பைமேனி, கோழியவரையிலே, இவைளின் சாறு வகைக்கு அரைப்படி, விளக்கெண்ணெய் ஒரு படி, ஆகிய எல்லாவற்றையும் கலந்து அடுப்பேற்றிப் பக்குவமாக எரித்து வடித்து, குழந்தைகட்குக் காலையில் மாத்திரம் மூன்று அல்லது ஐந்து நாள் ஒரு துட்டெடை கொடுக்க, சுழிகணம் தொண்டைகட்டு இவை நீங்கும். தாய் இச்சாப்பத்தியம் இருக்க வேண்டும். (உகூச)

சுழிகண சுவாச காசத்திற்கு—கர்க்கடகசிங்கிக் குடிநீர்.

அறுசீர் விருத்தம்.

சிங்கிகர்க் கடகம், சீந்தில் சீரகம் வில்வ ஓடு
உங்கதி விடையந் தானும் உரோகணி கண்டங் காரி
பொங்கமா முசுக்கை முள்ளி புகல்கணே தூது வேளை
கங்கைநீர் காய்ச்சிக் கொள்ளக் கணஞ்சுழி சுவாசம் போமே.

(பொ-ரை.)—கர்க்கடக சிங்கி, சீந்தில்கொடி, சீரகம், வில்வப்பழ ஓடு, அதிவிடையம், கடுகுரோகணி, கண்டங்கத்திரி, முசுமுசுக்கைச் சமூலம், முள்ளிக்கீரை, சிறுதிப்பிலி, தூதுவளைச் சமூலம், இவைகளை வகைக்குக் கால் பலம் எடுத்து, இலைகளைச் குறுக அரிந்து சிவக்க வறுத்து, மற்றவற்றை இடித்துப் போட்டு அரை படி நீர் விட்டு, அரைக்காற் படியாகக் காய்ச்சிக் காலை, மாலை இருவேளையாக மூன்று அல்லது ஐந்து நாள் வேளைக்கு இரண்டு சங்கு வீதம் கொடுக்க, சுழிகணம், சுவாசம் நீங்கும். (உகூரு)

## (9) மகாகணக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

முகம்புறங் காலும் கையும் மோதியே மினுமி னுக்கும்
நகைவிழி வெளிரிக் காட்டும் நஞ்சுண்டாற் போல்ம யக்கும்
மிகமிக வெதுப்பும் உண்டாய் வெடித்துநா உதடு புண்ணாய்ச்
சுகமிலா வருத்தந் தோன்றும் சொல்மகா கணத்தின் வாறே.

இதை மாக் கணம் என்றும் சொல்வார்.

(பொ-ரை.)—முகம், புறங்கால், புறங்கை இவைகள் வீங்கல், அவ்வீக்கம் மினுமினுத்தல், இரண்டு கண்களும் வெளுத்தல், நஞ்சை சாப்பிட்டால் உண்டாம் மயக்கம் போல் மயக்கம் உண்டாதல், உடம்பில் மிகுதியாகச் சுரங் காய்தல், நாவும் உதடும் வெடித்துப் புண்ணுதல், யாதொரு நலமு மில்லாமல் துன்பம் உண்டாதல் என்பவைகள், மகா கணத்தின் குறிகளாம். (உகூகூ)

மகா கணத்திற்கு—சிறுகீரைவேர்க் குடிநீர்.

எண்சீர் விருத்தம்.

சிறுகீரை வேர்க்காந்தி கீழ்க்காய் நெல்லி
　　சிறுபீளை எருமுட்டைச் சீந்தில் தோடை
நறுகீரை யாகுமித் தனையு மொன்றாய்
　　நறுக்கியே நல்லதொரு பாண்டந் தன்னில்
வருகீரை இளவறுப் பாக வேதான்
　　வறுத்ததனைக் குடிநீராய் வற்றக் காய்ச்சி
இறக்கியே வைத்திறுத்துக் கொடுப்பீ ராகில்
　　ஏகுமகா கணமென்றே இயம்பி னாரே.

(பொ-ரை.)—சிறுகீரை வேர், விஷ்ணு கிராந்திச் சமூலம், கீழாநெல்லிச் சமூலம், சிறுபீளை யிலை, எருமுட்டைபீநாறியிலை, சீந்தில் கொடி, ஆடா தோடையிலை, இவற்றின் இலை வகைகளை வகைக்கு ஒரு பிடி எடுத்துக் குறுக அரிந்து இளவறுப்பாய் வறுத்துப் பின், சீந்தில் கொடி கால் பலமும், சிறு கீரைவேர் கால் பலமும் எடுத்து நறுக்கிப் போட்டு அரைப்படி நீர் விட்டு அரையாழாக்காகக் காய்ச்சி, காலையிலும் மாலையிலுமாக மூன்று நாள் அல்லது ஐந்து நாள் கொடுத்தால், மேற்படி மகாகணம் நீங்கும். இது ஒரு வேளையின் அளவென்றறிக. (உகூஎ)

## (10) ஊதுகணக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

காதுடன் கண்ணு டம்பு கனக்கவே வீங்கும் வற்றும்
போதவே நாவும் புண்ணுய்ச் பொருந்திய சுரமும் உண்டாம்
வேதுகை காலுஞ் சோர்ந்து வெளுத்திடும் அன்னந் தன்னை
ஊதுநற் கணமாம் என்றே உரைத்தனர் முனிவர் தாமே.

(பொ-ரை.)—ஊது கணத்தில் காது, கண், உடம்பு, இவை பளுவாக வீங்கி வற்றும், நாவு புண்ணுய்ச் சுரம் உண்டாகும், கைகால் சோர்ந்துவிடும், உடல் வெளுக்கும், அன்னம் செல்லாது. (உகூஅ)

## ஊது கணத்திற்கு—நீர்முள்ளி நாய்வேளைக் கற்கங்கள்.

நேரிசை வெண்பா.

நீர்முள்ளி சுட்டரைத்து நீள்கரிப்பான் தன்னுடைய
சாறதனில் வெந்நீ ரிடத்தணியும்—சாறதனில்
நாய்வேளை வேர்அரைத்தி நல்முலைப்பா லூதுகண
நோய்போகு மென்றே நுவல்.

(பொ-ரை.)—நீர்முள்ளிச் சமூலத்தைச் சுட்டெடுத்த கரியைக் கரிசலாங் கண்ணிச் சாற்றுல் அரைத்து, வேளைக்கு ஒரு கொட்டைப்பாக்களவு எடுத்து, காலை மாலை இரண்டு வேளையாக மூன்று நாள் வெந்நீரிற் கலக்கிக் கொடுத்தாலும், நாய் வேளை வேர்ப்பட்டையைக் கரிசலாங் கண்ணிச் சாற்றாலரைத்து வேளைக்குக் கொட்டைப் பாக்களவாக, காலை மாலை இரண்டு வேளையும் மூன்று நாள் முலைப்பாலிற் கலக்கிக் கொடுத்தாலும், ஊது கணம் தீரும். (உகூகூ)

## (10A) ஊது மாந்தகணக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

தானே ஊது மாந்தகணம் தனதாய் உரைப்பேன் மடமயிலே
வானே காலுங் கண்உடம்பும் வளமாய் வீங்கி நாபுண்ணுய்
ஆனே கேளாய் சுரம்உண்டாய் அன்னந் தண்ணீர் கொள்ளாது
கானே காலுங் கைசோர்ந்து கனத்த சுவாசம் அதிகமன்றே.

அதிகமாம் ஊது மாந்த கணமது பனிரண் டாண்டு
அதிகமாம் அந்நாள் மட்டும் ஆம்இது நோயின் காலம்
அதிகமாய் மருந்து கேளாய் அன்புடன் உரைப்பேன் தானே.
அதிகமாம் தேவி வாலை அருளினுல் உரைப்பேன் கேளே.

(பொ-ரை.)—ஊது மாந்தகணத்தில் கால், கண், உடல் இவற்றில் வீக்கம் உண்டாம், நாக்கு புண்ணுகும், சுரங்காயும், உணவு தண்ணீர் கொள்ளா, காலும் கையும் சோரும், மேல் சுவாசம் உண்டாகும். இது பன்னிரண்டு ஆண்டு வரை இருக்கும். (உ௭0)

ஊ து க ண மா ந் த த் தி ற் கு சி கி ச் சை.

அறுசீர் விருத்தம்.

உரைப்பேன் எந்தன் குருவருளால் ஓஓ முள்ளி நீர்முள்ளி
திரைப்பேன் ஈண்டு வேர்க்காயம் தேங்காய் நெற்றுப் பாலுடனே
கரைப்பேன் கையான் கரந்தையுடன் கண்டங் கத்திரி வசம்பேலம்
திரைப்பேன் வெட்பா லரிசியொடு திகழு மாதளம் பழச்சாறே.

பழமே வட்டத் திருப்பியுடன் பர்ப்பா டகநன் முத்தமுடன்
தழமே ஓரிதழ்த் தாமரையும் தண்தா மரையும் செங்கழுநீர்
மழமே சூரத் தாவாரை வல்லா ரையின்தன் சாறுடனே
வழுமே விளாவின் பிசின்வாகை மருக்கா ரைப்பிசி னுஞ்சேரே.

சேரே இலவம் பிசின்சேரு செங்கத் தாரி முருக்கஞ்சாறு
மாரே மாசிக் காயுடனே மகிமை கடுக்காய் அதிவிடயம்
சீரே வாலின் மிளகோடு சிவந்த சாதிப் பத்திரியும்
வாரே எல்லாம் வகைக்குக்கால் வளமாய்ப் பொடித்து ஒன்றுக்கே.

பொடித்திடு மருந்தி னேடே புகழ்விளக் கெண்ணெய் வார்த்தே
அடுத்ததோர் அடுப்பில் ஏற்றி அழகாகத் தீயை மூட்டி
வடித்துக் கடுகு திரண்டக்கால் வளமதாய் இறக்கிக் கொண்டு
தடுத்ததோர் தேவி மாதைத் தயவாய்ப்பூ சித்துப் போற்றே.

போற்றிய எண்ணெய் தன்னைப் புகழ்ந்துதுட் டெடைதா னீய
ஆற்றிய மூன்று வேளை அழகதாய்க் கொள்ளச் சொல்லு
மாற்றிய புளிப்பு தள்ளு வகையுப்புப் புகையு மாகா
ஏற்றிய கவிச்சே எள்ளு இவையெலாம் ஆகா வென்னே.

(பொ-ரை.)—முள்ளி, நீர்முள்ளி, இண்டுவேர், தேங்காய்ப்பால், கையான், சிவகரந்தை, கண்டங்கத்தரி, மாதளம்பழச்சாறு, ஓரிதழ்த்தாமரை, தாமரை, செங்கழுநீர், முருக்கு, வல்லாரை, இவைகளின் சாறு வகைக்கு கால்படி, பெருங்காயம், வசம்பு, ஏலம், வெட்பாலையரிசி, வட்டத் திருப்பி, பர்ப்பாடகம், கோரைக்கிழங்கு, சூரத்தாவாரை, விளாம்பிசின், வாகைப் பிசின், மருக் காரைப்பிசின், இலவம்பிசின், செங்கத்தாரி, மாசிக்காய், கடுக்காய், அதிவிட யம், வால்மிளகு, சாதிபத்ரி, இவைகள் வகைக்கு, கால் பலம் விளக்கெண் ணெய் படி ஒன்று, இவைகளில் சாறுகள் எண்ணெய் இவற்றை ஒன்றுய்க் கலந்து, மேற்படி சரக்குகளையெல்லாம் பொடிசெய்து மேற்படி சாற்றுலரை த்து அதில் கலந்து, அடுப்பேற்றிக் காய்ச்சிப் பக்குவ பாகத்தில் வடித்து, மூன்று நாள் காலையில் மாத்திரம் ஒரு துட்டெடை அளவாக, கொடுக்க ஊதுமாந்தம், கணம் நீங்கும், புளிப்பு, உப்பு, புகை, எள்ளு, கவிச்சு இவைகளைத் தாயும் குழந்தையும் தள்ளவேண்டும். (௨௭௧)

## (11) வரட்கணக் குறிகுணம்.

அறுசீர விருத்தம்.

நெஞ்சு துடிக்கும் புகைந்திருமும் நிறமும் வேறே நாகறுக்கும்
வஞ்சம் அறவே ஒருவேளை வந்தே சுரம் மெலாம்வெதும்பும்
மிஞ்சும் இருமல் வயிற்றிரைச்சல் விட்டுத் திடமெய் துரும்பெடுக்கும்
மஞ்சார் குழலாய் வரட்கணத்தின் வாறு மிதனை அறிவாயே.

அத்தியில் சுரமும் தோன்றும் அழன்றுநீர்த் தாக மாகும்
முற்றியே சிறுநீர் தானும் முறுக்கியே வெண்மை காணும்
சற்றுத்தான் வயிறு நொந்து சதிருடன் கடுப்பு மாகும்
வற்றிடுஞ் சரீரம் எங்கும் வரட்கணம் என்று சொல்லே.

நாக்கில் மஞ்சள் வெள்ளைமுள்ளு நடுவே வெடிப்பு மூன்றுருகும
பார்க்கப் பிள்ளை ஈடழியும் பருக்கா துடலு மிளைத்துவிடும்
மூக்கிற் சளியு மிகுதலுடன் முகமு மஞ்சள் பூத்திருக்கும்
தூக்க மிகவே மயக்கமுண்டாஞ் சோரும் வரளின் கணம்இதுவே.

(பொ-ரை.)—மார்பு துடித்தல், புகைந்து புகைந்து இருமுதல், உடல் நிறம் மாறுதல், நா கறுப்பு நிறமடைதல், ஒவ்வொரு வேளைகளில் சுரங் காய்தல், முன் சொல்லப்பட்ட புகைந்த இருமலன்றிச் சில வேளை அதிக மாய் இருமுதல், வயிற்றிலிரைச்சலுண்டாதல், உடம்பு பழையவன்மை கெட்டுத் துரும்பு போலாதல், எலும்பைப்பற்றிய சுரக்குறி காணல், உடல் கொதிப்பினுல் உமிழ் நீர்க் கோளம் வற்றித் தாகம் எடுத்தல், சிறு நீர் வெண்ணிறமடைதல், கொஞ்ச நேரம் வயிறு நொந்து தீடீரென்று வன்மையாய்க் கடுத்தல், உடம்பு முழுமையும் வற்றுதல், நாக்கில் மஞ்சள் நிறமுள்ளைப் போலவும் வெள்ளை நிற முள்ளைப் போலவும் ஒரு வகை முள் தோன்றி அவற்றுடன் மூன்று கீற்ருக வெடிப்புண்டாதல், பிள்ளைகளின் இயற்கை நிலை கெடுதல், உடல் என்ன உபசாரஞ் செய்தாலும் பெருகாமல் இளைத்தல், மூக்கில் சளி மிகுந்து மூக்கை அடைத்தல், முகம் மஞ்சள் பூத்தல் போலிருத்தல், தூக்கம் மிகுதல், மயக்கம் உண்டாதல், சோர்தல், என்னும் குறிகள் காணின், வரட்கண மென்றறிவாயாக. (உஎஉ)

## வரட்கணத்திற்கு—கீழாநெல்லி எண்ணெய்.

கொச்சகக் கலிப்பா.

ஆமணக்கின் நெய்நாழி ஆனபசுப் பால்நாழி
தாமணக்கு மேஅரைக்கால் தான்கீழ்க்காய் நெல்லியின்சாறு
வாய்மணக்கும் மேல்மதுரம் வாய்த்தகடு தான்றிசுக்கு
பூமணக்கும் வேர்காந்தி பொன்துளசி தூதுவளை.

வளையாம் பசரையுடன் வாகுபட வேசேர்த்தே
இளநீர் தனில்அரைத்தே எண்ணெய்தனில் விட்டெரித்துக்
கிளர்அன்னம் உண்டதன்மேல் கேளுநங் குடித்துறங்கக்
களையாக வேபேதி காலமே தானுகும்.

ஆகும் மிருமல்கணம் அத்திசுரம் உட்காய்ச்சல்
வாகுபட வேகடுப்பு வரட்கண மூலகணம்
பாகுமொழி மாமயிலே பத்தியாய்த் தீருமென்று
தோகைஉமை யாள்பாகன் சொன்னுர் முனிவோர்க்கே.

(பொ-ரை.)—ஆமணக்கு நெய் படி ஒன்று, பசுப்பால் படி ஒன்று, கீழா நெல்லிச்சாறு ஆழாக்கு ஆகிய இவைகள் மூன்றையும் ஒரு மண்சட்டியில் ஊற்றி, அதில் அதிமதுரம், விஷ்ணுகிராந்தி வேர், கடுக்காய்த் தோல், தான்றிக்காய்த் தோல், தோல் சீவின சுக்கு, துளசியிலை, தூதுவளை வேர், பசரைக் கீரை இவை வகைக்குப் பலம் ஒன்று எடுத்துப் போதுமான இளநீர் விட்டரைத்து மேற்படி எண்ணெயுடன் கூட்டிக் கலந்து எரித்து, பக்குவ பாகத்தில் வடித்து, இரவில் அன்னம் உண்டபின் (நாளுக்கு) ஒரு உச்சிக் கரண்டியளவாகக் கொடுத்து உறங்கச் செய்யின் காலையில் பேதியாகும், அதனால் இருமல், கணம், எலும்பைப்பற்றிய சுரம், உட்சுரம், வயிற்றுக்கடுப்பு, வரட்கணம், மூலகணம், இவை நீங்கும். இது இறைவன் முனிவர்களுக்குச் சொன்னதாகும். (உஎ௩)

## வரட்கணத்திற்கு—செம்முள்ளி எண்ணெய்.

எண்சீர் விருத்தம்.

முள்ளிவேர் செவ்வள்ளி தண்ணீர் மீட்டான்
முசுமுசுக்கை தூதுவளை கண்டங் காரி
தெள்ளுகம் பிப்பிசின்கா ரசைநற் சீரம்
திருகுகள்ளி வேருடனே மணித்தக் காளி
வெள்ளுள்ளி வசம்பினோ டொவ்வொன் றுக்கு
வராகனெடை விளக்கெண்ணெய் சமன்வ டித்தே
உள்ளுக்குக் கொடுத்துப்பின் மேலும் பூச
ஓடியலை புக்கும்வரட் கணமுந் தானே.

(பொ-ரை.)—முள்ளிவேர், செவ்வள்ளிக்கொடி, தண்ணீர்விட்டான் கிழங்கு, முசுமுசுக்கைவேர், தூதுவளைவேர், கண்டங்கத்திரிவேர், திருகுக்கள்ளிவேர், மணித்தக்காளிவேர், கம்பிப்பிசின், கருஞ்சீரகம், நற்சீரகம், வெள்ளுள்ளி, வசம்பு இவைகள் வகைக்கு ஒரு வராகனெடை எடுத்து இடித்துப் பொடியாக்கி வைத்துக்கொண்டு, சிற்றுமணக்கெண்ணெய் பதின்மூன்று பலத்தை ஒரு மண் சட்டியிலூற்றி, அதில் அப்பொடியைச் சேர்த்துப் பக்குவமாய்க் காய்ச்சி வடித்து, காலையில் மாத்திரம் மூன்று அல்லது ஐந்து நாள் உச்சிக் கரண்டி அளவு உள்ளுக்குக் கொடுத்து மேலுக்குந் தடவினால், வரட்கணமானது தீரும். (உஎச)

## (12) கொதிப்புக்கணக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

நெஞ்சு கொதிக்கும் விலாக்கொதிக்கும் நேரே நெற்றி வேர்வைவிடும்
பஞ்சைப் போலக் கண்வெளுக்கும் பார்க்கும் போது பலவிதமாம்
துஞ்ச வொண்ணா இருமல்வந்து துயரப் பட்டுத் தலைநோவாம்
கொஞ்சுங் குரலும் கம்மிவிடும் கொதிப்பு கணத்தின் குணமாமே.

(பொ-ரை.)—நெஞ்சு, விலா இவ்விடங்களில் மிகுதியாய்க் கொதித்தல், நெற்றிமுற்றிலும் வியர்வை விடல், கண்கள் பஞ்சுபோல் வெளுத்தல், பார்க்கும்போது பார்வைக்குப் பல விதமாய்த் தோன்றுதல், தூங்கவொட்டாமல் அடிக்கடி இருமல் உண்டாதல், அதனால் துன்பம் உண்டாய்த் தலை தாங்கமுடியாது நோதல், குரல் கம்முதல் என்பவைகள் கொதிப்புக் கணத்தின் குறிகுணங்களாம். (உஎரு)

கொதிப்புக் கணத்திற்கு—கற்றாழை எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

சிற்று மணக்குநெய் படியொன்று சிறந்த பழச்சா றிலந்தைச்சாறு
வற்று ஈருள்ளி யின்சாறும் வகைக்குக் கால்படி தானுக
நற்று மரைமலர் முகமாதே நகிலம் பொற்சை லத்துறழும்
கற்றைக் குழலே மதர்விழியே கரிய சீரக முங்காலே.

எண்சீர் விருத்தம்.

காலாகும் இவையெல்லாம் எண்ணெயிலே போட்டுக்
கருங்கற்று ழஞ்சோறு பலமு மொன்று
காலாக எழுசுத்தி செய்து போடு
கனமாக அடுப்பேற்றி மெழுகு பதமாக்குக்
காலாகக் குமரிச்சோறு சிவக்கும் போது
கண்டிறக்கி ஆறவைத்து நாளொன் றுக்குக்
காலாகக் கரண்டிநிறை அந்தி சந்தி
களிற்கொண்டு வரத்தீரு நோயைக் கேளே.

தீருமே பதினெட்டுக் கணச்சூ டெல்லாம்
செப்பரிய அத்திசுரம் அத்தி வெட்டை
தீருமே மேகவகை பித்த வெட்டை
தீதாக வரண்டஉடல் உலர்ந்த தேகம்
தீருமே சிறியோர்க்கும் பெரியோ ருக்கும்
சின்மயஞ்சேர் பிரமமுனி சொன்ன மார்க்கம்
தீருமே பத்தியமாய் இருந்தால் நண்டு
தினகரனைக் கண்டபனி போல்நோய் போமே.

(பொ-ரை.)—விளக்கெண்ணெய் ஒரு படி, பழச்சாறு, இலந்தைச் சாறு ஈருள்ளிச் சாறு, இவைகள் வகைக்குக் கால் படி, இவைகளை ஒரு மண்சட்டி யில் ஊற்றி, அதில் கருஞ்சீரகம் கால் பலம் மேற்படி சாற்றால் அரைத்துக் கலந்து, அத்துடன் எழுமுறை கழுவின கற்றாழஞ்சோறு பலம் ஒன்று கூடப்போட்டு அடுப்பேற்றிக் காய்ச்சி, கற்றாழைச்சோறு சிவக்கும்போது இறக்கி வடிகட்டி, அந்தி சந்தி கரண்டி வீதம் சில நாள் கொடுக்க, கொதிப் புக் கணம், அத்திசுரம், அத்தி வெட்டை மேக வகை, பித்த வெட்டை, வரண்டவுடல், உலர்ந்த தேகம் இவை தீரும். இது சிறியோர்க்கும், பெரி யோர்க்கும் ஆகும். இச்சாபத்தியமிருத்தல் நலம். (௨௭௬)

## (13) வீக்க கணத்தின் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

வீக்க கணமே சொல்லக்கேள் விரிவா யுடல மிகக்காயும்
சேக்கு மவ்வவ் விடந்தோறும் செரியா மலமே கட்டிவிடும்
ஆக்கு முடல முழுதிலுமே யாகும் வீக்கம் சூடதனால்
போக்கும் வழியைக் கண்டறிவாய் புகலு முறையாய் செய்துவிடே.

(பொ-ரை.)—உடல் முழுமையும் மிகக்காய்தல், உடம்பில் அவ்வவ்விடங் களில் சிவந்து காணுதல், செரியாமல் மலங் கட்டுதல், சூட்டினால் உடல் முழு வதும் வீக்கம் காணல் என்பவைகள் வீக்க கணத்தின் குறிகளென்றறிவாய். இதை அடியிற் குறிக்கப்படும் முறையாக மருந்தீந்து, நலத்திற்குக் கொண்டு வருவாயாக. (௨௭௭)

## வீக்க கணத்திற்கு—உள்ளி எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

உள்ளியும் வசம்பு மோமம் உயரதி மதுரம் கோஷ்டம்
வெள்ளில கிராம்பு சுக்கு மிளகுடன் ஏல மிப்பால்
கொள்ளக்கூத் தன்கு தம்பைக் கூறிய வேர்வ கைக்குப்
பொன்னிய வராகன் ஒன்று பொடிசெய்து பின்பு கேளே.

கேள்விளக் கெண்ணெய் யொன்றில் கிரமமாய்ப் போட்டு மேலும்
வாள்பெற இரண்டு சாமம் வளர்ஒளிப் புடத்தில் வைத்து
நாள்சிறு கரண்டி எண்ணெய் நல்கிடில் மதலை கட்குக்
காள்வினை யானே வீக்க கணமது தீரு மன்றே.

(பொ-ரை.)—உள்ளி, வசம்பு, ஓமம், அதிமதுரம், கோஷ்டம், கிராம்பு, சுக்கு, மிளகு, ஏலம், கூத்தன்குதம்பைவேர் இவைகள் வகைக்கு விராகனெடை ஒன்று எடுத்துப் பொடிசெய்து, சிற்றுமணக்கெண்ணெய் எட்டுப் பலத்தை ஒரு மண் சட்டியிலூற்றி, அதில் போட்டு மேலே ஒரு மெல்லிய துணி கட்டி இரண்டு சாமம் சூரியபுடம் வைத்துக் காலையில் மாத்திரம் மூன்று நாள் அல்லது ஐந்து நாள் சிறு கரண்டி அளவு கொடுத்தால் வீக்க கணம் நீங்கும். (உஎஅ)

## (14) பிறக்கணக் குறிகுணம்.

எண்சீர் விருத்தம்.

தாக்கிடுவாய் * * * * *
* * * * * *

தூக்கிடுமே மலபேதி பச்சென் றேதான்
தோய்ந்ததயிர் போலவுமே வயிறு முப்பித்
தூக்கமிகும் பால்அருந்தும் கக்கும் காயும்
சொருகிவிழி கால்கைகள் சில்லென் றேதான்
ஏற்கையிலே தலைபுரட்டல் குணங்கள் கண்டால்
இயல்பான பிறக்கணமென் றியம்ப லாமே.

(பொ-ரை.)—மலம், பச்சென்றுவது, தயிர் போல் வெள்ளை நிறமாகவும், கட்டியும் நீருமாகவாவது வயிறு உப்பியுப்பிப் பேதியாதல், தூக்கமிகுதல், பால்நன்றுய் உண்ணல், ஆனுல், குடித்த பாலை உடனே கக்கிவிடல், உடல் காய்தல், கண் சொருகுதல், கால் கைகள் சில்லென்றிருத்தல், தலை புரட்டுதல் என்னும் இக்குணங்கள் காணில், பிறக்கண மென்றறிந்து கொள்வாய். (உகூக)

## பிறக்கணத்திற்கு—வல்லாரை எண்ணெய்.

எண்சீர் விருத்தம்.

இயம்பாரை கோழிகோரை ஜனகி வேளை
இலைவெதுப்பி மிரட்டிபுலி இடுகால் புள்ளு
சுயமாக வகையெல்லாஞ் சாறு வாங்கிச்
சூட்டதிலே எண்ணெய்ச்சேர் சமன தாக
வயம்உள்ளிக் கரியமணி இருஷி மூலம்
வகைக்கழஞ் சிடித்திட்டுத் தீயை மூட்டு
நயமாக முன்போல் காசெடையே வாரு
நாள்மூன்றில் பிறக்கணமும் நாடா தன்றே.

(பொ-ரை.)—வல்லாரை, கோழியவரை, கஞ்சாங்கோரை, ஜானகிப்பூண்டு, வேளைக்கீரை, ஒற்றைப்பேய்மிரட்டி, இரட்டைப்பேய்மிரட்டி, ஈயக்கொழுந்து, செருப்படி ஆகிய இவைகளைத் தனித்தனியாக இடித்துப் பிழிந்தசாறு கால்படி வீதம் மண்பாண்டத்திலூற்றி, அதில் இரண்டேகால் படி சிற்றுமணக்கு நெய்விட்டுக் கலந்து, வெங்காயம், மிளகு, வசம்பு, இவை வகைக்கு ஒன்றேகால் வராகனெடை நசுக்கிக் கலந்து, பக்குவமாகக் காய்ச்சி வடித்து, காலையில் மாத்திரம் காசெடையளவாக மூன்று நாள் கொடுத்தால், பிறக்கணம் தீரும். (உ௪0)

## (15) அந்தகக்கணக் - குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

உச்சி மூளை தனைப்பற்றி உடலம் எங்கும் வெதுப்புண்டாம்
மிச்ச மாக நாஉலரும் விழிக ளிரண்டும் வெளுப்பெய்தும்
பச்சை மஞ்ச ளதுபோலே பசும்பொன் னிறமாய் முகமினுக்கும்
அச்சம் புரியு முலையாளே அந்தகக் கணமென் றறிந்துரையே.

(பொ-ரை.)—சுரம், முதலில் உச்சியையும் மூளையையும் பற்றிப் பிறகு உடல் முழுதும் வீசுதல், நா அதிகமாய் உலர்தல், கண்களிரண்டும் வெளுத்தல், பச்சைமஞ்சள் அல்லது பசும்பொன் நிறம்போல முகம் மினுமினுத்தல் என்னும் இக்குறி குணங்கள் காணின், அந்தகக் கணமென்றறிவாய். (உ௪க)

## அந்தகக் கணத்திற்கு—பொன்னுங்காணிகற்கம் பற்று.

அறுசீர் விருத்தம்.

பொன்னுங் காணி சிறுகீரை பூலா அவுரி வேருடனே
பன்னும் தேற்றான் கடுக்காயும் பலமோ ரொன்றாய்த் தானரைத்துப்
பொன்னே ஆவின் வெண்ணெயுடன் புரட்டி யருந்த அதனுடனே
மின்னார் முலைப்பால் கலந்தொக்க வீறு சிரத்தில் தப்புவதே.

தப்பு மருந்து உலர்ந்தஉடன் தள்ளிப் பின்னுந் தப்புவிக்கச்
செப்பு மருந்து தனைத்தினமும் தின்னப் பார்த்துத் தான்கொடுக்கக்
கொப்புக் குழையா யிப்படியே கொடுக்க மூன்று தினந்தானும்
தப்பு விதியா லுந்திரும்பும் தயவா யென்னச் சாற்றினரே.

(பொ-ரை.)—பொன்னுங்காணிக்கீரை, சிறுகீரை, பூலாவிலை, அவுரிவேர்ப்பட்டை, தேற்றான்கொட்டை, கடுக்காய்த் தோல் இவைகள் வகைக்கு ஒவ்வோர் பலம் எடுத்துச் சேர்த்து அரைத்து, ஆவின் வெண்ணெயுடன் கூட்டி, கொட்டைப்பாக்களவு மூன்று நாள் காலை, மாலை, இருவேளையும் கொடுத்து, மேற்படி அரைத்த மருந்தை வெண்ணெயுடன் கலக்காமல் முலைப்பாலிற் கலந்து தலையிற் பற்றுபோடவும், அப்படி போடப்பட்ட பற்று உலர்ந்து விட்டால் அதை நீக்கி மீண்டும் போட்டு வந்தால், மூன்று நாளில் அந்தகக் கணந் தீரும். (உ௪உ)

## (16) மந்தாரகணக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

மந்தார கணத்தின் வாறு வகையறிந் திடவே கேளாய்
முந்தியே கணமு மாந்த மோதியே இசைந்து கூடில்
சந்தியில் சுரம யக்கும் சார்ந்திடும் சுவாசம் வாங்கும்
கந்தியே வயிறும் உப்பும் கணத்தில்மந் தார மாமே.

(பொ-ரை.)—கணமும், மாந்தமும் ஒன்று சேர்ந்தால், சந்திகாலங்களில், சுரம், மயக்கம், விடா மேல் மூச்சு, வயிறு உப்புதல் என்னும் குறிகள் காணும். இவை மந்தாரகணமாம். (உஅ௩)

மந்தார கணத்திற்கு—நாயுருவி எண்ணெய்.

எண்சீர் விருத்தம்.

நாயுருவிச் சாறுடனே கரிசலாங் கண்ணி
நல்லதொரு வல்லாரைச் சாறுடனே இன்னம்
தூயகவிழ் தும்பைகண் டங்கரிய நொச்சில்
சொற்சா றுழக்குவகை எண்ணெய்படி யொன்று
பாயும்வெள் ளுள்ளிதிரி கடுகுதிரி பலையும்
பாகபலம் இலவங்கம் வசம்பிருவ ராகன்
ஆய்பதக்கு நீர்வற்றக் கடுகுமது சிவந்தால்
ஆம்எட்டுக் கணங்களையும் அடக்குமிது தானே.

(பொ-ரை.)—நாயுருவிச்சாறு, கரிசாலைச்சாறு, வல்லாரைச்சாறு, கவிழ் தும்பைச்சாறு, கண்டங்கத்திரிச்சாறு, கருநொச்சிற்சாறு, என்னும் இச் சாறுகள் வகைக்கு உழக்கு ஒன்று, சிற்றுமணக்கு எண்ணெய் படி ஒன்று, இவைகளை ஒரு மண் சட்டியில் ஊற்றிக் கலந்து அதில், வெள்ளுள்ளி, சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய்த் தோல், நெல்லிவற்றல், தான்றித்தோல், இலவங்கம், வசம்பு இவை வகைக்கு இருவராகனெடை எடுத்து இடித்து, பதக்கு நீர் விட்டு எட்டில் ஒன்றாகக் காய்ச்சிய குடி நீரும் சேர்த்து எரித்துப் பக்குவத்தில் வடித்துக் கொள்ளவும். இதைக் காலையில் மாத்திரம் ஒரு கரண்டி வீதம் கொடுக்க, மந்தார முதலிய எண்வகைக் கணங்கள் நீங்கும். (உஅச)

(17) எரிகணக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

பாயில் கிடக்க ஒட்டாது பதைத்தே எரிவு மிகவுண்டாம்
வாயில் மூச்சுப் பறிந்துவிடும் வாச உமிழ்நீர் வடிந்துவிழும்
நோயில் பட்டு மிகஅழுமே நோக்குங் கீழே முகஞ்சாய்க்கும்
ஆயுள் வேத வைத்தியருக் கறைந்தோம் இதுவே எரிகணமே.

(பொ-ரை.)—பாயில் படுக்க முடியாதபடி உடம்பு முழுமைக்கும் எரிச்சலுண்டாதல், அதனால் குழந்தை துடித்தல், வாய் வழியே மூச்சுவிடுதல், வாயில் ஒரு வகை வெப்பு நாற்றமுள்ள உமிழ் நீர் வடிதல், இந்நோய்களைத் தாங்கமுடியாதழுதல், தலை கவிழ்ந்து கீழ் நோக்கல், முகத்தை நேரே வைக்கமுடியாமல் சாய்த்து வைத்துக் கொள்ளல் என்னும் இக்குறிகள் காணின், எரிகணமென்றறிவாய். (உஅடு)

எரிகணத்திற்கு—குரும்பை எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

தென்னங் குரும்பைச் சாறுழக்கு சீராந் தகரைச் சாறுழக்கு
வண்ண முலையீர் பழம்பாசி வகையீ ருழக்குச் சாறுள்ளி
இன்னங் குமரி வேர்ச்சாறு மினிய வலாரை மஞ்சணத்தி
கன்னங் கறுத்த எண்ணெய்உரி கலந்தே ஒன்றாய்க் காய்ச்சுவதே,

ஏலமும் அரைக்க ழஞ்சா மிலவங்கப் பட்டை கோட்டம்
சாலநற் சீர கந்தான் சந்தனம் மதுரந் தாக்கிக்
காலமே வடித்த எண்ணெய் காசெடை உள்ளே கொள்ள
ஆலமாங் கணங்கள் எட்டும் அறுமென்றே ரிஷிசொன் னூரே.

(பொ-ரை.)—தென்னங்குரும்பைச்சாறு படி கால், தகரைச்சாறுபடி கால், பழம்பாசிச்சாறு படி அரை, வெங்காயச் சாறுபடி அரை, குமரிவேர்ச்சாறு படி அரை, வல்லாரைச்சாறு படி அரை, நுணுப்பட்டைச் சாறு படி அரை, இவைகள் எல்லாவற்றையும் ஒரு மண் சட்டியிலூற்றி அதில் எண்ணெய் படி அரை கலந்து அதில் ஏலம், இலவங்கப்பட்டை, கோட்டம், சீரகம், சந்தனம், அதிமதுரம் இவைகள் வகைக்கு அரைக் கழஞ்சு இடித்து மேற்படி சாற்றால் அரைத்துச் சேர்த்துக் காய்ச்சிப் பக்குவத்தில் வடித்துக் கொள்ளவும்.

இந்த எண்ணெயில் ஒரு காசெடை காலையில் மாத்திரம் ஐந்து அல்லது ஏழு நாள் கொடுக்க, எரி கணம் முதலிய எண்வகைக் கணங்கள் நீங்கும். (உஅசு)

### (18) நீராமகணக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

தண்ணீருஞ் சீதத் தோடே தான்பச்சை மஞ்ச ளாகும்
கண்ணீரும் பீளை பாய்ந்து கடுப்புடன் வலித்துச் சோரும்
உண்ணீரு முத்துப் போல ஓடவே கழிந்த தாகில்
தெண்ணீராம் நீரா மத்தை எவருளார் தீர்க்க வல்லோர்.

(பொ-ரை.)—தண்ணீரும் சீதமும் கலந்து பேதியாதல், அத்தண்ணீர் பச்சை மஞ்சளை அரைத்துக் கலக்கின நீர்போலிருத்தல், அச்சீதம் வெண்மை நிறமாயிருக்க வேண்டியதாயினும் அத்தண்ணீரின் நிறமான மஞ்சளை யே அடைந்து நெய்ப்பாயிருத்தல், கண்களில் பீளை சேர்ந்து நீர் வடிதல், வயிறு கடுத்தல், உடல் சோர்வடைதல், குடிக்கின்ற தண்ணீர் அப்படியே குடித்தது போலவே நீராய்க்கழிதல் என்னுங் குறிகள் கண்டால், நீராம கணமென்று அறிந்து கொள்வாய். ஆயினும், இந்நோய் எளிதில் தீராத நோயாம், ஆதலின் இதைத் தீர்க்கவல்லவர் ஒருவருமில்லையாம். (உஅஎ)

### நீராமகணத்திற்குஞ் சீதகணத்திற்கும்—மணித்தக்காளி நெய்.

அறுசீர் விருத்தம்.

சட்டியைக் காய வைத்துத் தவளவான் வெண்ணெய் தானும்
அட்டெலி மிச்சங் காயின் அளவது போட்டு ருக்கிக்
கொட்டிய மணித்தக் காளி கொட்டைப் பாக்களவ ரைத்தே
இட்டஅந் நெய்யிற் போட்டே எரித்திளம் பதத்தி றக்கே.

இறக்கியே ஆற வைத்தங் கெழில்சிறு பிள்ளை கட்கே
அறக்கிக்கா சளவு தானும் ஐந்துநாள் கொடுக்க மற்ற
உறக்கிய பெரிய பிள்ளைக் கொருநல்துட் டெடைகொ டுக்கக்
கறுக்கிய வெள்ளைச் சீத கணமது தீருந் தானே.

(பொ-ரை.)—பசுவின் வெண்ணெய் எலுமிச்சங்காயளவு எடுத்து ஒருமண் சட்டியிலிட்டு உருக்கி, அவ்வெண்ணெய் நன்றாய் உருகும்போது மணித்தக் காளி இலை கொட்டைப்பாக்களவு அரைத்து கலக்கி எரித்து, இளம்பதத்தில் வடித்துக் கொண்டு ஆறவைத்து, அரைக்காசளவு சிறு பிள்ளைகட்கும், துட் டெடை வீதம் பெரிய பிள்ளைகட்கும் காலை மாலை இரண்டு வேளையும் ஐந்து அல்லது ஏழு நாள் கொடுக்க, நீராமகணம் தீரும். (உஅஅ)

(19) ஆமகணக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

ஆம கணத்தின் குணங்கேளாய் அடைவடை வாக வெதும்பாது
சாமந் தோறும் வெதும்பிநிற்கும் தண்ணீர் உழலே உண்டாகும்
சேமத் துடல மிகஇளைக்கும் சீறி யழுமே பசியில்லை
நாமந் தளரும் இதுதானும் நடுங்கி யிருக்குங் கண்டாயே.

சுழிக்கும் பொருமும் வயிறிழியும் சுவாச மிகவும் உண்டாகும்
கழுத்தை நாணிக் கால்குளிர்ந்து கண்ணை மூடி விழியாது
அழுத்த மான சுரந்தோன்றும் அயர்ந்து சீறித் திடுக்கென்னும்
சுழிக்கும் ஆம கணமென்று சொன்னர் அரனர் தோகைக்கே.

(இதுவுமது.)

என்றே ஆம குணங்கேளு இனிதாய் நெஞ்சு தான்துடிக்கும்
வண்டே சிறுநீர் மஞ்சள்நிறம் வகையாய் புகையு மேல்கடுப்பு
கண்டம் உடம்பு நிறம்வேறும் கனமாய் வந்தே ஒருவேளை
நன்று யூதல் சர்வாங்கம் நலமாய் நோதல் மிஞ்சுமென்றே.

மிஞ்சும் வயிற்றில் இரைச்சலுடன் மிகவும் தலையி னேவாதல்
கஞ்ச மூக்கு மேலெழும்பும் கனமாய் சுவாச மிகவெழும்பி
துஞ்சும் உடம்பு மேல்வரண்டுத் துரும்பு போலே வடிவெடுக்கும்
கெஞ்சும் ஆம கணம்இதுதான் கேளா யிந்நோய் ஓராண்டே.

(பொ-ரை.)—சுரம் உடலில் தோன்றி முறையே ஏறுவதும் இறங்குவது மின்றி ஒவ்வொரு சாமம் விட்டும் ஒவ்வொரு சாமம் காய்வதுமாகச் சுரமடித் தல், தண்ணீர் வேட்கை உண்டாதல், உடம்பு மிக இளைத்தல், சீறிச் சீறியழு தல், பசியில்லாமை, சிந்தை மாறல் உடல் நடுக்குதல், வயிறு சுழித் துச்சுழித்துப் பொருமுதல், வயிறு பேதியாதல், சுவாசம் மிக உண்டா தல், கழுத்தைக் கீழே தொங்க விட்டிருத்தல், கால் குளிர்தல், கண்ணை மூடிக் கொண்டு இருத்தல், சில வேளை அதிகசுரந்தோன் றல், சீறித் திடுக்கிடல், ஒரு கொள்கை.

மார்பு துடித்தல், சிறு நீர் மஞ்சள் நிறமாயிறங்கல், அந்நீரில் புகை யைப் போல் மிக்க ஆவிதோன்றல், உடம்பு கடுக்குதல், கண்டம் உடம்பு இவ் விடங்களின் இயற்கை நிறம் மாறி வேறு நிறமாதல், சில வேளை உடம்பு கனத்து மிகவும் ஊதுதல், உடம்பு முழுமையும் தாங்க வொண்ணுதபடி நோதல், வயிற்றில் இரைச்சல், அதிகமாகத் தலை நோதல், மூக்கு மேலுக் குக் கிளம்பிக் காட்டல், அதிகமாக மேற்சுவாசம் உண்டாதல், தோல் வரளு தல், துரும்பு போல் உடம்பிளைத்தல் என்னும் இவைகள் காணின், ஆமகண மென்பது மற்றொரு கொள்கை. இவ் வாமகணமானது கணந்தொடர்தற் குரிய ஆண்டிலிருந்து ஓராண்டு வரைக்கும் தொடர்வதாம். (உஅக)

ஆமகணத்திற்கு—இண்டெண்ணெய்.

எண்சீர் விருத்தம்.

ஆண்டென்ன இண்டம்வேர் இண்டந் தண்டு
அன்பான சாறதிலே நாழி வாங்கிப்
பூண்டென்னக் குமிழிஞெடு மாசிப் பத்திரி
புங்கிஞெடு நிலத்துளசி யுள்ளிச் சாறு

தாண்டென்ன முடக்கொற்ருன் தூதுளையின் சாறு
தனதான நுணுஇலையின் சாற்றி ேேடு
வாண்டென்ன வல்லாரை கஞ்சாங் கோரை
வகைக்கிதுகால் படிச்சாறு வாங்கு வாங்கே.

வாங்கியே எண்ணெய்படி ஒன்று விட்டு
வகையான சாதிக்காய் ஏலம் இராம்பு
வாங்கியே கடுகுரோ கணிக டுக்காய்
வால்மிளகு ஓமமுடன் வசம்பு சுக்கு
வாங்கியே வகைக்குப்பலம் நிறுத்துக் கொண்டே
வறுத்துமே தூளிடித்து வகையாய்ச் சேரு
வாங்கியே அடுப்பேற்றிக் காய்ச்சிக் கொண்டு
வற்றியபின் கடுதிரண்டால் இறக்கி டாயே.

இறக்கிடாய் மனேன்மணிதன் பூசை செய்து
ஏகாட்சர பூரணத்தை மனதில் போற்றி
இறக்கிடாய் நாளஞ்சு கரண்டி வீதம்
இதமாகக் கொடுத்துவிடு அஞ்ச வேண்டாம்
இறக்கிடாய் முன்சொன்ன நோய்க ளெல்லாம்
எளிதான ஆமகணம் பறந்து ஓடும்
இறக்கிடாய் ஆமகணம் மாந்த மெல்லாம்
என்னசொல்வேன் தீருமிந்த வித்தை பாரே.

வித்தைபார் சேத்மபண்டம் வாயு பண்டம்
விருப்பமுடன் தள்ளிவிடு இதற்கா காது
வித்தைபார் நிலத்துளசி பிட்ட வித்து
விதமாகப் பிழிந்தந்தி கொடுத்து வாநீ
வித்தைபார் உதயத்தில் எண்ணெய் வாரு
விவரமாய் அந்தியிலே கியாழம் ஏற்று
வித்தைபார் பிள்ளைவலி ஆமம் மாந்தம்
வீறிட்டு மோடுமே இதனுல் பாரே.

(பொ-ரை.)—இண்டம் வேர்ச்சாறு படி ஒன்று, இண்டந்தண்டுச்சாறு படி ஒன்று, குமிழ், மாசிப்பத்திரி, புங்கு, நிலத்துளசி, உள்ளி, முடக்கற்ருன், தூதுவளை, நுணுயிலை வல்லாரை, கஞ்சாங் கோரை, இவைகளின் சாறு வகைக்குப் படி கால், இவைகளை யெல்லாம் ஒரு மண் சட்டியில் ஊற்றி, அதில் சிற்ருமணக்கு எண்ணெய் ஒரு படி சேர்த்து, சாதிக்காய், ஏலம், கிராம்பு, கடகரோகணி, கடுக்காய்த்தோல், வால்மிளகு, ஓமம், வசம்பு, சுக்கு, இவைகள் வகைக்கு ஒரு பலம் எடுத்து இளவறுப்பாகத் தனித்தனி வறுத்துத் தூள் இடித்து வடிகட்டி அவ்வெண்ணெயிற் சேர்த்து அடுப்பேற்றி எரித்துப் பக்குவம் வந்து கடுகுதிரளும் பதத்தில் இறக்கிக்கொண்டு, நாள் ஒன்றுக்குக் காலையில் மாத்திரம் ஒரு வேளையாக ஒரு உச்சிக்கரண்டி வீதம், ஐந்து நாள் கொடுத்து மாலையில் போதுமான நிலத்துளசியைப் பிட்டவித்துப் பிழிந்த நீரை வடிகட்டி இரண்டு உச்சிக்கரண்டி கொடுக்கவேண்டும். அப்படி கொடுத்தால் ஆமகணம், வலிமாந்தம் இவைகள் நீங்கும்.

பத்தியம்.—சிலேஷ்மபண்டம், வாயு பண்டம் இவைகள் ஆகா. (உகூ0)

## ஆமகணத்திற்கு—வேலிப்பருத்தி எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

வேலிப் பருத்தி கோழிஅவரை வேரும் இளுவை பொடுதலேயும்
பாலிற் பெரிய சிவதைகள்ளி பச்சை வெளிச்சை வசம்புள்ளி
சீலக் கடுகு ரோகணியும் சீரங் கரிய சீரகமும்
ஏலக் குழலாய் நிறைகழஞ்சொன் றிதமாய்க் கூட்டிக் கொள்வாயே.

நீலச் சிற்று மணக்கெண்ணெய் நிகர்வெள் ளாட்டுப் பால்விட்டுச்
சால வெரித்து முலேக்காம்பில் சற்றே தடவி முலேகொடுக்க
ஆலித் துண்ணும் பிள்ளேதனக் காமம் வாரா தன்றியுமே
சூலிக் கெண்ணெய் கொடுத்தாலும் தோன்று தாமம் தோன்
[றுதே.

(பொ-ரை.)—வேலிப்பருத்தி வேர், கோழி அவரை வேர், இளுவை வேர், பொடுதலே, சிவதை, கள்ளி, பச்சை வெளிச்சை, வசம்பு, உள்ளி, கடுகு ரோகணி, சீரகம், கருஞ்சீரகம் இவைகள் வகைக்குக் கழஞ்சு ஒன்று எடுத்து இடித்து, வெள்ளாட்டுப் பால் விட்டரைத்துச் சிற்றுமணக்கெண்ணெய் படி அரை, வெள்ளாட்டுப் பால் படி அரை, இவற்றை ஒரு மண் சட்டியில் விட்டுக் கலந்து அதில் மேற்படி அரைத்த மருந்துகளேக் கரைத்து அடுப்பேற்றிச் சிறு தீயால் எரித்துப் பக்குவபாகத்திலிறக்கி வடித்துப் பால் குடிக்குமிடத்தில் தடவிக் குழந்தையைப் பால் குடிக்கும் படி செய்தால், மூன்று அல்லது ஐந்து நாளில் ஆமகணந்தீரும்; கர்ப்பமாயிருப்பவர்களுக்கு இவ்வெண்ணெய் கொடுத்தாலும் பிறக்கும் குழந்தைகளுக்கு ஆமகணம் உண்டாகாது.
(உ௧௧)

## (20) முக்குக்கணத்தின் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

சோகமாய் நாக்கு வெந்து சுரமுடன் தலேயு நாணித்
தாகமாய் வயிற்றைப் பற்றித் தான்சீதம் ரத்தம் வீழும்
மாகமாய் உறுப்பு தள்ளி மாறுட்ட லுடல்ந டுக்கல்
தோகையே கேளாய் முக்கு கணமெனச் சொல்லு வாயே.

கக்கு முலேயும் உண்ணுது காலுங் கையுங் குளிர்ந்திருக்கும்
சொக்கும் உடலும் கண்சோரும் தொக்கு மிளேக்கு முடல்கறுக்கும்
நிற்குங் கடுக்கும் ஆசனவாய் நெருப்புப் பட்டாற் போல்எரியும்
முக்குக் கணத்தின் குணமிதென்று மொழிந்தோம் இதனேப்
[பாராயே.

(பொ-ரை.)—சோகம், நாவெந்து புண்ணுதல், சுரம் உண்டாதல், தலேயைத் தொங்கவிடல், தாகமுண்டாதல், சீதமும், ரத்தமும் ஆகவே வயிறு கழிதல், மலவாய் முக்கிமுக்கி வெளியில்வரல், அறிவு மாறல், உடல் நடுக்கல், வாந்தி, முலேயுண்ணுமை, காலுங் கையும் குளிர்ந்திருத்தல், மயங்கிக் கிடத்தல், கண் சோர்தல், உடல் இளேத்தல், உடல் கறுத்தல், ஆசனவாய் கடுக்குதல், அது நெருப்புப்பட்டால் போல் எரிதல் என்னும் இக்குறிகள் காணின், முக்குக்கண மென்றறிவாய். (உ௧௨)

## முக்குக்கணத்திற்கு—வில்வஎண்ணெய், இண்டங்குடி நீர்.

### அறுசீர் விருத்தம்.

வற்ற வில்வம் விலாமிச்சு வகையாய் விட்டுணு காந்தியுடன்
முத்தம் ஓரிதழ்த் தாமரையும் முருங்கை வித்துத் துளசிவிதை
கற்ற கோங்கின் பிசினோடே கனத்தா வாரைப் பிசின்கூட்டி
அத்தங் கோஷ்ட மதுரமுடன் அக்கார காரந் தாளிசமே.

தாளிச மெண்ணெய் நாழி தார்பெறு மருந்தெல் லாந்தான்
வாளிசம் வறுத்தி டித்து வகைக்கொரு பலமே சேரு
மாளிசம் குமரி நீர்கால் வகைமுலைப் பால்கா லாகும்
ஆளிசம் படிய ரைக்கால் அழகுள நிம்பச் சாறே

சாறிது எண்ணெ யொன்றுய்ச் சமரசங் கலந்து கொண்டு
வாரிது அடுப்பி லேற்றி வகையதாய்த் தீயை மூட்டிக்
காரிது கடுகு கண்டால் கடுகநீ யிறக்கிக் கொண்டு
மாரிது வடுகன் பூசை மனோன்மணிப் பூசை செய்யே.

செய்துநீ யெடுத்துக் கொண்டு செயம்பெறத் துட்டெடைதான்
வைதுநீ வைத்து வாயில் வகைமூன்று நாள்தான் வாரு
கைதுநீ யிண்டந் தண்டைக் கண்டமாய் நருக்கிக் கொண்டு
மைதுநீ சீர கத்தை மலர்த்திடப் பொரித்துக் கொள்ளே.

பொரித்துநீ யிண்டந் தண்டைப் பொறுமையா யூதிப் போட்டுத்
தரித்துநீ யதனிற் போட்டுத் தண்ணீர்காற் படிதான் வார்த்து
வறுத்துநீ யெட்டொன் றுக்கி வார்ப்பது மூன்று வேளை
தெறிக்குமே கணமுன் சொன்ன தெல்லாந்தா னோடிப் போமே.

ஓடிடு மைந்து வேளை உறுதியாய்க் குடிக்கச் சொல்லு
வாடிடு முதய வேளை வசனித்த வெண்ணெ யைநீ
ஆடிடு மவுழ்தந் தன்னால் அடங்கிடும் நோயெல் லாந்தான்
தேடிடும் தருமம் வந்துச் சிக்கென வெய்துந் தானே.

(பொ-ரை.)—வில்வவேர், விலாமிச்சவேர், விஷ்ணுகிரந்தி வேர், கோரைக் கிழங்கு, ஓரிதழ்த்தாமரை வேர், முருங்கைவித்து, துளசிவித்து, கோங்கிலவம்பிசின், ஆவாரம்பிசின், கோஷ்டம், அதிமதுரம், அக்ராகாரம், தாளிசபத்திரி வகைக்கு ஒரு பலம், எண்ணெய் படி ஒன்று, கற்றாழைச் சாறுபடி கால், முலைப்பால் படி கால், பழச்சாறு அரைக்கால் படி ஆகிய இவற்றின் சாறுகளையும் எண்ணெயையும் ஒரு மண் சட்டியிலூற்றிக் கலந்து சரக்குகளையும், வேர்களையும், பிசினியையும் வறுத்து இடித்து அச்சாற்றிற் சேர்த்து கடுகு பதத்தில் எண்ணெய் வடித்து, மூன்று நாள் காலையில் மாத்திரம் காசெடை அளவு கொடுக்கவும், மாலையில் ஒரு பலம் சீரகத்தைப் பொரிய விட்டு, அது பொரியும்போது ஒரு பலம் இண்டந்தண்டைத் துண்டித்து ஊதி நருக்கி அதிற் போட்டுக் காற்படி தண்ணீர் வார்த்து எட்டொன்றுக்கி வேளைக்கு, ஒரு சங்கு ஆக மூன்று நாள் அல்லது ஐந்து நாள் கொடுத்தால், முக்கு கணந் தீரும்.

(உகரு)

## முக்குக்கணத்திற்கு—கற்ருழைச்சாறு.

அறுசீர் விருத்தம்.

கற்ருழை கொண்டு வந்து கழுவின சோறெ டுத்தே
எற்ருன வெந்த யத்தோ டெலுமிச்சம் பழச்சா றிட்டுச்
சுத்தமாய்க் காய்ச்சிப் பிள்ளைச் சுகம்பெறப் பால கர்க்குச்
சற்றுநீ கொடுத்தால் முக்குக் கணமது தரியா தன்றே.

(பொ-ரை.)—கற்ருழைச் சோறு கழுவினது ஒரு பலம், வெந்தயம் கால் வராகனெடை, பழச்சாறு ஒரு பலம் சேர்த்துச் சுடவைத்து வடித்து, குழந்தைகட்குக் காலையில் மாத்திரம் மூன்று அல்லது ஐந்து நாள் வேளைக்கு உச்சிக்கரண்டி யளவுகொடுத்தால், முக்குக் கணம் நீங்கும். (உகச)

## (21) மூலகணக் குறிகுணம்.

எண்சீர் விருத்தம்.

அதீதம்பார் மூலகண மேதென் றக்கால்
அத்தியிலே வாதபித்த மதிக மாகி
அதீதம்பார் சீதமுடன் ரத்த மூற்றும்
அதிலுளைச்ச லாசனத்தில் காற்று மோங்கும்
அதீதம்பார் சுரமுடனே வயிற்றி ரைச்சல்
அதிகதலை நோய்வரும்வி டாது பாராய்
அதீதம்பார் சண்டாள மூல ரோகம்
அதட்டுமே பத்தாண்டு மட்டும் பாரே.

(பொ-ரை.)—வாதமும், பித்தமும், மிகுந்து எலும்பிற் சேர்ந்து அதனுல், மூலத்தில் கொதிப்புண்டாய் இரணப்பட்டு சீதமும் ரத்தமுமாய் பேதியாதல், வயிற்றுளைச்சல், ஆசனத்தில் காற்று சேர்ந்து கொண்டு பட பட என்கிற ஒலியுடன் வெளிப்படல், சுரம், வயிற்றிரைச்சல், மிகுதியாகத்தலை நோதல், மூலகணக் குறி குணங்களாம். இந்நோய் பத்தாண்டு வரை வருத்தும்.

இக்குறிகளன்றி முகம் மினுமினுத்தல், அம்மினுமினுப்பில் கறுத்த நிறமும், சிவந்த நிறமும் காணப்படல், மலவாய் வெளிப்படல் என்பவைகளும் காணப்படுமென்பாருமுளர். அதனைக் கீழ்க்காண்க.

அறுசீர் விருத்தம்.

சீத ரத்தமு மேகழிந்து தினமுமா சனங்கடுத் துளையும்
மீது காய்ச்சல் வயிற்றிரைச்சல் விடாத் தலைநோ யதிகமுமாம்
காதப் படவே முகமினுக்கும் கறுக்குஞ் சிவக்கும் பலவிதமாய்
ஓதும் உறுப்பு மிகத்தளரு முரைத்தோ மூலக் கணமென்றே. (உகரு)

## மூலகணத்திற்கு—அதிவிடயரசாயனம்.

எண்சீர் விருத்தம்.

பார்க்கவே யதிவிடயம் கடுக்காய் சுக்கு
பறங்கிச் சக்கை கசகசா விலாமிச்சோடு
பார்க்கவே சந்தனத்தூள் சாதி பத்திரி
பண்பான நெல்லியொடு சிற்று முட்டி

பார்க்கவே செம்பருத்தி வில்வ வேரும்
பதமாக வகைக்குப்பலம் நிறுத்தி டித்துப்
பார்க்கவே சூரணித்து வைத்துக் கொண்டு
பண்பான கற்கண்டு பலமி ரண்டே.

பலமிரண்டா மைந்துபல மாவின் நெய்சோ
பாலிகையி லேற்றுசட்டி நெய்யை வார்த்துப்
பலமிரண்டாக் கொதிக்கையிலே மருந்தைப் போடு
பதமாகச் சீரகமும் பலந்தான் போடு
பலமிரண்டாங் கற்கண்டு பொடித்துத் தூவு
பதம்பார்த்துக் கிண்டிவரில் கிருத மாகும்
பலமிரண்டா மிம்மருந்தை யிறக்கிக் கொண்டு
பரிவுடனே பூசித்துப் பணிந்து போற்றே.

பணிந்துமே பாக்களவி லுள்ளே கொள்ளு
பண்பாக வேழுநா ளுண்ணும் போது
பணிந்துமே யோடிவிடு மூலகண மெல்லாம்
பதறுதே பத்தியந்தா னிச்சாப் பத்தியம்
பணிந்துமே முன்சொன்ன ரோக மெல்லாம்
பஞ்சுபோல் பறந்துவிடும் பாரிற் பாரு
பணிந்துமே யிந்நூலைப் பணிய வேணும்
பார்ப்பதுவு மிந்நூலைப் பாரு பாரே.

(பொ-ரை.)—அதிவிடயம், கடுக்காய்த்தோல், சுக்கு, பறங்கிச்சக்கை, கசகசா, விலாமிச்சம்வேர், சந்தனத்தூள், சாதிபத்திரி, நெல்லிவற்றல், சிற்றுமுட்டி, செம்பருத்தி, வில்வவேர், வகைக்குப் பலம் ஒன்று வறுத்திடித்து சூரணித்து, கற்கண்டு பலம் இரண்டு, பசுவின் நெய் பலம் ஐந்து, சீரகத் தூள் பலம் ஒன்று.

இவற்றில் பசு நெய்யைச் சட்டியிலிட்டு அடுப்பேற்றி கொதிக்கும்போது மேற்படித் தூளையும், சீரகத்தையும் கற்கண்டையும் பொடித்துச் சேர்த்துக் காய்ச்சிப் பதத்தில் இறக்கிக் கொள்ளவும். இதில் தினந்தோறும் காலை மாலை இரு வேளையும் பாக்களவு வீதம் ஏழு நாள் சாப்பிட்டால், மூலகணம் தீரும். இச்சாப்பத்தியம் இருக்க வேண்டும். (உகசு)

## மூலகணத்திற்கு—பழம்பாசித் தயிர்.

எண்சீர் விருத்தம்.

பழம்பாசி சமூலமுடன் வெள்ளாட் டுப்பால்
பாங்குடனே நன்றாகப் போட்டுக் காய்ச்சிச்
செழும்பாக வெந்தபின்பு கோது நீக்கித்
தேசியெனும் பழச்சாற்றைக் கூட விட்டுக்
குழம்பாக விழுந்தயிரைக் குடிக்கும் போது
குணமாகு மூலகணங் கோதை கேளாய்
அழங்குகரு வேல்பட்டை தண்ணீ ரோடே
அதிமதுரஞ் சீரகமு மேலங் கூட்டே.

(பொ-ரை.)—பழம்பாசிச் சமூலத்தை கொண்டுவந்து சிதைத்து ஒரு படி வெள்ளாட்டுப்பாலிலிட்டுக் காய்ச்சி வெந்த பின் கோது நீக்கி எடுத்து, அதில் ஒரு பலம் பழச் சாற்றைக்கூட்டிவைத் துண்டான தயிருடன், வேலம் பட்டையிடித்தூறவைத்தெடுத்த நீர் ஒரு பலமும், அதிமதுரம் ஒரு வராக னெடையும், சீரகம் ஒரு வராகனெடையும், ஏலரிசி ஒரு வராகனெடையும், வறுத்துத் தூள் செய்து வடிகட்டிச் சேர்த்துக் கலக்கி, காலை மாத்திரம் வேளைக்கு கால் ஆழாக்காக மூன்று அல்லது ஐந்து நாள் கொடுக்க, மூல கணந் தீரும். (உகஎ)

## மூலகணத்திற்கு—பெருமரம், பருத்தி, ஒதி, மாதளை கற்கங்கள்.

எண்சீர் விருத்தம்.

பெருமரத்துப் பட்டைதனை வெள்ளாட்டுத் தயிரில்
  பிறகரைத்து மேயதனைக் கொடுக்கத் தீரும்
திருவான பசுப்பாலிற் பருத்திப் பிஞ்சும்
  சீரகமு மரைத்துமே கொடுக்கத் தீரும்
பரிவான சாறதனிற் சீரகமும் கூட்டிப்
  பண்புடனே வழங்கிடவே தீரும் பின்னர்
பெருமொதியம் பட்டைபா லினிலே யீக
  பிறங்குமா தளம்பிஞ்சுந் தயிரு மீயே.

(பொ-ரை.)—பெருமரப் பட்டையை வேளைக்கு அரைப்பலம், அரையாழாக்கு வெள்ளாட்டுத் தயிரில் அரைத்துக் கரைத்துக் கொடுத்தாலும், அரையா ழாக்கு பசும்பாலில் வேளைக்கு கால்பலம் பருத்திப் பிஞ்சு, சீரகம் கால் பலம் இவைகளை அரைத்துக் கொடுத்தாலும், வேளைக்கு அரைப்பலம் ஒதியம் பட்டையை அரையாழாக்கு பசுவின் பாலிலரைத்துக் கலக்கிக் கொடுத்தா லும், மாதளம் பிஞ்சை தயிரிலரைத்துக் கொடுத்தாலும், மூல கணம் தீரும். (உகஅ)

## மூலகணத்திற்கு—ஏலாதி வடகம்.

நேரிசை வெண்பா.

தின்னேல நிம்பவிதை சேர்ந்தசிறு மாச்சுக்கு
மின்னேகேள் வெற்றிலேயின் மேற்காம்பு—நன்றாய்நீ
தேசிப் பழச்சாற்றில் செப்பமுட னேயரைத்துக்
காசளவு வில்லைசெய்வை காண்.
செய்யும் படியரைத்துச் சேர்ந்தவித மேழுதரம்
நெய்யிற் புடம்போட்டு நேர்த்தியாய்த்—தையலே
பாலிலுண்ண வேகடுப்பு பாலகர்க்குச் சீதரத்தம்
மூலகண மோடுமென்றார் முன்.

(பொ-ரை.)—ஏலம், எலுமிச்சம்பழவிதை, தோல் சீவின சுக்கு, வெற் றிலைக் காம்பு, இவை சரி எடை எடுத்துப் பழச்சாற்றி லரைத்துக் காசளவு வில்லை செய்து, நெய்யில் பொரித்தெடுக்கவும், இப்படி ஏழு தரம் அரைத்து ஏழு தடவை நெய்யில் பொரித்து எடுக்கவும், பிறகு வேளைக்கு ஒரு வடகமாக எடுத்து ஏழு நாள் இரண்டு வேளையும் பொடித்துப் பாலில் கலந்து கொடுக்க, மூல கணம் தீரும். (உககூ)

## மூலகணத்திற்கு.

பன்னிருசீர்கழிநெடில் முடுகு விருத்தம்.

ஆலா வாரை விடத்தேர் நாவ லாகிய கரிவேலின்
ஆன கொழுந்தும் பட்டையுநல் லத்திப்பட்டையுடன்
சேலாத் தெங்கின் மொக்குட னேசமண் தேடிக் குடிநீராய்
சீரகம் விடய மாசிகி ராம்பு தின்னுஞ் சாதிக்காய்
மேலாந் தீயில் வாட்டி விளாவின் மேவுந் தன்பிசினும்
மேலு மிதைப்பொடி யாக்கிய நீரில் மெத்தன வேகரையாய்
பாலாய்ப் பேதி மூலக ணத்துடன் பாரிய கக்கல்சுரம்
பாறிடு மேமறு சட்டியில் மாற்றிப் பாலர்க் கீந்திடவே.

(பொ-ரை.)—ஆலம்கொழுந்தும் பட்டையும், ஆவாரம்கொழுந்தும் பட்டையும், விடத்தாரிக் கொழுந்தும் பட்டையும், நாவல்கொழுந்தும் பட்டையும், கருவேலங்கொழுந்தும், பட்டையும், அத்திப்பட்டை, தென்னமொக்கு ஆகிய இவைகள் வகை ஒன்றுக்கு வேளை ஒன்றுக்கு கால் பலமாக எடுத்திடித்து, ஒரு மண் சட்டியிலிட்டு அரைப்படி தண்ணீர் விட்டு, அரைக்கால் படியாகக் காய்ச்சி வடித்து, அதில் சீரகம், அதிவிடயம், மாசிக்காய், கிராம்பு, சாதிக் காய், விளாம்பிசின் இவை வகைக்குக் கால் வராகனெடை பொடி செய்து தூவி, வேளைக்கு அரைக்கால் ஆழாக்காக இரண்டு வேளையும் மூன்று அல்லது ஐந்து நாள் கொடுக்க, பேதி, மூலகணம், வாந்தி, சுரம் இவைகள் நீங்கும். (௩00)

## (22) பேராமகணக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

கையுடன் கால்கு ளிர்ந்து கண்ணுமே வளைய மாகும்
குய்யவே சுரமுந் தோன்றும் குடித்தபால் சர்த்தி பண்ணும்
துய்யவே திடுக்கிட் டேங்கும் சோர்ந்துதான் வயிறு போகும்
பொய்யல்ல கேளா யிந்தப் பேராம கணத்தின் வாறே.

பேராம குணமே கேளு பொருமிடும் வயிறு தள்ளும்
நேராக வயிறு போகும் நெற்றியில் வலிப்புத் தோன்றும்
சீராக முலையுண் ணாது சீறியே வெருவிப் பார்க்கும்
கார்குழல் தனத்தி னாளே கண்டதிக் குணங்கள் தானே.

(பொ-ரை.)—கைகளும், கால்களும் குளிர்ந்திருத்தல், கண் வளைய மிடுதல், சுரங் காய்தல், குடித்தபால் குடித்தபடியே வாந்தியாதல், திடுக் கிடல், ஏங்குதல், சோர்வடைந்து வயிறுபோகுதல், சில குழவிகட்கு வயிறு பொருமிப் பின்னர் மலம் வெளிப்படல், சிலர்க்கு சாதாரணமாக வயிறு போதல், நெற்றியில் வலியெடுத்தல், பால் சரியாய்க் குடியாமை, பயந்த பார்வையாய்ப் பார்த்தல் என்னும் இக்குறி குணங்கள் காணின், பேராம கணமென்றறிவாய். (௩0௧)

## பேராமகணத்திற்கு—தும்பை பக்குவ மோர்.

கொச்சகம்.

தும்பை பொடுதலைவேர் துய்யவே லிப்பருத்தி
கும்ப மதிக்கக் கொட்டியந்தச் சட்டியிலே
கொம்பெருமை மோர்நாழி கொஞ்சிவேர் திப்பிலியும்
உம்பாதி சீரகமு மோமமிந்துப் போடெடையே.

எடைசேர் மருந்தனைத்து மியல்பாகவே சேர்த்தங்
கடைவா யரைத்துக்க ரைத்தனலில் காய்ச்சியபின்
குடையிற் குழவிகட்குக் கொள்ளக் கொடுத்திடவே
புடைபோலே வாயுவதும் பேராமம் போய்விடுமே.

(பொ-ரை.)—தும்பை வேர், பொடுதலை வேர், உத்தாமணி வேர் இவைகள் வகைக்குப் பலம் ஒன்று இடித்து ஒரு மண் சட்டியிலிட்டு அடுப்பேற்றி எரித்துக் கடைந்து சாம்பலாக்கி அச்சாம்பலைக் கொட்டி விட்டு, அதில் எருமையின் மோர் படி ஒன்றை விட்டு, கொஞ்சிவேர்ப் பட்டை, சிறுதிப்பிலி, சீரகம், ஓமம், இந்துப்பு இவை வகைக்கு ஒன்றேகால் வராகனெடை மேற்படி மோராலரைத்துக் கலக்கிச் சுடவைத்துக் காலை மாலை இரண்டு வேளையும் குழந்தைகட்கு ஒரு சங்களவாகக் கொடுக்க, பேராம கணம் நீங்கும். (௩0௨)

## (23) இரத்த கணத்தின் குறி குணம்.

அறுசீர் விருத்தம்.

இடைவிடர் முக்கி முக்கி யிருமலுங் கழிச்ச லுண்டாம்
அடைபடாக் கழிச்ச லாகி யடிக்கடி யிரத்தங் காணும்
தொடையிடை வலிக்குந் தாகம் சொல்லொணுச் சுரமுங் காயும்
தடைப்படா வியாதி யென்று சாற்றினர் முனிவர் தானே.

கட்டளைக் கலித்துறை.

நாடி அயர்ந்தே யுளம்வாடி மெத்தவு நாசபசி
கூடி யசனம் புசிக்கவொட் டாதுகு ழந்தைகட்கே
ஓடிய ரத்த மலந்தனிற் சேர்ந்துறு மூலமதால்
சாடிக்கும் ரத்த கணமென வேமுனி சாற்றினரே.

(பொ-ரை.)—இடைவிடாமல் முக்குதல், அப்படி முக்கும் போது இருமுதல், இஃதன்றிக் கழிதல், இரத்தமாகவே கழிதல், தொடையில் வலிப்பு, இடுப்பில் வலிப்பு, நீர் வேட்கை, சுரம், மணவாட்டம், மிகப்பசி கெடுதல், சோறு தின்ன வொட்டாமை, மலத்துடனிரத்தம் விழுதல், மூலத்தில் சூடா யிருத்தல், நாடி நடை அயர்ந்து மெலிந்து காட்டல் என்பவைகள் காணின், இரத்த கண மென்றறிவாய். (௩0௩)

இரத்த கணத்திற்கு—குமரி எண்ணெய்.

எண்சீர் விருத்தம்.

எண்ணெய்படி கால்குமரிச் சோறு தானும்
எழில்விளாங் காயளவு கழுவிக் கொண்டே
அண்ணிரண்டு துமட்டிக்காய்ச் சோறுங் கூட்டி
அதிலீர காயம்பத் தரிந்து போட்டுக்
கண்ணவே மெழுகுபத மாயெ ரித்துக்
கனமான துட்டளவி லெண்ணெய் தானும்
நண்ணவே நாலுநாட் கொருபோ தீய
நாடாது ரத்தகணந் தீருந் தானே.

(பொ-ரை.)—முத்தெண்ணெய் கால் படி, குமரிச்சோறு விளாங்காயளவு, இரண்டு தும்மட்டிக்காயின் சோறு, வெள்ளை வெங்காயம் பத்து (அரிந்தது)

எல்லாவற்றையும் சேர்த்து அடுப்பேற்றிக் காயச்சி, மெழுகு பதத்திலிறக்கி வடித்து, நாலு நாளைக்கு ஒரு தரம் துட்டெடையளவு காலையில் மாத்திரம் கொடுக்க, ரத்த கணம் தீரும். (௩௦௪)

## இரத்த கணத்தினால் அடிதள்ளினதற்கு—கரிசாலைக் கற்கம்.

அறுசீர் விருத்தம்.

கரிசலாங் கண்ணி பழம்புளியுங் கதிக்க விவைகள் நெகிழரைத்துச்
சரியாய்ப் புன்னைக் காயளவு சத்தம் எட்டு நாள்கொடுக்கப்
பிரியா துள்ளடி தள்ளினதும் பேசா தோடு மடமயிலே
பரிவாய் நாஞ்சொன் னேமிச்சாப் பத்திய மானது நன்றன்றே.

(பொ-ரை.)—கரிசலாங் கண்ணியிலை, பழம்புளி இவைகள் இரண்டையும் சரி எடை எடுத்து அரைத்து, வேளைக்குப் புன்னைக்காயளவாக ஏழு நாள் அல்லது எட்டு நாள் காலை மாலை இரண்டு வேளையும் கொடுக்க, மேற்படி நோய் நீங்கும். இச்சாபத்தியம் நன்று. (௩௦௫)

## இரத்த கணத்திற்கு—சாதிக்காய் எண்ணெய்.

கலி விருத்தம்.

கண்டி டுஞ்சாதிக் காய்சாதி பத்திரி
உண்டி டும்லவங் கம்லவங் கப்பட்டை
கொண்டி டுமல்லி கோஷ்டங்கோ ரோசனம்
செண்டி டுஞ்செண் பகமலர் சேர்த்திடே.

சேர்த்துக் கார்போ கரிசி மதுரமும்
பார்த்து மேலவங் கப்பத்ரி சீரகம்
ஏர்த்துச் செங்கழு நீர்க்கிழங் கேலமும்
கார்த்தி டோர்வகைக் கால்பல மாட்டிடே.

ஆட்டி டாமணக் கெண்ணெயா றீர்பலம்
சூட்டி டாய்பசு வெண்ணெ யறுபலம்
மூட்டி டாயெள்ளி னெண்ணெயில் மூன்றுதான்
காட்டி டாமுருங் கையிலைச் சாற்றிடே.

சாற்றி டாயெடை தான்ஈரெட் டுப்பலம்
சேற்றி டாயெறித் தேமெழு காம்பதம்
வார்த்தி டாய்பல மாமுறை மூன்றுநாள்
காத்தி டாவுதி ரக்கணந் தாழுமே.

(பொ-ரை.)—சாதிக்காய், சாதிப்பத்திரி, இலவங்கம், இலவங்கப்பட்டை, கொத்துமல்லி, சாதி கோட்டம், கோரோசனம், செண்பகப்பூ, கார்போகரிசி, அதிமதுரம், இலவங்கப்பத்திரி, சீரகம், செங்கழுநீர்க் கிழங்கு, ஏலம் இவை வகைக்குக் கால் பலம், சிற்றாமணக்கு எண்ணெய் பன்னிரண்டு பலம், பசு வெண்ணெய் ஆறு பலம், எண்ணெய் மூன்று பலம், முருங்கை இலைச்சாறு பதினாறு பலம், இவற்றில் சிற்றாமணக்கெண்ணெய், எண்ணெய், பசு வெண்ணெய், முருங்கையிலைச்சாறு இவைகளை யெல்லாம் முன்னர் ஒரு மண் சட்டியில் ஊற்றி, அதில் மேற்படி கடைச் சரக்குகளை யெல்லாம் வெந்நீர் விட்டு அரைத்துப்போட்டு, பக்குவ பாகமாக எரித்து மெழுகு பதத்தில் வடித்து, வேளைக்கு ஒரு பலம் அளவாக காலையில் மாத்திரம் மூன்று நாள் கொடுத்தால், இரத்த கணம் தீரும். (௩௦௬)

## இரத்த கணத்திற்கு—செங்கழுநீர் கற்கம்.

அறுசீர் முடுகு விருத்தம்.

செங்கழு நீர்சீ ரகமேலம் செண்பக மலரு மதிமதுரம்
நங்குறு கோட்டந் தூதுளைவேர் நன்னு ரியின்வேர் சமனாகக்
கொங்கைப் பால்விட் டரைநெய்யில் குழைத்துள் ளங்கை யில்விட்டுத்
தங்க நக்கிட ரத்தகணந் தானே யோடிப் போமன்றே.

(பொ-ரை.)—செங்கழுநீர்ப்பூ, சீரகம், ஏலரிசி, செண்பகப்பூ, அதிமதுரம், சாதி கோட்டம், தூதுளைவேர், நன்னாரி வேர் சமனாக எடுத்து முலைப் பால் விட்டரைத்து, வேளைக்கு கொட்டை பாக்களவாகக் காலை மாலை இரண்டு வேளையும் மூன்று அல்லது ஐந்து நாள் நெய்யில் குழைத்து உள்ளங்கையில் வைத்து நக்கிட, ரத்த கணம் நீங்கும். (நூ0எ)

## இரத்த கணத்திற்கு—வில்வ இலைக் கற்கம்.

நேரிசை வெண்பா.

ஓடும்வில்வ பத்திரிவேர் உற்றகரு வேல்கொழுந்து
நாடுதனில் நிம்பவிதை நற்சீரம்—காடுவளர்
ஆவாரம் பூவரிசி அஞ்சாதி பத்திரிகாய்
தேவார் கிராம்புடனே சேர்.

சேருமின்னார் பாலில் சிறுகொட்டைப் பாக்களவு
கூறும் படியரைத்துட் கொண்டக்கால்—ஆறும்
இரத்தகண மூலகணம் எய்து மதிசாரம்
பெற்ற சிறுவோர்க்குப் பேசு.

(பொ-ரை.)—வில்வ இலை, வில்வவேர், கருவேலங் கொழுந்து, வேப்பம் விதைப் பருப்பு, சீரகம், ஆவாரம்பூ, ஏலரிசி, சாதிபத்திரி, சாதிக்காய், இலவங்கம் இவைகள் வகைக்குக் கால் வராகனெடை எடுத்து, முலைப்பால் விட்டரைத்து, வேளைக்குக் கொட்டைப் பாக்களவு காலை மாலை இரு வேளையாக மூன்று அல்லது நான்கு நாள் கொடுக்க, இரத்த கணம், மூலகணம், அதிசாரம் இவை நீங்கும். (நூ0அ)

## மூலரத்தகணம், விடகண மாந்தங்களுக்கு—கற்றாழை எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

இதுவே கேளாய் விளக்கெண்ணெய் ஏற்கப் படிதா னொன்றாக
மெதுவாங் குமரி நிம்பமுடன் வேண்டு மீருள் ளியின்சாறும்
அதுவே வகைக்குக் கால்படிதா னாவின் பாலும் படியரைதான்
மிதுவே யிவைக ளொன்றாக்கி மீறுங் கற்கந் தனைக்கேளே.

கேளே கோட்ட மதிமதுரம் கிளறுஞ் சண்பகப் பூவேலம்
நாளே சன்ன லவங்கமுடன் நன்றாய் வகைக்குக் காற்பலமாய்த்
தூளே யாக்கிக் கலந்துவிடு சொன்னேம் வெந்தய மோர்பலத்தை
ஆனே யிதனை யுடையாம லரைத்தே யதிலே கலக்கிடுமே.

இடுமே யதனை யடுப்பேற்றி யிறக்கு மெழுகு பதமானல்
அடுமே யெண்ணெ யாறியபி னடைவா யொருசிறு கரண்டிநிறை
கொடுமே மூல ரத்தகணம் கூறும் விடக்கண மாந்தமுடன்
விடுமே தோட முதலாக வேறே மருந்து வேண்டாமே.

(பொ-ரை.)—விளக்கெண்ணெய் ஒரு படி, கற்றாழைச் சோறு, பழச் சாறு, ஈருள்ளிச்சாறு வகைக்குக்கால் படி, பசுவின் பால் அரை படி, இவைகளை யெல்லாம் ஒரு மண் சட்டியில் ஒன்று சேர்த்து, அதில் கோட்டம், அதிமதுரம், சண்பகப்பூ, ஏலம், சன்ன லவங்கப்பட்டை வகைக்குக் கால் பலம் சூரணம் செய்தும், ஒரு பலம் வெந்தயத்தை அரைத்தும் சேர்த்து, அடுப்பேற்றிப் பக்குவ பாகத்தில் இறக்கி தினமும் காலை மாலையில் மாத்திரம் கரண்டியளவாக ஐந்து அல்லது ஏழு நாள் கொடுத்தால், மூல ரத்த கணம், விடமாந்தகணம், தோட கணம் ஆகியவை நீங்கும். (௫0௯)

## இரத்தமூல வரட் கணத்திற்கு—சாதிக்காய் மாத்திரை.

வெளிவிருத்தம்.

சாதிக் காயுடன் மாசிக்காய் கிராம்பு கோரோ சனைசீரம்
பூதிக் காயுடன் திப்பிலியும் பொருந்த வரைத்து மிளகளவாய்
நீதிக் காமென நிழலுலர்த்தி நிகர்முலை யின்ன முதிலிடவே
ஊதுக் கணமும் மாந்தகணம் மூல வரட்கண மோடிடுமே.

(பொ-ரை.)—சாதிக்காய், மாசிக்காய், கிராம்பு, கோரோசனம், சீரகம், மிளகு, திப்பிலி, இவைகளைச் சரியெடை எடுத்து ஒன்று சேர்த்து, முலைப் பாலிலரைத்து, மிள களவு மாத்திரை செய்து நிழலிலுலர்த்தி, வேளைக்கு ஒரு மாத்திரையாக இரண்டு வேளையும் மூன்று நாள் முலைப்பாலில் கொடுத்தால், ஊது கணம், மாந்த கணம், இரத்தமூலகணம், வரட் கணம் இவைகள் நீங்கும். (௫௧0)

## அடிதள்ளினதற்கு—பூண்டு எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

ஒருதலை வெள்ளைப் பூண்டு மொன்றது வசம்பு நேராய்
விருதுடன் நறுக்கி மேலும் வீழியி னிலையும் நல்ல
திருபொடு தலையும் நீண்ட சிறுபுள் ளடிவ கைக்கே
ஒருபிடி பாண்டத் திட்டங் குடனதை வறுத் திடாயே.

வறுத்துப்பொன் னிறம தாக மருவுமுன் மருந்து கூட்டிக்
கறுத்திடும் படிகால் எண்ணெய் கலந்துகாய்ச் சிறக்கிக் கொண்டே
அறுத்தமுப் பொழுது வார்க்க வடியுள்ளே வாங்கு மற்ற
வெறுத்திடு கணங்க ளெல்லாம் வீறிட்டே யோடிப் போமே.

(பொ-ரை.) ஒரு தலை வெள்ளைப் பூண்டு, சுட்ட வசம்பு, வீழியிலை, பொடுதலை, சிறுபுள்ளடி வகைக்கு ஒரு பலம், இவற்றில் இலைகளையெல்லாம் குறுக அரிந்து சிவக்க வறுத்து, அதில் வெள்ளைப் பூண்டையும் வசம்பையும் நறுக்கிப் போட்டு, சிற்றாமணக்கெண்ணெய் பலம் பத்து சேர்த்து, பக்குவ பாகத்திற் காய்ச்சி வடித்துக் காலையில் மாத்திரம் மூன்று உச்சிக் கரண்டி யளவு கொடுக்க, அடிதள்ளின நோய் நீங்கும். (௫௧௧)

## அடிதள்ளினதற்கு-கோரக்கர் மாத்திரை.

எண்சீர் விருத்தம்.

கோரக்கர் மூலியொரு துட்டுத் தானும்
குளிர்நீரா லேழுதரங் கழுவிப் போட்டுத்
தாரக்க மிளகிருபத் தொன்றும் பூண்டு
தானிருபத் தொன்றுகுழிக் கல்லி லிட்டே
யாரக்க வரைசெய்து குன்றியள வுருட்டி
அரிதான பருத்தியிலைச் சாற்றி லாதல்
வேரக்க மாதளம்பிஞ் சதைவெ துப்பி
விடுசாற்றி லிடவடிதள் ளினது போமே.

(பொ-ரை.)—கஞ்சாவை தண்ணீர் விட்டேழுதரம் கசக்கிக் கசக்கி கழுவினது ஒரு துட்டெடை, மிளகும், பூண்டுத்திரியும் இருபத்தொன்று, இவைகளைக் குழிக்கல்லிலிட்டுப் பருத்தி இலைச்சாற்றில் அரைத்துக் குன்றியளவு மாத்திரை செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொண்டு, வேளை ஒன்றுக்கு, ஒரு மாத்திரையாக இரு வேளையும் மூன்று நாளைக்குப் பருத்தியிலைச் சாற்றிலாவது, மாதளம்பிஞ்சைக் கும்பியிலிட்டு வேகவைத்துடைத்து இடித்துப் பிழிந்த சாற்றிலாவது கொடுத்தால், அடிதள்ளின நோய் நீங்கும். (௩௧௨)

## அடித்தள்ளி இரத்தங்காண்பதற்கு—இஞ்சிப்பக்குவம்.

அறுசீர் விருத்தம்.

இஞ்சிமேற் புறணி சீவி எழிலுடன் துவார மிட்டு
வஞ்சியே பெருங்கா யந்தான் வராகனெடை றதற்குள் வைத்துத்
தஞ்சியே மேலே மூடித் தயிரினில் வேக வைத்தே
அஞ்சிய பெருகு நீரில் அரைத்துண்ணத் தீரு மன்றே.

(பொ-ரை.)—இஞ்சியின் மேல் தோலை நீக்கி அதிலொரு துளையிட்டு,அதில் ஒரு வராகனெடை பெருங்காயம் வைத்து மேலே இஞ்சித் தூளிட்டடைத்து மூடித் தயிரினில் வேகவைத்தரைத்து மோரில் உண்ண, அடி தள்ளி இரத்தங்காணுதல் தீரும். (௩௧௩)

## (24) சிங்கிமாந்தகணக் குறிகுணம்.

எண்சீர் விருத்தம்.

பேரான சிங்கிமாந்த கணத்தைக் கேளாய்
பெருமையாய் உந்திதணல் மேலெ ழும்பி
வாரான ஈரலுமே புண்ணும் வெந்து
வலுமையாய்ச் சுவாசமேல் இழுப்பு மாகிச்
சீரான தேகஞ்ச மூலங் காய்ந்து
சிவசிவா தழல்போலே சுரமும் வீசும்
வீரான சுவாசமது திக்குமுக் காடி
வெகுளியாய் மயக்குவிக்குஞ் சிங்கிகணம் பாரே.

சிங்கிகணம் பிள்ளைகட்குச் சுரமி ருந்தால்
சிவசிவா மாந்தசுர மிதுதா னென்பார்
சிங்கிகண மாந்தமிது ஏதென் றக்கால்
சீரகற்றிப் பதின்மூன்று பிராய மட்டும்

சிங்கிகண மாந்தமிஃ திருக்குங் காலம்
சிறுவனென்ற பிள்ளைகளுக் கச்சு ரந்தான்
சிங்கிகணம் ஒழிவதற்கு அமுதாதி தன்னைச்
செணமதிலே விள்ளுகிறேன் இதனைப் பாரே.

(பொ-ரை.)—உந்தியிலிருந்து ஒரு வகைத் தழல் மேலெழும்புவதால் ஈரல் வெந்து புண்பட்டு அதனால், கடினமாக மேல் சுவாசமும் இழுப்பும் உண்டாய்த் தேகம் வரட்சி யடைந்து சுரம் வீசும், சுவாசத் தடங்கல் ஏற்பட்டு மயக்கம் வரும். இது பிள்ளைகளைப் பதின்மூன்று பிராயமட்டும் வதைக்கும்.

கணங்களுக்கு ஆண்டு ஏழென்றும், பதினாறென்றும் பொதுவாகச் சொல்லப்படினும், இச்சிங்கி மாந்த கணத்திற்கு மாத்திரம் பதின்மூன்று ஆண்டுகள் காலமெனச் சிறப்பாகக் கூறப்பட்டிருக்கிறது. (௩கச)

## சிங்கிமாந்தகணத்திற்கு அமுதாதிக் குளிகை.

எண்சீர் விருத்தம்.

இதனைப்பார் அதிமதுரம் கோஷ்டம் ஏலம்
இனியகோ ரோசனமும் சாத்திர பேதி
இதனைப்பார் சண்பகப்பூ மாசிக் காயும்
இலவங்கப் பூவுடனே வகைக்குக் கால்தான்
இதனைப்பார் இவையெல்லாங் கல்வத் திட்டே
எழில்வெட்டி வேர்மாசிப் பத்திரி வேரும்
இதனைப்பார் கருந்துளசி விலாமிச் சோடும்
இன்பமதாய் நால்வகையுஞ் சாற்பி ழிந்தே.

பிழிந்துமே கல்வத்தில் வார்த்த ரைத்துப்
பெலமாக இருசாமம் விடாம லாட்டிக்
கழிந்துமே குன்றிபோ லுண்டை செய்து
கண்மணியே நிழலுலர்த்திச் செப்பில் வைத்து
வழிந்துமே வாலைமனோன் மணியைப் போற்றி
வகையான மாசிப்பத்ரிக் கியாழந் தன்னில்
அழிந்துமே குளிகையொன்று கொடுத்துப் போடாய்
அரகரா முன்சொன்ன மாந்தம் போமே.

மாந்தம்போம் லவங்கப்பூக் கியாழந் தன்னில்
மகத்தான மாந்தசுரம் வாந்தி தீரும்
மாந்தம்போ முலைப்பாலில் கொடுப்பீ ராகில்
வதைத்துவரும் குடற்படுவன் நீர்ப்பாடு தீரும்
மாந்தம்போம் கரப்பான்நா வரட்சி தீரும்
வயிற்றெரிவு அன்னவிடாய்ச் சுரமும் தீரும்
மாந்தம்போம் உப்பிசமும் இருமல் போகும்
மகத்துவமாம் அமுர்தமெனும் குளிகை பாரே.

(பொ-ரை.)—அதிமதுரம், கோஷ்டம், ஏலம், கோரோசனம், சாத்திரபேதி, சண்பகப்பூ, மாசிக்காய், இலவங்கப்பூ, இவைகள் வகைக்குக் காற்பலம் எடுத்து, கோரோசனம் தள்ளி மற்றவற்றைப் பொடி செய்து கல்வத்திட்டுப் பின்னர் கோரோசனம் கூட்டி, வெட்டிவேர், மாசிப்பத்திரி வேர், கருந்துளசி, விலாமிச்சம் வேர், இந்நால் வகைச் சாறுகளையும் ஒன்றன் பின் ஒன்றாக விட்டு ஒவ்வொன்றில் இரண்டு சாமம் அரைத்துக் குன்றி அளவு உண்டை

செய்து நிழலிலுலர்த்தி, மாசிப் பத்திரிக் கியாழத்தில் காலே மாலே வேளைக்கு ஒரு மாத்திரையாக கொடுக்க, சிங்கி மாந்த கணமும், இவ்வாறே லவங்கக் கியாழத்தில் கொடுக்க மாந்த சுரமும், வாந்தியும், இவ்வாறே முலேப்பாலில் கொடுக்கக் குடல் படுவன், நீர்ப்பாடு, கரப்பான், நாவரட்சி, வயிற்றில் எரிச்சல், அன்ன விடாய்ச் சுரம், மாந்தம், வயிற்றுப்பிசம், இருமல் இவை தீரும்.

(நகடு)

## அஷ்டகணத்திற்கும், ஒன்பது கணத்திற்கும்—வல்லாரை நெய்.

### ஆனந்தக் களிப்பு.

தானந் தனித்தவ ளுண்டி—நல்ல
தயவாகத் தனயர்க்குப் பிணிதீர நாடி
ஆனந்தக் களிப்பையே பாடி—பெற்ற
அன்னே பிதாவுக் கறைகிறேன் கோடி

சித்திர மான புதுமை—நல்ல
சீரான வல்லாரை நெய்இஃ தருமை
நத்தின பேருக் குரிமை—அந்த
நாதாக்க ளறிவார்க ளிதனது பெருமை

பத்திரமாம் பச்சை மூலி—நல்ல
பாங்கான வல்லாரை பலநூறு சாலில்
வைத்திடு நீரெட்டுப் படியாய்—இதை
வகையாக விட்டெரி யெட்டொன்ற தாகச்

சுத்தாவின் நெய்யொன்று விட்டே—இதில்
சூட்டவே கடைச்சரக் கவைகளே மூட்டு
வித்தான சுக்கது திட்டு—நல்ல
விதமான வேலங் கலேக்கொம்பு மாட்டு

சத்தான சாதிக்காய் நீட்டு—நல்ல
சாதக மானதோர் தாளீசம் கூட்டு
எத்தான பத்திரி போட்டு—நல்ல
ｓமான கோட்டம் விலாம்வெட்டி நாட்டு

சிங்கார மான நற்சீரம்—நல்ல
சீரான தான்றிதக் கோலம்பொன் னுரம்
வெங்காரம் வில்வை யக்காரம்—நல்ல
வீறுன சண்பகப் பூவும கோரம்

சங்கார குங்கங் கத்தூரி—மஞ்சட்
சாதக மானதோர் இம்பூறல் வேரும்
நங்கார் குளிக்குங் கச்சோலம்—நல்ல
நலமான மல்லியும் ரோகணி சேரும்

இத்தனே யான சரக்கும்—இதில்
ஏற்றக் குறைச்ச லில்லாம லெவர்க்கும்
கத்தனேப் போற்றி நினேக்கும்—வகைக்
கண்டு வராக னெடையது தூக்கும்

அத்தனை யும்படி ஆவின்—பாலி
லாட்டியே அம்மியி லரைத்திடு வீரே
வற்றின வல்லாரை நீர்க்குள்—வகை
யாகவே சேர்த்த சரக்கைக் கரைத்துக்

கண்டித்துப் பாண்டத்தி லூற்றிச்—சொன்ன
கருதாவி னெய்யதை ஒருபடி யூற்றி
விண்டித்து நீயன லேற்றி—நல்ல
விதமாக மொண்டதைத் திரள்பதந் தூற்றிக்

கிண்டிட்டுத் தான்பதம் பார்த்து—நல்ல
கெடியான பீங்கானில் துடியாய் வடித்துச்
சண்டித்த நோய்களுக் கேற்று—மிந்தச்
சதிரான வல்லாரை நெய்தினங் குடித்து

இட்டிடும் வல்லாரை நெய்க்கு—விட்டே
ஏகும் வியாதியை யிதமுடன் சொல்வேன்
மட்டுப் படாத்தொந்த மாந்தம்—இன்னம்
மாறுட்ட மாய்வந்த வல்லப்போர் மாந்தம்

கட்டுக் கடங்காத மேகம்—பொல்லாக்
காச ரோகமென்ற வருவிட நோயும்
முற்றின வீளை இரைப்பு—காந்தும்
மூல கணங்களும் உட்சுர மேலும்

கத்திடுஞ் சர்த்தி இருமல்—கொடுங்
காசம் போலேகக்கும் சுவாச சுரமும்
பற்றிடும் நோயென்ற தெல்லாம்—நல்ல
பாங்காக வேரண்டு நேர மருந்தே.—(தனதன).

(பொ-ரை.)—பசுமையான வல்லாரை பலம் நூறு, ஒரு மட் பானையில் போட்டு நன்றாய் வடிகட்டின நீர் படி எட்டு வார்த்து எட்டொன்றென்னும் ஒரு படியாகக் காய்ச்சி வடித்துப் பசு நெய் ஒரு படி சேர்த்து, சுக்கு, ஏலம், மான் கொம்பு பற்பம், சாதிக்காய், தாளீசப்பத்திரி, சாதிபத்திரி, கோட்டம், விலா மிச்சம்வேர், வெட்டிவேர், சீரகம், தான்றிக்காய்த் தோல், தக்கோலம், மஞ்சள், சந்தனம், வெங்காரம், வில்வவோடு, அக்கராகாரம், சண்பகப்பூ குங்குமப்பூ, கத்தூரிமஞ்சள், இம்பூறல்வேர், கிச்சிலிக்கிழங்கு, கொத்து மல்லி, கடுகுரோகணி, இச்சரக்குகள் வகைக்கு ஒரு வாரகனெடை எடுத்துப் பசுவின் பாலாலரைத்துக் கலக்கி அடுப்பேற்றிக் காய்ச்சிப் பதத்தில் இறக்கி, தினமும் காலை மாலை இரண்டு வேளையும் உண்டால் தொந்த மாந்தம், போர் மாந்தம், மேகம், காசநோய், ஈளை—இரைப்பு, மூலகணம், உட்சுரம், வாந்தி, இருமல், சுவாசசுரம் இவைதீரும். (௩௧௬)

அஷ்ட கணத்திற்கு—பால சஞ்சீவி மாத்திரை.

எண்சீர் விருத்தம்.

செயலான கல்நாருங் கிராம்பு பத்திரி
 செவ்வியந்திப் பிலிவிடையந் தான்றி யோடு
முயலான கருஞ்சீர மக்கரா காரம்
 முருகடுகு ரோகணியும் சாதிக் காயும்

வயலான பத்திரிகற் கடக சிங்கி
வசனித்த குரோசாணி கஸ்தூரி பூரம்
மயலாஞ்சீ ரங்கோரோ சனையோ டொக்க
மதித்திட்ட குங்குமப்பூ சமன தாமே.

சமனிஞ்சிச் சாறரைப்புச் சாம மொன்று
தனிக்கையான் சாறரைப்புச் சாம மொன்று
கமன்நார்த்தங் கனிச்சாறு கடிகை மூன்று
கல்லிலரை பயறளவாய் நோய்கட் கீய
நமனில்லை எட்சிநீர்ப்புள் பறவை தோடம்
நளிர் சுரமுங் கழிச்சலுட னிருமலீளை
எமனில்லை காசமெட்டுங் கணமு மாந்தம்
ஏதமிலை பாலசஞ் சீவி யென்றே.

(பொ-ரை.)—கல்நார், கிராம்பு, இலவங்கப்பத்திரி, செவ்வியம், திப்பிலி, அதிவிடயம், தான்றிக்காய்த்தோல், கருஞ்சீரகம், அக்கராகாரம், கடுகுரோகணி, சாதிக்காய், சாதிபத்ரி, கற்கடகசிங்கி, குரோசாணிஓமம், கஸ்தூரி, பச்சைக் கற்பூரம், சீரகம், கோரோசனம், குங்குமப்பூ, இவை சமபாகம், இஞ்சிச் சாறு விட்டு ஒரு சாமம் அரைத்து, கையான்சாறு விட்டு ஒரு சாமமரைத்து, நாரத்தம் பழச்சாறு விட்டு மூன்று கடிகை அரைத்துப் பயறளவு மாத்திரை உருட்டி நிழலிலுலர்த்தி வைத்துக் கொண்டு, காலை மாலை இரண்டு வேளையும், வேளைக்கு ஒரு மாத்திரையாக, மூன்று நாள் முலைப்பாலிலாவது, பசும்பாலிலாவது இழைத்துக் கொடுத்தால், எட்சி, நீர்ப்புள், பறவை இவற்றாலுண்டாம் தோடங்களும், குளிர்ச் சுரம், கழிச்சல், இருமல், ஈளை, எட்டுவிதகாசம், கணம், மாந்தமும் தீரும். (௩௧௯)

### அஷ்ட கணத்திற்கும்—அமிர்த சஞ்சீவிக் குளிகை.

#### அறுசீர் விருத்தம்.

சாத்திர பேதி கோட்டமுடன் தானே யேல மிலவங்கம்
காத்திர மான சந்தனமும் கடுகு ரோகணி யிலுப்பைப்பூ
தோத்திர மான நன்னாரி துய்ய விலாமிச் சிருவேலி
மாத்திரை யாக வரைப்பதற்கு மருந்தோ வின்னஞ் சொல்வோமே

சொல்லிய திப்பிலி யதிமதுரம் துலங்கு முத்தக் காசுடனே
வல்ல முந்திரி கைப்பழமும் வளர்பே ரீந்துப் பழமுடனே
எல்லா மெடுத்துச் சமன்கொண்டே யிதமாய்க் கருப்பஞ் சார்விட்டு
நல்லாய் அரைத்துக் கடலைநிறை நலமாய் நிழலி லுலர்த்திடுமே

உலர்ந்ததோர் மருந்து தன்னை உற்றதோர் வியாதிக் கெல்லாம்
நலம்பெறு முலைப்பால் வெந்நீர் தன்னிலோ ருண்டை நல்கில்
கலந்திடு மாந்த மட்ட கணங்களும் சுரந்தா கம்போம்
அலங்குறு முனியு ரைத்த அமிர்தசஞ் சீவி யாமே.

(பொ-ரை.) சாத்திரபேதி, உயர்ந்த கோட்டம், ஏலம், இலவங்கம், சந்தனம், கடுகுரோகணி, இலுப்பைப்பூ, நன்னாரிவேர், விலாமிச்சம்வேர், வெட்டிவேர், திப்பிலி, அதிமதுரம், கோரைக்கிழங்கு, திராட்சைப்பழம், பேரீச்சம் பழம், இவைகளைச் சரிஎடை எடுத்துக் கருப்பஞ்சாறுவிட்டு, நான்கு சாமம்

அரைத்துக் கடலையளவு மாத்திரை செய்து, நிழலிலுலர்த்தி வைத்துக்கொ ண்டு, காலை மாலை இரண்டு வேளையும் வேளைக்கு ஒரு மாத்திரையாக முலைப்பாலிலாவது, வெந்நீரிலாவது அனுபானித்துக் கொடுத்தால், எண் கணம், மாந்தம், சுரம், தாகம், இவைகள் தீரும். (௩௧அ)

அஷ்டகணத்திற்கும்—பூபதி மாத்திரை.

பன்னிருசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

சந்தனம்நன்னாரிபுளியம்வித் தோட்டுடன்சாத்திரபேதியுமுத்தமும்
தாமரைசிறுகீரைநாயுருவிவல்லாரைசாதிக்காயும்பத்திரி
இந்தவகைசண்பகம்கல்நாருதிப்பிலியிருவாட்சிவேருமதனில்
இருசீரகத்திஞேடிலவங்கப்பட்டையுமேலம்ருத்ராக்ஷமுதலாய்
விந்தைகோரோசனைகாணிவேர்திருமேனிவிரிகலைக்கொம்புசமனாய்
விடுநீரும்வல்லாரைகாணியின்நீர்தனில்விதமாகவேயரைத்தே
அந்தமுளதேற்றுவித்தென்னவுமுலர்த்தியேயனுபானமீதிலீய
அஷ்டகணமுதலாகவிட்டோடுமெனமுனிவரருளினார்பூபதியிதே.

(பொ-ரை.)—சந்தனம், நன்னாரிவேர், புளியம்வித்து ஓடு, சாத்திரபேதி, கோரைக்கிழங்கு, தாமரைவளையம், சிறுகீரைவேர், நாயுருவிவேர், வல்லா ரைக்கீரை, சாதிக்காய், சாதிபத்திரி, சண்பகப்பூ, கல்நார், திப்பிலி, இரு வாக்ஷிவேர், சீரகம், கருஞ்சீரகம், இலவங்கப்பட்டை, ஏலம், ருத்ராக்ஷம், கோ ரோசனம், பொன்னுங்காணிவேர், குப்பைமேனிவேர், மான்கொம்பு இவை களைச் சரியெடை சேர்த்துப் பொடித்து, ஒன்று சேர்த்துக் குழிக்கல்லிட்டு வல்லாரைச் சாற்றால் நான்கு சாமமும், பொன்னுங்காணிச் சாற்றால் நான்கு சாமமுமாக அரைத்துத் தேற்றுவிதையளவு மாத்திரை செய்து நிழலி லுலர்த்தி, தக்க அனுபானத்தில் வேளைக்கு ஒரு மாத்திரையாக இரு வேளை யும் கொடுத்தால், எட்டுக் கணங்களுும நீங்கும். (௩௧௯)

அஷ்டகணத்திற்கு—இளுவை எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

வேண்டும் விளக்கி னெண்ணெய்படி வெள்ளாட் டுப்பா லவ்வளவு
நீண்ட இளுவை கருவேலும் நினைவாய்ப் பட்டை யீருள்ளி
ஈண்டங் கொழுந்து மொருபிடிதா னிவைக ளெல்லா மோரளவாய்த்
தூண்டும் பலமே சீரகமும் துதிகால் காய்ச்சுக் கட்டியதே.

கொச்சகக் கலிப்பா.

கட்டிப்பொடி மற்றவையே கடியதட்டி யெண்ணெயிற்குள்
கெட்டிஅனல் தனிலேற்றிக் கேள்மெழுகு பதமாகப்
பொட்டெனவே பாலகர்க்குப் பொங்கக் கரண்டியிட
அட்டகண தோஷமுதல் அணுகாது மாந்தமுமே.

(பொ-ரை.)—சிற்றுமணக்கெண்ணெய் படி ஒன்று, வெள்ளாட்டுப்பால் படி ஒன்று, இளுவைப்பட்டை, கருவேலம்பட்டை, ஈருள்ளி, இண்டங்கொ ழுந்து, வகைக்குப் பிடி ஒன்று, சீரகம் பலம் ஒன்று, காய்ச்சுக்கட்டி பலம் கால் இவைகளில் எண்ணெயை ஒரு மண்சட்டியில் ஊற்றி அத்துடன் வெள் ளாட்டுப்பாலைக் கலந்து, ஈருள்ளியையும் இண்டங்கொழுந்தையும் குறுக அரிந்து சிதைத்து, மற்றவற்றையும் பொடித்து அதிற் சேர்த்துச் சிறு தீயாக

எரித்து மெழுகு பதத்தில் வடித்து, காலையில் மாத்திரம் உச்சிக்கரண்டி யளவாகக் கொடுத்தால் எட்டுவகைக் கணங்கள், தோஷங்கள், மாந்தங்கள் நீங்கும். (கஉ0)

18 கணம், அச்சரம், காய்ச்சல் இவைகட்கு—பால சஞ்சீவி எண்ணெய்.

எண்சீர் விருத்தம்.

இம்பூறல் சிறுகீரை முசுக்கை கொவ்வை
எலிச்செவியுங் குரும்பைபொன் னுங்காணி யிண்டு
அம்பான குப்பையுட மேனி தானும்
அவுரியுடன் பொடுதலைநல் லாடா தோடை
வம்பான வல்லாரை துளசி வாலி
வளர்தூது வளைகோழி யவரை கொன்றை
முன்பான தகரைகையாந் தகரை யோடு
முருங்கையிலைப் பட்டைவிட்ணு காந்தி கூட்டே.

கூட்டுமோ ரிதழ்வனசம் படகம் நிம்பம்
கொள்ளானை நெருஞ்சில்நரிப் பயறீ ருள்ளி
வாட்டுநறு விலியினிலைச் சுரச மெல்லாம்
வாங்கியெண்ணெய்க் கொன்றிரட்டி வகையாய்ச் சேர்த்துப்
பூட்டுகற்கம் பஞ்சமூ லஞ்சா திக்காய்
புதியகருஞ் சீரகமும் சாதிப் பத்திரி
நாட்டுபஞ்ச திரவியமோ டுள்ளி துத்தம்
நற்கோரோ சனைகாய்ச்சுக் கட்டி தானே.

கட்டிக்கம்பிப் பிசினியொரு கழஞ்சு கூட்டிக்
கலந்தரைத்து மெழுகுபதம் வடித்துக் கொண்டு
திட்டமுட னருந்திவிட அச்சரங்கள் காய்ச்சல்
சேர்ந்தபதி னெண்கணமும் திசைகெட் டோடும்
வட்டதனப் பெண்ணரசே பத்தி யங்கேள்
வகையான யீருள்ளி முருங்கைக் கீரை
சட்டமுட னேஉண்ணச் சொன்னேன் பால
சஞ்சீவி இந்தஎண்ணெய் சபலந் தானே.

(பொ-ரை.)—இம்பூறல், சிறுகீரை, முசுமுசுக்கை, கோவை, எலிச்செவிக் கீரை, குரும்பை, பொன்னுங்காணி, ஈயக்கொழுந்து, குப்பைமேனி, அவுரி, பொடுதலை, ஆடாதோடை, வல்லாரை, துளசி, குதிரைவாலி, தூதுளை, கோழி யவரை, கொன்றை, தகரை, கரிசாலை, முருங்கையிலை, முருங்கைப்பட்டை, விஷ்ணுகாந்தி, ஓரிதழ்த்தாமரை, பற்பாடகம், வேம்பு, ஆனைநெருஞ்சில், நரிப்பயறு, வெங்காயம், நறுவிலியிலை, இவைகளின் சாறுகளெல்லாம் சம னாக சேர்ந்தது ஒரு வீசையாயின், சிற்றாமணக்கெண்ணெய் வீசை இரண்டு சேர்த்து ஒரு மட்சட்டியிலூற்றி, சுக்கு, செவ்வியம், பேரரத்தை, சித்திர மூலம், சிறுதேக்கு, சாதிக்காய், கருஞ்சீரகம், சாதிப்பத்திரி, மிளகு, கோட் டம், அகில், தக்கோலம், குங்குமப்பூ, உள்ளி, துத்தம், கோரோசனை, காய்ச்சுக்கட்டி, கம்பிப்பிசின், இவை வகைக்கு ஒரு கழஞ்சு எடுத்து தண் ணீரில் அரைத்துக் கலக்கி அடுப்பேற்றி, சிறுக எரித்துக் காய்ச்சிப் பக்குவத் தில் வடித்துக் காலையில் மாத்திரம் உச்சிக்கரண்டி வீதம் கொடுக்க, அச்ச ரம், சுரம், பதினெண் கணங்கள் ஆகிய இவைகள் தீரும். பத்தியம்.— ஈருள்ளி, முருங்கைக்கீரை இவைகள் சேர்க்கலாம். (கஉக)

பதினெட்டுக் கணத்திற்கு—மாதளை நெய்.

எண்சீர் விருத்தம்.

தேறவே இன்னமொரு கருவைக் கேளாய்
சிவனெனக்குச் சொன்னபடி சொல்லு கின்றேன்
ஆறவே மாதுளைதன் சமூலம் வாங்கி
அமுதசர்க் கரைசேர்த்துக் குழம்ப தாக்கி
ஊறவே ஆவெண்ணெய் கூடச் சேர்த்தே
உறப்பாகப் பருவமாய்க் கிண்டி வைத்துக்
கூறவே சாதிக்காய் சாதிப் பத்திரி
குணமுடனே ஏலரிசி கூடப் போடே.

போட்டதனை யனலில்வைத்து வெதுப்பி நீதான்
புனிதமுடன் மெழுகுபதம் வடித்துக் கொண்டு
நாட்டதனைக் குழந்தைகட்குக் கரண்டி யிட்டால்
நகருமே நோய்களெல்லாம் நாற்பத் தொன்றில்
பூட்டதனி லிதுபூட்டு கணங்கட் கெல்லாம்
புகழாகச் சொல்லிவிட்டே னறிந்து பாரு
தேட்டதனைத் தேடாதே நெய்யைத் தேடு
திறந்துவிட்டேன் குழந்தைகட் கிதுநெய் யாமே.

நெய்யதனை குழந்தைகள்தான் கொண்ட தானல்
நேரான கணரோகம் பதினெட் டும்போம்
பொய்யதனைச் சொல்லவில்லை தோடம் போகும்
புதுமையுள்ள வயிற்றிரைச்சல் கழிச்சல் போகும்
பையதனை பயல்களுக்குங் கொடுக்க லாகும்
பருவமுள்ள குழந்தைகட்கும் கொடுக்க லாகும்
உய்யதனை ஒளியாமல் சொல்லி விட்டேன்
ஒருவருக்குஞ் சொல்லாமல் ஒளித்து வையே.

(பொ-ரை.)—மாதுளைசமூலச்சாறு கால் படி, சீந்தில் சருக்கரை இரண்டரை பலம், இவ்விரண்டையும் ஒரு மட்சட்டியிற் சேர்த்துக் குழம்பாக்கிப் பசுவெண்ணெய் கால் படி கூட்டி, அதில் சாதிக்காய், சாதிப்பத்திரி, ஏலம், வகைக்கு பலம் அரை இளவறுப்பாய் வறுத்துப் பொடித்துச்சேர்த்து அடுப்பேற்றிக் காய்ச்சிப் பதத்தில் வடித்து, நாளைக்கு இரு வேளையும் ஒரு கரண்டியளவு குழந்தைகட்குக் கொடுத்துவர 41 நாளில் கணம் பதினெட்டு, தோடம், வயிற்றிரைச்சல், கழிச்சல் இவை நீங்கும். இந்த நெய்யைச் சிறு குழந்தைகளுக்கும் பெரிய குழந்தைகளுக்கும் கொடுக்கலாம். (௩௨௨)

மாந்தம் 18-க்கும், கணம் 21-க்கும்—பொன்னுங்காணி எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

பொன்னுங் காணி யிலையுடனே புகழுந் துளசி தகரையிலை
மின்னர் கீழ்வாய் நெல்லியிலை வெண்ணொச் சிலையும் சின்னியிலை
பன்னர் நாயுரு வியினிலையும் பகரம் மான்பச் சரிசியிலை
நன்னர் கருநொச் சியினிலையும் நாடு மிலைக ளெட்டொன்றே.

ஒன்றே நாவ லின்கொழுந்து முயரா வாரை யின்கொழுந்தும்
வென்றே வேப்பங் கொழுந்துடனே விளக்குஞ் சூரை யின்கொழுந்
[தும்
ஒன்றே முடக்கற் றுன்கொழுந்து முருங்கைத் துளிர்புங் கன்கொழு
[ந்தும்
குன்றே யனைய தனத்தாளே கோதில் லாத கொழுந்துகளே

கொழுந்து வகைக ளோரேழு கூறும் ஓரிதழ்த் தாமரையும்
வழும்புளி யாரை வல்லாரை வாகா கச்சிறு புள்ளடியும்
எழுந்த நரிப்பயற் றங்கொடிதான் இண்டந் தண்டு முசுமுசுக்கை
வழுந்த வகத்திப் பழுப்புடனே வீறு சீந்தில் கொடியாமே.

ஆமே ஆடா தோடைசெழும் ஆடு தின்னுப் பாளையொடு
காமே விட்ணுக் கரந்தையுடன் கதித்த முட்கா வேளையுமே
தாமே யிவைகள் பதின்மூன்று தருமா வாரை தன்வேரும்
நாமே சொன்னோம் விடத்தலைவேர் நல்ல நிலக்குமி ழின்வேரே.

வேரே சிறுகீ ரையின்வேரும் வில்வ வேருத் தாமணிவேர்
தாரே மிளகுதக் காளிவேர் தைவே ளையின்வேர் சங்கம்வேர்
காரே கண்டங் கத்திரிவேர் கனத்த நாய்வே ளையின்வேரும்
பாரே குட்டிவி ளாவின்வேர் பகருஞ்சங் கங்குப் பியின்வேரே.

குப்பி பதின்மூன் றும்வகைக்குக் கொள்ளு மொவ்வொரு பிடியாக
வைப்ப வேர்வகைக் கியாழமிட்டு மற்றவை யெல்லாஞ் சாறெடுத்
[துத்
தப்பிச் சிற்று மணக்கெண்ணெய் தானே படியொன் றதில்சொன்ன
ஒப்பிக் கியாழம் சாறுகளும் ஊற்றிக் கடைச்சரக் கைக்கேளே.

கேளே கமடத் தோடோமம் கிளருங் கடல்நுரை சீரகமும்
தாளே திப்பிலி ரோகணியும் சார்ந்த கிராம்பு கருஞ்சீரம்
நாளே திகழ்பர்ப் படகமொடு நல்ல பூவந் திப்பழமும்
ஆளே வசம்பு பெருங்காய மான செங்கத் தரிப்பட்டை.

[ன்றாய்
பட்டை யிவைவகை பதின்மூன்றும் பகரும் வகைக்குக் கழஞ்சொ
இட்டு வத்திர காயஞ்செய் தெண்ணெயி லிட்டே யடுப்பேற்றி
வட்ட மெழுகு பதத்திறக்கி வடித்தே யந்தி சந்தியுமே
துட்டெடை யெண்ணெ யுட்கொள்ளத் தொலையு நோய்கள் சொல்
[வோமே.

சொல்வோ மச்சர கணமுடனே துடுக்காய் விடாம லேவலிக்கும்
வல்லக் குமரி தலைநோயும் வரட்கண முடனே கழிகணமும்
வெல்வோ மாந்த கணமோடு மீறு நீர்க்கண மிசுவுகணம்
புல்வோம் கொட்டா விக்கணமும் போரா டியமுக் குக்கணமே.

முக்குக் கணமு முறுக்குகணம் மூல கணமும் வலிகணமும்
சொக்குஞ் சொருகு கணத்தோடே துட்ட சயித்தி யக்கணமும்
ஒக்கும் பொருமல் மலக்கணமும் ஊது கணமும் விக்கல்கணம்
தொக்கு மிகுத்த தூங்குகணம் சொல்லிவை யெல்லாந் தீர்ந்திடுமே

தீருந் தசநாட் கொருதரந்தான் சேரி ரண்டுதுட் டெடைகொடுத்துப்
பாருஞ் சகல வியாதியுமே பதறி யோடும் பத்தியங்கேள்
காருங் கவிச்சு புளியிறைச்சி கரப்பான் பண்டந் தள்ளிவிடு
சாரு மிளகு நீர்சோறும் சாப்பிடக் கைவல் லியமாமே.

(பொ-ரை.)—பொன்னுங்காணியிலை, துளசியிலை, தகரையிலை, கீழ்வாய் நெல்லியிலை, வெண்ணொச்சியிலை, சின்னியிலை, நாயுருவியிலை, அம்மான் பச்சரிசியிலை, கருநொச்சியிலை, நாவல்கொழுந்து, ஆவாரையின்கொழுந்து, வேப்பங்கொழுந்து, சூரைக்கொழுந்து, முடக்கற்றான்கொழுந்து, முருங் கைத்துளிர், புங்கன்கொழுந்து, ஓரிதழ்த்தாமரை, புளியாரை, வல்லாரை, சிறுபுள்ளடி, நரிபயற்றங்கொடி, இண்டந்தண்டு, முசுமுசுக்கை, அகத்திப் பழுப்பு, சீந்தில் கொடி, ஆடாதோடை, ஆடுதின்னாப்பாளை, விட்ணுகரந்தை, முட்காவேளை, ஆவாரைவேர், விடதாரிவேர், நிலக்குமிழ்வேர், சிறுகீரை வேர், வில்வவேர், உத்தாமணிவேர், மிளகுதக்காளிவேர், தைவேளை வேர், சங்கம்வேர், கண்டங்கத்திரிவேர், நாய்வேளைவேர், குட்டிவிளா வேர், சங்கங்குப்பிவேர் இவைகளின் வேர்கள் நீங்க, மற்றவற்றைத் தனித்த னிச் சாறுகளாக எடுத்துச் சரியளவாகக் கலந்த சாறு படியும், வேர்களை யெல்லாம் வகைக்கு ஒரு பலம் எடுத்திடித்து ஒரு மண் சட்டியிலிட்டு எட்டு படி நீர் விட்டு ஒரு படியாகக் காய்ச்சின குடி நீரும், ஒரு மண் சட்டியிலூற்றி சிற்றாமணக்கெண்ணெய் ஒரு படி விட்டுக் கலந்து, ஆமையோடு, ஓமம், கடல் நுரை, சீரகம், திப்பிலி, கடுகுரோகணி, கிராம்பு, கருஞ்சீரகம், பர்ப்பாடகம், மணிப்புங்கம்பழம், வசம்பு, பெருங்காயம், செங்கத்தாரிப்பட்டை, வகைக்குக் கழஞ்சுப் பொடித்துப் போட்டுச் சிறுகக்காய்ச்சிப் பக்குவபாகத்தில் இறக்கிக் கொண்டு, பத்து நாட்களுக் கொருதடவை காலையிலும், மாலையிலும், இர ண்டு துட்டெடை வீதம், ஐந்து அல்லது ஏழு நாள் கொடுத்தால், அச்சரகணம், விடாத்தலைவலி, வரட்கணம், கழிகணம், மாந்தகணம், நீர்க்கணம், இசிவு கணம், கொட்டாவிக்கணம், முக்குக்கணம், முறுக்குகணம், மூலகணம், வலி கணம், சொருகுகணம், சயித்தியகணம், பொருமல்கணம், மலக்கணம், ஊதுகணம், விக்கல்கணம், தூங்குகணம், ஆகிய இவைகளெல்லாந் தீரும்.

பத்தியம்—மீன், புளி, இறைச்சி, கரப்பான் பண்டம் இவற்றைத் தள்ளி, மிளகு நீர் சோறு சாப்பிடப் பலனுண்டாகும். (௩உ௩)

## 18 கணம், கணவெட்டை, சுரம் உலர்ந்தவுடல் களுக்கு—குமரி எண்ணெய்.

கலி விருத்தம்.

ஆட்டிய எண்ணெ யதுபடி யொன்று
கூட்டெழு சுத்திக் குமரிச் சோறது
மீட்டித் தேங்கா யளவு வெந்தயம்
ஊட்டித் துட்டெடை யூறப் போட்டிடே.

எண்சீர் விருத்தம்.

ஊறியதோர் சலத்தோடே வெந்தயமுங் கூட
ஊற்றிவிடு எண்ணெயிலே கலந்தொன் றாகக்
கூறியசா றுள்ளிபலம் அரிந்து போடு
குமுறவே யடுப்பேற்றி மெழுக தாக

ஆறியபின் வடித்தெடுத்து வைத்துக் கொண்டே
அழகாக நேரமொரு கரண்டி வீதம்
கோறிகொடு பதினெட்டுக் கணமுந் தானே
குணமாகுங் கணவெட்டை சுரங்கள் போமே.

(பொ-ரை.)—சிற்றுமணக்கெண்ணெய் ஒரு படி, குமரிச்சோறு தேங்காய் யளவு, இவைக ளிரண்டையும் ஒரு மண் சட்டியிலிட்டு, அதில் வெந்தயம் துட்டெடையைத் தண்ணீரில் ஊறவைத்தரைத்துச் சேர்த்துக் கொண்டு பிறகு, ஈருள்ளி அரிந்தது ஒரு பலம் போட்டு அடுப்பேற்றிக் காய்ச்சி, வெங் காயம் சிவந்து மிதக்கும் பதத்தில் வடித்துக் கொண்டு, காலையில் மாத்திரம் ஒரு கரண்டி அளவு ஐந்து அல்லது ஏழு நாள் கொடுக்க, பதினெட்டுக் கணம், கணவெட்டை, சுரம் இவை நீங்கும். (௩௨௪)

கணச்சூடு தணிய—வல்லாரை எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

சிற்று மணக்கின் எண்ணெய்படி திறமாய் ஒன்று வல்லாரை
சற்றுச் சாறு படிஅரையும் தானே வெந்தயம் பலம்இரண்டு
அற்றுப் பசுப்பால் விட்டரைத்தே அந்த எண்ணெ யிற்கலந்து
வற்று எரித்து அயிரிட்டு வார்க்கக் கணச்சூ டதுபோமே.

(பொ-ரை.)—சிற்றுமணக்கெண்ணெய் படி ஒன்று, வல்லாரைச் சாறு படி அரை, இவ்விரண்டையும் ஒரு மண்சட்டியில் ஊற்றி, அதில் வெந்தயம் இரண்டு பலத்தைப் பசுவின் பால் விட்டரைத்துக் கலந்து, சிறு தீயிட்டெரித் துப் பக்குவ பாகத்தில், இரண்டு பலம் சர்க்கரை கலந்து வடித்து வைத்துக் கொண்டு, காலையில் மாத்திரம் ஐந்து அல்லது ஏழு நாள் கொடுத்தால் பிள்ளைகளுக்கு உண்டான கணச்சூடு தணியும். (௩௨௫)

கணத்துக்கு—சண்பகப்பூ நெய்.

அறுசீர் விருத்தம்.

கோட்டம்நல் லெண்ணெய் நெய்யும் குறித்தசண் பகப்பூ கந்தம்
நீட்டிய அவுரி துய்ய நிலக்குமிழ் கடுகு ரோணி
நாட்டிலா மிச்சை மிக்க நலந்தரு கிராம்பு பாகம்
ஈட்டியே சாறு கொண்டு எரித்துண்ணக் கணம் போமின்னே.

(பொ-ரை.)—உயர்ந்த சாதிகோட்டம், சண்பகப்பூ, சந்தனத்தூள், கடுகு ரோகணி, விலாமிச்சம்வேர், கிராம்பு இவை வகைக்கு ஒரு கழஞ்சு, அவிரிச் சாறு, நிலக்குமிழ்ச்சாறு இவை வகைக்குக் கால்படி, நல்லெண்ணெய், பசு வின் நெய் இவை வகைக்குக் கால்படி, இவற்றில் சாறுகளையும், நெய்களையும் ஒரு மண்சட்டியிற் கலந்து, அதில் சரக்குகளையெல்லாம் பொடிசெய்து பசுவின் பாலால் அரைத்துக் கலந்து, சிறுக எரித்துப் பக்குவ பாகத்தில் வடித்துக் குழந்தைகளுக்கு மூன்று அல்லது ஐந்து நாள் அல்லது நோய் வன் மைக்குத் தக்க நாளளவு, வேளைக்கு இரண்டு சங்காக காலையில் மாத்திரம் கொடுத்தால், கணம் என்னும் நோய் நீங்கும். (௩௨௬)

கணத்துக்கு—கருஞ்சீரக எண்ணெய்.

கலி விருத்தம்.

கடுகருஞ் சீரம் கடுகு ரோகணி
விடுவன மல்லிகை மீறும் இண்டிலை
இடுமூலைப் பாலிலீ ஈருள்ளி உசிலையும்
கொடுவிளக் கெண்ணெய் கூறு கணங்களே.

(பொ-ரை.)—கடுக்காய்த்தோல், கருஞ்சீரகம், கடுகுரோகணி, காட்டு மல்லிகைவேர், ஈயக்கொழுந்து, வெள்ளைவெங்காயம், சீக்கராம்பட்டை இவைகள் வகைக்குக் கால் பலமாக எடுத்து, வெங்காயத்தை நீக்கி மற்றவற்றையெல்லாம் பொடிசெய்து, ஒரு மண் சட்டியில் கால் படி சிற்றாமணக்கெண்ணெய் விட்டு அதில் போட்டு, வெங்காயத்தை மாத்திரம் குறுக அரிந்துக் கலந்து அடுப்பேற்றிச் சிறுக எரித்து, வெங்காயம் நன்றாய்ச் சிவந்து வெந்த பக்குவத்தில் வடித்து வைத்துக் கொண்டு, காலையில் மாத்திரம் ஒரு பாலடை எண்ணெயில் அரைப் பாலடை மூலைப்பால் சேர்த்து மூன்று அல்லது ஐந்து நாள் அல்லது நோய் வன்மைக்குத்தக்க நாளளவு கொடுத்தால், குழந்தைகளுக்குண்டாயிருந்த கணம் என்னும் நோய் நீங்கும். (௩௨௭)

கணத்துக்கு—பொன்னாங்காணி எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

பொன்னாங் காணி வேருடனே புளியம் ஈர்க்கு வேப்பீர்க்கு [வேர்
மின்னே ஒவ்வோர் பிடியதனில் விதமாய்க் கோழி அவரையின்
சொன்னோம் பலமே அரையாக துள்ள நறுக்கி எண்ணெயிலிட்
டுண்ணப் பானு புடம்வைத்தே ஓடுங் கணமும் வாராதே.

(பொ-ரை.)—பொன்னாங்காணிவேர், புளியிலைஈர்க்கு, வேப்பிலைஈர்க்கு, இம் மூன்றும் வகைக்கு ஒரு பிடி, கோழியவரையின் வேர்ப்பட்டை அரைப் பலம், இவற்றையெல்லாம் நன்றாய் நறுக்கிப் பொடியாக்கி, ஒரு மண் சட்டியிலிட்டு, ஒரு சேர் சிற்றாமணக்கெண்ணெய் அதில் ஊற்றி அச்சட்டிக்கு வாயில் ஒரு அழுக்கில்லாத மெல்லிய துணி கட்டி நாள் தோறும் வெய்யிலில் வைத்துக் காலையில் மாத்திரம் ஒரு உச்சிக் கரண்டி அளவாக மூன்று அல்லது ஐந்து நாள் அல்லது நோய் வன்மைக்குத் தக்க நாளளவு கொடுத்தால், குழந்தைகளுக்குண்டாகும் கணம் என்னும் நோய் நீங்கிவிடும்.(௩௨௮)

கணத்துக்கு—சிறு புள்ளடி எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

சிறுபுள் ளடியுங் கழற்கொழுந்தும் சிறந்த அவுரி சாணாக்கி
நறுமென் பொடுதலை ஒருபிடியும் நைய நறுக்கி நல்லெண்ணெய்
நிறுமுன் அரையாய்க் கதிரோன்முன் நேரே வைத்து நீயருந்த
நறுமென் குழலாய் மேல்பூச நாத னருளால் கணந்தீரும்.

(பொ-ரை.)—சிறுபுள்ளடி, கழற்சிக்கொழுந்து, அவுரியிலை, சாணாக்கியிலை, பொடுதலை யிலை இவைகள் வகைக்கு ஒரு பிடி எடுத்து நன்றாய்ச் சுத்தி செய்து நன்றாய்ச் சிதைத்து, அரைப்படி நல்லெண்ணெயை ஒரு மண் சட்டியில் ஊற்றி, அதில் மேற்படி மருந்துகளைப் போட்டு, அச்சட்டியின் வாய்க்கு மெல்லிய வெள்ளைத் துணிகட்டி வெய்யிலில் வைத்துக்கொண்டிருந்து,

காலை மாலை இரண்டு வேளையும் ஒரு உச்சிக் கரண்டியளவாக மூன்று அல்லது ஐந்து நாள் உள்ளுக்குக் கொடுத்து மேலுக்கும் பூசினால், கணம் என்னும் நோய் நீங்கும். (௩௨௯)

கணத்துக்கு—வில்வ எண்ணெய்.

நேரிசை வெண்பா.

விளக்கெண்ணெய் வில்வநீர் மீறவுரி யுள்ளி
உளக்க வகைக்கோ ருழக்காம்—விளக்கக்
கடுக்காய்த்தோல் கூட்டியது காலைசிறு வோர்க்குக்
கொடுக்கக் கணம்போகுங் கூறு.

(பொ-ரை.)—சிற்றாமணக்கெண்ணெய், வில்வஇலைச் சாறு, அவுரிச்சாறு, வெள்ளை வெங்காயச் சாறு வகைக்கு கால் படி, இவைகளையெல்லாம் ஒரு மண் சட்டியில் ஊற்றி, அதில் கடுக்காய்த்தோல் பலம் ஒன்றை நன்றாய்த் தூள் செய்து போட்டுப் பக்குவ பாகத்தில் காய்ச்சி இறக்கி வடித்து கொண்டு, காலையில் மாத்திரம் சிறு கரண்டி அளவாக மூன்று அல்லது ஐந்து நாள் அல்லது நோய் வன்மைக்குதக்க நாளளவு கொடுத்தால், கணம் என்னும் நோய் நீங்கும். (௩௩௦)

கணத்திற்கு—சித்திர மூலம் எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

விரும்பக்கேள் சித்திர மூலி விளங்கவே குன்றி சங்கு
திரும்பவே முல்லை முன்னை சிற்று மல்லிபே ராமல்லி
அரும்பவே காட்ட கத்தி ஆவாரை பொன்னு வாரை
குரும்பனை மணித்தக் காளி கொள்ளுக்காய் வேளை வேரே.

வேரினில் வகைஒன் றுக்கு விரும்பிடும் பலமுக் காலாய்ச்
சேருநீ ஒன்றாய் வாங்கிச் செயம்பெற ரவியில் மூன்று
ஆருமே அறிய நாளும் அடைவுடன் தானு லர்த்திப்
பாரினில் உரலில் இட்டுப் பாய்ச்சிடு தோண்டிக் கொள்ளே.

தோண்டியே தூணி நீரில் தூளினைச் சேற தாக்கி
ஆண்டியே மருந்து பின்னும் அருளுவோம் புனல்மு ருங்கை
நாண்டியே நத்தைச் சூரி நாய்வேளை குறிஞ்சான் இரண்டு
வேண்டியே நரிப்ப யற்றம் நன்னாரி பிரமி யாமே.

பிரமியும் தும்பை பொன்னுங் கண்ணியு முசுமு சுக்கை
திறமையாய் வகைஒன் றுக்குச் சிறப்புடன் பலம்ஒன் றாகத்
திறமையாம் இவற்றைச் சாறாய்ப் பிழிந்துடன் முன்பு நீரில்
ஒருமையாய் விட்டுத் தானும் உசிதமாஞ் சரக்கைக் கேளே.

சரக்கில்வால் மிளகு நல்ல சடாமாஞ்சில் அக்ரா காரம்
திறக்கவே சண்ப கப்பூ செவ்வியம் மதுரம் கோட்டம்
புரக்கவே கடக சிங்கி புகலக்கேள் சுக்கு தான்றி
உறக்கவே கடுக்காய் சாதிக் காயுடன் லவங்கப் பூவே.

பூவது கடுக்காய்ப் பூவும் புகழதாய் வகைக்கு வீதம்
தாவது கழஞ்சி ரண்டு தனித்தனி யாக வாங்கி
வாவது இளவ றுப்பாய் வறுத்துடன் உரலில் தாக்கி
மாவது போலே சாடித் தோண்டிமுன் நீரில் தாக்கே,

தாக்கியே பின்பு கேளாய் தாரமும் கந்தி வீரம்
தோக்கியே வாளை நாபி வெள்ளைஅப் பிரகந் தானும்
வாக்கியே புழுகு சிலாசத் துடனேகத் தூரி வாங்கிப்
பாக்கிய மாக வீதம் வகைவகைப் பலங்கா லாமே.

பலமதாய் இடித்துத் தூளாய்ப் பாங்குடன் முன்பு நீரில்
சலமதிற் கொட்டிப் பின்பு சாற்றுறேன் இன்னங் கேளாய்
பிலம்பேரா மணக்கின் எண்ணெய் பிரியமாய்ப் படிரண் டிட்டு
வலமதாய் அடுப்பி லேற்றி வன்னியை மூட்டி டாயே

வன்னியை மூட்டி ரண்டு சாமமும் எரிக்கும் போது
பன்னிய நீர்எல் லாந்தான் பரிவுடன் சுண்டிப் போகும்
முன்னிய படிரண் டாகும் மோசமே வராது உண்மை
கன்னியாம் வாலை தன்னைக் கருதிடு சுண்டும் பாரே.

சுண்டிடும் பாகம் கண்டு சூக்ஷமாய் இறக்கி ஆற்றிக்
கண்டிடும் வடியே கட்டிக் கருதிடுங் கலசந் தன்னில்
பொண்டிடும் வாலை தேவிப் பூசையில் வைத்துப் போற்றித்
தொண்டிளை யோர்க ளுக்குத் தீவினை யகற்று மென்றே.

அகற்றவே கணமாந் தந்தான் அலறியே போவ தாகத்
தகற்றவே காலை தன்னில் தாய்தனக் காறு குன்றி
நகத்தவே கொடுத்து எண்ணெய் நாடியே பின்பு எழு
தொகுத்தவே கடிகை சென்று பிறகுபத் தியந்தான் சொல்லே.

பத்தியம் லவங்கப் பூவும் பண்பு நன்மிளகுங் கூட்டிப்
புத்தியாய் பழங்கொ ருக்காய்ப் புளியது கூடச் சேர்த்து
மத்தியே படிநீர் கூட்டி வன்னியிற் கொதிக்கக் காய்ச்சி
சித்தியாய் லவணந் தன்னைச் சிவக்கவும் வறுத்துக் கூட்டே.

கூட்டியே சாறு செய்து கொண்டிட அன்னம் வெந்நீர்
காட்டியே கர்ப்பச் சூடு கழன்றிடும் பேதி யாகும்
நாட்டினில் மங்கை யர்க்கு உண்டபின் இளைப்பில் லாமல்
மேட்டியாம் பனைநுங் காக விழுந்திடுங் கணச் சூடாமே.

சூடது கழன்று மற்று நாளையிற் காலை நேரம்
நீடது மிகுத்து பாலன் நேர்மையை உரைக்கக் கேளு
வீடதில் உதித்த மாந்தம் கணமது விரண்டுப் போக
சாடிது எண்ணெய் தன்னில் சாற்றிடற் கழஞ்சி ரண்டே.

சாற்றிட எண்ணெய் தந்து சார்ஒரு நாழிச் சென்றால்
சாற்றிடப் பேதி ரண்டு தரமெனக் கழன்று ஓடும்
மாற்றிடும் அதன்பின் னர்க்கேள் மாத்திரைக் கடிகை சென்றால்
கோத்திட லாகும் அன்னம் கொடுத்திடு அமுர்தப் பாலே.

கொடுத்திட இந்த வீதம் கூறின நவநாள் எண்ணெய்
விடுத்திடும் அதனைத் தள்ளி மிகுத்துடன் நவநாள் சென்றால்
அடுத்துடன் ஓமம் தேய்த்து அடைவுடன் தலைக்கு வாரு
கொடுத்துடன் சிறுப ருப்பும் சோறுமே கூட்டி டாயே.

கூட்டிடாய் இந்த வீதம் கோதைமா தினுக்கே பத்தியம்
நாட்டினப் போதே எண்ணெய் நளினமாய் வலுக்குங் காயம்
ஊட்டிடு சடலம் விட்டு ஓடிடுங் கணமாந் தந்தான்
தேட்டிட இளம்பா லன்தான் தேகமும் சுவஸ்தம் நன்றே.

(பொ-ரை.)—சித்திரமூல வேர்ப்பட்டை, குன்றிவேர், சங்கம்வேர்ப்பட்டை முல்லைவேர், முன்னைவேர், சிற்றாமல்லிவேர், பேராமல்லிவேர், காட்டகத்தி வேர், ஆவாரைவேர், பொன்னாவாரைவேர், மணத்தக்காளிவேர், கொள்ளுக்காய்வேளைவேர், இவைகள் வகைக்குப் பலம் முக்கால் வாங்கி, வெயிலில் மூன்று நாள் உலர்த்தி இடித்துப்பொடியாக்கி ஒரு மண் தோண்டியிற் போட்டு இரண்டு மரக்கால் தண்ணீர் ஊற்றிப் பின்னர் புனல் முருங்கை, நத்தைச்சூரி, நாய்வேளை, சிறுகுறிஞ்சா, பெருங்குறிஞ்சா, நரிபயற்றங்கொடி நன்னாரி, பிரமி, தும்பை, பொன்னாங்கண்ணி, முசுமுசுக்கை, இவைகள் வகை ஒன்றுக்கு ஒருபலம் சாறு எடுத்து முன் நீரில் ஊற்றி, வால் மிளகு, சடாமாஞ்சில், அக்கராகாரம், சண்பகப்பூ, செவ்வியம், அதிமதுரம், சாதிகோஷ்டம், கர்க்கடகசிங்கி, தோல்சீவின சுக்கு, தான்றிக்காய்த்தோல், கடுக்காய்த்தோல், சாதிக்காய், கிராம்பு, கடுக்காய்ப்பூ, இவைகள் வகைக்குக் கழஞ்சு இரண்டு, எடுத்து இளவறுப்பாக வறுத்து இடித்துத் தூளாக்கி அத் தோண்டியிற் போட்டு அதின் பின்னர், அரிதாரம், கந்தகம், வீரம், வாளம் நாபி, வெள்ளை, அப்பிரகம், புழுகு, கர்ப்பூர சிலாசத்து, கத்தூரி இவைகள் வகைக்குக் கால் பலம் எடுத்து இவைகளையும் தூள் பண்ணி அத் தோண்டியிலேயே போட்டு அதில், பேராமணக்கெண்ணெய் இரண்டுபடி விட்டு அடுப்பேற்றிப் பக்குவ பாகத்தில் எரித்து இரண்டுபடி எண்ணெயாக இறக்கி வேறொரு கடத்தில் வடித்து வைத்துக் கொண்டு, கடவுளை நன்றாய் வணங்கி, முன்னர் தாய்க்குக் காலையில் ஆறு குன்றி எண்ணெய் கொடுத்து ஏழு நாழிகைக்கு மேல், இலவங்கம், மிளகு, கொருக்காய்ப்புளி, இவைகள் சேர்த்துப் படிநீர் விட்டு கொதிக்க வைத்து, வறுத்த வுப்பு போட்டு, மிளகு நீர்க் காய்ச்சி சோற்றிலிட்டுச் சாப்பிட்டு வெந்நீர் குடித்தால், நன்றாய்ப் பேதியாகிப் பனை நுங்கைப் போல் அப்பேதி மூலமாக வெளிப்பட்டுக் கணச்சூடெல்லாம் போய்விடும். இளைப்பிராது. மறுநாள் தாய்க்கு. அவ்வெண்ணெயைக் கொடாமல் குழந்தைக்கு மாத்திரம் குழந்தையின் உடல் வன்மையை யறிந்து எவ்வளவு குறைந்த அளவு கொடுக்கலாமோ அந்த அளவின்படி சிறுகக் கொடுத்தால், ஒரு நாழிகை சென்ற பின் இரண்டு தடவை பேதியாகும், அப்படியான பிறகு கொஞ்ச நேரம் சென்று பாலும் சோறும் கொடுக்க வேண்டும். இப்படி ஒன்பது நாள் கொடுத்துப் பின்னர் ஒன்பது நாள் விட்டு, (பத்தாவது நாளாகிய) பத்தொன்பதாவது நாள் ஓமம் தேய்த்துத் தனியாய்க் காய்ந் தாறின வெந்நீரால் முழுக்காட்டிச் சிறுபருப்பும் அரிசியும் சேர்த்துப் பொங்கின சோறு போட வேண்டும். இப்படிசெய்தால் பிள்ளையின் மாந்த கணம் நீங்கி உடல் வன்மைப்படும், தாய்க்கும் இதே மாதிரியான பத்தியம் வைத்தால் மிகவும் நலம். (௩௩௧)

தாய்க்கு ஆறு குன்றியளவும், பிள்ளைக்கு இரண்டு கழஞ்சு எண்ணெயும் சொல்லி யிருப்பது பொருந்தா அளவென்றெண்ணிக் குழந்தைக்குச் சிறிய அளவு கொடுக்க வேண்டுமென்றெழுதப்பட்டது.

கணங்களுக்கு—தும்மட்டி எண்ணெய்.

எண்சீர் விருத்தம்.

விளக்கெண்ணெய் படியொன்று துமட்டிக் காய்தான்
வெள்வைக்கோல் சுட்டதனீர் படிதான் காலும்
முளக்கமெனுந் தக்காளிச் சாறு காலும்
முதிர்ந்தவெங்கா யச்சாறு படிதான் காலும்

இளக்கியெண்ணெ யினில்போட்டுக் கடைம ருந்தும்
இயம்புகிறேன் வால்மிளகு பணம ரைக்கால்
அளக்குகோ ரோசனமும் பண மரைக்கால்
அறையுங்கத் தூரிமஞ்சள் வெந்தயமு மாமே.

வெந்தயந்தான் சிற்றரத்தை பேர ரத்தை
விதமான கருஞ்சீரம் லவங்கப் பட்டை
சிந்தனையில் லாப்பெரிய லவங்கப் பட்டை
திறமான மாகாணிப் பணந்தான் தூக்கு
முந்தவே இடித்தெண்ணெ யதனிற் போட்டு
முக்கியமாய்ப் பதத்திறக்கிக் கரண்டி கொள்ள
வந்தகணஞ் சகலமுந்தான் போகு மென்று
வசனித்தார் மிளகுநீர்ச் சாறுஞ் சோறே.

(பொ-ரை.)—சிற்றுமணக்கெண்ணெய் ஒரு படி, வரகுவைக்கோல்போட்டுச் சுட்ட தும்மட்டிக்காயின் சாறு படி கால், தக்காளிச் சாறு படி கால், வெங்காயச் சாறு படி கால், இவைகளை ஒரு மட்சட்டியில் கூட்டி, அத்துடன் வால்மிளகும் கோரோசனமும் அரைக்கால் பணவெடை, கத்தூரி மஞ்சள், வெந்தயம், சிற்றரத்தை, பேரரத்தை, கருஞ்சீரகம், சிறுலவங்கப்பட்டை பெரிய லவங்கப்பட்டை வகைக்கு வீசம் பணவெடை பொடித்து, எண்ணெயுடன் கூட்டிக்காய்ச்சிப் பக்குவத்தில் வடித்துக் காலையில் மாத்திரம் ஐந்து அல்லது எழு நாள் ஒரு கரண்டியளவு கொடுத்தால், சகல கணங்களும் நீங்கும். (௩௩௨)

தாய் மிளகு நீறுஞ் சோறும் சாப்பிடவேண்டும்.

கணக்கடுப்புக்கு—பழத்தெண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

போக்கிய கணந்தீ ராமல் பொங்கிய கடுப்புக் கண்டால்
தாக்கியா மணக்கி ணெண்ணெய்த் தனில்நிம்பச் சாறு விட்டு
நீக்கிய வெந்த யத்தை நிறைந்தரைத் ததனிற் போட்டுச்
சீக்கிர மாகப் பண்ணிச் செலுத்திடச் சிலுகா வென்றே.

(பொ-ரை.)—சிற்றுமணக்கெண்ணெய் பலம் பத்து, எலுமிச்சம் பழச் சாறு பலம் பத்து இவைகளை ஒரு மண் சட்டியில் ஊற்றி, ஒரு பலம் வெந்தயத்தை நெகிழ அரைத்துக் கலந்து பதமாய்க் காய்ச்சி வடித்துக் காலையில் மாத்திரம் வேளைக்கு ஒரு உச்சிக் கரண்டியளவாக மூன்று அல்லது ஐந்து நாள் கொடுக்க, கணக்கடுப்பு நீங்கும். (௩௩௩)

சகல கணத்திற்கும்—இண்டெண்ணெய்.

எண்சீர் விருத்தம்.

வெள்ளிண்டு தூதுவளை சங்கங் குப்பி
வேலியொடு பூவரசு குப்பை மேனி
நள்ளாடா தோடைசா ரணைபூ லாவும்
நரிபயற்றங் கொடிபிரமி வேளை கன்னி
பள்ளவே பதின்மூன்று வேர்க ளியாவும்
பரிந்திடித்த சாறுபடி யொன்ற தாகும்
கள்ளமிலா விளக்கெண்ணெய் படியி ரண்டு
கருஞ்சீரம் புழுகோமம் பூண்டு தானே.

பூண்டுகோ ரோசனமுஞ் சண்ப கப்பூ
　　புகழ்வசம்பு சாதிக்காய் தான்றிக் காயும்
தாண்டுடனே வகைக்குப்பல மரைய தாகச்
　　சமரசமா யரைத்தெண்ணெ யதிற்க லந்து
நீண்டுடனே காய்ச்சியொரு கரண்டி வீதம்
　　நினைவாகக் கொடுத்துவரத் தீரு நோய்கேள்
கூண்டுடனே மாந்தமொன் பதுவுந் தீரும்
　　கொடியதொரு தோடமொன் பதுவும் போமே.

போமே குழந்தைகட்குப் பொல்லாப் பதினெண்கணம்
தாமேவி யாதியெலாந் தான்தீரும்—தேமே
மலர்மாதே தெற்குக் கணம்எல்லாம் ஈங்கு
தலமீது தீருமுண்மை தான்.

(பொ-ரை.)—வெள்ளீண்டு, தூதுவேளை, சங்கங்குப்பி, வேலிப்பருத்தி, பூவரசு, குப்பைமேனி, ஆடாதோடை, சாரணை, பூலா, நரிபயற்றங்கொடி, பிரமி, வேளை, கற்றாழை, இவ்வேர்களின் சாறு, வகைக்குப்படி யொன்று, சிற்றாமணக்கெண்ணெய் இரண்டுபடி எல்லாவற்றையும் ஒரு மண் சட்டியிற் கலந்து, கருஞ்சீரகம், புழுகு, ஓமம், பூண்டு, கோரோசனம், சண்பகப்பூ, வசம்பு, சாதிக்காய், தான்றிக்காய், வகைக்கு அரைப்பலம், இவைகளை நீர் விட்டு நன்றாய் அரைத்து ஷை எண்ணெயுடன்கலக்கி அடுப்பேற்றிச் சிறுக எரித்துக் காய்ச்சிப் பதத்தில் இறக்கி, நாளொன்றுக்குக் காலை மாத்திரம் ஒரு கரண்டி யளவு ஏழு அல்லது ஒன்பது நாள் குழந்தைக்குக் கொடுத்து வர, மாந்தம், ஒன்பது தோஷங்களும், பதினெட்டுக் கணங்களும் நீங்கும். (௩௩௪)

சகல கணத்திற்கும்—காரை ரசாயனம்.

அறுசீர் விருத்தம்.

காரைநற் கனியின் சாறு கரும்பினிற் பஞ்ச தாரை
ஓரொரு வகைக்கு நாழி உடனேநா லுழி ஆப்பால்
சேரவே விட்டுப் பாகாய்த் திரளநெய் யுழக்கு விட்டுச்
சாரநா ளெரித்துட் கொள்ளச் சகலமா கணமும் போமே.

(பொ-ரை.)—காரைப் பழத்தின் சாறு, சர்க்கரை, வகைக்கு நாழி, பசுவின் பால் நான்கு நாழி, இவற்றையெல்லாம் ஒரு மண் சட்டியில் ஊற்றிச் சேர்த்து சிறுக எரித்துப் பாகு பதத்தில். கால் படி பசுவின் நெய் விட்டுக்கிளறிக் காலை மாலை சிறு கரண்டியளவு ஐந்து அல்லது ஏழு நாள் கொடுக்க, சகல கணமும் நீங்கும். (௩௩௫)

சகல கணத்திற்கும்—நீர்முள்ளிக் குடிநீர்.

எண்சீர் விருத்தம்.

நீர்முள்ளி யீருள்ளி திரிப லாதி
　　நேராகப் பசுமோரிற் கியாழஞ் செய்தே
எரெட்டொன் றுய்க்காய்ச்சி யிறக்கிக் கொண்டே
　　இருப்புமொந் தைதனிலே வார்த்து வைத்துச்
சீராக வொருசங்கன் றிரண்டு சங்கு
　　தினங்கொடுக்கத் தீராத கணமுந் தீரும்
சார்ந்தலருங் குழல்மடவாய் மருந்தி னோடு
　　சங்கம்வேர் ஒக்கச்சா ரித்துக் கொள்ளே,

(பொ-ரை.)—நீர்முள்ளி, ஈருள்ளி, கடுக்காய்த்தோல், நெல்லிக்காய், தான்றிக்காய்த்தோல், இவைகளை வேளைக்குக் கால் பலம் எடுத்து இடித்து, பசுவின்மோர் அரைப்படியில் சேர்த்து, அரைக்கால் படியாகக் குடிநீராக்கி இருப்புப் பாத்திரத்தில் வைத்துக்கொண்டு, ஒன்று அல்லது இரண்டு சங்காக இரு வேளையும் மூன்று அல்லது ஐந்து நாள் கொடுக்கச் சகல கணம் தீரும். (ருரு௬)

சகல கணத்திற்கும் செப்பு நெருஞ்சி எண்ணெய்.

அறுசீராசிரிய விருத்தம்.

செப்பு நெருஞ்சி புள்ளடி சிறிய அம்மான் பச்சரிசி
கொப்புத் தகரை வேருடனே கூறு நரிப்பயற் றங்கொடியும்
அப்பும் அகத்திப் பட்டையினம் அருவெண் காய மிவைவகைக்கு
நட்புக் கழற்சிக் காயளவு நருக்கி விளக்கெண் ணெயுமாமே.

ஆமே யரைக்கால் படிதனிலே அன்பாய்ப் போட்டுத் தான்கலக்கித்
தாமே சூரிய புடமாகச் சாம மிரண்டு தான்வைத்துத்
தோமே துட்டெடை யீந்தக்கால் தோகாய் சகல கணந்தீரும்
பாமே முக்கல் நின்றுவிடும் பத்திய மாக வைப்பாயே.

(பொ-ரை.)—செப்பு நெருஞ்சி, சிறுபுள்ளடி, சிறிய அம்மான்பச்சரிசி, தகரை இவற்றின் வேர்கள், நரிப்பயற்றங்கொடி, அகத்திப் பட்டை, வெண் காயம் இவைகள் வகைக்கு ஒரு கழற்சிக்காயளவு அரைத்து, சிற்றாமணக் கெண்ணெய் அரைக்கால்படியை ஒரு மண் சட்டியில் ஊற்றி, அதில் போட்டு நன்றாய்க் கலக்கித் துழாவி அச்சட்டியின் வாய்க்கு மெல்லிய வெள்ளைத் துணிகட்டி இரண்டு சாமம் வெயிலில் வைத்துக் காலை மாலை இரண்டு வேளையும், வேளைக்குத் துட்டெடையாக ஐந்து அல்லது ஏழு நாள் கொடுத்தால், சகல கணங்களும் முக்கல் கணமும் தீரும். தாயுங் குழந்தையும் பத்தியங் காக்கவேண்டும். (ருருஎ)

தெற்கத்தி கணத்திற்கு—கோடாசுழித் தைலம்.

எண்சீர் விருத்தம்.

வசம்போமம் வெள்ளுள்ளி காயந் தானும்
வகைவகைக்குக் கால்பலமாய் நிறுத்துக் கொண்டு
நிசம்பெறவே தூள்செய்து வைத்து மேலும்
நினைவாக வேப்பெண்ணெய் படிய ரைக்குள்
தசம்பெறவே தூள்போட்டே யொருநா ழிதான்
தணலிலே கொதிக்கவைத் தாறு நாளும்
கசம்பெறவே ரவிபுடந்தான் வைத்த பின்பு
கனத்ததிப்பி யுடன்வேடு கட்டிக் கொள்ளே.

கொள்ளவே குழந்தைகளின் நிதானம் பார்த்துக்
கொடுத்துவரத் தெற்கத்திக் கணந்தா னேது
உள்ளவே மாந்தம்போர் மாந்த மேது
ஊழ்வினையால் வந்தசர்வ மாந்தந் தீரும்
மெள்ளவே தாய்தன்னைப் பத்தியத்தில் வைத்து
மிளகுநீர்ச் சாதமிட் டுண்ணச் சொல்லு
வள்ளியமாம் பொதிகைமுனி அருளி னாலே
மகாநோய்கள் பறந்துவிடும் வண்மை பாரே,

(பொ-ரை.)—வசம்பு, ஓமம், வெள்ளுள்ளி, காயம், வகைக்குக் கால் பலம் தூள் செய்து, அரைப்படி வேப்பெண்ணெயில் சேர்த்து ஒரு நாழிகை வரைக்கும் தணலில் கொதிக்க வைத்துப் பிறகு எடுத்து, அச்சட்டியின் வாயில் துணிகட்டி ஆறுநாள் ரவிபுடம் வைத்துக் கடுகுடன் எடுத்துக் குழந்தைகளின் நிதானம் பார்த்துக் கொடுக்கத் தெற்கத்திக் கணம், போர் மாந்தம், முதலிய எல்லா மாந்தங்களும் தீரும், தாய்க்கும் மதலைக்கும் மிளகு நீரும், சோறும் பத்தியம் வைக்கவும். (௩௩அ)

முக்கல், வயிற்றுக் கடுப்புக்கு—பருத்திப் பிஞ்சு கற்கம்.

அறுசீர் விருத்தம்

பருத்திப் பிஞ்சு சாதிக்காய் பகரும் கிராம்பு அதிவிடயம்
அரத்தை அசம தாகமுடன் அன்பாய் இலந்தை பலமுமவை
கருத்தாய் சமனுய் நிகழரைத்துக் கட்டித் தயிரில் கலந்துண்ண
வருத்த மான குழவிகட்கு வயிற்றுக் கடுப்புத் தீர்ந்திடுமே.

(பொ-ரை.)—பருத்திப்பிஞ்சு, சாதிக்காய், கிராம்பு, அதிவிடயம், சிற்றரத்தை, ஓமம், இலந்தம் பழம் என்னும் இவைகள் வகைக்கு அரை வராகனெடை எடுத்து நன்றுயரைத்துப் புளித்த கட்டித் தயிரில் கலக்கி நோய் வன்மைக்குத் தக்க நாளளவு குடித்தால், வயிற்றுக் கடுப்புத் தீரும். (௩௩௯)

இரத்தக்கடுப்புக்கு—மெருகங் கிழங்குப் பால்.

அறுசீர் விருத்தம்.

ஓர்எடை விருகம் பட்டை உள்ளியும் பருத்திப் பிஞ்சும்
சாறுகட் சுரசஞ் செய்து சாற்றினில் மதுரம் குப்பைக்
கீரையின் வேரும் வெள்ளைக் கெருடன்மா தளையின் பிஞ்சும்
சீரகம் சரிவெள் ளாட்டின் சிறந்தபால் கறந்த போதே

கலந்தபால் குழந்தைக் கீய கடுப்புள ரத்த சீதம்
மலங்கழிந் திடுதல் பச்சை மஞ்சள தென்ன வீழ்தல்
உலர்ந்துடல் வரட்சிக் காய்ச்சல் உள்ளரோ கங்கட் கெல்லாம்
சலசமாந் தளிர்போல் மேனி தருகுஞ்சஞ் சீவி தானே.

(பொ-ரை.)—மெருகங் கிழங்கு ஒரு பலம், வெங்காயம் ஒரு பலம், பருத்திப் பிஞ்சு ஒரு பலம் இவைகளை அரைத்துச் சுரசஞ் செய்து, அதில் அதிமதுரம், குப்பைக்கீரையின்வேர், வெள்ளைக் கருடன்கிழங்கு, மாதளம்பிஞ்சு சீரகம், சரியாய் ஒவ்வொரு வராகனெடை எடுத்து அரைத்து, வெள்ளாட்டுப் பால் அப்போது கறந்து ஏழு முறை வடிகட்டினது ஆழாக்கில் கலந்து, வேளைக்கு இரண்டு சங்காக நோய் வன்மைக்குத் தக்க நாள் கொடுத்தால், வயிற்றுக் கடுப்போடு இரத்த சீதமாய் மலங்கழிதல், பச்சையாகவாவது மஞ்சளாகவாவது மலங் கழிதல், உடல் உலர்தல், உடல் வரளுதல், காய்ச்சல் முதலிய நோய்களெல்லாம் நீங்கி, உடல் தாமரைப் போலவும் மாந்தளிர் போலவும் அழகுள்ளதாகும், ஆகையால் இது குழந்தைகளுக்குச் சஞ்சீவி போன்றதாகும். (௩௪௦)

மூலக்கடுப்புக்கு—வெந்தய எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

வெந்தயம் பலமும் பத்து விளக்கெண்ணெய்ப் படிதான் போட்டே
அந்தமாய் நிலக்கு மிழ்வேர்ப் பட்டையை அரைத்துக் கூட்டி
விந்தையாய் அடுப்பில் வைத்து வெந்தபின் இறக்கிக் கொள்ளப்
பந்தமாம் உறுப்பு மூலக் கடுப்புப்போம் பால கர்க்கே.

(பொ-ரை.)—வெந்தயம் பலம் பத்தை ஒரு மண் சட்டியிலிட்டு அதில், ஒரு படி சிற்றுமணக்கெண்ணெய் விட்டு, நிலக் குமிழ் வேர் ஒரு பலத்தை வெந்நீர் விட்டரைத்து அந்த எண்ணெயிற் போட்டுச் சிறுக எரித்துப் பக்கு வத்தில் இறக்கி வடிகட்டி, வேளைக்கு உச்சிக் கரண்டி யளவு காலையில் மாத் திரம் நோய் வண்மைக்குத்தக்க நாளளவு கொடுத்தால், அடி தள்ளினது, மூலக்கடுப்பு இவைகள் நீங்கும். (௩௪௧)

சீதக்கடுப்பு, நீர் சுருக்கிற்கு—தென்னம்பாளைச்சாறு.

கலி விருத்தம்.

தீர வேஇளம் தென்னையின் பாளையைப்
பூர வேமடல் போக்கி மலர்இடி
சாறு ஓர்ஆ ழாக்குச் சமன்தயிர்
நேர வேபழம் நீர்பலம் ஏற்றிடே.

ஏற்றி டாய்தின மூன்றிரு நேரமும்
மாற்றி ரத்தஞ்சீ தவயிற் றுக்கடுப்
பாற்றி டாய்பெரும் நீர்ச்சுருக் காறிடும்
காத்தி டாய்புளிப் பாகா தருந்திடே.

(பொ-ரை.)—இளசிலான தென்னம் பாளையை மேல்மட்டை நீக்கி மலரை மாத்திரம் இடித்து வருகின்ற சாறு ஒரு ஆழாக்கு, கட்டியாயுள்ள புளித்த தயிர் ஒரு ஆழாக்கு, எலுமிச்சம்பழச் சாறு ஒரு பலம், ஒன்று சேர்த்து மூன்று நாள் ஆறு வேளை கொடுக்க, இரத்தமும் சீதமுமாகக் கழிந்துண்டாம் வயிற்றுக் கடுப்பு, மிகவும் வருத்துகின்ற நீர்ச்சுருக்கு இவைகள் தீரும். புளிப்பில்லாவுணவு கொள்ள வேண்டும். (௩௪௨)

இரத்தக் கடுப்பு - முக்கல் கடுப்பு - கிராணி, மூலத்திற்கு
கவிழ்தும்பை எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

வெல்லமுங் கவிழ்நல் தும்பை வீரைசூழ் புடவி மீது
அல்லலில் லாபு ழுங்கல் அரிசியும் வகைவ கைக்குச்
சொல்லநா ரத்தங் காய்நேர் சுகமுடன் அரைத்து மூன்று
நல்லெண்ணெய் அரைஆ ழாக்கு நற்சட்டி தன்னி லூற்றே.

ஊற்றியே காய வைத்து உடன்அதில் மருந்தை யிட்டு
மாற்றியே துழாவி மேலும் வளமுடன் எரித்தி றக்கி
ஆற்றியே அந்தி சந்தி அன்புடன் மூன்று நாள்தின்
கீற்றுதி ரக்க டுப்புக் கிராணிமுக் கலுந்தான் போமே.

(பொ-ரை.)—கவிழ்தும்பையிலே, புழுங்கலரிசி, நல்லவெல்லம் இவை மூன்றும் தனித்தனி நாரத்தங்காயளவு எடுத்து, ஒன்றுபட அரைத்து, ஒரு மண் சட்டியில் நல்லெண்ணெய் அரையாழாக்குவிட்டு அதிலதையிட்டு அடுப்பேற்றிக் களிபோற் கிளறி, இறக்கியாற்றி, காலைமாலை மூன்றுநாள் தின்ன உதிரக்கடுப்பு, கிராணி, முக்கல் இவை தீரும். (௩௪௩)

இரத்தக்கடுப்பு, அடிபுறப்பட்டதற்கு—வெந்தயக்களி.

எண்சீர் விருத்தம்.

வெந்தயமோர் பலமதைத்தான் படியா வின்பால்
வெந்திறக்கி மேன்மையதாய் வெல்லங் கூட்டிக்
கந்தமலர்ப் பூங்குழலாய் பசுவின் நெய்யால்
கருகாமல் கும்பாமல் களியாய்க் கிண்டி
உந்திவயிற் றெரிகடுப்போ டுதிரந் தானும்
ஓடும்அடி புறப்பட்ட துள்ளே வாங்கும்
அந்திசந்தி இருபோதுட் கொள்வீ ரானல்
அதிசார வகையனைத்தும் மகலுந் தானே.

(பொ-ரை.)—வெந்தயம் ஒரு பலத்தைப் பசுவின்பால் விட்டரைத்து ஒருபடி பாலிற் கரைத்து, அடுப்பேற்றிச் சிறுக எரித்து, அதில் இரண்டு பலம் கரும்புவெல்லங்கூட்டி, இரண்டு பலம் பசுவின் நெய்விட்டுக் கருகாமலும், கும்பிநாற்ற முண்டாகாமலும் களியாய்க் கிண்டி நோய் வன்மைக்குத்தக்க அளவும் நாளளவும் அறிந்து கொடுத்தால், உந்தியிலும், வயிற்றிலும் எரிச்சலோடு வருகின்ற வயிற்றுக்கடுப்பு, இரத்தபேதி, அடி தள்ளல், அதிசாரவகைகள் நீங்கும். இரு வேளையுங் கொடுக்கவேண்டும். (௩௪௪)

ஆமக்கடுப்பிற்கு—பருத்திப்பருப்புக் கற்கம்.

அறுசீர் விருத்தம்.

என்றுமே பருத்தி வித்து இயலும்சா திக்காய்க் கூட்டி
நன்றுநன் னாரி வேரும் நல்வட்டத் திருப்பி மேலும்
குன்றுசீ ரகங்கி ராம்பு குறுகுபுள் ளடிச்சா றோடு
ஒன்றுமே வறுத்துச் சாற்றில் உகந்திடக் கடுப்புப் போமே.

(பொ-ரை.)—பருத்திப்பருப்பு, சாதிக்காய், நன்னாரிவேர், வட்டத்திருப்பி, சீரகம், கிராம்பு இவை வகைக்கு அரை வராகனெடை எடுத்து வறுத்து, சிறு புள்ளடிச் சாற்றில் அரைத்து வேளைக்குச் சுண்டக்காயளவு நோய் வன்மைக்குத் தக்க நாளளவு கொடுத்தால் கடுப்புத் தீரும். (௩௪௫)

கிராணி கடுப்பிற்கு—வெந்தயப் பக்குவம்.

நேரிசை வெண்பா.

வெந்தயந்தான் கூட்டி மிகுந்தநிம்பச் சாறுவிட்டு
இந்தா யிதனை எரித்துண்ணப்—பந்தாரும்
மெய்யாங் கிராணி வெகுகடுப்பு மேகமுதல்
பொய்யாது மானே புகல்.

(பொ-ரை.)—வெந்தயம் ஒரு வராகனெடையை, எலுமிச்சம்பழச்சாறு ஒரு பலம்விட்டு எரித்து உண்ணக் கிராணி, மூலக்கடுப்பு, மேகம் இவை உண்மையாய் நீங்கும். (௩௪௬)

சீமூலத்திற்கு—செந்நாயுருவி எண்ணெய்.

நேரிசை வெண்பா.

செந்நா யுருவியிலை சீராய் ஒருபிடியாய்
உண்ணநல் லெண்ணெய்தனில் ஒருழக்கு—மின்னே
வரிக்குமரி யன்னமும் வாங்குபஞ்ச தாரை
பெருக்கியுண்ண சீமூலம் போம்.

(பொ-ரை.)—செவப்பு நாயுருவியிலை ஒரு பிடி குறுக அரிந்து சதைத்து, ஒரு மண் சட்டியிற்போட்டு வரிக்கற்ருழைச் சோறு நன்ருய்க்கழுவப்பட்டது ஒரு எலுமிச்சங் காயளவு அதில்போட்டு, நல்லெண்ணெய் ஒரு கால்படி ஊற்றிச் சிறுக எரித்துப் பக்குவபாகத்தில் ஒரு பலம் நாட்டுச்சர்க்கரை போட்டுக் கரைந்துருகினவுடன் வடித்துக் காலைமாலை இரண்டு வேளையும் நோய் வன்மைக்குத் தக்கபடி மருந்தளவும் நாளளவும் கணித்துக் கொடுத்தால், சீமூலம் தீரும். (௩சஎ)

சகலவிதக் கடுப்பிற்கும்—அதிமதுரக் குளிகை.

பதினுன்குசீர் விருத்தம்.

மதுரமதி விடையமுடன் பெருமரப் பட்டையும் மாதளம் பிஞ்சி னுடனே
மாவிளா வில்வதன் பிசினுடன் சீரகம் மாகுரா சானி ஓமம்
முதிரவிள நீரதன் பூவும்வேர் காய்சாதி முகிழ்காரை வேரி னுடனே
முன்னே உரைத்தவித மெல்லாமும் ஒருகூறு மொழிகுல்லை [இலைபா தியாய்

சதிர்பரவு கஞ்சாவின் சாற்வார்த் தரைத்ததை சந்தத மெடுத்து ருட்டி
சாதிப் பழத்தளவு தயிரிற் கொடுக்கவே சகலக் கடுப்பு மகலும்
உதிர்விளாம் பிசினுடன் உள்ளியும் அரைத்ததனை உறுதயிரி லேயருந்த
உண்டான ரத்தசீ தக்கடுப் பானதும் ஓடிவிடும் உண்மை யிதுவே.

(பொ-ரை.)—அதிமதுரம், அதிவிடயம், பெருமரப்பட்டை, மாதளம்பிஞ்சு, மாம்பிசின், விளாம்பிசின், வில்வப்பிசின், சீரகம், குரோசானி ஓமம், தென்னம்பூ, சுக்கு, ஜாதிக்காய், காரைவேர் இவைகளெல்லாம் ஒரு வராகனெடை, துளசி இலை அரை வராகனெடை இவைகளைக் கஞ்சாச்சாற்ருலரைத்துச் சாதிக்காய் அளவு போதுமான கட்டியாயுள்ள புளிப்புத் தயிரில் நோய் வன்மைக்குத் தக்க நாள் கொடுத்தால், சர்வ கடுப்புகளும் நீங்கும். இஃதல்லாமலும் விளாம்பிசினும் வெள்ளைபூண்டும் சரி எடைக் கூட்டியரைத்துப் போதுமான தயிரில் கலந்து கொடுத்தாலும், இரத்தசீதக் கடுப்பு தீரும். (௩சஅ)

ஆறுவகை மூலம், வாயு, விடக்கடி முதலியவற்றிற்கு
சஞ்சீவிக் குளிகை.

அறுசீர் விருத்தம்.

இருவி நாபி யரிதார மிரதம் கந்தி வெங்காரம்
வருமே தான்றிக் காய்சுக்கு வருந்து மிளகு திப்பிலியும்
தருமே வகையொன் ருேர்கழஞ்சு தானே வாள மைங்கழஞ்சு
அருமைச் சுத்தி செய்திலக்க மான கழஞ்சு பதினைந்தும்.

ங்கையாந் தகரை யின்சாற்றால் கணக்கா யேழு நாள்களினும் [தே
மெய்மை யொருநாட் கொருசாமம் விடாம னன்றாய்த் தானரைத்
உய்யக் குன்றி யளவாக உருண்டை செய்து நிழலுலர்த்தின்
ஐயா சஞ்சீ விக்குளிகை யருளிச் செய்தா ரகத்தியனார்.

மூல வாயு சாதிக்காய் முனிபல் வாயு சிறுநீரில்
ஆலந் தரித்த பாம்புகடிக் கறிந்து தேசிப் பழச்சாற்றில்
மூல வியாதி வலிகுன்மம் மூளைத்த நொச்சிச் சாற்றிலிடு
சூலை வலிக்கு முருங்கையுட சுகித்த பட்டைச் சாற்றிலிடே.

சயத்து வகைகள் பத்துக்குந் தான்வெள் ளாட்டுப் பாலிலிடு
வயத்த வியாதி தான்தீர வருந்திப் பத்திய மாகக்கொள்
மயத்துச் சாம்பல் பூசிநின்று மகிழ்ந்தே யாடு மரன்பாத
முயர்சஞ் சீவிக் குளிகைக்கு முதலனு பான மிவையன்றே.

(பொ-ரை.)—இருவி, நாபி, அரிதாரம், இரதம், கந்தகம், வெங்காரம், சுக்கு, தான்றிக்காய்த் தோல், மிளகு, திப்பிலி வகைக்கு கழஞ்சு ஒன்று, நேர்வாளம் ஐந்து கழஞ்சு, இவைகள் எல்லாவற்றையும் அரைக்கவேண்டிய முறைப்படி கல்வத்திட்டுக் கையாந்தகரைச் சாற்றால் ஏழு நாள் வரைக்கும் நாளொன்றுக்கு ஒரு சாமமாக அரைத்துக் குன்றியளவாக மாத்திரை செய்து நிழலிலுலர்த்தி, மூலவாய்வுக்கு, சாதிக்காய் கஷாயத்திலும், பல வாய்வுக்கு அல்லது பலவாத நோய்களுக்குச் சிறுநீரிலும், பாம்புகடிக்கு பழச்சாற்றிலும், மூலவியாதி, வலிகுன்மம் இவைகட்கு நொச்சிச் சாற்றிலும், சூலைவலிக்கு முருங்கப்பட்டைச் சாற்றிலும் பத்துவகை க்ஷயத்துக்கு வெள் ளாட்டுப் பாலிலும், காலையில் மாத்திரமும், சமயமானால் இரண்டு வேளையி லும் வேளைக்கு ஒன்று முதல் மூன்று மாத்திரையாக மூன்று, ஐந்து நாட் கள் கொடுக்க மேற்சொன்ன வியாதிகள் நீங்கும். (௩சக)

விடமாந்தகண விக்கலுக்கும், சிங்கிமாந்த கணத்துக்கும்
முருவிலிக்குடிநீர்.

எண்சீர் விருத்தம்.

முருவிலிநன் னாரியொடு வெங்கா யந்தான்
முதிர்வசம்பு இந்துப்புக் கடுக்காய் முள்ளி
மருவியநா ரத்தைஎலி மிச்சை வேளை
வாகான மலைதாங்கிக் கீழ்க்காய் நெல்லி
வருவியதோர் பூசுணையு மேபாற் சொற்றி
வளர்குரட்டை மால்கரந்தை வகைஒன் றுக்கி
பெருகுநல்ல நீர்விட்டுக் காய்ச்சிக் கொள்ளப்
பிலத்தவிட மாந்தகண விக்கல் போமே.

(பொ-ரை.)—வவ்வாலொட்டி, நன்னாரிவேர், வெங்காயம், வசம்பு, இந்து ப்பு, கடுக்காய்த் தோல், நெல்லிவற்றல், நாரத்தைவேர், எலுமிச்சம்வேர், வேளைவேர், மலைதாங்கிவேர், கீழ்வாய்நெல்லிவேர், நிலப்பூசுணை வேர், பாற்சொற்றி, குரட்டைவேர், விட்ணு காந்தி இவைகள் வகை ஒன் றுக்கு கால் பலம் எடுத்திடித்து ஒரு மண் சட்டியிற் போட்டு, ஒரு படி தண்ணீர் விட்டு அரைக்கால் படியாகக் காய்ச்சி இதை, ஒரு நாளைக்கு இரண்டு வேளையாக மூன்று நாள் கொடுத்தால், விடமாந்தம் கணம், அதில் வரும் விக்கல் இவை நீங்கும். (௩டுo)

பொருமலுக்கும், மாந்தகணத்துக்கும்—பச்சிலைச்சாறு.

கட்டளைக் கலித்துறை.

இடுமே துளசியுஞ் செம்முள்ளி தும்பை யிலையுடனே
வெடுமே நற்சீரகமுங் கஞ்சங் கோரைதை வேளையுடன்
கொடுமே நறுக்கிப் புகட்டிடச் சாற்றைக் குழவிகட்கு
விடுமே பொருமலும் மாந்த கணங்களும் விட்டிடுமே.

(பொ-ரை.)—துளசி, செம்முள்ளி, தும்பை, சீரகம், கஞ்சாங்கோரை, தைவேளை இவைகளைச் சரி எடை எடுத்து இடித்துப் பிழிந்து, வேளைக்கு ஒரு உச்சிக்கரண்டியளவு இரண்டு வேளையும், மூன்று அல்லது ஐந்து நாள் வரை கொடுத்தால், வயிற்றுப் பொருமலோடு கூடிய மாந்தகணம் விட்டு நீங்கும்.

(நடுக)

# 5. கரப்பான் வகுப்பு

## கரப்பான்

உடலில் திமிர், தினவு, சொரி, புண், தடிப்பு, வெடிப்பு, நீர்கசிதல் ஆகிய குறிகுணங்களை யுண்டாக்கி, உடலின் இயற்கை நிறத்தை வேறுபடுத் தும்நோய் கரப்பான் எனப்படும்.

பிறக்கும் பருவம்.

" தயங்குக ணந்தோன்றுந் தான்கரப்பான்—நயம்படவே
வந்தூறும் அக்கணத்தில் வாதக் கரப்பான்."

என்பதிலிருந்து கணத்தின் காலமே கரப்பானுக்கும் காலமாகு மென்றறியக் கிடக்கின்றது. (௩௫௨)

கரப்பானைத் தோற்றுவிக்கும் பொருள்கள்.

(கலி விருத்தம்.)

பெருகுஞ் சோள மிறுங்கும் பெருங்கம்பு
வரகு காருடன் வாழைமின் காயொடு
உரைகொள் பாகற் கெளிற்றுமீன் உண்டிடில்
விரிவ தாய்க்கரப் பானு மிகுந்ததே. (௩௫௩)

கரப்பான் தொகை.

அறுசீராசிரிய விருத்தம்.

முத்தோட மரியூது சூலை முன்னுவெடி மண்டைபொரி சட்டை
சற்றோடு கருமையொடு செம்மை தனிக்கொள்ளி தோடமொடு வாலை
முற்றோல்வ ரட்சியொடு வீங்கல் மூரிவரும் பதினெட்டு வகையாம்
கொத்தான கரப்பான்க ளென்று கூறினார் பண்டையோ ராமால்.

(பொ-ரை.)—(1) வாதகரப்பான், (2) பித்தகரப்பான், (3) சேத்தும கரப்பான், (4) அரிகரப்பான், (5) ஊதுகரப்பான், (6) சூலைகரப்பான், (7) வெடிகரப்பான், (8) மண்டைகரப்பான், (9) பொரிகரப்பான், (10) சட்டை கரப்பான், (11) ஓடுகரப்பான், (12) கருங்கரப்பான், (13) செங்கரப்பான், (14) கொள்ளிகரப்பான், (15) தோடகரப்பான், (16) வாலை (பாலை) கரப்பான், (17) வரள்கரப்பான், (18) வீங்குகரப்பான், எனப் பதினெண் வகைப்படும்.

பதினெண் சித்தர் பாலவாகடத் திரட்டில் கண்ட கரப்பான் தொகை கீழ்வருமாறாகும் :—

எண்சீராசிரிய விருத்தம்.

" செங்கரப்பான் அனல்கரப்பான் தானும் மண்டைச்
சிரங்குபண்ணும் அரிகரப்பான் பொரிக ரப்பான்
அங்கமதி லெழுகரப்பான் தானு மிக்க
அளராம்உதி ரக்கரப்பான் கட்டி யோடு
பொங்கமாய் வீங்கிய கரப்பா னுந்தான்
புகலரிய சட்டைதடி வெடிக ரப்பான்
சிங்கமுக எரிகரப்பான் வாத பித்தச்
சேத்மத்தோ டேகரப்பான் பதினெட் டாமே.

இச்செய்யுளில் கூறப்பட்ட கரப்பான் தொகையில் சிலமாத்திரமே, முன்னர்கூறிய தொகையில் காணப்படாமலிருப்பதோடு அவைகளின் குறி குணங்களும் கிடைக்கவில்லை. (கிடைத்தபின் சேர்க்கப்படும்).

மேலும் கரப்பான் எண்வகை என்றும், தொண்ணூற்ருறு, முந்நூற்றிருபது வகை என்றும் கூறப்பட்டுள்ளது. இதனை

"எண்வகைக் கரப்பான் இசைந்திடக் கேளு"
"மறுத்தால் தொண்ணூற் ருறுகரப்பான்
மாட்டோ மெனவே போய்விடுமே"
"முருவவே காய்ச்சிவடித் தருந்த நித்தம்
முந்நூற்றிருபது கரப்பான் கிரந்தி போமே."

என்ற வாக்கியத்தால் அறிக. (௫௫௪)

## (1) வாதகரப்பான் குறிகுணம்.

எழுசீராசிரிய விருத்தம்.

தெறிக்கும் வீங்குமுட லெங்கு மேதிமிர்க டுப்ப தாகியழுந் தேகமேற்
பொறிப் பறந்ததென வேபுண் ணுகியதி லேவெடித் ததிக பொங் [கமாய்
முறுக்கி யேசுரம தாகி நாவது வறண்டு நோயது முதிர்ந்திடில்
வெறிக் கருங்குழலி மாது வாதகரப் பானெனப் புகல்வர் மேவி [டே.

(பொ-ரை.)—உடலில் ஆங்காங்குள்ள நரம்புகளிற்சிலத் திடீரெனத்தெறித்தல், உடல் முழுவதும் வீங்குதல், அடிக்கடி உடம்பைத் திமிர்த்து முறுக்குதல், கடுத்தல் இவை பொறுக்கமுடியாமல் அழுதல், உடல்மேல் நெற்பொறியை இரைத்தாற்போல் தலைவிரிந்த புண்கள் உண்டாதல், சிலநாள்களில் அப்புண்கள் வெடித்துச் சீயும் ரத்தமுமாய்ப் பொங்குதல், திமிருடன் சுரமடித்தல், நாவரளல், நா பேசவும் உண்ணவும் முடியாதபடி நோதல் ஆகிய இக்குறி குணங்கள் காணின், வாதகரப்பா னென்றறிவாய்.

இங்குக் கூறிய குறிகுணங்களில் சில அடியிற்கண்ட மேற்கோள் செய்யுளிலுங் காண்க :—

வெண்பா.

இயம்புதிமிர் காய்ச்சல் இயங்குந் திரட்சி
தயங்கு கணங்கரப்பான் தங்கும்—நயம்படவே
வந்துூறு மாக்கணத்தில் வாதக் கரப்பானும்
செந்தா மரையாளே செப்பு.

வாதகரப்பானுக்கு - மாவிலிங்க எண்ணெய்.

எழுசீராசிரிய விருத்தம்.

மேவு மாவிலிங் கத்தோலி லைக்களி விரிந்த வாதகரப் பான் [பட்டை
தாவு கொம்மட்டிக் காயு மேனியிலை சாய்ந்த தோர்திருகு கள்ளி [யும்
வாவு நீலியிலை யேழு மோர்வகை யுழக்குச் சாறெ்ன வகுத்துநீ
மாவி ளக்கெணெயி லிட்டெ ரித்ததை வடித்தோர் காசெடை கொ [டுத்திடே.

(பொ-ரை.)—(1) மாவிலங்கப்பட்டை, (2) இலைக்கள்ளி, (3) வாதகரப் பான்பட்டை, (4) குமட்டிக்காய், (5) குப்பைமேனியிலை, (6) திருகுகள்ளி, (7) அவுரியிலை ஆகிய இவ்வெழு வகையின் சாறு தனித்தனி உழக்கு எடுத்து மொத்தவளவுக்கு நேரெடை ஆமணக்கு நெய்கூட்டி எரித்து பக்குவ பாகத்தில் வடித்து, காலையில் மாத்திரம் வேளை ஒன்றுக்கு காசெடை வீதம் புகட்டிவர, வாதகரப்பான் நீங்கும்.

குறிப்பு.—இவ்வெண்ணெய் வயிற்றைக் கழிக்குமாதலால் நோயின் பலாபலமும், குழந்தைகளின் தேக பலாபலத்தையும் கவனித்துக் கொடுக்க வேண்டிய அளவைக் குறைத்தும், மிகுத்தும் வரவேண்டும். அன்றியும் மலச்சிக்கல் அதிகமாக இருக்கக் கண்டால், அவசரம் நோக்கி இருவேளையும் புகட்டலாம்.

மருந்து புகட்டவேண்டிய கால அளவு கூறாமையால், பிணி தீருமட்டும் கொடுக்கவேண்டுமென்பதாயிற்று. ஆயினும், மருத்துவன் தேகம், தேயம் காலம், நோய்பலம் அறிந்து, நாளளவு கணித்து மருந்தை உபயோகிக்க வேண்டும். (௩௫௫)

## (2) பித்தகரப்பான் குறிகுணம்.

வெண்பா.

செப்புந் தலைநெறித்துச் சேரும்காய்ச் சல்தினவு
ஒப்பச் சிவந்தெரித் துட்டணமுந்—தப்பாமல்
வாந்திவரும் நீர்சிவக்கும் வந்துமலஞ் சிக்கிவிடும்
சேர்ந்தபித்தச் செங்கரப்பான் திண்ணம்.

(பொ-ரை.)—தலைநோய், சுரம், அரிப்பு, உடல்சிவத்தலுடன் எரிதல், சூடு, வாந்தி, நீர்சிவத்தல், மலச்சிக்கல் ஆகிய குறிகுணங்கள் காணில், பித்தகரப்பான் எனக்கூறுவர்.

இதனைக் கீழ்க்கண்ட மேற்கோளாலும் அறிக :—

கொடுமையானசிரநோயினோடுசொறிகூறு முட்டினமும்வாந்தியும்
கடுமையானசுரமெய்சிவந்திடுதல்கண்பசத்துதொனிமுந்தியே
தடைகளாகமலபந்தமாகிவிடில்சார்ந்தபித்தகரப்பானென்றே
விடமுநேரமுதமுஞ்சமானவிழிவெண்ணகைத்திருமருந்திடே. (௩௫௬)

பித்தகரப்பானுக்கு—குன்றி எண்ணெய்.

எழுசீராசிரிய விருத்தம்.

மருந்து குன்றிகரு நொச்சி யோடுமிக வளர்க ழற்சியிலை மன்னுசீர்
கிரந்தி நாயகமு டன்ற னிச்சுரச மேயு ழக்குவளர் கின்றவூழ்
புரிந்த வெண்தகரி னற்பு ழுக்கையது போடி ரண்டுபல நீதியாய்
இருந்த ஆமணக் கெண்ணெய் சேரொடு மெரித்தோர் காசெடையி
[சைத்திடே,

(பொ-ரை.)—(1) குன்றியிலை, (2) கருநொச்சியிலை, (3) கழற்சியிலை. (4) கிரந்திநாயகமிலை ஆகிய இந்நான்கின் சுரசம் தனித்தனி உழக்கு ஒன்று சேர்த்து, அதில் வெள்ளாட்டுப்புழுக்கை பலம் இரண்டு பொடித்துக் கலந்து, ஆமணக்குநெய் சேர் ஒன்று கூட்டி, சிறுதீயில் எரித்து பக்குவ பாகத்தில் வடித்து, காசெடைவீதம் காலை, மாலை இரண்டு வேளையும் புகட்டிவர, பித்தகரப்பான் தீரும். (௩௫௭)

## (3) சேத்துமக் கரப்பான் குறிகுணம்.

எழுசீராசிரிய விருத்தம்.

இசையு நெஞ்சுக ளடைத்து ளேவிரண மாகி யேதலை வலித்திடும்
அசையும் வாயதனில் வெந்துமே திரட்சி யாகி யேகடு கடுத்திடில்
விசையுஞ் சேத்தும கரப்ப னெனசிகிச்சை மேவு செவ்வரி பரந்துநீள்
வசைபொ ருந்தும்விழி கலைதி ரண்டமுக வனிதை யேயவுட தங்களே.

(பொ-ரை.)—ஒலித்தற்கிசைந்த நெஞ்சு சரிவர பேசவொட்டாமல் அடைத்தல், அன்றி மார்படைத்தல், நெஞ்சிலும், மார்பிலும் உள்ளே புண் உண்டாதல், தலைவலித்தல், எப்பொழுதும் அசைந்து கொண்டேயிருக்கும் வாயில் பேசவொட்டாதபடி புண்ணுதல், அப்புண்கள் நீர்கொண்டு திரளுதல், அவை ஒரு வகையாகக் கடுத்தல் ஆகிய குறி குணங்கள் காணில் சேத்துமக்கரப்பானென அறிந்து சிகிச்சை செய். (௩௫௮)

சேத்துமகரப்பானுக்கு—நன்னாரி எண்ணெய்.

எழுசீராசிரிய விருத்தம்.

தங்கு மாதிநன் னாரி யோடுவேம் பாடம் பட்டைசரி தாக்கியே
புங்கம் பூவுடனி லக்க டம்புவகை யோடு சாறுகால் சேரதாய்
மங்கை யேகம்பிப் பிசின்கத் தூரியெனு மஞ்சளும் வகைய ரைப்பலம்
பொங்கு மாமணக் கெண்ணெய் சேரொடு பொருந்த வேளரித் துள்ளிடே.

(பொ-ரை.)—(1) நன்னாரிவேர்ப்பட்டை, (2) வேம்பாடம்பட்டை இவைகள் வகைக்குப் பலம் ஒன்று; (3) புங்கம்பூ, (4) நிலக்கடம்பு இலை இவைகளின் சாறு வகைக்கு கால் சேர், (5) கம்பிப்பிசின், (6) கத்தூரி மஞ்சள் இவைகளின் பொடி வகைக்குப் பலம் அரை, (7) ஆமணக்கெண்ணெய் சேர் ஒன்று, இவைகளை ஒன்றுபடக்கலந்து எரித்துப் பக்குவ பாகத்தில் வடித்து, காலைமாலை இருவேளையும் காசெடைவீதம் புகட்ட, சேத்துமகரப்பான் நீங்கும். (௩௫௯)

## (4) அரிகரப்பான் குறிகுணம்.

வெண்பா.

உற்ற அரிகரப்பான் ஓதக்கேள் ஒண்டொடியீர்
மற்றிலிங்க யோனிகளில் வந்திடும்புற்—றுற்றுடலில்
ஆறுமற் புண்ணரிக்கும் ஆஆ உருவழிக்கும்
மாறுது இக்குணத்தின் வாறு.

(பொ-ரை.)—இலிங்கப்புற்று, யோனிப்புற்று, உடலில் ஆறுப்புண், அரிப்பு, உடலுருவு மாறுதல், ஆகிய இவைகள் கண்டால் இதை அரிகரப்பான் எனக்கூறுவர். மேலும், அடியிற்காட்டியபடி கூறலுமொன்று.

எழுசீராசிரிய விருத்தம்.

இடைசி றுத்துவண கனிபு ரைத்தமொழி யினிய தானவத ரத்தினாய்
துடையி டைக்குள்மிகு விரண மாகியதிற் சூழ்ச லங்களுமி குந்துநோய்
புடையு நீள்தசை கரைந்து நாட்படவி ருந்து பூதவுடல் வாடினால்
அடைவு சேரரி கரப்ப னுமிதைய றிந்து நன்மருந் தாற்றிடே.

(பொ-ரை.)—இரு துடைகளின் இடையில் மிகுந்த விரணமாகி அதிலிருந்து அதிக சலம் வடியும், புண்ணில் தசை மிகக்கரைந்து நோவுண்டாகும், நாட்படவிருந்து உடல் வாடும், இளைக்கும். (௩௬௦)

அரிகரப்பானுக்கு—கரந்தை எண்ணெய்.

எண்சீராசிரிய விருத்தம்.

குறியான கழிச்சல்வகை யெல்லாந் தீரும்
குணமுண்டா மிவ்வகையிற் கூர்ந்து பாரு
அரிகரப்பா னெண்ணெய்தனை வருஷிப் பேன்கேள்
அரியகொட் டைக்கரந்தை வேர்படை யின்வேர்
முரியான பசரியிலை நீலிப் பட்டை
முற்றக்கோ டகசாலை வேரின் பட்டை
கரியான மிளகரணை வேலி நல்ல
கரிசாலை பெருங்களாப் பட்டை வேரே.

வேரான ஆவரைவேர் காணி வேர்த்தோல்
வீறுபிர மட்டைசிறு கீரை யின்வேர்
சீரான வட்டத்தி ருப்பி யின்வேர்
சிவசிவா புலித்தொடக்கி வேரின் பட்டை
காரான பலமரையாய் நிறுத்து வாங்கிக்
கனவசம்பு பலமரையு மதனோ டொக்க
ஆரான வேரண்டம் படிகா லாக
அவ்வகையு மிடித்துநீ யதனிற் சேரே.

அதனிற்சே ரடுப்பேற்றிக் கொதிக்கக் காய்ச்சி
அச்சமற வடிகட்டி யிறுத்துக் கொண்டே
அதனிற்சேர் நாளேழு கரண்டி கொள்ள
அரிகரப்பான் சொரிகரப்பா னுமிக ரப்பான்
அதனிற்சேர் செங்கரப்பான் கருங்க ரப்பான்
அவைகதறி யோடுமே கண்பா ராமல்
அதனிற்சேர் மண்டைப்புண் கரப்பான் சூடும்
அரியவெட்டைக் கரப்பானு மயங்கிப் போமே.

(பொ-ரை.)—(1) கொட்டைக்கரந்தைவேர், (2) செருப்படைவேர், (3) பசரியிலை, (4) நீலிவேர்ப்பட்டை, (5) கோடகசாலைவேர்ப்பட்டை, (6) மிளகரணை வேர்ப்பட்டை, (7) உத்தாமணிச் சமூலம், (8) கரிசலாங்கண்ணிச் சமூலம், (9) பெருங்களாவேர்ப்பட்டை, (10) ஆவாரைவேர், (11) பொன்னுங்காணிவேர், (12) பிரமட்டைவேர், (13) சிறுகீரைவேர், (14) வட்டத்திருப்பிவேர், (15) ஈண்டங்கொடியின் வேர்ப்பட்டை, (16) வசம்பு இவைகளைத் தனித்தனி இடித்து பலம் அரையாக எடுத்து, சிற்றாமணக்கு நெய் படி காலில் கூட்டிக் காய்ச்சி வடித்து, உச்சிக்கரண்டிவீதம் ஏழுநாள் கொடுக்க, அரிகரப்பான் முதலியவை நீங்கும். (௩௬௧)

அரிகரப்பானுக்கு—மேல்பூச்சு.

உள்ளித் தைலம்.

எண்சீராசிரிய விருத்தம்.

போமென்ற மேலுக்குத் தைலஞ் சொல்வேன்
புகலான வுள்ளிகடு வெருக்கம் பட்டை
வாமென்ற மருக்காரை வேரின் பட்டை
வட்டகிலு கிலுப்பையுத்தா மணியின் வேர்த்தோல்
காமென்ற நல்லெண்ணெய் தன்னி லிட்டுக்
காய்ச்சியே துவளையிடக் கருகிப் போகும்
நாமென்ற விருமூன்று வேளை போதும்
நல்லதுவா லைத்தைலம் நல்கு வீரே.

(பொ-ரை.)—(1) உள்ளி, (2) கடுக்காய், (3) எருக்கம்பட்டை, (4) மருக்காரைவேர்ப்பட்டை, (5) வட்டகிலுகிலுப்பை வேர்ப்பட்டை, (6) உத்தாமணி வேர்ப்பட்டை வகைக்கு பலம் அரையாகப் பொடித்து, எள் நெய் பதினைந்து பலத்தில் கூட்டிக்காய்ச்சி ஆறு வேளை மேலுக்குத் துவாலையிட, அரிகரப்பான் தீரும். (௩௬௨)

அரிகரப்பானுக்கு—வனசப்பத்திர மெண்ணெய்.

எழுசீராசிரிய விருத்தம்.

மூட்டு வாய்வனசப் பத்தி ரங்கமுதை லத்தி மொய்த்தகரு நொச்சிலுங்
கூட்டு வாயதிற் சங்கங் குப்பியொடுங் கூறுஞ் சாறுகாற் சேரதாய்
நாட்டு வாய்கருஞ் சீர மோர்பலம் நவின்ற வாமணக் கெண்ணெயும்
வாட்ட மாயரைச் சேரி லிட்டெரி வடித்த ருந்திடவு மாறுமே.

(பொரை.)—(1) தாமரைச்சாறு, (2) கழுதைலத்திச்சாறு, (3) கருநொச்சிச்சாறு, (4) சங்கங்குப்பிச்சாறு வகைக்குச் சேர் கால், கருஞ்சீரகம் ஒரு பலம், ஆமணக்குநெய் சேர் அரை, இவைகளைக் கூட்டிக் காய்ச்சி வடித்து, துட்டெடைக் கொடுக்க, அரிகரப்பான் நீங்கும். (௩௬௩)

## (5) ஊதுகரப்பான் குறிகுணம்.

வெண்பா.

கேளாய் குளிர்காய்ச்சல் கேடாங் கருங்கழலை
மூளாவி தான்போல் முயன்றுநிற்கும்—நாள்தோறும்
பூதம்போல் வீங்குவிக்கும் புண்ணாகி மூக்கரிக்கும்
ஊதுகரப் பான்தோடம் உற்று.

(பொ-ரை.)—ஊதுகரப்பானில் குளிர்காய்ச்சல், கேட்டை விளைவிக்கும் கட்டிகள், பிணத்தைப்போல் உடல் செயலற்று நிற்றல், உடல் பூதம்போல் வீங்குதல், மூக்கில் புண்ணுண்டாகி அது அரித்தல், ஆகிய குறிகுணங்கள் தோன்றும். (௩௬௪)

சிகிச்சை.

இதற்கு எல்லாக் கரப்பான்களின் சிகிச்சையில் எழுதியுள்ள அகத்தி எண்ணெய் நேர் மருந்தாகும்.

## (6) சூலைக்கரப்பான் குறிகுணம்.

வெண்பா.

பிள்ளை முகம்வாடிப் பேதவெடி மேனியெல்லாம்
சள்ளை பொருந்தித் தவிக்குமே—மெள்ளக்கேள்
வள்ளல்முழங் கால்கை மருவியுண்ணக் கூடாது
தள்ளுமென்ற சூலையது தான்.

(பொ-ரை.)—குழந்தைமுகம் வாடுதல், உடல் பலவிதமாக வெடிப்பும் அதனால் வலி தாங்காது பரதவித்தல், முழங்கால்களை நீட்டவும் மடக்கவுங் கூடாமை, கையாலுணவுகொள்ள முடியாமை, மயக்கம் இவைகள் காணின், சூலைக்கரப்பான் எனக்கூறுவர். (௩௬௫)

சூலைகரப்பானுக்கு.

புங்கன்வேர்ப்பட்டை எண்ணெய்.

எண்சீர் விருத்தம்.

வடக்குவரும் புங்குசங் காதண் டம்வேர்
வலுவரைத்து மூன்றும்விரை வாகச் சேர்த்தே
அடக்கமுள்ள விளக்கெண்ணெய் படியீ டாக
ஆனதின்பி னீருள்ளி யுழக்க ரிந்து
விடக்கடுகு ரோகணிகால் பலம்ச முத்திரா
விதம்பாதி தூளாக்கி யதனிற் போட்டு
முடக்கிவிடுஞ் சூலைப்புண் கரப்பா னோடு
முன்பானு வின்புடம்வைத் துண்ண னன்றே.

(பொ-ரை.)—(1) வடதிசை நோக்கிச் செல்லும் புங்கன்வேர், (2) சங்கம் வேர், (3) ஆதொண்டைவேர் வகைக்கு பலம் ஒன்று, இவைகளை நீர்விட்டரைத்து சிற்றுமணக்கெண்ணெய் படி ஒன்றில் கரைத்து, வெங்காயம் பலம் பத்து சிறுக அரிந்து அதிலிட்டு, கடகரோகணி பலம் கால், சமுத்திராவிதை பலம் அரைக்கால், இவைகள் இரண்டையும் பொடித்துக் கலந்து நன்றாய் உறவாகுமட்டும் சூரியபுடம் வைத்து எடுத்துக் காலையில் மாத்திரம் அரை முதல் ஒரு உச்சிக்கரண்டி யளவு உள்ளுக்குங் கொடுத்து வெளிப்பிரயோகமும் செய்யவும். ஒரு நாள் விட்டு மறுநாள் கொடுக்கவும். இவ்வாறு மாறிமாறி ஏழு நாள் கொடுத்துவரவும். புளி, சினைப்புப் பண்டம் முதலியவைகளை விலக்கவும். (௩௬௬)

## (7) வெடிகரப்பான் குறிகுணம்.

எழுசீராசிரிய விருத்தம்.

அரிவை யேயுடல்க ளெங்கும் வீங்குமசை கீலில் வீங்குமதில் துண்டமாம்
விரிய வீங்கியதி லேவெடித்திடு மிகுந்த வெப்பதுவு மாகவே
திரிகி யேதலை வலித்து மேலும்வெகு தினவு மாகியது வோடினால்
உரிய தாகும்வெடி கரப்ப னமென வுகந்து பண்டித முணர்த்திடே.

(பொ-ரை.)—உடல்முற்றும் வீங்குதல், அசைவுள்ள கீல்கள்தோறும் வீங்கி அதில் முகமுண்டாய் வெடித்தல், சுரங்காய்தல், தலைவலித்தல், நமையுண்டாதல் ஆகிய இக்குறி குணங்கள் காணில், வெடிகரப்பான் என உணர்வாயாக. (நகஎ)

வெடிகரப்பானுக்கு.

சங்கங்குப்பி எண்ணெய்.

எழுசீராசிரிய விருத்தம்.

உணர்ந்தி டாதசங் குப்பி சின்னிவள ருகந்த மேனிச டைச்சிவேர்
பிணைத்தி டுங்கழற் புங்கம் வேரினொடு பகரு கின்றநு ணுவுமே
இணைத்த சாறுவகை யழக்கு மாமணக் கெண்ணெய் சேரினி லெரித்துநீ
யணைத்த ருந்திடவு மோடு மேவெடி கரப்ப னுமென வறிந்திடே.

(பொ-ரை.)—(1) சங்கங்குப்பி யிலை, (2) சின்னி யிலை, (3) குப்பைமேனி யிலை, (4) நீர்ச்சுண்டிவேர், (5) கழற்சியிலை, (6) புங்கம்வேர், (7) நுணுயிலை. இவ்வேழின் சாறும் வகைக்கு ஆழாக்கு, ஆமணக்கெண்ணெய் ஒரு சேர், இவைகளை ஒன்றாகச் சேர்த்துக் காய்ச்சி பக்குவ பாகத்தில் வடித்து உள்ளுக்குக் காசெடை புகட்டிவர, வெடிகரப்பான் நீங்கும். (நகஅ)

## (8) மண்டைக்கரப்பான் குறிகுணம்.

எழுசீராசிரிய விருத்தம்.

ஓடி மண்டைதனி லேபுண் ணாகியுயர் காதிற் சீவழிந் தாறியே
நாடி யேதலைவ லித்து மூக்கினில் நயந்து நீரது பரிந்திடும்
வாடி மெய்யதும் வெப்ப மோடுகுரல் வளையி னின்றினவு மாகவே
கூடில் மண்டைக் கரப்பானெ னப்பரி கார மேலினிக் கூறுவாம்.

(பொ-ரை.)—மண்டையில் பரபரவென்று ஓடிஓடி நமையுண்டாக அதைச் சொரிந்தால் அங்கு புண்ணாகுதல், காதில் அடிக்கடி சீழ் வடிந்து வடிந்து ஆறுதல், தலைவலித்தல், மூக்கினில் நீர் வடிதல், உடல் இளைத்தல், உடல் சுரமடிப்பது போற் காய்தல், குரல் வளையில் தினவெடுத்தல் இவைகள் உண்டானால், மண்டைக்கரப் பானென அறிவாய். (நகசு)

மண்டைக்கரப்பானுக்கு.

வேளையெண்ணெய்.

எழுசீராசிரிய விருத்தம்.

கூறும் வேளைகரு நொச்சி பூவரசு கொடிய வேம்புடனு ணுவுமே
தேறி யேசுரச மேயழக் கிவைதி ரண்ட முத்தெணெய் சேரிலே
ஊற விட்டெரித் தருந்தக் காசெடை யுகந்து காதினினு மூற்றினால்
நாறு மண்டைக் கரப்பா னிருந்திடவு நியாய மல்லவென வெண்
[ணுமே.

(பொ-ரை.)—(1) வேளைச்சமூலம், (2) கருநொச்சியிலை, (3) பூவரசம் பட்டை, (4) வேப்பம் பட்டை, (5) நுணுயிலை இவைகளின் சுரசம் வகைக்கு ஆழாக்கு, முத்தெண்ணெய் சேர் ஒன்று, இவைகளை ஒன்றுசேர்த்து எரித்து பக்குவத்தில் எடுத்து காசெடை உள்ளுக்குக் கொடுத்து, காதிலும் இரண்டு மூன்று துளி விட்டுவர, மண்டைக்கரப்பான் தீரும். (நஎ0)

## (9) பொரி கரப்பான் குறிகுணம்.

எழுசீராசிரிய விருத்தம்.

மாறு மாறென வடித்த வாயென வுடற்குளே தடிப்பாகியே
ஏறு மேசிவந் தோடி யேகனத் தெங்கு மேல்வெடித் துள்ளுமே
நீறு போலனல் குளிர்ச்சி யாகியுழ லுவு லர்ந்துநெறி தாழ்ந்திடில்
ஆறி டாப்பொரி கரப்ப னுமென வறிந்து பண்டிதந் தொகுத்திடே.

(பொ-ரை.)—ஒருவன் பல தடவையாக இடைவிடாது வாயில் அடித்துக் கொள்வதால் வாயில் உண்டாகும் வீக்கத்தைப்போல, உடம்பு முழுவதும் சிவந்த தடிப்புகளுண்டாதல், அவை, நாளுக்கு நாள் கனத்து வெடித்தல், அவ்வெடிப்பில் அனற்போற் கொளுத்தல், பின் குளிர்தல், நாவுலர்ந்து நீர் வேட்கை காணல், இவற்றுலெல்லாம் தன் அறிவுகெடல், ஆகிய இக்குறி குணங்கள் காணின், பொரிகரப்பானென அறிந்து கொள்வாய். (நஎக)

பொரி கரப்பானுக்கு

புங்கம் எண்ணெய்.

எழுசீராசிரிய விருத்தம்.

தொகுத்த புங்கொடு கிரந்தி நாயகஞ் சூழுஞ் சங்கினொடு குப்பியுஞ்
செகுத்த சின்னியொடு செங்கத் தாரிகொத் தானு மேசெருப் படி [யுடன்
பகுத்த தூதுளை கழற்சி யாவினது சாணிப் பாலரைக் கால்நிறை
வகுத்த முத்தெணெய்முக் கால்நி றைக்குள்வடித் தாதி சால்முத [லுள்ளிடே.

(பொ-ரை.)—புங்கம்வேர்பட்டை, கிரந்திநாயகம் சமூலம், சங்கனிலை, சங்கங்குப்பியிலை, சின்னியிலை, செங்கத்தாரி சமூலம், முடக்கொத்தான் சமூலம், செருப்படைச் சமூலம், தூதுளை சமூலம், கழற்சியிலை இவைகளின் சாறும், ஆவின் சாணிப்பாலும், வகைக்கு அரைக்காற்படி, இதற்கு முக்கால் படி முத்தெண்ணெய்கூட்டிக் காய்ச்சிக் கொடுக்க, பொரிகரப்பான் தீரும். (நஎஉ)

## (10) சட்டைக் கரப்பான் குறிகுணம்.

எழுசீராசிரிய விருத்தம்.

மங்கை கீலில்வலி கள்ளிப் பூவெனம லர்ந்து வாரியிடு மெய்யினிற்
பொங்கு நீர்ப்பனிகள் போல்வி ழுந்துடலம் வெப்ப மாகிமலஞ் சிக்கியே
துங்க மானசிர நோவு மாகிவளர் தூய வன்னமது துவேஷமாம்
தங்கு சட்டைகரப் பானெ னச்சிகிச்சை தான தற்குவிரித் தோதுவாம்.

(பொ-ரை.)—கீல்களில் வலித்தல் பிறகு கள்ளிப்பூவைப் போல உடம்பெல்லாம் கிளைத்தல், அவற்றிலிருந்து பனித்துளி போல் நீர் கசிதல், உடல் வெப்பமாயிருத்தல், மலஞ்சிக்குதல், தலைநோதல், சோற்றில் வெறுப்பு ஆகிய குறிகுணங்கள் காணின், சட்டைக்கரப்பானென அறிவாய். (நஎ௩)

சட்டைக் கரப்பானுக்கு

சங்கங்குப்பி எண்ணெய்.

எழுசீராசிரிய விருத்தம்.

ஓது சங்கினது குப்பி பூவரசு மூழ லாற்றிநிலக் கடம்புடன் [தாய்ச்
நீதி சேர்குவளை வேம்பிவ் வாறுவகை நிகழ்த்துஞ் சாறுக ளுழக்க
சாதி யாட்டினது புழுக்கை யோர்பலமுந் தாக்குமுத் தெணெயி [லிட்டெரித்
தாதி காலமுத லுட்கொள் சட்டைகரப் பான கன்றுவிடு மறிவையே.

(பொ-ரை.)—(1) சங்கங்குப்பியிலை, (2) பூவரசம்பட்டை, (3) ஊழலாற்றிப் பட்டை, (4) நிலக்கடம்பு, (5) குவளையிலை, (6) வேம்பின்பட்டை, இவ்வாறின் சாறு வகைக்கு உழக்கு, ஆட்டுப் புழுக்கை ஒரு பலம், ஆமணக்கு எண் ணெய் சேர் ஒன்று இவைகளைக் கலந்து, எரித்து பக்குவத்தில் எடுத்து வடித்து, காசெடை வீதம் உட்கொள்ள சட்டைக்கரப்பான் தீரும். (௩எச)

## (11) ஓ டு க ர ப் பா ன் கு றி கு ண ம்.

எழுசீராசிரிய விருத்தம்.

எண்ணு கின்றதொரு கீலி லேவலிக ளேக மாகியது கட்டியே
வண்ண மெய்நரம் பெங்கு மேயிசிவு குத்த லாகிமல பந்தமாய்
நண்ணி யேதினவு மாய்த்தடித் துடலி னுடி வீக்கமு மிகுந்திடிற்
கண்ணி ஓடுகரப் பான்இ தென்றமுறை கண்டு கொள்ளடி கருத் [திலே.

(பொ-ரை.)—கீல்களில் வீக்கங்கண்டு பலத்த நோயுடன் நீட்டவும், முடக் கவுங்கூடாமற் செய்தல், நரம்பு மண்டல முற்றும் வலித்தலுடன் குத்தலுங் காணல், மலம் சிக்குதல், உடலில் தடிப்பு கண்டு அரித்து, பிறகு வீங்குதல் ஆகிய இக்குறிகுணங் காணில், ஓடுகரப்பான் எனக் கூறுவார். (௩எரு)

ஓடுகரப்பானுக்கு

பெரு மருந்து பட்டையாதி வேது.

எழுசீராசிரிய விருத்தம்.

கருத்தி லெண்ணுநற் பெருமருந்துநிலை காட்டில்வாழ் குவளம் [பட்டையுஞ்
திருத்த மானவெலி யாம ணக்கிநெடு சேர்ந்த வேம்படிப் பட்டை [யும்
பெருத்த கோசலமும் விட்டெ ரித்துடலிற் பேணி வேதுகள் பிடித் [திடில்
வருத்தி யோடுகரப் பானி ருந்திட வழக்கு மில்லைநினை மங்கையே!

(பொ-ரை.)—(1) பெரு மருந்துப் பட்டை, (2) வில்வப்பட்டை, (3) எலி யாமணக்கிலை, (4) வேம்பின் வேர்பட்டை, இந்நான்கும் சிறிது எடுத்து இடி த்து, (5) கோசலத்தில் சேர்த்துக் காய்ச்சி வேது பிடிக்க, ஓடுகரப்பான் தீரும். (௩எசு)

## (12) கருங்கரப்பான் குறி குணம்.

அறுசீராசிரிய விருத்தம்.

அறியக் கேளாய் கருங்கரப்பான் அழுமே குழவி உடல்வெதும்பும்
செறியு முலையும் உண்ணது தேக நிறமும் வெவ்வேறய்க்
கரிய மேனி பசுநரம்பு கதித்தே காட்டும் பரபரத்து
முறுக்கி மிகவுந் துள்ளிவிழும் முகமும் பதங்கள் ஊதிடுமே.

(பொ-ரை.)—குழந்தை அழல், சுரம் காய்தல், மார்பில் பால் நிரம்பி இருப்பினும் பால் உண்ணுமை, உடல் பலநிறமாக மாறுபட்டு பின்னர் கரிய நிறமடைதல், பச்சை நரம்பு புடைத்துக் காட்டல், கையிற்றங்காமை, உடலை முறுக்குதல், துள்ளி விழுதல், முகமும் பாதங்களும் ஊதுதல் ஆகிய இக்குறி குணங்காணின் கருங்கரப்பான் எனப் புகல்வார். (௩௭௭)

கருங்கரப்பான் முதலிய 18 கரப்பானுக்கும்—கஞ்சாங்கோரைநெய்.

அறுசீராசிரிய விருத்தம்.

ஓரடிமேல் வைப்பு.

அரிய மிளகு துருசுகடு வதுவுங் கோட்டந் திப்பிலியும்
கரியசீ ரகமு மோமங் கஞ்சாங் கோரை குழிமிட்டான்
சிறியா வாரை பெரியாவாரை சிவனுர் வேம்புத் தமதாளி
பெரிய எண்ணெய்க் கொதிப்பித்துப் பிள்ளை கட்குக் கொடுப்பீரேல்
வரிய கரப்பான் பதினெட்டும் மறைந்து பறந்து மோடிடுமே.

(பொ-ரை.)—(1) மிளகு, (2) துருசு, (3) கடுக்காய்த்தோல், (4) கோட்டம், (5) அரிசிதிப்பிலி, (6) கருஞ்சீரகம், (7) ஓமம், (8) கஞ்சாங்கோரை, (9) குழிமிட்டான் (நத்தைச் சூரி), (10) சிறு ஆவரை, (11) பெரு ஆவரை, (12) சிவனுர் வேம்பு, (13) உத்தாமணி ஆக தினுசுகள் 13-ம் வகைக்குப் பலம் ஒன்று நீர் விட்டரைத்து சிற்றுமணக்கெண்ணெய் படி இரண்டரையுடன் சேர்த்து எரித்து பக்குவத்தில் வடித்து, உச்சிக்கரண்டி வீதம் புகட்ட, கருங்கரப்பானும், மற்றுமுள்ள கரப்பான்களும் நீங்கும். (௩௭௮)

## (13) செங்கரப்பான் குறி குணம்.

எழுசீராசிரிய விருத்தம்.

காய்ச்ச லோடுகடுப் பாகி யூதியுடல் கன்றி மெத்தவும ழன்றுபோய்
மேய்ச்ச லானதின வாகி யெங்கணும்வி யர்க்கு ருவுகள் மிகுந்து [தான்
பாய்ச்ச லானமுக முங்க றுத்துடல் பரிந்து தானது சிவந்திடில்
சூட்ச மாகிவளர் செங்க ரப்பனெனத் தோற்றியே யவுட தஞ்செயே.

(பொ-ரை.)—சுரமடித்தல், உடல் கடுத்தல், உடல் ஊதுதல், மிகுதியாய் கன்றிப்போதல், சுரம் விட்டுவிட்டாலும் உடல் கனகனவென்றிருத்தல், உடம்பு முழுமைக்கும் ஓடிஓடித் தினவெடுத்தல், உடல் முழுமைக்கும் வியர்வைக்குரு காணல், முகங் கறுத்தல், உடல் சிவத்தல், ஆகிய குறிகுணங்கள் காணின், செங்கரப்பானென்று அறிவாய்.

இக்கரப்பானின் குறிகுணங்களை வேறு வகையாகக் கூறுவாருமுளர். அவற்றை அடியில் வரும் வெண்பாவாலறிக—

செங்கரப்பான்.

அறுசீராசிரிய விருத்தம்.

சித்தால் கேளீர் செங்கரப்பான் சிரசு வலிக்கு மேல்சிவக்கும்
அத்தால் வெடிக்கும் நீரோடும் அணங்கே மூத்திர மலங்கட்டும்
அத்தால் அங்க மிகமெலியும் மரணக் குறிக ளிவைகண்டால்
ஒத்த கிரியை வகைதானும் உரைப்பேன் ஒஒ ஒண்ணுதலே.

(பொ-ரை.)—தலை வலித்தல், உடல் சிவத்தல், உடல் வெடித்தல், வெடித்தலினின்று நீர் ஒழுகுதல், மலம் மூத்திரம் கட்டுப்படல், உடல் மெலிதல், ஆகிய இக்குறி குணங்கள் காணுமாகில் இந்நோய் செங்கரப்பான் எனக் கூறப்படும். மேலும், இது மரணத்தைத் தரக்கூடியதாகும். (௩எசு)

செங்கரப்பானுக்கு—பூவரசுநெய்.

எழுசீராசிரிய விருத்தம்.

செய்ய பூவரசு செங்கத் தாரிவேம் பாடம் பட்டையொடு சடைச்சியும்
நைய வேசுரச மோரழக் கிவையில் நாட்டுகம் பிப்பிசின் கூட்டியே
வெய்ய தானகருஞ் சீர மூன்றுநிட்க மேவுமாமணக் கெண்ணெய் [சேர்
பைய வேவடித் துட்கொள் செங்கரப் பானு மேபரந் தோடுமே.

(பொ-ரை.)—(1) பூவரசம்பட்டை, (2) செங்கத்தாரிப்பட்டை, (3) வேம்பாடம் பட்டை, (4) சடைச்சி, இவைகளினது சுரசம் வகைக்கு ஆழாக்கு, (4) ஆமணக்கெண்ணெய் - சேர் ஒன்றுடன் கலந்து அதில் (1) கம்பிப்பிசின் (2) கருஞ்சீரகம் வகைக்கு வராகனெடை மூன்று கூட்டி எரித்துப் பக்குவத்தில் வடித்து, சிறு கரண்டி வீதம் காலையில் மாத்திரம் கொடுத்து வர, செங்கரப்பான் நீங்கும். (௩அ௦)

செங்கரப்பான்.

ஆதொண்டை நெய்.

அறுசீராசிரிய விருத்தம்.

பத்துஞ்செங் கரப்பான் தீரப் பசுவினெய் யுழக்கா தொண்டை
முத்துநன் முதியார் கூந்தல் முருக்கிலை நெருஞ்சில் கொத்தான்
இத்துபூ வரசு சின்னி யீருள்ளி தன்னைக் கொண்டே
எத்துட னடுப்பி லேற்றி யிருபதஞ் சிவந்த போதே.

போதநீ கேளாய் முன்பு புகன்றதை வடித்துக் கொண்டு
தீதகல் கரண்டி வீதந் திகழ்ந்தநெய் தன்னிற் கொள்ள
மாதுவுந் தந்தை செய்த வகையெலாங் கழிந்து பிள்ளை
பேதைசெங் கரப்பான் தீரும் பின்வேறு குணம்சொல் வாமே.
இவ்விரண்டும் ஒரு தொடர்.

(பொ-ரை.)—(1) பசுவின் நெய் படி காலுடன், (2) ஆதொண்டை, (3) முதியார்கூந்தல், (4) முருக்கிலை, (5) சிறு நெருஞ்சில், (6) கொத்தான், (7) பூவரசம்பட்டை, (8) சிறுசின்னி, (9) ஈருள்ளி, ஆகிய இவைகளின் சாறு

வகைக்கு அரைக்காற்படி கூட்டி எரித்து மெழுகு பதத்தில் வடித்து, வேளை ஒன்றுக்கு உச்சிக்கரண்டி வீதம் காலையில் மாத்திரம், வேண்டிய நாள் மட்டும் கொடுக்க, செங்கரப்பான் தீரும். (௩அக)

## (14) கொள்ளிக்கரப்பான் குறிகுணம்.

அறுசீராசிரிய விருத்தம்.

கொத்துக் கொள்ளி யின்கரப்பான் குணத்தைக் கேளாய் கோகிலமே
மற்றும் வயிறு தான்வீங்கி மலமு மடைக்கும் இளைப்புண்டாம்
கத்துங் குரலும் அரையுண்டாங் கனத்த விக்கல் உண்டானல்
பத்தும் பதியும் ஓதுவதேன் பாலன் பிழைப்ப தரிதாமே.

(பொ-ரை.)—வயிறு வீங்கல், மலங்கட்டல், இளைப்புண்டாதல், குரல் கம்மல், விக்கல் காணல் ஆகிய இக்குறிகுணங்கள் தோன்றின் கொள்ளிக் கரப்பான் எனப் புகல்வர்; இக்கொடிய நோயால் பீடிக்கப்படும் குழந்தைகள் பிழைப்பது அரிதாகும். (௩அஉ)

## (15) தோடக்கரப்பான் குறிகுணம்.

எழுசீராசிரிய விருத்தம்.

உள்ளு மேலுநளிர் காச்ச லாகியுடம் பெங்கும் புண்ணென வழன்றுவாய்
கள்ளு நாறியுடல் தன்னி லேகழலை கண்டு பூதமென வீங்கியே
எள்ளின் மாமலரை யொக்கு மூக்கினி லரித்து நின்றழுது மேங்கினல்
துள்ளு மான்கணின் சாய லாய்கொடிய தோட மானகரப் பானிதே.

(பொ-ரை.)—உள்ளிலும், மேலும் நடுக்கத்துடன் காய்ச்சலுண்டாதல், உடம்பெங்கும் அழன்று புண்போல் நோதல், வாயில் கள் மணம் உண்டாதல், உடலில் கழலைகள் கண்டு உடல் பூதம் போல் வீங்குதல், மூக்கினில் அரிப்புண்டாகுதல், ஏக்கத்துடன் அழுதல் ஆகிய இவைகள் தோடகரப்பான் குறிகுணங்களாகும். (௩அ௩)

தோடக்கரப்பானுக்கு—திருகுகள்ளி எண்ணெய்.

(எழுசீராசிரிய விருத்தம்.)

பான லங்கணுய் திருகு கள்ளியொடு பன்னு பூதகரப் பான்பட்டை
கான வேப்பந்தோற் சங்கங் குப்பிநிலக் கடம்பு டன்கரு நொச்சியும்
வான மால்கு றிஞ்சா னல்லிலை வகைக்குச் சாறுசேர் காலதாய்
ஆனவாமணக் கெண்ணெய் சேர்கலந் தடுப்பி லிட்டெரித் துள்ளிடே.

(பொ-ரை.)—(1) திருகுகள்ளிச்சாறு, (2) பூதக்கரப்பான் பட்டைச்சாறு, (3) வேப்பம் பட்டைச்சாறு, (4) சங்கங்குப்பிச்சாறு, (5) நிலக்கடம்புச்சாறு, (6) கருநொச்சிச்சாறு, (7) பெருகுறிஞ்சானிலைச்சாறு, இவைகள் வகைக்கு சேர்—கால், சிற்றாமணக்கெண்ணெய் சேர்—ஒன்றுடன் கலந்து எரித்துப் பக்குவத்தில் வடித்து, காசெடை கொடுக்க, தோடக்கரப்பான் தீரும்.

பத்தியம்—தாய்—புளி, கவிச்சு பதார்த்தங்களை நீக்க வேண்டும். (௩அச)

## *(16) வாலை (பாலை) கரப்பான் குறி குணம்.

அறுசீராசிரிய விருத்தம்.

காலது கடுக்குஞ் சந்து கண்டமும் வெடித்துப் புண்ணாய்
ஏலவே கடிவி டம்போல் இருந்துபன் னீர்போல் பாய்ந்து
கோலமாய் வற்றி நாறும் குழவியு மொடுங்கு மாகில்
மாலருங் குழலாய் வால கரப்பான்செய் வாறு தானே.

(பொ-ரை.)—கால் கடுத்தல், கீல்கள், கண்டம், இவ்விடங்களில் வெடித்துப்புண்ணாதல், கடி விடங்களால் காணும் தடிப்புப்போல் காணல், அதில் நின்றும் பன்னீர்போல நீர் பாய்ந்தும் வற்றியும் நாறுதல், குழந்தை இளைத்தல் ஆகிய இக்குறிகுணங்கள் காணில், பாலகரப்பான் எனக் கூறுவார்.

குறிப்பு.—இக்கரப்பான் கீழ்க்குறிப்பிட்ட குறி குணங்களோடு தோன்றுமென்பதையும் அறிக.

எழுசீராசிரிய விருத்தம்.

கால்கரங்களொடுசந்துமேவலிகளாகியே கடிவிஷங்கள்போல
மேல்தடித்ததிலும்நீர்பறிந்துமகள் மெய்யொடுங்கியிரணங்களாய்
மூலநாவினுள்தொண்டையோடு விரணங்களாகிமுதிர்வெப்பமாம்
வாலை யானகரப்பானிதென்றவுழ்தங்களுஞ்சிற்றிதுவைத்திடே.

எண்சீராசிரிய விருத்தம்.

பனியான விகாரமுற் றனேகங் கூறாய்
　　பரபரத்து தேகமெல்லாஞ் சொரிபோ லாகி
பினியான சாரையுடல் போலே காணும்
　　பிணிவாயில் விடசலந்தான் உதிரம் போல
தினியான சூலைவற்றி திருவ ழிந்து
　　திசதாது பீடமெல்லாம் நடுந டுங்கி
வனியான இக்குணங்கள் கண்ட தானால்
　　வாலகரப் பானதுவென் றியம்ப லாமே (நஅரு)

### பாலகரப்பானுக்கு—பூவரசு நெய்.

எண்சீராசிரிய விருத்தம்.

இயம்பவே யிந்நோய்க்கு நெய்தா னென்று
　　இன்பமாய்ச் சொல்லுவோம் நன்றாய்க் கேளாய்
இயம்பவே பூவரசம் பட்டைச் சாறும்
　　இன்பமுடன் தானேயோர் படியு மெய்யாய்
இயம்பவே சிற்றேரண் டெண்ணெய் ஒன்று
　　இயல்பாக விவ்விரண்டுஞ் சேர்த்தெ ரித்தங்
கியம்பவே கசகசாப்பால் படிதா னென்றும்
　　இருசீர கத்தினெடை கார்கோல் காலே.

காலான வேலமுடன் லவங்க மாஞ்சில்
　　கரிசாலை நுணாவேரும் வகைப்ப லந்தான்
நீலான நிழலுலர்த்திச் சூர ணஞ்செய்
　　நெடுஞ்சீனி பலமைந்து நிறுத்தொன் றாக்கி

* "வாலகரப்பான்" எனவும் வழங்கப்படும்.

வாலான சாறெண்ணெ யடுப்பி லேற்றி
வகையுடனே கடுதிரண்டால் சூர ணம்போட்
டேலான கிண்டிநெய்ப்பாக மாக்கி
யிறக்கியந்த நெய்யதனை வடித்துக் கொள்ளே.

வடித்துமே கரண்டிநிறை யுள்ளுக் கேற்ற
வாலகரப் பான்ரோகம் வகைகெட் டோடும்
தடித்துமே யேழுநாள் கொள்ளும் போது
தவறுன புளிகசப்பி றைச்சி மீன்கள்
மடித்துமே யெள்கொள்பா கற்காய் தள்ளு
மற்றவெல்லா நோய்க்காகு மருவிக் கூட்டு
அடித்துமே மேனுக்குக் கடுகு பூச
அசாத்தியசெவ் வாப்புசெங் கரப்பான் போமே.

(பொ-ரை.)—(1) பூவரசம்பட்டைச் சாறு, (2) சிற்றுமணக் கெண்ணெய் இவ்விரண்டும் வகைக்குப்படி ஒன்று சேர்த்து அடுப்பேற்றி கடுகுதிரள் பாகத்தில், (3) கசகசாப் பால் படி ஒன்று, (4) நற்சீரகம், (5) கருஞ்சீரகம், (6) கார்கோலரிசி வகைக்குப் பலம் கால், (7) ஏலரிசி, (8) கிராம்பு, (9) சடாமாஞ்சில், (10) கரிசாலை, (11) நுணாவேர் இவைகள் வகைக்குப் பலம் ஒன்று, (12) சருக்கரை பலம் ஐந்து, இவைகளில் சருக்கரை நீங்க மற்றவைகளைச் சூரணம் செய்த பின் சருக்கரையுடன் கலந்து கிண்டி நெய் பாகப்பட்டவுடன் வடித்து, சிறு கரண்டி வீதம் காலை காலை ஏழு நாள் மட்டும் கொடுக்க, வாலகரப்பான் போம். கடுகை மேனுக்குப் பூச செவ்வாப்பும், செங்கரப்பானும் நீங்கும். இதை உபயோகிக்கும் காலத்தில், புளிப்பு, கைப்பு, இறைச்சி, மீன், எள், கொள், பாகல், இவைகளைத் தள்ள வேண்டும். (௩அ௬)

நீர் முள்ளி நெய்.

எழுசீராசிரிய விருத்தம்.

செறியு நீர்முளி கிரந்தி நாயகஞ் சிறந்த தூதுவளை யிண்டையும்
மறைவில் குக்குடத் தாவ ரைகருப் பூர வள்ளியிலை யொடுமகிழ்ந்
தறிவி லாதொரு கழுதை லத்தியின் சாறு சேரிவை யழக்கதாய்
முறிவி லாமணக் கெண்ணெய் சேரொடு முறையிற் காய்ச்சியதை
[யுள்ளிடே.

(பொ-ரை.)—(1) நீர் முள்ளி, (2) கிரந்திநாயகம், (3) தூதுளை, (4) இண்டு, (5) கோழியவரை, (6) கற்பூரவள்ளி இவைகளின் சாறும் (7) கழுதை லத்திப்பாலும் வகைக்கு ஒரு ஆழாக்கு, (8) ஆமணக்கெண்ணெய் ஒரு சேர், ஒன்று கலந்து எரித்துப் பக்குவத்தில் எடுத்து, துட்டெடை உள்ளுக்குக் கொடுக்க வாலகரப்பான் நீங்கும். (௩அ௭)

## (17) வரள்கரப்பான் குறிகுணம்.

வெண்பா.

உச்சிமுத லுள்ளங்கா லுற்றளவி லெவ்விடமும்
நச்சுச் சிறுசிரங்கு நண்ணியே—நிச்சல்
வெடித்துநீர் மேவுநமை மேவா துறக்கம்
கடிந்தவரட் சிக்கரப்பான் காண்.

(பொ-ரை.)—உடலில் உச்சி முதல் உள்ளங்கால் வரைக்கும் உள்ள இடங்களில் சிலேத்தண்ணீர் கோத்துக் கொண்டிருக்கிற சிறு சிரங்குகள் உண்டாகித் தினந்தோறும் அவைகள் வெடித்து நீர் சிந்துவதுடன் நமைச்சலுண்டாம், தூக்கம் பிடியாது; இது வருத்துகின்ற வரட்சிக் கரப்பானின் குறிகுணங்களென்று அறிவாயாக. (௩அ௮)

## (18) வீங்கு கரப்பான் குறிகுணம்.

வெண்பா.

முன்னரே யங்கங்கு மூறிக் கனமுண்டாய்ப்
பின்னரவை புண்ணுய்ப் பெருந்தீயாய்—மன்னியெரிந்
தப்பா லதுதணிந் தவ்வவற்றி னீர்சொரிதல்.
தப்பாவீங் குக்கரப்பான் தான்.

(பொ-ரை.)—முன்னதாக உடம்பில் அங்கங்கு துண்டுதுண்டாய் வீங்கி, பிறகு அவைகள் புண்ணுய் நெருப்புப்பட்டால் எரிவது போல எரிச்சல் உண்டாய்ச் சிறிது நேரத்தில் அவ்வெரிச்சல் நீங்கிக் குளிர்ந்து, அவ்வப்புண்களினின்று சில நீர் சொரியும். இது, வீங்கு கரப்பான் என வழங்கும்.

எண்வகைக் கரப்பானுக்கும்—ஈருள்ளி எண்ணெய்.

பதினுன்குசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்.

எண்வகைக் கரப்பா னிகழ்த்திடக் கேளா
யீருள்ளி கரியசீ ரகமும்
இயம்பிய பூத கரப்பனும் வட்டக்
கிலுப்பைவேர் காட்டினிற் பாகல்
ஒண்டிய மூல முடன்சத குப்பை
யுயர்வெள்ளைக் காக்கணுன் மூலம்
ஓதிய தேவ தாரமும் வசம்பு
முட்சங்கு வெள்ளறு குடனே
நண்புள சீனப் பட்டையுஞ் சுத்தி
நவின்றிடும் வகைவகைப் பலங்கால்
நாடுநேர் வாள விதையிரு பதுபின்
நற்சங்கங் குப்பிநீர் நாழி
அண்டரைத் ததில்சிற் றுமணக் கெண்ணெ
யதுவொரு நாழிவிட் டருந்த
ஆமொரு காசா யுடல்தனிற் பூச
வவையெட்டு மகலுமா மென்றே.

(பொ-ரை.)—(1) வெங்காயம், (2) கருஞ்சீரகம், (3) பூதக்கரப்பான் பட்டை, (4) வட்டக் கிலுகிலுப்பை வேர், (5) காட்டுப் பாகல் வேர், (6) சதகுப்பை, (7) வெள்ளைக் காக்கணுன் வேர், (8) தேவதாரச் செக்கை, (9) வசம்பு, (10) முட்சங்கனிலை, (11) வெள்ளறுகு, (12) பறங்கிச் செக்கை, வகைக்குப் பலங்கால், (13) நேர்வாளப் பருப்பு இருபது, இவைகளைச் சங்கங்குப்பிச் சாறு நாழி விட்டரைத்து, அதில் சிற்றுமணக்கு நெய் நாழி விட்டு சூரிய புடம் வைத்து, ஒரு காசெடை உள்ளுக்குக் கொடுத்து, மேலுக்கும் பூசிவர எண்வகைக் கரப்பானும் நீங்கும். (௩அ௯)

எல்லாக் கரப்பான்களுக்கும்—பொதுச் சிகிச்சை.

அகத்தி எண்ணெய்.

அறுசீராசிரிய விருத்தம்.

அகத்திகர்ப் பூர வள்ளி யவுரிவெள் ளறுகு சங்கு
மகத்துவ வாடா தோடை மணித்தக்கா ளியுமா வாரை
சுகத்தொடு சங்கங் குப்பி சொன்னதோர் நிலக்க டம்பு
முகத்திநா யகங்க றுத்த நொச்சியு முருக்கு கூட்டே.

பாரினில் ஈர வுள்ளி பலவகை யுந்து வைத்துச்
சீர்பெற வகைக்கு ழக்காய்ச் சிறக்கவே பிழிந்து கொண்டே
ஏர்பெற வாம ணக்கி னெண்ணெயு மளந்து கூட்டி
வாரணி மாதே மஞ்சள் மரமஞ்சள் கத்தூரி மஞ்சள்.

சிவதை கடுகு ரோகணியும் சீரக மான திருவகையும்
நவமாந் திரிகடு குடனேதான் நல்ல திரிபலை யுங்கூட்டி
இவைவகை வராக னென்றாக எல்லாஞ் சரியாய் நீநிறுத்துத்
தவமா யரைத்து முன்சொன்ன சாற்றில் கரைத்துக் கலக்கிடுமே.

எல்லா மொன்றாய்த் தான்கலந்தே யிதமா யடுப்பில் வைத்தெரித்து
மெல்ல மெழுகு பதத்திறக்கி வேறே கலச மதில்வடித்து
நல்லாய் கரண்டி யெண்ணெயுமே நல்க விப்படி மூன்றுநாள்
சொல்லாக் கரப்பான் பதினெட்டுந் துயரப் பட்டே யோடிடுமே.

(பொ-ரை.)—(1) அகத்தியிலை, (2) கர்ப்பூரவள்ளியிலை, (3) அவுரியிலை, (4) வெள்ளறுகு சமூலம், (5) முட்சங்கனிலை, (6) ஆடாதோடையிலை, (7) மணித்தக்காளியிலை, (8) பொன்னுவரையிலை, (9) சங்கங்குப்பி, (10) நிலக்கடம்பு சமூலம், (11) கிரந்தி நாயகம் சமூலம், (12) கருநொச்சியிலை, (13) முருக்கிலை, (14) ஈருள்ளி, இவைகளைத் தனித்தனித் துவைத்துப் பிழிந்த சாறு வகைக்கு உழக்கு, சிற்றாமணக்கெண்ணெய் இவைகட்குச் சமன் எடுத்து ஒன்றாகக் கலந்து, இத்துடன் (1) மஞ்சள், (2) மரமஞ்சள், (3) கத்தூரி மஞ்சள், (4) சிவதை, (5) கடகரோகணி (6) சீரகம், (7) கருஞ்சீரகம், (8) சுக்கு, (9) திப்பிலி, (10) மிளகு, (11) கடுக்காய், (12) நெல்லிக்காய், (13) தான்றிக்காய் இவைகளின் நுண்பொடி வகைக்கு ஒரு வராகனெடை ஒன்று ஷ கலந்த சாற்றால் அரைத்துச்சேர்த்து எரித்து, மெழுகு பதத்தில் வடித்து உச்சிக் கரண்டி வீதம் காலையில் மாத்திரம் மூன்று நாளைக்குக் கொடுத்துவர, எல்லாக்கரப்பானும் நீங்கும் - இது ஊது கரப்பானுக்கும் நேர் மருந்தாகும். (௩௯௦)

குறிப்பு.—தாய் இச்சாபத்தியம் காக்க வேண்டும்.

18 கரப்பானுக்கு.

சிறு செருப்படை எண்ணெய்.

வெண்பா.

செருப்பினடி யிண்டோடு சேர்கிரந்தி நாயகம்
வெருக்கில் நிலக்கிழங்கு நொச்சில்—நெருக்கஞ்சங்
குப்பியிலை சங்கோடு கொட்டைக் கரந்தையும்
செப்புங் கழல்துளசி சேர்.

சேர்கரு நொச்சிலொடு செங்கரிப்பான் மாக்கிழங்கு
கூர்முருக்கம் பட்டை கொடிவேலி—சேர்கின்ற
கோழி யவரையுள்ளி கோதையே தூதுவளே
கோளியுந்தான் தேட்கொடுக்கு கொள்.

கொள்ளக் கரிசாலே கூறுஞ்சங் கம்பட்டை
அள்ளல் அவுரி அழுகுசுவர்—முள்ளங்கி
கேளமுக்க ராவின் கிழங்கிலேயு மாகப்பா
தாளமூ லிக்கூடத் தான்.

வத்தகப் பட்டைபிராய் வார்பூ வரசந்தோல்
செத்த பழுப்பு சிறுசின்னி—ஒத்தநீர்
முள்ளிமுடக் கற்ருன் முதிர்புங்கம் பட்டைதொண்டை
தள்ளவொண்ணுச் சாணுக்கி தான்.

சிறுகுறட்டை சீந்திலுடன் சேர்பமு பாகல்
முருகுகண்டங் கத்தரி முள்ளி—அறுகுடனே
தன்னெருக்கச் சாறு தனியே வடித்துக்கொள்
இன்னங்கேள் சொல்வாம் இசைந்து.

பெருவாயன் லத்திப்பால் பேரானே லத்தி
குருவாம் பசுவினிட கோநீர்—கருகாத
நிம்பழச் சாறும் நிறைவெங்கா யச்சாறும்
இன்பமுடன் எல்லாம்ப தக்கு.

எண்ணெய் குறுணிகலந் தீண்டே வெயில்வைத்துப்
பண்ணும் படிகற்கம் பார்த்திடீர்—நண்ணும்
மரமஞ்சட் குப்பை வளர்பூதப் பட்டை
தெரிபறங்கிப் பட்டையுடன் சேர்.

சேர்செங்கத் தாரி திகழும்வெம் பாடனுடன்
கார்போ கரிசி கனவாளம்—பாரில்
வசம்பும் வகைக்கீர் வராக னெடையாம்
நிசம்பெறவே காய்ச்சிவிடு நீ.

நீகேள் கரண்டிதா னேராகக் கொள்ளவே
வாகாய்க் கரப்பான் வகைதீரும்—தோகாய்கேள்
சூலிக்குத் தான்கொடுக்கச் சொன்ன ரறிந்துடனீ
பாலிக்கும் பத்தியஞ்செய் பார்.

(பொ-ரை.)—(1) சிறுசெருப்படை, (2) இண்டங்கொடி, (3) கிரந்தி நாயகம், (4) நிலப்பனைக் கிழங்கு, (5) நொச்சியிலே, (6) சங்கங்குப்பியிலே, (7) முட்சங்கிலே, (8) கொட்டைக்கரந்தைச் சமூலம், (9) கழற்சியிலே, (10) துளசியிலே, (11) கருநொச்சியிலே, (12) செங்கரிப்பான் (13) பெருங்கிழங்கு (சீனப்பா), (14) முருக்கம்பட்டை, (15) கொடிவேலி, (16) கோழி யவரையிலே, (17) வெள்ளுள்ளி, (18) தூதுவளையிலே, (19) அத்திப்பட்டை, (20) தேட்கொடுக்கிலே, (21) கரிசலாங்கண்ணிச் சமூலம், (22) சங்கம்பட்டை, (23) அவுரியிலே, (24) சுவற்றுமுள்ளங்கி, (25) அமுக்கராவிலேயும் கிழங்கும், (26) ஆடுதீண்டாப்பாளைச் சமூலம், (27) வெட்பாலேப்பட்டை, (28) பிராயம் பட்டை, (29) பூவரசம்பட்டை, (30) பூவரசம்பழுப்பு, (31) சிறுசின்னியிலே, (32) நீர்முள்ளி, (33) முடக்கற்ருன், (34) புங்கம்பட்டை, (35) ஆதொண்டையிலே, (36) சாணுக்கியிலே, (37) சிறுகுறட்டை, (38) சீந்தில்கொடி, (39) பழு

பாகலிலை, (40) கண்டங்கத்தரி சமூலம், (41) முள்ளிச்சமூலம், (42) அறுகு ஆகிய இவைகளின் சாறும், (43) கழுதைலத்திப்பால், (44) யானைலத்திப் பால், (45) பசுவின்மூத்திரம், (46) எலுமிச்சம்பழச்சாறு, (47) வெங்காயச் சாறு ஆகிய இவைகளும் வகை ஒன்றுக்கு பதக்கு, (48) சிற்றுமணக்கெண் ணெய் குறுணி ஒன்று சேர்த்து வெயிலில்வைத்து, இதில் (1) மரமஞ்சள், (2) சதகுப்பை, (3) பூதகரப்பான்பட்டை, (4) பறங்கிப்பட்டை, (5) செங்கத் தாரிப்பட்டை, (6) வெம்பாடம்பட்டை, (7) கார்போக அரிசி, (8) வாளம், (9) வசம்பு இவைகளின் பொடி வகைக்கு வராகனெடை இரண்டு சேர்த்துக் காய்ச்சிப் பதத்தில் வடித்து, காலையில் மாத்திரம் உச்சிக்கரண்டி வீதம் கொடுத்து, தாய்க்குப் பத்தியம் வைத்துவர சகல கரப்பானும் தீரும்.

குறிப்பு.—இதில் கருஞ்சீரகமும், நற்சீரகமும் சேர்த்துக் கொள்ளவும். இவ்வெண்ணெய் கருப்பிணி - பெரியவர்கட்கும் உபயோகிக்கலாம். (௩௬௧)

கரப்பான் யாவற்றுக்கும்—புங்கம்பூ எண்ணெய்.

அறுசீராசிரிய விருத்தம்.

புங்கம் பூவும் புளிநறளை புனித மான வசம்புள்ளி
கங்கு லாதி சீரகமும் கதித்த பாலை நன்னாரி
பொங்கு பசுவின் பால்வார்த்துப் போத வெண்ணெ யெரித்திடவே
எங்கு முள்ள கரப்பான்போ மெரிக்கும் விளக்கி னெண்ணெயிதே.

(பொ-ரை.)—(1) புங்கம்பூ, (2) புளிநறளை, (3) வசம்பு, (4) பூண்டு, (5) கருஞ்சீரகம், (6) பாலைப்பட்டை, (7) நன்னாரிவேர் இவை வகைக்குப் பலங் கால் எடுத்து பசுவின்பால் விட்டரைத்து, பசுவின் பால் ஒரு சேரும், ஆமணக்கு நெய் ஒரு சேரும் சேர்த்து முன் கற்கத்தை அதிற்கரைத்து, எரித்துப் பதத் தில் வடித்துக் காலையில் குழந்தைகட்கு ஒரு உச்சிக்கரண்டி விகிதம் மூன்று நாள் புகட்டில், கரப்பான் யாவும் போம். (௩௬௨)

எல்லாக் கரப்பான்களுக்கும் பொதுச் சிகிச்சை.

(வேறு)

மேற்பூச்சு.

பூதக்கரப்பான் பட்டை யெண்ணெய்.

அறுசீராசிரிய விருத்தம்.

பூதகரப் பான்பட்டை பூவரசம் பட்டை நுணுப் பட்டை
ஏதமில் கரப்பான் பட்டை இலுப்பைக் கட்டி சரியாக
சாதிவை யெல்லாஞ் சுட்டுச் சாம்பலாக் கிருநல் லெண்ணெய்ப்
போதக் குழைத்துக் கரப்பான்மேல் போடத் தீரும் பொற்கொடியே.

(பொ-ரை.)—(1) பூதக்கரப்பான்பட்டை, (2) பூவரசம்பட்டை, (3) நுணுப் பட்டை, (4) கரப்பான்பட்டை, (5) இலுப்பைக்கட்டி இவைகள் ஐந்தும் சரி யெடை எடுத்துச் சுட்டு சாம்பலாக்கிய எடைக்கு இரண்டு பங்கு நல்லெண் ணெய் கூட்டிக்குழப்பி கரப்பான் நோய்களில்பூச அவைகள் நீங்கும். (௩௬௩)

எல்லாக் கரப்பான்களுக்கும் பொதுச் சிகிச்சை.

பூவரசெண்ணெய்.

எண்சீராசிரிய விருத்தம்.

வளமாய்ப்பார் சிற்றேரண் டெண்ணெய் முக்கால்
வகையுடனே பூவரசம் பூவுங் காயும்

இளமாய்ப்பா ரிடித்ததனைச் சாற்கால் கூட்டி
இனிசிவந்த மணிக்காளிச் சாறு காலும்
தளமாய்ப்பார் கருவாயின் பட்டை யேலம்
தண்மையென்ற சிவதையொடு கரப்பான் பட்டை
குளமாய்ப்பார் குமரிச்சா றரைக்கால் சேர்த்துக்
குஞ்சரமே கடைச்சரக்கு வராக னென்றே.

ஒன்றாக விவையெல்லாங் கலந்து கொண்டிங்
குத்தமமாய்க் கடைச்சரக்கைச் சூர ணித்துத்
தென்றாகத் தெளிந்துநன்று யடுப்பி லேற்றித்
தேவிமனோன் மணிதன்னைத் தியானம் பண்ணிக்
கண்ணான கணபதியை வணங்கிப் போற்றிக்
கடுகெடுத்துப் பதமுடனே பார்த்தி றக்கித்
துன்றாகத் துட்டெடைதான் மூன்று வேளை
தொட்டெடுத்து நாவதனில் புகட்டிப் போடே.

புகட்டியே மேலெங்குங் கடுகைப் பூசு
பொல்லாத முன்சொன்ன நோய்க ளோடும்
மகட்டியே தாய்தனக்குக் கவிச்சா காது
வையகத்தில் பூசினிக்காய் எள்கொள் ளாகா
அகட்டியே எருமைப்பால் நெய்யா காது
அன்பாக மற்றதெல்லாங் கூட்டச் சொல்லு
தகட்டியே பதினாறு பிராய மட்டும்
தண்மையுடன் மங்கையினால் நோயுண் டாமே.

இம்மூன்றும் ஒரு தொடர்.

(பொ-ரை.)—(1) பூவரசம்பூ, (2) பூவரசங்காய், (3) செம்மணித்தக்காளி இவைகளின்சாறு வகைக்குக் கால் படி, (4) கற்றாழைச்சாறு படி அரைக் கால், (5) சிற்றாமணக்கெண்ணெய் படி முக்கால், இவைகளை ஒன்றுகூட்டியதில் (1) இலவங்கம்பட்டை, (2) ஏலம், (3) சிவதை, (4) கரப்பான்பட்டை இந்நான்கின் நுண்ணிய பொடி வகைக்கு ஒரு வராகனெடை சேர்த்துக் கலக்கி எரித்து கடுகு திரளும் பாகத்திலிறக்கி வைத்துக்கொள்ளவும். உபயோகம்—கடுகை மேலில் பூசியும், தெளிந்த எண்ணெயில் துட்டெடை உள்ளுக்குப் புகட்டியும் வர, யாவற்று கரப்பான் நோய்களும் தீரும்.

பத்தியம்.—இதை உபயோகப்படுத்தி வருங்காலங்களில் தாய், கவிச்சு, பூசினிக்காய், எள், கொள், எருமைப்பால், எருமை நெய் முதலிய பதார்த் தங்களை நீக்கி பத்தியங் காக்கவேண்டும். (௩௬௪)

## 18 கரப்பானுக்கும்—பூவரசம்பட்டைத் தைலம்.

அறுசீராசிரிய விருத்தம்.

பூவரசு செங்கத் தாரி பூதகரப்பான் கண்டங் காரி
மேவுநில வாகை வகைக்கு விளங்கும் பத்துப் பலமாக
ஏவ நறுக்கிக் கியாழமிட் டிறுத்தாட் டுப்பால் படியொன்று
ஆவ மிளகு சதகுப்பை யரியவசம்பு வலம்பு ரிக்காய்.

காய் வெள்ளுள்ளி பறங்கிப்பட்டை கார்கோ லரிசி கருஞ்சீரம்
மூய வகைக்குக் கழஞ்சிரண்டு முலேப்பால் விட்டுத் தானரைத்து
பாயக் கியாழத் திற்கரைத்துப் பாய்வெள் ளாட்டுப் பால்விட்டுத்
தோயு மேஎண் ணெயிற்கலந்து சுகமாய் மெழுகு பதமிறக்கே.

இறக்கிப் பிள்ளைக் குள்ளுக்கே யீந்து மேலுக் குப்பூசத்
திறக்கும் பதினெண் கரப்பானும் தீர்ந்து போகு முண்மையிதே
பறக்கு மின்னும் பத்தியங்கார் பவள வதர பயோதரப்பூச்
சிறக்கு மன்ன நடையாளே செய்தே பரீக்ஷை பார்த்துவிடே.

இம்மூன்றும் ஒரு தொடர்.

(பொ-ரை.)—(1) பூவரசம்பட்டை, (2) செங்காத்தாரிப்பட்டை, (3) பூத கரப்பான்பட்டை, (4) கண்டங்கத்தரிவேர், (5) நிலவாகைவேர் ஆகிய இவை கள் வகைக்குப் பலம் பத்து எடுத்து இடித்து, ஐந்து படி நீரிலிட்டு ஒன்றே கால் படி கியாழமாகக்குறுக்கி யதில் வெள்ளாட்டுப் பால் படி ஒன்று கலந்து, (1) மிளகு, (2) சதகுப்பை, (3) வசம்பு, (4) வலம்புரிக்காய், (5) வெள்ளுள்ளி, (6) பறங்கிப்பட்டை, (7) கார்போகி, (8) கருஞ்சீரகம் இவைகள் வகைக்குப் பலம் கால் நிறுத்து முலேப்பால் விட்டரைத்து, மேற்படிகியாழத்தில் கரைத்து, நல்லெண்ணெய் படி ஒன்றேகால் சேர்த்து எரித்து, மெழுகு பதத்தில் வடித்து, தக்க அளவு உள்ளுக்குங் கொடுத்து மேலிலும் பூசிவர, கரப்பான் தீரும். தாய் பத்தியம் காக்கவேண்டும். (௩௧௫)

எல்லாக் கரப்பான்களுக்கும்—மிளகெண்ணெய்.

எண்சீராசிரிய விருத்தம்.

மிளகுள்ளி வசம்புவகை வராகன் ரண்டு
வெண்காயம் பலமரைதான் நெல்லி முள்ளி
இளகப்பூ வரசம்பூச் சுட்ட சாம்பல்
இதமாக ஒருபிடியு மிவையெல் லாந்தான்
விளராக ஆடுதின்னுப் பாளேச் சாறு
விட்டரைத்துக் காலரைக்கால் படிதா னெண்ணெய்
உளமகிழ மருந்தையதி லிழைத்துத் தீயில்
உண்மையுடன் கொதிக்கவைத் திறக்கி யாற்றே.

அறுசீராசிரிய விருத்தம்.

ஆற்றிக் கோழி இறகதனல் அள்ளுள் வார்த்துக் கரப்பான்மேல்
தூற்றித் தடவக் கரப்பானுந் துலேந்தே போகு மிப்பாலே
எற்றி யிறைச்சி கவிச்சுடனே யினிய கரப்பான் பண்டமெலாம்
சாற்ற வாகா வெனமுனிவர் சகச மாக மொழிந்தனரே.

(பொ-ரை.)—(1) மிளகு, (2) வெள்ளுள்ளி, (3) வசம்பு இவை வகைக்கு வராகனெடை இரண்டு (4) வெண்காயம் பலம் அரை, (5) நெல்லி வற்றல், (6) பூவரசம்பூச் சுட்டச்சாம்பல் இவை வகைக்கு ஒரு பிடி, இவைகள் யாவையும் ஒன்று கலந்து ஆடுதீண்டாப்பாளேச்சாறுவிட்டரைத்து, காலேயரைக் காற்படி நல்லெண்ணெயில் கலந்து எரித்துப் பக்குவ பாகத்தில் வடித்து ஆற்றி, கோழி இறகால் தோய்த்து குழவியின் இருகாதுக்குள்ளும் இரண் டொரு துளிவிட்டு, மேலிலும்பூசக் கரப்பான் நோய்கள் நீங்கும்.

தாய்—இறைச்சி, கவிச்சுப்பதார்த்தங்கள், கரப்பான் பதார்த்தங்களே விலக்கிப் பத்தியங் காக்கவேண்டும். (௩௧௬)

சகல கரப்பானுக்கும் மேற்பூச—விடதாரி எண்ணெய்.

பதினான்குசீராசிரிய விருத்தம்.

வீங்கிய கரப்பான் விடத்தலை யிலையின் கள்ளியுந் திருகிய கள்ளி
விளம்பிய வஜ்ர மாவிலிங் குடனே முத்தமுந் தாழைக் கொம்மட்டி
ஓங்குறு குப்பை மேனியு மவுரி யுயர்பொடு தலைநிலக் கடம்பு [னிலையும்
உறும்எரு மையின்ஆட் டாங்கொடி நொச்சில் ஒப்புமா மணக்கிண்டி
ஆங்கிவை வகைக்கு சாறுழக் கதனில் அதிகநல் லெண்ணெயு முழக்கு
அவையினிற் கற்கம் சீரகம் கடுகு மடர்குரு விந்தம் குந்திரிக்கம்
பாங்குள குக்கில் திரிகடு காசியம் பகர்தேவ தாரமிவ் வெடைதான்
பலம்பல மெரித்துப் பூசிக்கொள் கரப்பான் பானுமுன் பனியெனப்
[படுமே.

(பொ-ரை.)—(1) விடதாரி, (2) இலைக்கள்ளி, (3) திருகுகள்ளி, (4) சதுரக் கள்ளி, (5) மாவிலங்கு, (6) தாழை, (7) கொம்மட்டி, (8) குப்பை மேனி, (9) அவுரி, (10) பொடுதலை, (11) நிலக்கடம்பு, (12) ஆட்டாங்கொடி, (13) நொச்சில், (14) ஆமணக்கு, (15) இண்டு இவைகளின் சாறு வகைக்கு உழக்கு, நல்லெண்ணெய் உழக்கு ஆகிய இவைகளெல்லாம் ஒன்றுபடக் கலந்து, இதில் (1) சீரகம், (2) கடுகு, (3) கோரைக்கிழங்கு, (4) இலிங்கம், (5) குந்திரிக்கம், (6) மைசாட்சி, (7) திரிகடு, (8) கருஞ்சீரகம், (9) தேவதாரம் இவைகள் வகைக்குப் பலம் பொடித்துத் தூவிக்கலந்து, எரித்துப் பக்குவ பாகத்தில் வடித்து, நோய்பலம், தேகபலமறிந்து தக்க அளவு மேல்பூச வேண்டிய நாள் பூசிவர, கரப்பான்ரோகம் நீங்கும். (௧௲)

18 கரப்பானுக்கும்—வேளைநெய்.

எண்சீராசிரிய விருத்தம்.

பார்த்திடா யிருவேளை செம்ப ருத்தி
பரிமணித்தக் காளியுடன் பொன்னாங் காணி
பார்த்திடாய் சூரியந்த நத்தைச் சூரி
பகரம்மான் பச்சரிசி தகரை பாசி
வார்த்திடாய் குட்டிவிளாம் பட்டை பாகல்
வண்மைகருந் துளசிச்செம் முள்ளி யிண்டு
கார்த்திடாய் பாவட்டை பொடுத லைத்தான்
கருங்காலி கழலிலைபுள் ளடிய தாமே.

ஆமேதான் சுரைதுவரை கொன்றைப் பட்டை
அழகான தவமுருங்கை சாலை மேலும்
வாமேதா னகத்திகற் றாழஞ் சோறும்
வகையான சின்னியீ ருள்ளி பூண்டும்
காமேதா னிவ்வகைக்குத் தனிநீர் வாங்கிக்
கடும்பாண்ட மதனிற்கால் படிதான் வார்த்துத்
தாமேதான் ரவியில்வைத்துக் கடைம ருந்து
தாரணியில் நல்லோமம் சாதிக் காயே,

காயோடு பத்திரியும் வசம்பு கோட்டம்
கண்மணியே கொத்துமல்லி காட்டுச் சீரம்
வாயோடு திப்பிலியு மிஞ்சி கூட்டு
வகைவகைக்கு வராகனெடை யஞ்ச தாகத்
தாயோடே யாமணக்கி னெண்ணெய் தானும்
தப்பாமல் குறுணியதா யளந்த தூற்றி
மாயோடு சரக்கையெல்லா மெழுகா யாட்டி
வண்மையாய்க் கலக்கிவிட்டு மகிமை பாரே.

மகிமையா யெரித்திட்டே யெண்ணெ யாக்கி
வளமாகச் சிறுகுழந்தை யாண்டீ ரெட்டு
மகிமைபா ரிவ்வயதில் கரப்பான் கண்டால்
வகையுடனே பதினெட்டுக் கரப்பா னும்போம்
செகமகிழ மிந்தவெண்ணெய் செப்பக் கூடா
தேயத்தி லுண்மையென்ற பண்டி தர்கட்
ககமகிழ நூலீந்த தர்மத் தோரை
அங்கரத்தா லவர்பதத்தைத் தெண்டஞ் செய்யே.

இந்நான்கும் ஒரு தொடர்.

(பொ-ரை.)—(1) நாய்வேளை, (2) தைவேளை, (3) செம்பருத்தி, (4) மணித்தக்காளி, (5) பொன்னுங்காணி, (6) நத்தைச்சூரி, (7) அம்மான்பச்சரிசி, (8) தகரை, (9) பழம்பாசி, (10) குட்டிவிளாம்பட்டை, (11) பாகல், (12) கருந்துளசி, (13) செம்முள்ளி, (14) இண்டு, (15) பாவட்டை, (16) பொடுதலை, (17) கருங்காலி, (18) கழற்சியிலை, (19) புள்ளடி, (20) சுரை, (21) துவரை, (22) கொன்றைப்பட்டை, (23) தவசுமுருங்கைப்பட்டை, (24) கோடகசாலை, (25) அகத்தி, (26) குமரிச்சோறு, (27) சிறுசின்னி, (28) ஈருள்ளி, (29) பூண்டு இச்சாறுகள் வகைக்குப் படி கால் ஒரு பாண்டத்திலிட்டு, ஆமணக்குநெய் குறுணி ஊற்றி சூரிய வெப்பத்தில் வைத்து, (1) ஓமம், (2) சாதிக்காய், (3) சாதிபத்திரி, (4) வசம்பு, (5) கோட்டம், (6) கொத்துமல்லி, (7) காட்டுச்சீரகம், (8) திப்பிலி, (9) இஞ்சி, வகைக்கு வராகனெடை ஐந்து, அரைத்துக் கலக்கி எரித்துப் பதத்தில் வடித்துக் குழந்தைகட்குக் கொடுத்து வர, சகல கரப்பானும் நீங்கும். இதைப் பதினாறு வயது வரைக்கும் வரும் கரப்பானுக்குங் கொடுக்கலாம். (௬௯௮)

96 கரப்பானுக்கு—கரிசாலை எண்ணெய்.

அறுசீராசிரிய விருத்தம்.

கரிசால் கம்பந் திராய்வேரு கனத்த கருடக் கொடியுடனே
பொரிச்சால் பொரியும் பொரிகாரம் பூதக் கரப்பான் பட்டையுடன்
எரிச்சா லெண்ணெய் வசம்புள்ளி யெனவே கெட்டக் கரப்பான்கள்
மறுத்தால் தொண்ணூற் றறுகரப்பான் மாண்டோ மெனவே
[போய்விடுமே.

(பொ-ரை.)—(1) கரிசலாங்கண்ணி, (2) கம்பந்திராய்வேர், (3) கருடக்கொடி, (4) பூதக்கரப்பான்பட்டை இவைகளின் சாறு வகைக்கு உழக்கு ஆமணக்கு நெய் படி ஒன்றில் சேர்த்து, இதனுடன் பொரிகாரம், வசம்பு, உள்ளி வகைக்குப் பலம் கால் விழுக்காடு எடுத்து ஷை கலப்புச் சாறு சிறிது

விட்டரைத்துச் சேர்த்து எரித்துப் பக்குவ பாகத்தில் வடித்து, குழந்தை வயதுக்குத் தக்கபடி, அரை முதல் ஒரு உச்சிக்கரண்டி விகிதம், காலையில் மாத்திரம் கொடுக்க, தொண்ணூற்ருறு கரப்பானுந் தீரும். (௩௯௯)

## 320 கரப்பானுக்கும்—சிறுகுறிஞ்சான் எண்ணெய்.

எண்சீராசிரிய விருத்தம்.

சிறுகுறிஞ்சான் மிளகரணை காட்டு மல்லி
  செப்பியிடு பாலொடுவை நிலவி ளாவும்
அறிவாய்கே ளிவைவேர்கள் வசம்போ டுள்ளி
  ஆகாச கருடனுட கிழங்கு மெல்லாம்
தருகாமல் சமன்கூட்டி யதிலே ரண்டம்
  தந்திடுமே யெண்ணெயது சமனுய்க் கொண்டு
முருகவே காய்ச்சிவடித் தருந்த நித்தம்
  முந்நூற்றிரு பதுகரப்பான் கிரந்தி போமே.

(பொ-ரை.)—(1) சிறுகுறிஞ்சான்வேர், (2) மிளகரணைவேர், (3) காட்டு மல்லிவேர், (4) பாலொடுவை யென்னும் கொடிப்பாலை வேர், (5) நில விளாவேர், (6) வசம்பு, (7) உள்ளி, (8) ஆகாயகருடன்கிழங்கு வகைக்குச் சமவெடை எடுத்து நீராலரைத்துச் சிற்ருமணக்கு நெய் மேற்கொண்ட தொகைக்குச் சமவெடை எடுத்துக்கலந்து எரித்துப் பக்குவ பாகத்தில் வடித்து, நோய்க்குத் தக்கபடி எண்ணெயின் அளவும், நாளளவும் கணித்துக் கொடுக்க, முந்நூற்றிருபது கரப்பானும் நீங்கும். (௪00)

## வாயுகரப்பான் வீக்கத்திற்கு—சாரணைக் குடிநீர்.

நேரிசை வெண்பா.

ஓடுகின்ற சாரணையும் உப்பு மரிதகியும்
வாடுகின்ற மாச்சுக்கு மாக்கூட்டி—நாடி
மருகிக் குடிக்க வளிகரப்பான் வீக்கம்
பருகப்பருகக் கழியும் பார்.

(பொ-ரை.)—(1) வெள்ளைச்சாட்டரணைவேர், (2) உப்பு, (3) கடுக்காய்த்தோல், (4) மாச்சுக்கு, இவைகள் வகைக்குக் கால்பலம் எடுத்து இடித்து ஒரு மண சட்டியிலிட்டுக் கால்படித் தண்ணீர்விட்டு அரை ஆழாக்காகக் காய்ச்சி ஒரு வேளைக்குக் கொடுக்கவும். இப்படி மூன்று அல்லது ஐந்து வேளை கொடுத்தால், வாயுகரப்பான், அதனுல் உண்டாகும் வீக்கம் இவை நீங்கும். இவ்வாறு மூன்று முறை அல்லது ஐந்து முறை கொடுக்கவும். (௪0௧)

## செவ்வாப்புக் கரப்பானுக்கு—விழுங்கு மாத்திரை.

எண்சீர் விருத்தம்.

மயங்கிப்போம் விழுங்குமாத் திரைதான் சொல்வேன்
  மாதரசே சாதிலிங்கம் பூர மேலம்
மயங்கிப்போம் பூங்காவி வகைக்குக் காலாய்
  வண்மையாய்க் கல்வத்தில் போட்டுக் கொண்டு
மயங்கிப்போம் கோதும்பைக் கஞ்சி வார்த்து
  மைபோலே சாமமரண் டோயா தாட்டி
மயங்கிப்போம் பயறுபோ லுண்டைச் செய்து
  மரச்செப்பில் வைத்தடைத்து மகத்வங் கேளே.

மகத்துவங்கே ளோராண்டு பிள்ளைக் கெல்லாம்
வல்சிதனிற் பிடித்துணச்செய் மாந்த மேது
மகத்துவங்கேள் சிறுகுழந்தை யான தற்கு
மாசிப்பத் திரிக்கியாழத் துரைத்தி டாய்நீ
மகத்துவங்கேள் செவ்வாப்பு கரப்பான் போகும்
வரிசையாய் மாத்திரையின் மகத்து வம்பார்
மகத்துவந்தா னென்னசொல்வே னிந்நூல் போக்கு
மகாரத்னச் சுருக்கமென மருவிப் பூரண.

(பொ-ரை.)—சாதிலிங்கம், பூரம், எலிரிசி, பூங்காவி என்னும் இவைகள் வகைக்குக் கால்பலமா யெடுத்துக் குழிக்கல்லிலிட்டு, கோதுமை ரவையை அழுத்தமான கஞ்சியாகக் காய்ச்சி அதில்விட்டு இரண்டு சாமம் விடாமல் அரைத்து, சிறுபயறுபோல் மாத்திரை செய்து, மரத்தாற்செய்யப்பட்ட சிமிழில் வைத்துக்கொண்டு, ஒராண்டு குழந்தைகளுக்கு ஒரு மாத்திரை சோற்றோடு கூட்டிக் கொடுத்தாலும், சிறு குழந்தைக்கு வேளைக்கு ஒரு மாத்திரை மாசிப்பத்திரி குடிநீரில் உரைத்துக் கொடுத்தாலும், செவ்வாப்புக் கரப்பான் தீரும். (சo௨)

## கிரந்தி கரப்பான் குறிகுணம்.

எழுசீர் முடுகு விருத்தம்.

மேலு நெஞ்சினைய டைத்து வீங்கியுயர்
மேற்சு வாசமது வாங்கியே
தூல மேனிநிற பேத மாகிவளர்
தொண்டை கட்டியுடல் நொந்துறின்
றூல மாமிருமற் கண்டு சிற்றெணிக
ளாக வேயழுது கம்மினுற்
பாலி னேர்மொழியி னுய்கி ரந்திகரப்
பானெ னச்சிகிச்சை பண்ணிடே.

(பொ-ரை.)—குழந்தைகளின் நெஞ்சைப் பேசவொட்டாமலும், பாலை உண்ணவொட்டாமலும் அடைத்தல், வீங்குதல், மேற்சுவாசம் வாங்குதல், உடம்பு பளுவாதல், நிறம்வேறுதல், தொண்டைகட்டுதல், உடல்நோதல், இருமல் கண்டு, தாமொலியாக அழுதல், குரற் கம்மல் என்பனவைகள் உண்டாயின், பாலைப்போ லினிய சொல்லினுளே! அது கிரந்தி கரப்பானென்று அறிந்து, அதற்குத் தகுந்த மருத்துவஞ் செய்வாய். (சoங)

## கிரந்தி கரப்பானுக்கு—பூவரசெண்ணெய்.

எழுசீர்ச் சந்த விருத்தம்.

பண்ணுப் பூவரசம் பட்டை பால்கரு
நொச்சிச் சாறிரண்டு பலமதாய்
திண்ணி லக்கடம் போடு மேகருஞ்
சீர மோர்பலம் வசம்புகா
லெண்ணு மாதிகோ ரோச னைப்பொடி
நிட்க மாமணக் கெண்ணெய்சேர்
திண்ண மாகவே வடித்தோர் காசெடை
புகட்டக் கரப்பான் தெறிக்குமே.

(பொ-ரை.)—பூவரசம் பட்டைச் சாறு, பசுவின் பால், கரு நொச்சிச்சாறு, வகைக்குப் பலம் இரண்டு, நிலக்கடம்பு வேர், கருஞ்சீரகம் வகைக்குப் பலம் ஒன்று, வசம்பு பலம் கால், கோரோசனம் வராகனெடை ஒன்று, ஆமணக்கு நெய் ஒருசேர், இவற்றில் சாறுகளையும் பாலையும் ஒரு மண் சட்டியில் ஊற்றி, மற்றச் சரக்குகளைப் பொடி செய்து அதிலிட்டு எண்ணெய் சேர்த்துச் சிறுக எரித்துப் பக்குவ பாகத்தில் இறக்கிக் காலைமாலை இரு வேளையும், வேளைக்கு ஒரு காசெடை கொடுத்தால், கிரந்தி கரப்பான் தீரும். (சoச)

கரப்பான் கிரந்திக்கு—ஆதொண்டை எண்ணெய்.

பதினன்கு சீர்க்கழி நெடிலடி விருத்தம்.

புங்குட னுதொண்டை நாய்வேளை சங்குடன்
போதவோர் பிடிய தாகப்
புதுவசம் புள்ளியிரு சீரகம் வெளிச்சையொடு
பொடுதலை கத்தூரி நிசியும்
பொங்கமுளா வரிதகி யோடளவு தானரை
போடு படிவெண் காயமும்
பொழிலாய் விளக்கெண்ணெ யிருநாழி தன்னுடன்
போட்டிடித் திவைக ளெல்லாம்
சங்கநற் குப்பியிலை யின்சாறு கூடவே
தானுமொரு நாழி விட்டுத்
தையலே பானுபுட மேற்றியொரு காசளவு
தான் பாலர்க் கீயவே
அங்கமதி லெழுகரப் பானேடு கர்ப்பத்தில்
ஆமிரு கிரந்தி முதலாய்
ஆருங் குடித்துவிட வேறெண்ணெய் தேடாத
ஆதொண்டை எண்ணெயிதுவே.

(பொ-ரை.)—(1) புங்கு, (2) ஆதொண்டை, (3) நாய் வேளை, (4) சங்கு இவைகளினிலை வகைக்கு ஒருபிடி, (1) வசம்பு, (2) உள்ளி, (3) சீரகம், (4) கருஞ்சீரகம், (5) வெளிச்சைப்பிசின் (6) பொடுதலை, (7) கத்தூரி மஞ்சள் (8) கடுக்காய்த்தோல் வகைக்கு அரை பலம், வெண்காயம் ஒரு படி, விளக்கெண்ணெய் இரு படி, சங்கங்குப்பி இலைச்சாறு நாழி, இலைகளை நன்ருக அரைத்தும், மற்ற எட்டுச் சரக்குகளையும் பொடி பண்ணியும், வெண்காயத்தைக் குறுக அரிந்தும், ஒரு மண் சட்டியிலிட்டு, விளக்கெண்ணெயும் சாறுங் கலந்து வேடுகட்டி வெயிலில் வைத்து வேளைக்கொரு காசளவு, நோய் வன்மைக்குத் தக்க நாளளவு கொடுத்தால், கரப்பான், கர்ப்பக்கிரந்தி முதலியவை தீரும். (சoரு)

கால்கடுவன், மண்டைக்கடுவனுக்கு—ஆமணக்குக் கட்டு.

எண்சீர் விருத்தம்.

ஆமணக்கி னிலையதனைத் தலைக்கால் கட்டி
ஆதித்த னுதயத்தி லவிழ்த்துப் போட்டுக்
காமணக்கும் சலம்விட்டுக் கழுவிப் பின்பு
கனத்தா சங்கினிலை கொண்டு வந்து
பூமணக்கும் சட்டியிலிட் டேகருக்கிப் பிறகே
பொடியாகச் செய்துபுண்மேல் தேங்கா யெண்ணெய்
மாமணக்கத் தடவியந்தத் தூளைப் போட
மண்டைக்கால் கடுவனுமே தீர்ந்து போமே.

(பொ-ரை.)—இரவில் ஆமணக்கு இலையை வைத்துத் தலையிலும், காலிலும் கட்டி, சூரியோதயத்தில் அவிழ்த்து விட்டுத் தண்ணீர் விட்டுக் கழுவிப் பிறகு, பீச்சங்கனியிலையைக்கொண்டு வந்து, சட்டியிலிட்டுக் கருக்கிப் பொடியாக்கி வைத்துக் கொண்டு, அந்தக் கடுவனில் தேங்காயெண்ணெயைத் தடவி, அதன் மேல் மேற்படி பொடியைத் தூவிவர, மேற்படி கால்கடுவன், மண்டைக் கடுவன் திரும். (சOசு)

கால்கடுவனுக்கு—இலுப்பை எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

இலுப்பைப் பட்டை பாவட்டை எழில்சது ரக்கள் ளிப்பட்டை
சலிப்பில் லாஈ ருள்ளியும் வசம்பு நறுக்கி யெல்லாந்தான்
குலுக்கி யெண்ணெ யிற்காய்ச்சிக் கொடுக்கப் பாலகர் கால்கடுவன்
அலுப்புப் பட்டே யோடிவிடும் அயில்கூர் மதர்விழி மாமயிலே.

(பொ-ரை.)—இலுப்பைப்பட்டை, பாவட்டை, சதுரக்கள்ளிப்பட்டை, ஈருள்ளி, வசம்பு வகைக்குப் பலம் கால், இவைகளை யெல்லாம் நன்றாய்ச் சிதைத்துப் பொடியாக்கி, ஒரு சேர் சிற்றாமணக்கெண்ணெயிலிட்டுக் காய்ச்சி, காலைமாலை இருவேளையும், உச்சிக்கரண்டி யளவு பாலர்கட்குக் கொடுத்தால், கால்கடுவன் நீங்கும். (சOஎ)

சிறுசிரங்கு, கிரந்திசூலை, சொரிக்கு.

கள்ளிச்சுரசம்.

அறுசீர் விருத்தம்.

கொடிக்கள்ளி தன்னை வாட்டிக் குறுகவே பிழிந்து கொண்டு
முடுக்குடன் தினமு மேக்கு மூன்றுநா ளுள்ளே வார்க்கத்
திடத்துடன் கிரந்தி சூலை சிரங்கொடு சொரியுந் தானே
நடுக்கறத் திரு மென்று நாதனிங் கருள்செய் தாரே.

(பொ-ரை.)—கொடிக்கள்ளியை வாட்டிப்பிழிந்து வேளைக்கு அரைப்பாலடையாகக் குழந்தைக்கு மூன்றுநாள் கொடுத்தால் கிரந்தி, அதினாலுண்டாகும் குத்தல், சிரங்கு, நமை இவைகள் தீரும். (சOஅ)

சிரங்குக்கு—தேங்காய் எண்ணெய்.

கலி விருத்தம்.

காட்டுச் சீரகங் கார்போ கரிசியும்
மாட்டுங் கஸ்தூரி மஞ்சளு மோமமும்
நீட்டரி தகியு நீரடி முத்தும்
ஈட்ட வாறுஞ் சமனெடை யாயெடே.

எடுத்த வைபொடி செய்வெண் மிளகினில்
அடுத்த ஒரெடை யாமத்தங் காயினுள்
தொடுத்த டைத்தொன் றரைஎரு முட்டைசூழ்
பொடுத்த மாய்ப்புடம் போட்டெடுத் தாற்றிடே.

ஆற்றி முற்பொடி கூட்டிய கண்டமும்
நாற்றிடு நாளிகே ரத்தி னெண்ணெய்விட்
டேற்றிடு நற்குழிக் கல்லி லரைத்துற
மாற்றி டெண்ணெய்பின் வார்த்து நீயாட்டிடே.

ஆட்டி பானுமு னப்படி மூன்றுநாள்
காட்டி வைத்துக் கடத்தினில் வந்ததோர்
சாட்டிய சிரங்கின்மீ திற்நீ தடவிட
நாட்டிய தினவு நமைச்சலும் போகுமே.

(பொ-ரை.)—காட்டுச்சீரகம், கார்போகரிசி, கத்தூரிமஞ்சள், ஓமம், கடுக்காய்த் தோல், நீரடிமுத்து இவை வகைக்கு வராகனெடை ஒன்று பொடிசெய்து வைத்துக்கொண்டு, வெண்மிளகுப்பொடி சமன்கூட்டி முழு ஊமத்தங்காய்க்குள் அடைத்து மண்சீலை செய்து ஒன்றரை எருவிற் புடம் போட்டு ஆறவிட்டு சீலைநீக்கி, முற்பொடியையும் ஊமத்தங்காயையும் நன்ருய்த் தேங்காயெண்ணெய் விட்டரைத்துப் பின்னரும் முன்னெண்ணெயிற்கலந்து மூன்றுநாள் வெயிலில்வைத்துத் தடவச் சிரங்கு, நமைச்சல் முதலியவை தீரும். (சOகூ)

# 6. அச்சர வகுப்பு

## அச்சரம்

எண்சீர் விருத்தம்.

அச்சரமென் றொருநோயுண் டக்கரமு மாகும்
அவைவிளக்கு முள்ளாவிச் சூட்டா னாவில்
நிச்சயமாய் வேக்காட்டைத் தந்து மாப்போல்
நீறுபூத் துத்துன்ப நிலைக்கச் செய்து
சச்சரவுண் டாக்குமென வன்றி யந்நாச்
சார்ந்துவரு முள்ளினோய் நாற்ற நோயும்
வைச்சுநா நோய்மூன்று வகுத்தார் முன்னோர்
மருத்துவர்க ளறியுமா றுலகி லன்றே.

(பொ-ரை.)—குழந்தைகளுக்கு அச்சரம் என்னும் பேருள்ள ஒரு நோயுண்டு, அது அக்கரம் எனவும் சொல்லப்படும். இவ்விரண்டு பேர்களும், மூலத்தில் கிளம்பும் ஆவியின் சூடானது நாவில் ஏறி, அந்நாவுக்கு வேக்காட்டை யுண்டாக்கி, மாவைப் போல் நீறுபூத்து அதனால் குழந்தைக்குப் பலதுன்பங்களை நிலைக்கச்செய்து, உண்ணும்பால் முதலியவற்றை உண்ணவொட்டாதபடி அதில் பகையை (வெறுப்பை) விளைவிக்கும் என்னும் பொருள் உள்ளவைகளாம். இந்நோய் ஒன்றே யல்லாமல், நாமுள் நோயெனவும், நாநாற்றநோய் எனவும் வேறு இரண்டு நோய்களும் நாவில் உண்டாவனவாதலின், அவற்றையுஞ் சேர்த்து நாவில் உண்டாகும் நோய்கள் மூன்றென இந்நிலவுலகில் மருத்துவர்கள் அறியும்படி முன்னோர்கள் வகுத்துச் சொன்னார்கள். (சகம)

அச்சரங்களின் தொகையும், பேர்களும்.

கலி விருத்தம்.

உலகி னச்சர மோதி னேழதாம்
இலகு சூலியு மியன்ற நீதியும்
அலகில் சோதியும் வீமி குண்டியும்
குலக பாலியுங் குமரி யும்மரோ.

(பொ-ரை.)—இவ்வுலகத்தில் அச்சரத்தின் தொகையை ஓதின் ஏழாகும், அவை (1) சூலியக்கரம், (2) நீதியக்கரம், (3) சோதியக்கரம், (4) வீமியக்கரம், (5) குண்டியக்கரம், (6) கபாலியக்கரம், (7) குமரியக்கரம் என்பனவாம். (சகக)

பிறர் கொள்கை.

உள் அச்சரம்.

அம்போதரங்கம்.

ஈத லாமலும்
ஓது வாருளில்
போது மச்சரம்
நீதி யாளரே.

(பொ-ரை.)—அச்சரங்கள் எழு அல்லாமலும் உள் அச்சரமும் ஒன்று உண்டெனெ, மருத்துவ நூல் வல்லவர் கூறுவார்கள். (சுகஉ)

அச்சரத்தின் பொதுக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

தலையில் வலியுந் தானுண்டாம்
தாது மிகவுந் துடித்துநிற்கும்
குலையும் வெந்து நாவெந்து
குளிர்ந்து தானே வரும்பிள்ளை
கலையும் பொசியு நாவெளுத்துக்
கலங்கிக் கண்டந் தான்வெந்து
மலையின் மிளகு கொளவொண்ணு
வகுத்துச் சொன்னே மக்கரமே.

(பொ-ரை.)—தலையில் வலித்தல், நாடி நடை மிகவும் துடித்து நடத்தல், குலைவேக்காடு, நாவேக்காடு, குளிர்தல், வாயிலிருந்து சொள்ளு வடிந்து தாயாரின் புடைவை நனைதல், நாவெளுத்தல், நாத்தண்ணீர்குழம்பல், கண்டத்தின் உட்பக்கம் வேதல், மலையில் விளையும் மிளகின் காரத்தையும் தாங்கமுடியாமை என்னும் குறி குணங்கள், அச்சரங்களின் பொதுவாய் உண்டாகும் குறிகுணங்களாகுமென்று வகுத்துச் சொன்னோம். (சுகங)

(1) சூலியக்கரக் குறிகுணம்.

இது, நாவேக்காடுடன் சூலத்தாற் குத்துவதுபோற் குத்தலையுடையது.

எண்சீர் விருத்தம்.

சூலியது நாவில்வரி னந்நா வெந்து
சூழுமே யடையாக வெளுத்து மாப்போல்
சூலியெனும் பேர்க்கொக்கச் சூலத் தாலே
சூட்டலென வந்நாவிற் குத்த லாதல்
மேலுமதில் வழுவழுத்த வெண்ணீ ரூறல்
வெள்ளாவி யுவர்மண்ணின் நாற்ற மாதல்
காலுதல்வெள் ளோக்காளம் தண்ணீர் வேட்கை
கால்கைக ளுடலமெலாங் கருமை யாமே.

கலி விருத்தம்.

ஆத லன்றியு மாகுந் தலைவலி
தீத தாகநோம் தீயசு ரம்வரும்
காது மேயிடைக் கடுப்ப தாமென
ஓதி னுர்முன்ன ரேயுள்ள நூலரே.

(பொ-ரை.)—சூலி அச்சரம் என்பது நாவில் உண்டானால், அந்த நாவானது வெந்து மாப்போல் வெளுத்து அடையாகப் பற்றுதல், சூலி என்னும் பேர்க்கு ஒப்பாகச் சூலத்தாற் குத்துதல்போற் குத்தல், அந்நாவில் வழுவழுப்பான வெண்மையான நீர் சுரத்தல், வண்ணான் வெள்ளாவிவைக்கும் போது வீசும் உவர் மண்ணின் நாற்றம் போன்ற நாற்றம் நாவிலிருந்து வெளியே வீசுதல், வாந்தியாதல், வெள்ளைக்கோழை வெளிவரக்கூடிய வெள்ளோக்காளம், நீர்வேட்கை, கால்கள், கைகள், உடம்பு இவைகளிலெல்லாம் கருமை நிறம் உண்டாதல், தலைவலித்தல் அன்றி நோதல்,

கொடிய சுரங்காய்தல், இடுப்பு கடுத்தல் என்பவைகள் உண்டாவனவென்று பண்டையிலிருந்த முன்னோர்கள் தாங்கள் மொழிந்த நூலிற் சொன்னார்கள். (சகச)

(2) நீதியக்கரக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

நீதிநா வில்வரினே வுயர்தாழ்வு மின்றிநடு நிலையாய் நாவும்
கோதின்றி யுட்சிவந்து வெளியில்மாப் போலுற்றுக் கூறு மாவும்
தீததா யுலர்ந்துவாய் வரளலொடு கைத்தனெஞ் செரிவு குளிரல்
ஓதுதலை வலித்தல்சுர மிகுந்துமேல் வீசலிவை யோதி னரே.

(பொ-ரை.)—நீதியச்சரம் என்பது நாவில் உண்டானால், நீதி என்னும் பேர்க்கேற்ப நாவானது மிகுதல், குறைதல் இல்லாமல் நடுத்தரமாய் உட்பக்கம் வேக்காட்டால் சிவந்து, அதன்மேல் வெண்மையான மாவைப்போல் ஒரு பொருள் படர்தல், அம்மாவும் ஈரப்பசை இல்லாமல் உலர்தல், வாய் வரளல், வாய் கைத்தல், நெஞ்செரிதல், குளிர்தல், தலைவலித்தல், மிகுதியாகச் சுரம் மேல் வீசல் என்னும் இக்குறிகள் உண்டாவனவென்று பண்டைய மருத்துநூலறிஞர் கூறினர். (சகரு)

(3) சோதியக்கரக் குறிகுணம்.

எண்சீர் விருத்தம்.

சோதியது நாவில்வரி னுவும் வேதல்
தொடர்நிறமும் பல்லழுக் குறுமுந் நாடி
வேதனையாய்த் துடிதுடித்தல் தலையு மிடிபோல்
வேகமா யிடித்தல்வலி கணுகால் கணைக்கால்
தீதுபுரிந் துளைதல்சுரம் வீசலுடன் கழிதல்
திகழ்வாந்தி மிகவெடுத்தல் வயிற்றி னுள்ளும்
ஓதுகின்ற மேற்புறமு மோய்வின்றி யெரிதல்
மேவலென மருத்துநூல் விளம்புகின்ற தன்றே.

(பொ-ரை.)—சோதியச்சரம் என்பது நாவில் உண்டானால், அப்பேர்க்கேற்க நாவேதல், அந்த நாவைத் தொடர்ந்த நிறமானது பல்லழுக்கு நிறம்போலிருத்தல், வாத, பித்த, ஐயநாடிகள் உடலிலிருக்கும் நோயின் துன்பத்தால், துடிதுடித்த நாடியாக நடத்தல், தலை இடியிடிப்பதுபோல் இடித்தல், அன்றித் தலைவலித்தல், காலின்கீல்கள், கால், கணைக்கால் இவைகள் மிகவுந் துளைத்தலா னுண்டாவதுபோல நோதல், சுரங்காய்தல், வயிறுகழிதல், வாந்தியாதல், வயற்றில் உள்ளிலும் வெளியிலும் ஓய்வின்றி எரிதல், என்னும் இவைகள் உண்டாமென மருத்துவ நூல் சொல்லும். (சகசா)

(4) வீமி அக்கரக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

நன்றான வீமியது நாவில்வரி னதுபருமன னற்றா ழையின்
கன்றான குருத்தைமெல் நிறமாதல் வேதல்வாய் கருமை மேனி
முன்றாவு தலைநோத லிவையென்று முன்னோர்கள் சொன்ன
வன்றாக நெஞ்சடைப் பீரலதி னோதல்குளிர் வாய்தல் மிகவே
[தாமே.

(பொ-ரை.)—வீமி அச்சரம் என்பது நாவில் உண்டானால், அந்நாவானது தடித்தல், தாழைக்குருத்தை மென்றால் உண்டாகும் செந்நிறம் போல் நா சிவத்தல், வாய் வேக்காடாதல், உடல் கருமைநிற

மடைதல், மிக்கநீர்வேட்கை, நெஞ்சடைப்பு, ஈரல் வெந்து நோதல், மிகக் குளிர்தல், தலை மிகுதியாக நோதல் என்னும் இவைகள் ஏற்படுமென்று முன்னோர்கள் மருத்துவ நூலிற் சொன்னவாறாகும். (சகஎ)

## (5) குண்டியக்கரக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

குண்டியது நாவில்வரி னீரலது வெந்துநாக் கொதித்தெ ழுந்து
மண்டுநாச் செம்மையாய் வாய்கூச லிருமுதல் வயிறு கழிதல்
விண்டுடல் கடுத்தநெஞ் சிற்கரித் தெதிரெழல் விலாவி னோர்சார்
கண்டுநோ தலினுடன் னீர்வேட்கை யிவைவந்து கதிக்கு மன்றே.

(பொ-ரை.)—குண்டி அச்சரம் என்பது நாவில் உண்டானால், ஈரல் வெந்து அதனால், நாவானது மிகக்கொதிப்பை யடைந்து மிகவும் சிவத்தல், வாய் கூசுதல், இருமுதல், வயிறுகழிதல், உடல்மிகக்கடுத்தல், நெஞ்சு கரித்து ஓக்களித்தல், விலாவின் ஒரு பக்கம் நோதல், நீர்வேட்கை என்னும் இவைகள் ஏற்படுவனவாம். (சகஅ)

குண்டியக்கரம்.

(வேறு கொள்கை)

அறுசீர் விருத்தம்.

அச்ச ரத்தின் குணங்கேளீர் அரைக்கு மேலே சுரங்காணும்
மச்சம் போல வெளுத்துடல் மஞ்சள் நிறச்சிறு நீர்வீழும்
எச்ச வாயிற் சுறுக்கென்று மிளைத்தே யுடம்பு கடுப்பாகும்
கொச்சைக் குரலுங் கடுப்பெய்தும் குண்டி யக்கர குணமாமே.

(பொ-ரை.)—குழந்தைகளின் உடம்பில் இடுப்புக்குமேல் சுரமடித்தல், உடம்பு மீன் உடம்பைப் போன்ற வெள்ளை நிறமாதல், சிறுநீர் மஞ்சள் நிற மாயிறங்கல், எச்சவாய் திடீரென்று சுறுக்கெனக்குத்தல், உடம்பு இளைத் தல், உடம்பு கடுத்தல், மழலைச் சொல்லானது பேசமுடியாதபடி குரல் கடுத் தல், என்னும் இக்குறிகுணங்கள் கண்டால், குண்டியச்சரமென்று அறிவாய். (சகக)

## (6) கபாலியக்கரக் குறிகுணம்.

எண்சீர் விருத்தம்.

கபாலியது நாவில்வரின் குடலீ ரல்நோய்
கனநெஞ்சு காடிச்சோ றதுபோற் பொங்கல்
அபாயநா வெந்தைந்தா நாள்வெ டித்தே
யதிலிருந்து குருதிநீர் வடித றலைநோய்
உபாயமா யுடல்வலித்தல் கனமு நீங்கா
துறுசுரமாய் வரனெஞ்சு நோதல் வயிறும்
விபாகமாய் நொந்திரைந்து பேதி யாதல்
வெகுண்டுவரு மெனமுனிவர் விளம்பி னரே.

(பொ-ரை.)—கபாலி அச்சரம் என்பது நாவில் உண்டானால், குடல், ஈரல் இவ்விடங்கள் வெந்துநோதல், தொண்டையில் காடிச்சோறு பொங்குவது போற் பொங்குதல், அபாயகரமாக நாவேதல் பிறகு, ஐந்தா நாளில் அவ் வேக்காட்டில் வெடித்தல், அவ்வெடிப்பிலிருந்து இரத்தம் வடிதல், தலை

நோதல், உடல் வலித்தல், உடல்பளுவாய்த் தோன்றல், விடாச்சுரமடித்தல், நெஞ்சு நோதல், வயிறு நொந்து இரைந்து பேதியாதல் என்னும் இவைகள் மிக்குவருமென்று முனிவர்கள் சொன்னார்கள். (சஉ0)

## (7) குமரியக்கரக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

குமரியது நாவில்வரி னூசுசல் தடிப்பேறல் கூறுஞ் சதைநோய்
அமர்துயர்க ணோதல்சுரம் வாய்கைத்தல் வாந்திமிகல் ஆர்ந்த [வுண்ணு
அமர்மிக வளர்தல்பல் மஞ்சளுறல் தலைத்தோன்றி வளரு மூக் [கில்
குமுறிரத்த மூன்றுநாள் வடிதலா மெனமுனிவர் கூறி னாரால்.

(பொ-ரை.)—குமரி அச்சரம் என்பது நாவில் உண்டானால், நா எந்தப் பொருளை உண்ணக் கொடுத்தாலும் அதையுண்ணவும் பால் குடிக்கவும் முடியாதபடி கூசுதல், நா தடித்தல், உடம்பில் சதையில் நோதல், அதனால் துன்பம் மிகுதல், இரண்டு கண்களும் நோதல், சுரமடித்தல், வாய்கைத்தல், வேகமாய் அடிக்கடி வாந்தியெடுத்தல், உண்ணாக்கு வளர்தல், பல் மஞ்சள் நிறமாதல், தலையிலிருந்து மூக்கின்வழியாக மூன்று நாள் வரைக்கும் இரத்தம் வடிதல் என்னும் இவை தோன்றுமென்று முனிவர்கள் சொன்னார்கள். (சஉக)

## உள் அச்சரக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

மூக்குநீர்ப் பாய்ச்ச லாகும் முகமிக வெளிறிப் போகும்
நாக்குமே வெளுத்துப் பூக்கும் நாபிவா யாவி தோன்றும்
தூக்கமுஞ் சுரமு மெத்தத் துனுக்கெனத் தண்ணீர் வாங்கும்
திர்க்கவிக் குணங்கள் கண்டால் திகழுள்ளச் சரமு மாமே.

(பொ-ரை.)—உள்ளச்சரம் என்பது உந்தியில் உட்பக்கம் வெந்து புண்ணாய் அதினின்றும் ஆவி தோன்றல், அவ்வாவி மேலுக்குக் கிளம்புவதால் அது, தலையில் முட்டி நீராய், அந்நீர் மூக்கின் வழியாய் ஒழுகுதல், அந்நீர் முகமுதலிய மேல்நோக்குறுப்புகளில் கோத்துக் கொள்வதனாற் குருதி கெட்டு அம்முக முதலியவற்றின் செந்நிறம் நீங்கி வெளுத்தல், நாக்கு வெளுத்தல், அதில் வெண்ணீறு பூத்தல், தூக்கம் உண்டாதல், சுரமடித்தல்; திடீரென்று தண்ணீர்த்தாக முண்டாதல் என்னுங் குறிகுணங்களையுடையதாம். (சஉஉ)

## அச்சரங்களுக்குப் பொது மருந்து.

அறுசீர் விருத்தம்.

கருஞ்சீ ரகம்ரோ கணிகடுக்காய் காட்டு மல்லி வேர்வகைக்கே
ஒருவ ரானிண் டங்கொழுந்து மொருபிடி யுள்ளி பலமிரண்டு
முருவிளக் கெண்ணெய் படியரைக்கால் முலைப்பால் வீசம் படியாக
மருந்தை யிடித்தே யெண்ணெயினில் மயன பதங்கோ ரோச [னையே.

[ட்டுத்

சினையே யிரண்டு வராகனெடை சேரப் பொடித்தெண் ணெயிலி
தனையே வடித்துண் ணக்கேளாய் சதுரா வயிற்று வேக்காடும்
வினய மாக வேநாக்கு வெந்து புண்ணு யிருக்கிறதும்
பணியக் காய்ச்ச லுந்தீரும் பத்திய மிதற்கு நலமாமே.

(பொ-ரை.)—கருஞ்சீரகம், கடுகுரோகணி, கடுக்காய்த்தோல், காட்டுமல்லிகைவேர் இவை வகைக்கு ஒரு வராகனெடை, ஈயக்கொழுந்து ஒரு பிடி, வெள்ளை வெங்காயம் பலம் இரண்டு, சிற்றுமணக்கு நெய் அரைக்கால்படி (ஆழாக்கு), முலைப்பால் வீசம் படி (அரையாழாக்கு), இவற்றில் கடைச் சரக்குகள் நான்கையும் இடித்தும், ஈயக்கொழுந்தை அரைத்தும், வெங்காயத்தைப் பொடியாய் அரிந்தும் மேற்படி சிற்றுமணக்கு நெய்யிற் கலந்து, அத்துடன் முலைப்பாலையும் ஊற்றி அடுப்பேற்றிச் சிறுக எரித்துப் பக்குவ பாகத்தில் வடித்து, அதில் கோரோசனம் இரண்டு வராகனெடை பொடி பண்ணித்தூவிக் காலையில் மாத்திரம் ஐந்து அல்லது ஏழு நாள் வேளைக்கு உச்சிக்கரண்டி அளவு சாப்பிட்டால் அச்சரத்தினால் வயிற்றிலுண்டான வேக்காடு, அதனால் உண்டாகும் நாவேக்காடு, அவற்றால் உண்டாகும் சுரம் இவைகள் தீரும். இதற்குத் தாயும், குழந்தையும் பத்தியமிருக்கவேண்டும். (௬௨௩)

குண்டியச்சரத்திற்கு—கற்கமும், பத்தியமும்.

எண்சீர் விருத்தம்.

சுண்டைவேர் நிம்பக்கா யளவ ரைத்துத்
துலங்காவின் வெண்ணெயுட னருந்தத் தீரும்
கொண்டகரிப் பானரைப்பாக் களவ ரைத்துக்
குறுகவே சீரமுட னருந்தத் தீரும்
வண்டணியுங் குழலாய்பச் சரிசிச் சோறும்
வயங்காவின் பாலும்பத் தியமாய்க் கூட்டக்
குண்டியச் சரமான வியாதி விட்டுக்
குடிபோகு மென்றுசிவன் கூறி னாரே.

(பொ-ரை.)—சுண்டைவேர்த்தோலை ஒரு சிறு எலுமிச்சங் காயளவு அரைத்து அவ்வளவு பசுவின் வெண்ணெயுடன் கூட்டி மூன்று அல்லது ஐந்து நாள் காலைமாலை இரு வேளையாக உண்டாலும், கரிசலாங்கண்ணி இலையை அரைக் கொட்டைப் பாக்களவு அரைத்து வீசம் படி பசுவின்பாலுடன் கூட்டி மூன்று அல்லது ஐந்து நாள் காலைமாலை இரண்டு வேளையாக உண்டாலும், குண்டியச்சரந்தீரும்.

பெண்ணே! பச்சரிசிச் சோற்றைப் பசுவின்பாலுடன் கூட்டி யுண்டும் பத்தியமிருக்கவேண்டும்.

இது சிவபெருமான் சொன்னதென்றறிவாயாக. (௬௨௪)

உள் அச்சரத்திற்கு—அதிமதுர நெய்.

எண்சீர் விருத்தம்.

அதிமதுரம் பூவந்திப் பழமி ரண்டும்
அவைவகைக்கு வராகனென் றறிந்து மேலும்
நிதிமுலைப்பால் வார்த்தரைத்து முலைப்பால் தன்னில்
நினைவாக கரைத்துப்பசு நெய்யு ழக்கு

கீதியாக வேகலந் தொன்றாய்க் காய்ச்சிக்
கடுகுமெழு குப்பதத்தி லிறக்கி வைத்துத்
துதியாக வராகனெடை நெய்கொ டுக்கச்
சூருள்ளச் சரக்காய்ச்சல் கணமும் போமே.

(பொ-ரை.)—அதிமதுரம் வராகனெடை ஒன்று, மணிப்புன்கம்பழம் வராகனெடை ஒன்று இவ்விரண்டையும் முலைப்பால் விட்டரைத்து உழக்கு முலைப் பாலிற் கரைத்து, அத்துடன் உழக்குப் பசுநெய் கலந்து ஒன்றாய்ச் சேர்த்து, சிறுக எரித்து கடுகு மெழுகுபதமாய் வரும் பக்குவபாகத்தில் இறக்கி வைத்து, வேளைக்கு ஒரு வராகனெடையாக காலைமாலை இரண்டு வேளையும் ஐந்து நாள் அல்லது ஏழு நாள் கொடுத்தால், உள்ளச்சரக்காய்ச்சல், கணைச்சுரம் முதலியவை தீரும்.

இம்மருந்துகளன்றி, 'கௌசிகர் குழம்பும்' இந்நோயை நீக்கற்குரிய தெனக் கொள்க. ஏனெனின் அதில் 'வெள்ளையக்கரவிதம்' எனக் கூறப் பட்டிருக்கிறது. (சஉரு)

அட்சரமாந்த சுரத்திற்கு—பூவரசம் எண்ணெய்.

அறுசீராசிரிய விருத்தம்.

பூவர சிலையுங் காய்பூ புகழ்பெற மூன்றுந் தானே
தாவர சமன தாக தயவுடன் அரைத்து நல்லாய்
ஆவர பலமொன் றாக அடையதை தட்டிக் கொண்டு
தேவர்கள் மகிழுஞ் சிற்று மணக்குநெய் அரைசேர் கூட்டே.

கூட்டியே காய வைத்துக் கூறதில் அடையைப் போட்டுத்
தீட்டிடு சிவக்கக் காய்ச்சித் திகழடை எடுத்துப் போட்டுக்
காட்டிய ஏலம் சாதிக் காய்சாதி பத்ரி மூன்றும்
ஆட்டிய வகைவ கைக்கு அரைவிரா கன்தான் தூக்கே.

தூக்கிநீ பொடியாய்ச் செய்து துகளிலா எண்ணெய் தன்னில்
ஊக்கமாய்க் கலந்து பின்பு உள்ளுக்கு எடைதான் துட்டுப்
பாக்கிய மாக வார்க்கப் பாலரை மயக்க வந்த
ஆக்கிய காய்ச்சல் மற்ற அட்சர மாந்தம் போமே.

(பொ-ரை.)—(1) பூவரசுயிலை, (2) பூவரசங்காய், (3) பூவரசம்பூ, இவை களைத் தனித்தனி அரைத்துப் பலம் ஒன்று யெடுத்து ஒன்று கூட்டி அடையாகத் தட்டி (4) சிற்றுமணக்கு நெய் சேர் ஒன்றில் சேர்த்து அடை சிவந்து மிதக்குமட்டும் காய்ச்சி, அடையை நீக்கி, அதில் ஏலம், சாதிக்காய், சாதி பத்திரி மூன்றும் வகைக்கு அரை வராகனெடை பொடித்துக்கூட்டிக் கலக்கி, காலைமாலை காசெடை வீதம் கொடுத்துவர, காய்ச்சலும் அட்சரமாந் தமும் போம். (சஉசு)

நாமுட் குறிகுணம்.

வரும்வழி.

எண்சீர் விருத்தம்.

பாரேநீ யரிவையர்தம் துயரத் தாலும்
பாலனவன் முன்னாளிற் பிறக்கும் போது
ஆரேதா னந்நாளின் தோடத் தாலும்
அன்னைதன் பசியாலும் வருத்தத் தாலும்

வாரேதான் குழவிகட்கு நாமுட் டோடம்
வலுக்குமே யிந்தநோய் வலிமை மெத்த
மாரேதா னிருமிமிக மேல்மூச் சுண்டாம்
மாசற்ற விருகண்ணீர் சொரியும் பாரே.

சொரியும்பார் தலைவலியுஞ் சுரமு முண்டாம்
சொப்பனமாய்ப் பொறிகலங்கி முலையு முண்ணு
தரியும்பார் விலாவிரண்டு மள்ளெ டுக்கும்
ஆஆஆ வாயெல்லாம் நாமுள் ளாகும்
வரியும்பார் தொண்டைபற்றி மிகமுள் ளாகி
வலுக்குமே விதியினது வலிமை தன்னால்
மரியும்பார் தலைநடுக்கும் பேசொட் டாமல்
மாதொண்டைச் சேத்மந்தான் மருவிப் பாரே.

மருவிப்பா ரிருகண்ணும் விழித்தி ருக்கும்
மாபாவ சண்டாள நாமுட் டோடம்
மருவிப்பா ரிக்குணத்தை யறிந்து கொண்டே
மகத்தான நோயிதென்று மனத்தி லெண்ணி
மருவிப்பார் மனதடங்கிப் பொறுமை யாக
வன்மையுட னேய்களைநீ சோதித் தேறி
மருவிப்பார் நாமுள்ளின் தோடங் கண்டு
வருங்குணத்தா லிந்நோய்தான் தீரா தென்றே.

(பொ-ரை.)—நாமுள்ளானது தாய் மார்களின் துக்கத்தினாலும், குழந்தைகள் பிறக்கும்பொழுதே தொடர்கின்ற தோடத்தினாலும், தாயின் பசியினாலும், அதனால் உண்டாகும் உடல் வருத்தத்தினாலும், நாமுள் தோடம் உண்டாம். இந்த நோயானது மிக்க வன்மையானது. ஆகையால் இந் நாமுள் என்னும் நோயால் இருமல், மேல்மூச்சு, இரண்டு கண்களிலும் நீர் சொரிதல், தலைவலி, சுரம், கனவு போல் மயங்கிப் பொறிகள் கலங்கி, அதனால் பால் பிடித்து உண்ணாமை, இரண்டு விலாக்களும் அள் எடுத்தல், வாயிலுள்ள மற்ற இடங்களிலும், நாவிலும், தொண்டையிலும், முள் உண்டாதல், அது சுரசுரவென்று வலியாயிருத்தல், தலை நடுக்கல், வாய் பேச வொட்டாமை, தொண்டையிற் சேத்துமம் மிகுதல், இரண்டு கண்களும் திறந்து கொண்டே யிருத்தல், என்னும் இவைகள் உண்டாம். இது ஒரு பெரிய நோயென்று உள்ளத்தில் எண்ணி, உள்ளம் அடங்கிப் பொறுமையாயிருந்து அறிவின் வன்மையால் நோய்களை ஆராய்ந்து, அதன் குறிகளால் இந்நோய் தீராதென்று அறிவாய்.

இக்குறிகளன்றி வாந்தி, வேப்பம் பூவின் நிறம் போன்ற கழிச்சல், கைகால்களிற் றங்காமை என்னும் குறிகளும் உண்டாமென்று கூறினாரு முளர். இதனை,

அறுசீர் விருத்தம்.

" திடமாய் முலையு முண்ணாது சீறி மிகவே சத்திக்கும்
அடைவாய்க் கையி னில்லாம லனல்போல் மிகவும் வெச்சென்னும்
விடமே யனைய விழியாளே வேப்பம் பூப்போல் வயிறோடும்
நடமே புரிவா ருரைசெய்தார் நாவின் முள்ளின் குணமிதுவே.

என்னுஞ் செய்யுளாலறிக. (சஉஎ)

நாமுள்ளுக்கு—கற்ருழஞ் சாறு.

அறுசீர் விருத்தம்.

கடுக்கா யொன்று பொடிசெய்து கற்ரு ழஞ்சாறு சீரகமும்
இடுவோர் சங்கி னளவாக இதுபோல் மூன்று நாளதுதான்
கொடுமே யினிதாய் நாமுள்ளுங் குலைந்தே யோடி விடுங்கையால்
விடுவேல் விழியாய் செய்யென்று வேத முனிவ ருரைத்தனரே.

(பொ-ரை.)—ஒரு கடுக்காயை விதை நீக்கித் தோலைப் பொடி செய்து ஒரு வராகனெடை சீரகப் பொடி கூட்டி ஒரு சங்கு கற்ருழஞ் சாற்றில் சேர்த்து நாள் ஒன்றுக்கு இரண்டு வேளையாக மூன்று நாள் கொடுக்க, மேற்படி நாமுள் நீங்கும். (சஉஅ)

நாமுள்ளுக்கு—சங்கஞ்சாறு.

நேரிசை வெண்பா.

சங்கங் கொழுந்து தனிநெருஞ்சில் முள்ளுக்காய்
கங்கு மிளகுதக் காளியிலை — பொங்கும்
பழமஞ்ச ளுள்ளி பரிவாய் நருக்கிப்
பொழியுமோர் சங்கிடப் போம்.

(பொ-ரை.)—சங்கங் கொழுந்து, நெருஞ்சில் முள், மிளகுதக்காளியிலை, இவை ஒவ்வொன்று ஒவ்வொரு பிடி, பழைய மஞ்சள் ஒரு தேறு, வெள்ளைப்பூண்டுத்திரி ஒன்று, எல்லாவற்றையுமிடித்துச் சாறுபிழிந்து வேளைக்கு ஒரு சங்காகக் காலை மாலை இரண்டு வேளையும் மூன்று நாள் கொடுக்க, மேற்படி நாமுள் நோய் தீரும். (சஉகூ)

நா நாற்றக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

வஞ்சிக் கொடியே நீகேளாய் வாயிற் கந்த தாலுதனை
மிஞ்சி மிடறு முலையுண்ணு மிகப்புண் ணுகக் கந்திக்கும்
குஞ்சி தன்னுடல் வெதுப்புற்றுக் கோழை நீர்வெந் நீராகும்
துஞ்சி மலமுந் திந்துவிடும் தொகுத்த விந்தக் குணந்தானே.

(பொ-ரை.)—வஞ்சிக்கொடி போற் றுவள்கின்ற இடையையுடைய பெண்ணே! வாயிலுள்ள நா நாற்ற நோயில், மிடறு நோதல், பால் குடியாமை, நா புண்ணுய் நாற்றம் வீசுதல், சுரங் காய்தல், கோழை நீர் சூடாயிருத்தல், மலந் தீய்ந்து கறுப்பாய் இருத்தலாம். (சஙo)

நா நாற்றத்திற்கு—பழம்பாசிச் சுரசம்.

அறுசீர் விருத்தம்.

கெந்த தாலு தான்றீரக் கேளாய் பாசி வல்லாரை
வந்தி ருள்ளி தன்னோடு வளமா யிடித்துச் சுரசஞ்செய்
குந்தும் வெள்ளாட் டுப்பாலும் கூட்டிச் சீரக மும்வெதுப்பித்
தொந்த மாக வரைத்தியச் சுணையும் புண்ணும் போமன்றே.

(பொ-ரை.)—பழம்பாசி, வல்லாரையிலை, வெங்காயம் இவைகளைச் சமமாக எடுத்து இடித்துச் சாறுபிழிந்து உச்சிக்கரண்டி எடுத்து, அந்தச் சாறளவு வெள்ளாட்டுப் பால் கூட்டிச் சீரகம் கால்வராகனெடை வறுத்துப் பொடி செய்து அதில் அரைத்துக் கூட்டிக் காலை மாலை இரண்டு வேளையும் மூன்று நாள் கொடுக்க, நா நாற்ற நோய் தீரும். (சஙக)

# 7. சுரம் - சந்நி வகுப்பு

## சுரம்.

### (1) வாத (2) பித்த (3) சேத்தும சுரங்களின் குறி குணம்.

அறுசீராசிரிய விருத்தம்.

மாங்கிசந் தன்னில் வாத மதுபித்தந் தானுந் தோலில்
தூங்கிடு மெலும்பி லையஞ் சுகமறத் தோன்றிப் பின்னர்
சாங்கிய மாக நின்று சரீரத்தில் நோயும் பண்ணும்
ஆங்கிதைச் சொல்ல வொண்ணு தநீதமாம் ரோகந் தானே.

(பொ-ரை.)—குழந்தைகட்கு உண்டாகுஞ் சுரம் வாதமாகில் ஊனிலும், பித்தமாகில் தோலிலும், ஐயமாகில் எலும்பிலும் சார்ந்து, உடலை வெதுப்பி வருத்தும். அவ்வருத்தம் இத்தன்மையதெனச் சொல்ல முடியாததாம். (சஙஉ)

மேற்படி முச்சுரங்களுக்கும்—கோடா சுழி மாத்திரை.

அறுசீராசிரிய விருத்தம்.

கோரோ சனமிரு வராகனெடை கூறுமு ரோகணி வராகனென்று
நேர்வா ளந்தான் வராகனென்று நிகமு முலைப்பால் தான் விட்டிங்
கூரா யரைத்துப் பயறளவி லுண்டை செய்து நிழலுலர்த்தி
ஏரே வாத சுரத்திற்கே யிஞ்சிச் சாற்றி லிட்டிடுமே.

இடுமே பித்த சுரத்திற்கே யெழினன் முலைப்பா லிற்றீரும்
அடுமே யைய சுரத்திற்கே யாடா தோடை யுங்காரி
பொடுமே தூதுளை பிட்டவியல் பொருந்த வவித்த சாற்றிலிடப்
படுமே சந்நி யெலாந்தீரும் பகர்வை யிச்சா பத்தியமே.

(பொ-ரை.)—(1) கோரோசனம் வராகனெடை இரண்டு, (2) கடகரோகணி, (3) நேர்வாளம் இவைகள் வகைக்கு வராகனெடை ஒன்று, இவைகளை முலைப்பால் விட்டு (நான்கு சாமம்) அரைத்துப் பயறளவு உருண்டை செய்து நிழலிலுலர்த்தி வாத சுரத்துக்கு ஒரு மாத்திரை இஞ்சிச் சாற்றிலும், பித்த சுரத்துக்கு ஒரு மாத்திரை முலைப்பாலிலும், ஐய சுரத்துக்கு ஒரு மாத்திரை ஆடாதோடை, கண்டங்கத்திரி, தூதுவளை இவைகளின் இலை சரியெடை எடுத்துப் பிட்டவியல் செய்து பிழிந்த சாற்றிலும் கொடுக்கத் தீரும். இச்சாபத்தியம் வைக்க வேண்டும்.

குறிப்பு.—இம்மாத்திரை வயிற்றைக் கழிக்குமாதலால், காலையில் மாத்திரம் உபயோகிக்க வேண்டும். மாலையில் வயிற்றைப் போக்காத கோரோசன மாத்திரையில் ஒன்று மேற்படி துணை மருந்துகளோடு சேர்த்துக் கொடுக்கலாம். (சஙங)

கோரோசன மாத்திரை.

எண்சீராசிரிய விருத்தம்.

அரியரோ சனையெடை வராகன் மூன்றும்
அதனுடனே வதிமதுரங் கோட்ட மிந்து
பெரியவிருப் பைக்கொட்டைச் சாத்திர பேதி
பெருஞ்சீர கங்கருஞ்சீ ரகமுங் கூட்டிச்
சரியாக வராகனெடை யொன்று கூட்டித்
தண்மைகும ரியினீர்வார்த் தரைத்துப் பின்பே
உரியமுலைப் பாலிலரை குன்றி போல
உண்முலைப்பால் தன்னிலிடச் சுரமோ டும்மே.

(பொ-ரை.)—(1) கோரோசனம் வராகனெடை மூன்று, (2) அதிமதுரம், (3) கோட்டம், (4) இந்துப்பு, (5) இருப்பைக் கொட்டை, (6) சாத்திரபேதி, (7) சோம்பு, (8) கருஞ்சீரகம் இவைகள் வகைக்கு வராகனெடை ஒன்று கல்வத்திலிட்டுக் கற்றாழைச் சோறு சேர்த்து இரு சாமமும், முலைப்பால் கூட்டி இரு சாமமும் அரைத்துக் குன்றியளவு மாத்திரை செய்து நிழலிலுலர்த்தி, முலைப்பாலில் காலை மாலையில் ஒவ்வொரு மாத்திரை வீதம் கொடுக்க, முத்தோஷத்தாலுண்டாகும் சுரம் தீரும். (சஙச)

வாத பித்த சேத்தும சுரம், நாட்பட்ட மாந்தசுரம், கனல் சுரத்துக்கு

இலவங்காதி குளிகை.

எண்சீர் ஆசிரிய விருத்தம்.

நவின்றசுர இலவங்காதி குளிகை கேளாய்
நற்பச்சைப் பூரங்கால் இலவங் கங்கால்
நவின்றிட்டோம் வால்மிளகு சிறுநா கப்பூ
நன்றான ரோகணியு மேல மாஞ்சில்
நவின்றிட்டோம் சுக்குமே சீர கங்கால்
நளினசெவ் வாளமது நிகர்க்கு மொன்று
நவின்றிட்டோம் பொற்றலையின் சாற்ற லாட்டி
நவநாளுஞ் சென்றபின்பு மிளகு போலே.

மிளகுபோ லுண்டைசெய்து செப்பில் வைத்து
விளங்குகிற விஞ்சிதேன் முலைப்பால் தன்னில்
இளகுபோ லிழைத்துண்ண வென்ன சொல்வேன்
இனியநாட் சென்றசுர மாந்தம் போகும்
களகுபோல் வாதபித்த சேத்ம மூன்றுங்
கடந்தசுரங் கனல்சுரமுங் கழன்றே வோடும்
மளகுபோ லிந்தமுறை யிந்தப் போக்கு
மகத்தான நந்தீசர் செயலாங் காணே.

(பொ-ரை.)—(1) பச்சைக் கர்ப்பூரம், (2) இலவங்கம், (3) வால்மிளகு, (4) சிறுநாகப்பூ, (5) கடகரோகணி, (6) ஏலம், (7) சடாமாஞ்சில், (8) சுக்கு, (9) சீரகம், இவைகள் வகைக்குப் பங்கு கால், (10) நேர்வாளம் மற்ற ஒன்பது சரக்குகளின் எடைக்குச் சமன் சேர்த்து, பொற்றலையின் சாற்றால் ஒன்பது நாள் அரைத்து, மிளகு போல உருண்டை செய்து நிழலிலுலர்த்திச் செப்பில் வைத்து, சுரத்துக்குக் காரணமாகிய தோடத்தை அறிந்து இஞ்சி, தேன், முலைப்பால் இவைகளில் ஒன்றில் ஒரு மாத்திரையை இழைத்துக் கொடுக்க நாட்பட்ட சுரமாந்தம், வாத பித்த கப விகர்ப்பத்தாலுண்டான சுரங்கள், கனல்சுரம் போம். (சஙரு)

சர்வ சுரங்களுக்கும்—ஆடுதின்னாப்பாளை மாத்திரை.

அறுசீராசிரிய விருத்தம்.

ஆடுதி ன்னாப்பாளைப் பட்டை யதைநிழலி லுலர்த்திக் கொண்டு
சாடிய கருவாப் பட்டை சமனதா யிடித்துத் தூளாய்
வாடிய வஸ்திர காயம் வண்மையாய்ச் செய்து மித்தைப்
பாடிய புளித்த நிம்பப் பழச்சாறு விட்டிட் டாட்டே.

ஆட்டியே பருத்திக் கொட்டை யளவதா யுண்டை செய்து
கூட்டிய வநுபா னத்தில் கொடுசர்வ காய்ச்சல் தீரும்
பூட்டிய புளிப்பு கைப்பு புகலவே சற்று மாகா
நாட்டிய விடமும் போகும் நளினம தறிந்தி டாயே.

(பொ-ரை.)—(1) நிழலிலேயே உலர்த்திய ஆடுதின்னாப்பாளை, (2) இலவங்கப்பட்டை, இவ்விரண்டையும் தனித்தனியே இடித்து வஸ்திர காயஞ் செய்து சமவெடை தூக்கி, எலுமிச்சம் பழச்சாறு விட்டு ஒரு சாமமரைத்து, பருத்திக்கொட்டை யளவாக உருண்டை செய்து நிழலில் உலர்த்தி வைத்துக்கொண்டு, பிணிகளுக்கு (தோடத்திற்கு)த் தக்க அநுபானத்தில் கொடுக்கச் சகல சுரங்களும் தீரும். இதற்குப் புளியும், கைப்பும் சிறிதுங் கூடாவாம். (சாகசு)

சகல சுரங்களும் மூன்றே முக்கால் நாழிகையில் விட
பச்சைக் கற்பூர மாத்திரை.

அறுசீராசிரிய விருத்தம்.

பச்சைக் கற்பூ ரந்தான்பூப் பட்டை சாதிக் காய்வகைக்கு
மச்சைக் கழஞ்ச திரண்டாக வாள மாறு கழஞ்சுடனே
அச்சக் குமரிச் சாறதனு லரைத்தே உழுந்துப் பிரமாணம்
அச்சத் துடனே வுலரவைத்துச் சர்க்கரை தனிலோர் குளிகையிடே.

இடநா ழிகைமூன் றேமுக்கா லில்வி ரேசனந் தானுகும்
படுமே சுரமுந் தான்தீரும் பண்பாய் வந்த குளிருக்குத்
தொடுமே குப்பை மேனியிலை சொற்கொடி வேலி மிளகரைத்து
கொடுமே விழுது சரிகூட்டிக் குளிர்வரும் போது குணமாமே.

(பொ-ரை.)—(1) பச்சைக் கர்ப்பூரம், (2) இலவங்கப்பட்டை, (3) சாதிக்காய், இவைகள் வகைக்கு இரண்டு கழஞ்சு, (4) நேர்வாளம் ஆறு கழஞ்சு, ஆகிய நான்கையும் ஒன்றுகக்கூட்டி கற்றுழைச்சாற்றுல் நான்கு சாமமரைத்து உழுந்து அளவு உருட்டி நிழலில் உலர்த்தி, வேளைக்கு ஒரு மாத்திரை சருக்கரையுடன் சேர்த்துக் கொடுக்க, மூன்றே முக்கால் நாழிகையில் வயிறு போம்; சுரமுந் தீரும்; குளிருடன் வருஞ் சுரத்திற்கு, (1) குப்பைமேனி யிலை, (2) கொடிவேலி வேர்ப் பட்டை, (3) மிளகு இவைகளைச் சமன்தூக்கி அரைத்த விழுதில் $\frac{1}{4}$ முதல் 1 கழஞ்சு வீதம் எடுத்து இத்துடன் ஒரு மாத்திரை சேர்த்து, குளிர் வருமுன் கொடுக்க, மேற்படி குளிர்சுரமுந் தீரும். (சாகஎ)

அறுபத்து நான்கு சுரங்களுக்கும்—விட்டுணுகாந்திக் குடிநீர்.

அறுசீராசிரிய விருத்தம்.

விட்டுணுவின் காந்தி சுக்கு விளம்பிய கடுக்கா யிண்டு
வட்டவா முலுவை கூட்டி வளம்பெறக் கொள்வீ ராகில்
எட்சுர மறுபா னுலு மிடரஃ தில்லை யில்லை
விட்டது போக வென்று விளம்பினுர் புவியுள் ளோர்க்கே.

(பொ-ரை.)—(1) விட்டுணுகாந்தி, (2) சுக்கு, (3) கடுக்காய்த்தோல், (4) இண்டு (ஈயக்கொடி), (5) வாலுழுவை, இவைகளை வகைக்குப் பலம் காலாக ஒன்று கூட்டிக் குடிநீர் செய்து, தக்க அளவில் காலைமாலை இரண்டு வேளைக்கும் கொடுத்துவர, அறுபத்து நான்கு சுரங்களும் நீங்கும். (சஙஅ)

வெதுப்பு - தாகம் - பழைய சுரத்துக்கு—பால சஞ்சீவி மாத்திரை.

அறுசீராசிரிய விருத்தம்.

நாவி திப்பிலி வெங்காரம் நல்ல காசெடை மூவைந்து
மேவுஞ் சாதி லிங்கமது வீசுங் காசெடை பத்தாகும்
தூவு நிம்பழத் தின்சாற்றில் சுகமா யரைத்தி டொருசாமம்
காவி யங்கயற் கண்ணுளே கடலை நிறையி லுண்டைசெய்யே.

சுக்குநீர் தன்னில் கொள்ளச் சுகமுடன் வெதுப்புத் தீரும்
தக்கசீ ரகங்கி ராம்பு தனிலிடத் தாகந் தீரும்
பக்கவா லின்விழு திற்கொள் பண்டையின் சுரங்கள் தீரும்
மைக்கணுய் குளிகை யின்பேர் பாலசஞ் சீவி யாமே.

(பொ-ரை.)—(1) நாபி, (2) திப்பிலி, (3) வெங்காரம் இவைகள் வகைக்குப் பதினைந்து காசெடை, (4) சாதிலிங்கம், காசெடை பத்து, இவைகளை கல்வத்திட்டு எலுமிச்சம்பழச் சாற்றில் ஒரு சாமமரைத்து, கடலை அளவு உருண்டை செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவும்.

காலையிலும் மாலையிலும் ஒரு மாத்திரையை சுக்குக் குடிநீரில் கொள்ள வெதுப்பும்; சீரகம், கிராம்பு, இவைகளின் சூரணத்துடன் கொள்ளத் தாகமும்; பக்க ஆலம் விழுதுடன் கொள்ளப் பழைய சுரமும் தீரும். (சஙக)

பித்தசுரம் - தாபசுரம் - பழஞ்சுரம் இவைகட்கு மேற்பூச
கோட்ட எண்ணெய்.

பதினன்கு சீராசிரிய விருத்தம்.

சுரமது தணியப் பசுவின்நெய் நாழிச்
சொல்லிடும் பாலிரு நாழி
தோன்றுமோ ராறு நாழிநல் லெண்ணெய்
தொகையது சேர்த்ததில் கற்கம்
வரும்பெருங் குரும்பை மதுரநன் னாரி
வளர்கரு வேலிலை ரோணி
வாருசெவ் வள்ளிக் கொடியமுக் கராவேர்
வருமர மஞ்சள்சந் தனமும்
திருவுள சுக்கு காசுட னரக்கு
திமிர்ந்திடுங் கோட்டமிவ் வகைக்குத்
திகழொரு கழஞ்சரைத் தெரித்திதைச் சேய்கள்
சிரத்தினு முடம்பினும் பூசப்
பரவிய பித்த சுரம்பரி தாபப்
பல்வல சுரம்பழ வெதுப்பும்
பானுமுன் பனிபோற் பறந்திடு மிதன்பேர்
பாருநற் கோட்டெண்ணெய் பகரே.

(பொ-ரை.)—(1) பசுவின் நெய் படி ஒன்று, (2) பசுவின் பால் படி இரண்டு, (3) நல்லெண்ணெய் படி ஆறு இவைகளை ஒரு மட் கடத்தில் சேர்த்துக் கலந்ததில், (1) பெருங்குரும்பை, (2) அதிமதுரம், (3) நன்னாரி, (4) கருவேலனிலை, (5) கடகரோகணி, (6) செவ்வள்ளிக் கொடி, (7) அமுக்கரா வேர், (8) மரமஞ்சள், (9) சந்தனம், (10) சுக்கு, (11) கோரைக் கிழங்கு, (12) கொம்பரக்கு, (13) சாதி கோட்டம், ஆகிய இப்பதின் மூன்றும் வகைக்கு ஒரு கழஞ்சு, பசுவின் பால் விட்டரைத்துக் கலந்து எரித்துப் பக்குவபாகத்தில் வடித்து, பிள்ளைகளின் தலையிலும், உடம்பிலும் பூசி வர, பித்த சுரம், பலமான பல வலியசுரங்கள், பழஞ்சுரம் ஆகிய இவைகள் விலகும். (சச0)

### (4) மீளாத ஐயசுரக் குறிகுணம்.

அறுசீராசிரிய விருத்தம்.

ஐய சுரத்தின் குணங்கேளா யகடு பொருமிக் கண்வெளுக்கும்
கையுங் காலுஞ் சோர்ந்துவிழும் கண்க ளுள்ளே தான்வீழும்
தொய்யல் சுரமும் விடாததுவும் சொல்லுந் தோட மாறுற்போல்
மெய்யு நாக்கு மேவரண்டு விக்க லெடுக்கு மீளாதே.

(பொ-ரை.)—வயிறு பொருமுதல், கண்கள் வெளுத்தல், கையுங்காலுஞ் சோர்தல், கண்கள் குழிதல், விடாச்சுரங் காய்தல், இவைகளால் தோடமாறுற் போல உடலும் நாக்கும் வரளுதல், விக்கலுண்டாதல் ஆகிய இக்குறிகுணங்கள் காணில், இச்சுரம் ஐயச்சுர மென்றும், இதனினின்றும் பிழைப்பது அரிதெனவுங் கண்டுகொள்க.

மேலுமிவ் வையசுரம் கீழ்க்கண்ட குறிகுணங்களோடும் உண்டாகு மென்பர்.

மெய்யில் வந்த வையசுரம் விட்டு விட்டே தான்வெதும்பிக்
கையுங் காலு மேவெதும்பிக் கன்னங் காயு நெஞ்சிடிக்கும்
உய்யு முழலை வாந்தியுண்டா மோடி யோடிக் கட்டுமஃ
தையம் பிழைப்ப தரிதுகண்டா யதிக மாகுஞ் சுரந்தானே.

(பொ-ரை.)—கபதோடத்தா லுண்டாகுஞ் சுரத்தில் விட்டுவிட்டுக் காய்வதுடன், கை கால் கன்னம் இவ்விடங்களில் வெதும்பிக் காய்தல், மார்பு நோதல், உடல்வலித்தல், வாந்திகாணல், உடலில் இங்குமங்கும் கனத்துக் கட்டிபோற் காணல் மறைதல், சுரத்தின் வேகம் அளவு கடந்து காணல் ஆகிய குறிகுணங்கள் காணும். இச்சுரத்தினின்றும் தப்பிப் பிழைப்பது அரிது. (சசக)

### (5) மாந்தசுரக் குறிகுணம்.

வெண்பா.

மந்தத்தால் வெப்பணுகில் மாருது காய்வதன்றி
வந்தணுகுந் தாது குறைவடையும்—பந்தம்
விலகித் தனைமறந்து வீழ்க்குங் குறியை
கலைமதிநேர் நன்னுதலாய் காண்.

(பொ-ரை.)—மந்தத்தாலுண்டாகும் சுரத்தில், விடாவெதுப்பும், உடற்கட்டின் பலக்குறைவும், உணர்ச்சியற்றுக் கிடத்தலுமாகிய குறிகுணங்கள் தோன்றும். (சசஉ)

மாந்த சுரத்திற்கு—ஈருள்ளிக் கியாழம்.

அறுசீராசிரிய விருத்தம்.

போமேயீ ருள்ளி பத்து பொடியா யரிந்து வில்வமொடு
ஆமே அவுரி பூமிவிளா அரிந்து சிவக்க வறுத்ததனை
வேமே காய்ச்சிச் சிறுவோர்க்கு விதமாய் மூன்று நாள்கொடுக்கத்
தாமே யணுகு மாந்தசுரந் தணியுங் கணமுந் தரியாதே.

(பொ-ரை.)—வெண்காயம் பத்து, வில்வம் ஒரு பிடி, அவுரி ஒரு பிடி, நிலவிளா ஒரு பிடி இவைகளைக் குறுக அரிந்து சிவக்க வறுத்துத் தண்ணீர் விட்டுக்காய்ச்சி, வேளைக்கு இரண்டு சங்காக மூன்றுநாள் கொடுக்க, மாந்த சுரம் நீங்கும். கணரோகம் வராது. (சசங)

மாந்த சுரத்திற்கு—நெல்லிக் கியாழம்.

எண்சீராசிரிய விருத்தம்.

நெல்லியுடன் வேம்புபுளி கரந்தை தானும்
நேயமிரு முட்டிநிரை நிரையொன் றுகச்
சொல்லுமோ ரிதழின்தா மரையுங் கூட்டிச்
சுகமாக வேநறுக்கித் தோகாய் நீகேள்
உள்ளபடி சீரகம்கி ராம்பு திப்பிலி
ஒன்றுகக் கூட்டியே யுழக்காய்க் காய்ச்சி
மெல்லவே சிறுவோர்க்குக் கொடுக்க வேதான்
வெதும்பாது மாந்தசுரம் விட்டுப் போமே.

(பொ-ரை.)—(1) நெல்லியீர்க்கு, (2) வேப்பீர்க்கு, (3) புளியீர்க்கு, (4) விஷ்ணுகரந்தைசமூலம், (5) சிற்றுமுட்டி வேர், (6) பேராமுட்டிவேர், (7) ஓரிதழ்த்தாமரை, (8) சீரகம், (9) கிராம்பு, (10) திப்பிலி, இவற்றை வகைக் குக் காசெடை எடுத்து நருக்கிப் போட்டு ஒரு படி நீர்விட்டு இரண்டு ஆழாக்காக க்காய்ச்சி, நாள் ஒன்றுக்கு இருவேளை கொடுக்க மாந்தசுரம் நீங்கும். (சசச)

மாந்த சுரத்திற்கு—சீந்திற் கியாழம்.

அறுசீராசிரிய விருத்தம்.

சீந்திற் றண்டுங் களிப்பாக்கும் சிவதை வேருங் கடுக்காயும்
காய்ந்த சுக்கு ரோகணியுங் காயுந் நீரில் தகர்த்திட்டு
ஏந்துங் கையா யிந்நீரை யெட்டொன் றுக்கிக் கொடுப்பாயேல்
மாந்த மான சுரமும்போம் வயிறுங் கழியுங் கண்டீரே.

(பொ-ரை.)—(1) சீந்தில்தண்டு, (2) களிப்பாக்கு, (3) (பத்துமுறை பசு வின்பாலில் சுத்திசெய்த) வெண் சிவதைவேர், (4) கடுக்காய், (5) சுக்கு, (6) கடகரோகணி வகைக்கு காசெடை ஒன்று எடுத்துத் தகர்த்து, உழக்கு நீரிலிட்டு அரை ஆழாக்குக் கியாழமாகக் குறுக்கி வடிகட்டி, காலைமாலை பாலடைவீதம் கொடுக்க, வயிறு கழியும், மாந்தசுரம் போம். (சசரு)

மாந்த சுரத்திற்கு—கடுக்காய் எண்ணெய்.

எண்சீராசிரிய விருத்தம்.

கடுக்காய்தான் பதினாறு விதைகள் போக்கிக்
கத்தூரி மஞ்சள்கரு டக்கி ழங்கு
முடுக்காக மூன்றுமவை சரியாய்க் கொண்டு
முறையுடனே பொடிசெய்து தைலந் தானும்

அடுக்காக நாழியதிற் பொடியைப் போட்டங்
கனலிமுகம் வைத்துள்ளுக் குக்கொ டுத்துச்
சடுக்கெனவுச் சியினிலிடப் பொருமலோடு
தணியாத மாந்தசுரந் தணியு மன்றே.

(பொ-ரை.)—(1) விதைநீக்கிய கடுக்காய் 16-ன் தோல் எடையே, (2) கத்தூரி மஞ்சள், (3) கருடன் கிழங்குஞ் சேர்த்து, ஒரு படி நல்லெண்ணெயி லிட்டு, மேலுக்குத் துணிகட்டி வெயிலில் வைத்துப் பக்குவப்படுத்தி, காலை மாலை சிறுகரண்டியளவு உள்ளுக்குக் கொடுத்து உச்சியிலுந் தடவி வந் தால், மாந்தசுரம் போம். (சசசு)

மாந்தகண சுரத்திற்கு—நுணாயீர்க்குக் கியாழம்.

பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

புளிநுணா நெல்லிஒதி வேம்போடு தகரையும்
பொடுதலைஅம் மானரிசியும்
புகழெட்டி னீர்க்குகூ விளையிலையும் அவ்வோடு
பொங்குசிறு புள்ளடியிலை
நளிர்கோழி யவரையிலை நிலவிளா தன்னிலை
நரிப்பயற் றங்கொடியுடன்
நற்பழம் பாசியிலை விட்ணுக் கரந்தைநன்
னாரிகோ ரைக்கிழங்கும்
தளிர்செருப் படைமணித் தக்காளி வல்லாரை
தான்சீந்தில் பேய்ப் புடலெல்லாம்
தனிவகைக் கொருபிடிக் கொடுவந் தரிந்துமே
தக்கபொன் னிறம்வறுத்துக்
களிகளொரு படிசலம் விட்டுக்கால் படியாகக்
காய்ந்தகி யாழமதிலே
கமழ்கின்ற கோட்டம் விளாம்பிசின் வில்வத்தின்
கனபிசினி லவம்பிசினுமே.

அறுசீராசிரிய விருத்தம்.

பிசினு மாசிச் சாதிக்காய் பெருகும் வெந்தய மிவைவகைக்கு
விசித வராக னெடையாக வெதுப்பிப் பொன்னிற மாய்வறுத்துப்
புசியப் பொடியாய்ச் செய்தந்தப் பொடியைக் கியாழத் திற்றூவி
உசித வாறு வேளைதுய்க்க ஒடு மாந்த கணசுரமே.

(பொ-ரை.)—(1) புளி, (2) நுணா, (3) நெல்லி, (4) ஒதி, (5) வேம்பு, (6) கையாந்தகரை, (7) பொடுதலை, (8) அம்மான்பச்சரிசி, இவைகளின் ஈர்க்கு, (9) வில்வ இலை, (10) வில்வ ஒடு, (11) சிறுபுள்ளடி, (12) கோழிய வரை, (13) நிலவிளா இவைகளினிலை, (14) நரிப்பயற்றங்கொடி, (15) பழம் பாசி, (16) விஷ்ணுகரந்தை, (17) நன்னாரிவேர், (18) கோரைக்கிழங்கு, (19) செருப்படை, (20) மணித்தக்காளி, (21) வல்லாரை, (22) சீந்தில் கொடி, (23) பேய்ப்புடல் இவைகளை வகைக்கு ஒரு பிடி எடுத்துக் குறுக அரிந்து சிவக்க வறுத்து, ஒரு படி நீர் விட்டுக் கால் படியாகக் காய்ச்சி அதில், கோட்டம், விளாம்பிசின், வில்வப்பிசின், இலவம்பிசின், மாசிக்காய், சாதிக் காய், வெந்தயம் வகைக்கு ஒரு வராகனெடை எடுத்து இளவறுப்பாய் வறுத்திடித்துப் பொடித்துக் குடிநீரில் தூவி, ஆறுவேளை அருந்த மாந்த கண சுரம் நீங்கும்.

உட்காய்ச்சலின் கீழ்க்கண்ட 'இளநீர் எண்ணெயும்' கொடுக்கலாம். (சசஎ)

## (6) அதிசாரச்சுரக் குறிகுணம்.

வெண்பா.

அதிசாரக் காய்ச்ச லழற்றல் வயிற்றில்
பதிந்திரைந்து பேதி பலவாய்—நிதந்தவரு
தாதலின்கால் கையுதற லன்னமுணா வாய்குமட்டல்
போதக் குழகுழத்தல் போற்று.

(பொ-ரை.)—அதிசாரச் சுரத்தில் மிகக்காய்தல், வயிறிரைந்திரைந்து பல நிறமாகப் பேதியாதல், கால்கைகள் உதறல், ஆகாரத்தில் விருப்பமின்றி வாய்குமட்டல், வாய் குழகுழத்தல், ஆகிய குணங்களுண்டாம். (சசஅ)

அஞ்சனவேராதிச் சூரணம்.

எண்சீராசிரிய விருத்தம்.

அஞ்சனவேர் நெற்பொரியும் மாஞ்சி லோடே
அதிமதுரஞ் சர்க்கரைதே னளாவி யுண்ணக்
கொஞ்சனவே கொஞ்சுபிள்ளைக் காய்ச்சல் தீரும்
குயில்மொழியா யின்னமொன்று கூறக் கேளாய்
தஞ்சமென்ற வதிவிடயந் தேனிற் கொள்ளத்
தாகமுட னதிசாரஞ் சுவாசம் போகும்
மஞ்சணவுங் குழல்மடவாய் பிள்ளைக் கென்று
வைத்தியநூல் சிவனுரைத்த வாறு தானே.

(பொ-ரை.)—(1) அவுரிவேர், (2) நெற்பொரி, (3) சடாமாஞ்சில், (4) அதிமதுரம், இவைகளின் சூரணம் சமன் (5) சருக்கரை, சூரணத்திற்குச் சமவெடை கூட்டி(6) தேன் தக்கபடி விட்டுக்கலந்து கொடுக்கக் காய்ச்சல் தீரும். சுரத்துடன் தாகம், அதிசாரம், சுவாசம் ஏற்பட்டால் மேற்படி சரக்குகளுடன் அதிவிடயச் சூரணம் சேர்த்துக்கொடுக்க அவைகளும் நீங்கும். (சசகூ)

## (7) ஆமசுரக் குறிகுணம்.

அறுசீராசிரிய விருத்தம்.

ஆம சுரத்தின் குணங்கேளா யதிக மாக வெதும்பாது
சாமந் தோறும் வெதும்புவிக்குந் தண்ணீர் ருழலை யுண்டாக்கும்
சேம மாக வுடம்பிளைக்கும் சீறி யழுதும் பசியில்லை
நாமங் காரி யுடலோயும் நடுங்கி யிருக்குங் கண்டாயே.

ஆம சுரத்தின் மிகுகுணங்கே ளடைவாய்க் கைகால் குளிர்ந்துவிடும்
சாமந் தோறு மெழுந்தலறும் தாயின் முலைப்பா லருந்தாது
தூம வாயி லெடுத்துவிடுஞ் சோரா திருமும் வாயரற்றும்
காம னம்பின் கயற்கண்ணாய் கண்தலை மிகநோய் கண்டாயே.

(பொ-ரை.)—ஆமசுரத்தில் சுரவேகம் அதிகமாக காணாதிருத்தல், ஆனால், சாமத்திற்கொருமுறை வெதுப்பு அதிகமாகக் காணுதல், நீர்விடாய் கொள்ளுதல், உடல் இளைக்குதல், சீறிச்சீறியழல், பசியில்லாமற்போதல், உடல் கறுக்குதல், சோர்வடைதல், நடுங்குதல் ஆகிய குணங்கள் உண்டாகும், மேலும் இச்சுரம் வன்மை பெற்றால், கைகால் குளிர்ச்சியடையும், சாமத்துக்கொருமுறை படுக்கையினின்று எழுந்து அலரச் செய்யும். தாய்ப்பாலை உண்ணவொட்டாது, வெப்பத்தால் வாயினின்றும் ஆவியெழும், அடிக்கடி இருமல் காணும், வாய்பிதற்றும், கண்ணிலும் தலையிலும் நோயுண்டாகும். (சடுo)

ஆமசுரத்துக்கு—உத்தாமணிக் குடிநீர்.

அறுசீராசிரிய விருத்தம்.

உத்தா மணியும் பாவட்டை யுகந்த சங்கு தூதுவளை
மெத்தக் கொடுப்பை பொடுதலையும் வேண்டு ஓமந் திப்பிலியும்
ஒத்த மிளகு வசம்புள்ளி யொடித்த வாமை யோட்டுடனே
குற்ற மறவே முடிந்தட்டுக் கொடுப்பீ ராம சுரம்போமே.

(பொ-ரை.)—(1) உத்தாமணி, (2) பாவட்டை, (3) சங்கு, (4) தூதுவளை, (5) பொன்னுங்காணி, (6) பொடுதலை, (7) ஓமம், (8) திப்பிலி, (9) மிளகு, (10) சுட்டவசம்பு, (11) பூண்டு, (12) சுட்ட ஆமைஓடு, வகைக்கு ஒரு கழஞ்சு கொண்டு சீலையில் முடிந்து விதிப்படி குடிநீர் செய்து, தக்க அளவு கொடுக்க, ஆமசுரம் நீங்கும். (சருக)

உத்தாமணிக் குடிநீர் (வேறு).

அறுசீராசிரிய விருத்தம்.

உத்தா மணியும் பாவட்டை யுகந்த சங்கு காவட்டை
சித்த முருங்கை நுணயீர்க்குஞ் சேரக் கூட்டுப் பொடுதலையும்
ஒத்த வோமந் திப்பிலியு முற்ற வசம்பு துளியோடும்
சுத்த மாகக் கருஞ்சீரம் சுகமாய் முடிந்தே யட்டிடுமே.

(பொ-ரை.)—(1) உத்தாமணி, (2) பாவட்டை, (3) சங்கு, (4) மாந்தப்புல், (5) முருங்கையீர்க்கு, (6) நுணயீர்க்கு, (7) பொடுதலை, (8) ஓமம், (9) திப்பிலி, (10) சுட்டவசம்பு, (11) சுட்ட ஆமை ஓடு, (12) கருஞ்சீரகம் வகைக்குக் கழஞ்சு ஒன்றாகச் சேர்த்துச் சீலையில் முடிந்து, விதிப்படிக் குடிநீர் செய்து தக்க அளவில் கொடுக்க, ஆமசுரம் போம். (சருஉ)

பாவட்டைக் குடிநீர்.

வெண்பா.

கூறுகின்ற பாவட்டை கொன்றைசிற்று முட்டியின்வேர்
வீறுடன்வே லிப்பருத்தி வேருடனே—நாறுகின்ற
நன்மிளகு கூட்டி நலமாய்க் கியாழமிடச்
சென்மமிலை யாமசுரஞ் செப்பு.

(பொ-ரை.)—(1) பாவட்டையிலை, (2) சரக்கொன்றைவேர்ப்பட்டை, (3) சிற்றுமுட்டியின்வேர், (4) உத்தாமணியின்வேர், (5) மிளகு, இவ்வைந்தும் வகைக்கு ஒரு கழஞ்சு எடுத்து விதிப்படி, குடிநீர் செய்து, தக்க அளவாய்க் கொடுத்துவர, ஆமசுரம் நிற்க இடமிராது. (சருங)

வேம்பாதிக் குடிநீர்.
எண்சீராசிரிய விருத்தம்.

வேப்பிலுப்பை மாவிலிங்கு பாவட்டைச் சிக்கு
விருப்பமுட னிலையீர்க்குக் பிடிகள் சேர்த்துக்
கோப்பிலொதி நுணவேலி வேளை வேரும்
கொடியசா ரணைவேரும் பெரும்பாச் சொற்றி
காப்பிலே வறுத்திரு நாழி நீரிற்
கற்கந்திப் பிலிமிளகு மாமை யோடு
வாய்ப்பசுக்கு வசம்போம முடிந்தட் டக்கால்
வகையாக வாமசுர மாறல் போமே.

(பொ-ரை.)—(1) வேம்பு, (2) இலுப்பை, (3) மாவிலிங்கு, (4) பாவட்டை, (5) முருங்கை, இவைகளின் ஈர்க்கு வகைக்கு ஒரு பலம், (6) ஒதியம்பட்டை, (7) நுணாயீர்க்கு, (8) உத்தாமணிவேர், (9) வேளைவேர், (10) சத்திச்சாரணை வேர், (11) பெரும்பாச்சொற்றி ஆகிய இவைகள் வகைக்குக் கழஞ்சு ஒன்று எடுத்து, ஒன்றிரண்டாக இடித்து, மட்சட்டியிலிட்டு இளவறுப்பாய் வறுத்து, இரண்டுபடி நீர் விட்டு அதில் (12) திப்பிலி, (13) மிளகு, (14) சுட்ட ஆமை ஓடு, (15) சுக்கு, (16) சுட்டவசம்பு, (17) ஓமம் வகைக்குக் கழஞ்சு ஒன்று சீலையில் முடிந்துப்போட்டு, விதிப்படி குடிநீர் செய்து, தக்க அளவில் கொடுத்துவர, ஆமசுரம் நீங்கும். (சருச)

## உத்தாமணி நெய்.

### அறுசீராசிரிய விருத்தம்.

ஆவின் வெண்ணெய் விளாங்காய்போ லதனி லுத்தா மணிக்கொ [முந்து
தூவிப் பத்து வசம்புள்ளி துணிந்திட் டோமம் சுரையோடு
தாவு மாமை யோடிடித்துத் தானே வறுத்திட் டிருகழஞ்சு
மேவீ ரொன்று யருந்திடவே மிக்க வாம சுரம்போமே.

(பொ-ரை.)—(1) ஒரு விளாங்காய் அளவு பசுவின் வெண்ணெயில், (2) பத்து உத்தாமணிக் கொழுந்தும், (3) சுட்டவசம்பு, (4) உள்ளி, (5) ஓமம், (6) சுரையோடு, (7) ஆமையோடு சுட்டது வகைக்கு இருகழஞ்சும் வறுத்துப் பொடித்துக்கூட்டி எரித்துப் பக்குவத்தில் வடித்து, தக்க அளவுப்படி கொடுத்துவர, ஆமசுரம் போம். (சருரு)

## ஆமசுரம், குளிர்சுரங் கடுப்புக்கு—உள்ளி வுருண்டை.

### அறுசீராசிரிய விருத்தம்.

உள்ளியைத் தைலம் வாங்கி யொக்கவே தராவின் வேரும்
தள்ளிய பொன்னுங் காணி சாரணை வேருங் கூட்டி
ஒள்ளிய மாய ரைத்தங் குண்டையோர் கழஞ்சு தாக்கிக்
கொள்ளவே யாம மற்ற குளிர்சுரங் கடுப்பும் போமே.

(பொ-ரை.)—(1) தராவின்வேர், (2) பொன்னுங்காணிவேர், (3) சத்திச் சாரணைவேர் இவைகளை சரியெடை கூட்டி போதுமான அளவு உள்ளித் தைலம்விட்டு அரைத்து, கழஞ்சுவீதம் உருண்டை செய்து கொடுத்துவர, ஆமசுரம், குளிர்ச்சுரம், கடுப்பு நீங்கும். (சருசு)

## ஆம, போராம, அத்திசுரங்களுக்கு—வேளையாதி எண்ணெய்.

### வெண்பா.

நறுவேளை நாய்வேளை நற்செம் பருத்தி
சிறுமணித்தக் காள்செவ் வவரை—சிறிய
தகரை பழம்பாசி சமுத்திரா சோகி
பகரம்மான் பச்சரிசி பார்.

பாரில் விளாவடிம்பு பட்டை யிலைவேலி
சேரும் பருத்தியிண்டு செம்முள்ளி—காரி
துளபந் தராயினிலை சொல்லும் பருத்தி
பளையாய்பா வட்டை பரி.

பரிவாம் பொடுதலையும் பச்சைக் கழற்சி
நரிப்பயறு புள்ளடியும் நாடி—அரிதான
கோழி யவரை சுரைக்கொன்றை யின்பட்டை
வாழ்முருங்கை யும்மகத்தி வை.

கற்ருழஞ் சோறும் கணப்பூண்டு மீருள்ளி
சிற்ருகும் பீர்க்கு சிறுசின்னி—பற்ருன
கோடகத் தின்சாலை கொண்டுதனிச் சாறுசமன்
சாடிதனில் வார்பதக்கு தான்.

ஆமணக் கெண்ணெ யளந்தே குறுணிவிட்டு
தாமணக்கும் வெயிலிலே தான்வைத்தல்—ஓமமுடன்
சாதிக்காய் சாதிபத்ரி தண்வசம்பு கொத்துமல்லி
கோதில்லா வெள்ளுள்ளி கூட்டு.

பஞ்ச திரவியமும் பண்பான திப்பிலியும்
எஞ்சா வராக னிரண்டாகும்—அஞ்சா
தரைத்துக் கரைத்துமெழு கானபதம் பார்த்தே
குறைத்தபடி யிறுத்துட் கொள்.

உள்ளேதான் கொள்வ தொருகரண்டி யெண்ணெயாம்
விள்ளாத வாமம் விழுவிக்கும்—மெள்ளமெள்ளப்
போராமம் அத்திசுரம் போக்கு மிதற்குநல்ல
சீரான பத்தியமே செய்.

(பொ-ரை.)—(1) நல்வேளை, (2) நாய்வேளை, (3) செம்பருத்தி, (4) மணத்தக்காளி, (5) சிவப்பு அவரை, (6) சிறுதகரை, (7) பழம்பாசி, (8) சமுத்திர சோகி, (9) அம்மான்பச்சரிசி, (10) நிலவிளா, (11) சிவதைவேர், (12) சிவதையிலை, (13) வேலிப்பருத்தி, (14) இண்டு, (15) செம்முள்ளி, (16) கண்டங்கத்தரி, (17) துளசி, (18) தராயிலை, (19) பருத்தி வித்து, (20) பாவட்டை, (21) பொடுதலை, (22) கழற்சியிலை, (23) நரிப் பயறு, (24) சிறுபுள்ளடி, (25) கோழியவரை, (26) சுரை, (27) கொன்றைப் பட்டை, (28) முருங்கைப்பட்டை, (29) அகத்தி, (30) கற்ருழைச்சோறு, (31) கணப்பூண்டு, (32) வெங்காயம், (33) பேய்ப்பீர்க்கு, (34) சிறுசின்னி, (35) கோடகசாலை இவைகளின்சாறு வகைக்குப் பலம் $4\frac{1}{2}$ ஆகச் சேர்க்க ஏற்படும் மொத்த எடை $157\frac{1}{2}$ அல்லது சுமார் பலம் 160 (4 படி) இந்த அளவிற்குச் சரிபாதி அதாவது 2 படி ஆமணக்கெண்ணெய் கூட்டி வெயிலில் வைத்து, இதில் (1) ஓமம், (2) சாதிக்காய், (3) சாதிபத்திரி, (4) வசம்பு, (5) கொத்துமல்லி, (6) வெள்ளுள்ளி, (7) மிளகு, (8) கோட்டம், (9) அகில், (10) தக்கோலம், (11) குங்குமப்பூ, (12) திப்பிலி ஆகிய இவைகளின் பொடி வகைக்கு வராகனெடை இரண்டு பாலில் அரைத்துக் கூட்டி எரித்து, சாறுகள் சுண்டி கற்கங்கள் மெழுகுபதமடைந்தபின் வடித்து எடுத்து, உச்சிக் கரண்டி வீதம் கொடுத்துவர ஆமசுரம், போராமசுரம், அத்திசுரம் போம். நோய்க்குத் தக்கபடி பத்தியம் காக்கும்படிச் செய்விக்கவேண்டும். (சடுஎ)

## (8) தீராத ஆமசுரக் குறிகுணம்.

அறுசீராசிரிய விருத்தம்.

பிறகு மதலை தலைநடுக்கும் பேசுந் தொண்டை சேத்மந்தான்
அறுதி யாகத் தொட்டுநிற்கும் அரிதாய்க் கண்ணும் விரிந்திருக்கும்
கரிய விழிகள் வெளுத்துவிடும் காயுங் குளிர்ந்து கண்ணுறங்கும்
பரிவா யாம சுரத்திலிவை பார்க்கத் தீரா தென்றுரையே.

(பொ-ரை.)—தீராத ஆமசுரத்தில், பிள்ளையின்தலை நடுங்கும், கபந் தொடர்ந்து தொண்டையில் கபஞ்சேரும், கண்கள்விரியும், கருவிழியும் வெளிறும், குளிரும் காய்ச்சலுங் காணும், உறக்கங்கொள்ளும்.

குறிப்பு.—ஆயினும் தக்க பரிகாரஞ் செய்வதை விடலாகா. (சடுஅ)

பழஞ்சுரம், விடாக்காய்ச்சல், சந்நி 13, ஆமசுரம், சுனைச்சுரம், விடதோடம் முதலியவைகட்கு—ஏலாதி மாத்திரை.

எண்சீராசிரிய விருத்தம்.

நல்குவீர் நல்லேலம் கிராம்பு முத்தம்
நல்மதுர மிருவேலி கடுகு சுக்கோ
டல்குவீர் மதுரரோ சனநன் னாரி
அரியநிலப் பனையின்வேர் தாளீ சந்தான்
வல்குவீர் சடாமாஞ்சில் சந்த னத்தூள்
வகையிலுப்பைப் பூவுடனே தேவ தாரம்
மல்குவீர் திப்பிலிரோ கணிவ கைக்கு
வரிசையாய்க் கால்கழஞ்சு நிறுத்துக் கொள்ளே.

நிறுத்துமே கல்வத்திற் போட்ட பின்பு
நிலையான செவ்விளநீர் தன்னை வார்த்து
வறுத்துமே யிருசாமம் விடாம லாட்டி
வழிமைபோ லாகுமிந்த வரிசை பாராய்
குறித்துமே மூலைப்பாலாற் சாமம் ரண்டு
கூசாமல ரைத்துமே வழித்தெ டுத்துப்
பருத்தகுன்றி யளவாக வுண்டை செய்து
பட்சமொன்று நிழலுலர்த்திப் பதனம் பண்ணே.

பதனமாய் முலைப்பாலி லுண்டை யீயப்
பறக்குமே பழஞ்சுரம் விடாத காய்ச்சல்
விதனமா யம்மையார் கூந்தல் கொண்டு
விருப்பமாய்க் கியாழமிட் டதனி லீய
மதனமந்தப் பதின்மூன்று சந்நி யோடு
மகத்தான விடதோடங் கதிகெட் டோடும்
அதனமா யாமசுரம் சுனைச்சு ரங்கள்
அச்சமுற் றகலுமே லாதி யென்றே.

(பொ-ரை.)—(1) ஏலம், (2) கிராம்பு, (3) கோரைக்கிழங்கு, (4) அதிமதுரம், (5) வெட்டிவேர், (6) கடுகு, (7) சுக்கு, (8) கொடிமுந்திரிப்பழம், (9) கோரோசனம், (10) நன்னாரிவேர், (11) நிலப்பனங்கிழங்கு, (12) தாளீசபத்திரி, (13) சடாமாஞ்சில், (14) சந்தனத்தூள், (15) இலுப்பைப்பூ, (16) தேவதாரம், (17) திப்பிலி, (18) கடுகரோகணி ஆகிய இவைகளின் சூரணம் வகைக்குக் கழஞ்சு கால் கல்வத்திலிட்டு, செவ்விளநீர் விட்டு இரண்டு

சாமமரைத்து, பிறகு முலைப்பால்விட்டு மேலும் இரண்டு சாமமரைத்துக் குன்றியளவாக மாத்திரையுருட்டி நிழலில் பதினைந்துநாள் மட்டும் உலர்த்திப் பதனஞ் செய்யவும்.

இம்மாத்திரையில் ஒன்றெடுத்து காலையிலும், மற்றொன்று மாலையிலும் (1) முலைப்பாலிலிழைத்துக் கொடுக்கப் பழஞ்சுரம், விடாக்காய்ச்சலும், (2) அம்மையார்க்கூந்தல் குடிநீரில் கொடுக்க, பதின்மூன்று சந்நி பாதங்களும் விடதோடம், ஆமசுரம், சுனைச்சுரம் போம். (சருக)

## (9) சீதசுரக் குறிகுணம்.

வெண்பா.

சீதசுர தாகமது சில்லென்னல் காய்தல்கண்
போத மிகச்செருகல் புண்தாகம்—கோதின்
கடிவிடம் போலுடலம் காண்ட லயர்தல்
கடிமலர்க் கூந்தலாய் காண்.

(பொ-ரை.)—சீதசுரத்திற்குக் கபமே காரணமாயிருத்தலால், சுரம் காய்தல், அடிக்கடி உடம்பெங்கும் சில்லென ஈரப்படுதல், கண்சொருகல், அதிக தாகம் இராமை, விடக்கடிபோல உடம்பு அசதி கொள்ளல் ஆகிய இக்குறிகுணங்கள் சீதசுரத்திற் காணும். (சசூ0)

சீதசுரத்துக்கு—வழுதலைச் சூரணம்.

அறுசீராசிரிய விருத்தம்.

வழுதலை சீந்திற் றண்டு தாமரை வளையத் தோடு
முழுதுள சுக்கு முத்தக் காசுட ஞென்ற தாகப்
பொழுதுடன் கூட்டி மேலே பொடிதூவிக் கொள்வீ ராகில்
எழுபது லட்ச சீத சுரமது மில்லை தானே.

(பொ-ரை.)—(1) கண்டங்கத்தரிவேர், (2) சீந்திற்றண்டு, (3) தாமரை வளையம், (4) சுக்கு, (5) கோரைக்கிழங்கு இவைகளைச் சரியெடை எடுத்துப் பொடித்துச் சீலையில் வடிகட்டிக்கொண்ட சூரணத்தில் காலை, மாலை கால் முதல் அரை வராகனெடை கொடுக்க, சீதசுரமும் அதன் பிரிவு சுரங்களும் நீங்கும். (சசூக)

சுரம், இருமல், சீதசுரத்துக்கு—சித்திரமூலக் குடிநீர்.

அறுசீராசிரிய விருத்தம்.

நாட்டு மூலந் தூதுவளை நல்ல கண்டங் கத்தரிவேர்
கோட்டஞ் சிங்கி முசுக்கைமுள்ளி கொடிய வரத்தை திரிகடுகு
எட்டின் படியே குடிநீர்வைத் திதமா யாறு போதருந்த
ஓட்ட மோடுஞ் சுரமிரும லொடுங்கிச் சீத சுரம்போமே.

(பொ-ரை.)—(1) சித்திரமூலவேர்ப்பட்டை, (2) தூதுவளைவேர், (3) கண்டங்கத்தரிவேர், (4) சாதிகோட்டம், (5) கடுக்காய்ப்பூ, (6) முசுமுசுக்கையிலை, (7) முள்ளிவேர், (8) சிற்றரத்தை, (9) திரிகடுகு இவைகளை வகைக்குக் கால் பலமெடுத்து ஒன்றிரண்டாக நசுக்கி உழக்குத் தண்ணீரில் சேர்த்து, அரை ஆழாக்குக் கியாழமாகச் சுண்டவைத்து வடிக்கட்டி, காலைமாலை இருவேளையாக, ஆறுபொழுது கொடுக்க, சீதசுரம், சுரத்துடன் தொடரும் இருமல் நீங்கும்.

இச்சுரத்துக்கு தூதுவளைக் குடிநீரும் உபயோகிக்கப்படும்: விடசுரத்தின் கீழ்காண்க. (சசூஉ)

## (10) குளிர்சுரக் குறிகுணம்.

வெண்பா.

குளிர்ச்சுரமே முன்குளிர் கூடினபின் காய்ச்சல்
நளிரா வுடல்வளைதல் நாவும்—கவியின்றி
நீர்வரண்டு வேட்கையுறல் நெருமுடல் மேற்றோலில்
சார்ந்தநமை யுண்டென்று சாற்று.

(பொ-ரை.)—முன் குளிருண்டாய், பின் சுரங்காய்தல், உடல்வளைதல், நாவறண்டு நீர்வேட்கை கொள்ளல், உடல்நேருதல், நமையுண்டாதல் ஆகிய குறிகுணங்களைக் குளிர் சுரம் பெறும்.

குளிர்சுரத்துக்குப் பரிகாரம்.

(1) உள்ளிவுருண்டை, (2) கர்ப்பூராதி மாத்திரை, (3) பச்சைக்கர்ப்பூர மாத்திரை. இதை ஆமசுரத்தின்கீழும், மாங்கிச சுரத்தின்கீழும், வாத பித்த கபசுரத்தின்கீழும், காண்க. (சகூந)

## (11) விடசுரக் குறிகுணம்.

வெண்பா.

விடசுரமோ கால்கையில் மேவுமே யாட்டம்
கடினபுற வீச்சுவிக்கல் கட்டி—யடுத்துக்
கொடுமையா யாதலதில் கூடுதலாங் குத்தல்
கடுமையாந் திராது காண்.

(பொ-ரை.)—விடசுரத்தில் சுரங்காய்தலுடன், கால் கைகள் அசைதல், புறவீச்சு, விக்கல், கட்டிகண்டு அதில் குத்தலுண்டாதல் (சிலசமயங்களில் வீக்கமுங் காணல்) ஆகிய குறிகுணங்கள் காணும். இச்சுரம் திராது. கடுமையுடையது. (சகூச)

விடசுரத்துக்கு—திரிகடுகு குடிநீர்.

கலி விருத்தம்.

கடுக மூன்றுடன் கான வசம்பொடு
எடுபடு குடிநீர் எட்டொன் றுக்கியே
விடுவிடு தேனுடன் விளாவிக் கொள்ளவே
எடுபடு விடசுர சீத மில்லையே.

(பொ-ரை.)—(1) சுக்கு, (2) அரிசித்திப்பிலி, (3) மிளகு, (4) சுட்டவசம்பு, வகைக்குக் காசெடை எடுத்து உழக்கு நீர்விட்டு அரை ஆழாக்குக் குடிநீராக இறக்கி வடித்து, தக்க அளவாக நாள் ஒன்றுக்கு இரண்டு அல்லது மூன்று முறையாகத், தேன் கலந்து கொடுக்க, விடசுரம் திரும். (சகூரு)

விடாச்சுரம்.

வெண்பா.

ஆகமதி னேயா யதிக சுரங்காய்தல்
தாகமுடன் மார்நோய் தலைவலியும்—தேகம்
எரிவுமலக் கட்டாகு மேந்திழையே யெங்கும்
பரவும் விடாச்சுரமாம் பார்.

(பொ-ரை.)—விடாச்சுரத்தில் உடல் நோதல், மிகுதியாகச் சுரங்காய்தல், தாகம், மார்புநோய், தலைநோய், உடல் எரிவு, மலச்சிக்கல் உண்டாம்.

பரிகாரம்.

ஆம சுரத்தின்கீழ் குறிப்பிட்ட ஏலாதிமாத்திரை யாம். (சசுசு)

## (12) மாறற் சுரக் குறிகுணம்.

வெண்பா.

நடுக்க லுடன்சுரமும் நாள்விட்டு நாளில்
அடுத்துவந்து தோணேர்ந் தகட்டில்—துடிப்பாக
ஈரல் வளர்ச்சியுமா மேந்திழையே யீதுநளிர்
மாறற் சுரமாய் வழுத்து.

(பொ-ரை.)—மாறற் சுரத்தால் உடல் நடுக்கல், சுரம் நாள்விட்டு நாள் அடுத்தடுத்து வருதல், தோள் நேர்தல், வயிற்றில் மண்ணீரல், கல்லீரல் வளர்ச்சியடைதல் ஆகிய இவைகளுண்டாகும்.

பரிகாரம்.

கணச்சுரத்தின் கீழ்வரும் அதிமதுரச் சூரணமாம். (சசுஎ)

## (13) கணச்சுரத்தின் குறிகுணம்.

எண்சீராசிரிய விருத்தம்.

உந்திதனைப் பற்றியீ ரலளவும் புண்ணாய்
ஒருக்காலே சுவாசந்தா னுண்டா மிக்க
வந்தசுரம் பூசிறுற் போலே காய்ந்து
வருத்தமாய்த் திட்டுமுட்டாய் மயக்கங் காணும்
இந்தவகை கணக்காய்ச்ச லென்றே நாளும்
இயம்புவார் புவிமீது நூல்வல் லோர்கள்
சுந்தரியா ளுமைப்பாகன் முனிக்குச் சொன்ன
சூட்சமிது தானறிவீ ருண்மை தானே.

(பொ-ரை.)—கொப்பூழைத் தொடர்ந்து நுரையீரல் அளவும் புண்ணாய், ஒரு முறை மூச்சு அதிகப்பட்டும், ஒருமுறை அவ்வாறின்றியுமிருக்கும், உடம்பிற் சுரம்பரவினுற்போலத் தோலையொட்டிக் காய்ந்து மிக வருத்தத்தோடு அடிக்கடி மயக்கத்தையுமுண்டாக்கும். இதுவே கணக்காய்ச்சலின்குறி குணமென்று ஆயுள்வேதமறிந்தோர் இயம்புவார்கள். உமையவள் முனிவர்க்குச் சொன்ன சூட்சமிதுவேயாம். (சசுஅ)

கணச்சுரத்துக்கு—பழம்பாசிக் குடிநீர்.

எண்சீராசிரிய விருத்தம்.

பழம்பாசி கணப்பூண்டு வெதுப்ப டக்கி
பசியநல்ல வல்லாரை தகரை கூட்டி
குழம்பாகக் காய்ச்சியநீர் தன்னி லேதான்
கூட்டியிருஞ் சீரகம்ரோ சனையைப் போட்டு
விழும்பாலர் கணந்தனக்கு விரும்பிக் கொள்ள
விட்டோடுங் கணமெல்லாம் வெதுப்பு மாறும்
கெழும்பாலர் தங்களுக்கே யேலா தென்று
கேவலமா யுரைக்கவினி கேளுந் தானே.

(பொ-ரை.)—(1) பழம்பாசி, (2) கணப்பூண்டு, (3) பேய்மிரட்டி, (4) வல்லாரை, (5) தகரை வகைக்குப் பலம் கால் எடுத்து இடித்து தண்ணீர் படி கால் (உழக்கு) சேர்த்து நாலில் ஒரு பாகம் சுண்டவைத்து வடித்து (1) சீரகம், (2) கருஞ்சீரகம், (3) கோரோசனை வகைக்குப் பணவெடை பொடித்துக் கூட்டி காலைமாலை இரண்டு வேளையும் அதைப் பகிர்ந்து கொடுத்துவர, கணமும், கணவெதுப்புந் தீரும். (சசுகூ)

புளியாதி யீர்க்குக் கற்கம்.

ஆசிரிய விருத்தம்.

உற்றபுளி வேம்புமா நெல்லிநா ரத்தையும்
ஒதிநுணா தகரைநிம்பம்
ஓதுவகை யீர்க்கில்வல் லாரைப் பழம்பாசி
வுசிதபுள் ளடிமுத்தமும்
பத்திதரு மீருள்ளி வண்ணத்தி யிருமுட்டி
பகர்மிளகு தக்காளியும்
பகர்முசுக் கைகாந்தி நரிப்பயற் றங்கொடி
பர்ப்பட மூக்கொற்றியும்

சத்திவளர் முனியம்மான் பச்சரிசி சீந்திலுஞ்
சமனுக விருசீரகம்
தகர்சுக்கு வெந்தய மரைப்பலம தாய்வறுத்
தாதண்டைக் கியாழகற்கம்
வைத்தகோ ரோசனை யக்கரா வதிமதுரம்
வரிக்கலைக் கொம்புகோட்டம்
வாகாக வொவ்வொரு பணவெடைய தாகவே
வளமாக நெகிழவரையே.

அறுசீராசிரிய விருத்தம்.

அரைத்ததைக் குழவிக் கீய வானதோ ரிரண்டு நேரம்
உரைத்திடும் பத்து நாள்தா னுட்சுர முள்ள வெல்லாம்
கரைத்திடுங் கணமும் பொல்லாக் காய்ச்சலுங் கணமுந் தீரும்
வரைத்திடுஞ் சுரம சக்கை மாறுமென் றருள்செய் தாரே.

(பொ-ரை.)—(1) புளி, (2) வேம்பு, (3) மா, (4) நெல்லி, (5) நாரத்தை, (6) ஒதி, (7) நுணா, (8) தகரை, (9) எலுமிச்சை இவைகளின் ஈர்க்கு, (10) வல்லாரைக்கீரை, (11) பழம்பாசி, (12) புள்ளடி, (13) கோரைக்கிழங்கு, (14) வெண்காயம், (15) அத்திமொக்கு, (16) சிற்றுமுட்டிவேர், (17) பேராமுட்டிவேர், (18) மணித்தக்காளி, (19) முசுமுசுக்கை, (20) விட்ணுகாந்தி, (21) நரிப்பயற்றங்கொடி, (22) பர்ப்பாடகம், (23) மூக்கொற்றி, (24) சத்திச்சாட்டரணை, (25) அகத்தி, (26) அம்மான்பச்சரிசி, (27) சீந்திற்கொடி, (28) புன்வறுப்பாய் வறுத்த சீரகம், (29) கருஞ்சீரகம், (30) சுக்கு, (31) வெந்தயம் ஆகிய முப்பத்தொரு சரக்குகளும் வகைக்கு அரைப்பலம், (32) கோரோசனம், (33) அக்கராகாரம், (34) அதிமதுரம், (35) மான்கொம்பு, (36) சாதிக்கோட்டம் இவ்வைந்தும் ஒரு பணவெடையாக வெடுத்து ஆதொண்டைச் சமூலக் குடிநீர் விட்டரைத்துக் கற்கமாக்கிச் சிறு அளவாகக் காலை மாலை இருவேளையும் பத்துநாள் கொடுத்துவர உட்சுரம், கணம், கணச்சுரம், கணசுரமயக்கம் தீரும். (சஎ0)

கணச்சுரம், மாறல்சுரத்திற்கு—அதிமதுரச் சூரணம்.

எண்சீராசிரிய விருத்தம்.

அதிமதுர மேலமுடன் லவங்கப் பட்டை
யானசண் பகமொக்கு கோட்டந் தானும்
விதியுடனே சுக்குஞ்சீ ரகமு முத்தம்
விதவிதமாய் வறுத்திடித்துப் பொடித்துக் கொண்டு
சதிருடனே சர்க்கரையுங் கூடச் சேர்த்துச்
சகலபிள்ளை யருந்திடவே சபல மாகும்
மதிநுதல்சேர் பெண்ணரசே கணமும் போகும்
மாறிவருங் காய்ச்சலெலா மாறுந் தானே.

(பொ-ரை.)—(1) அதிமதுரம், (2) ஏலம், (3) இலவங்கப்பட்டை, (4) சண்பகமொக்கு, (5) கோட்டம், (6) சுக்கு, (7) நற்சீரகம், (8) கோரைக் கிழங்கு இவைகளைச் சரியெடைத் தூக்கி, புன்வறுப்பாய் வறுத்து இடித்துப் பொடித்து, சீலையில் வடிக்கட்டி, சருக்கரை சமன்கூட்டி வேளை யொன்றுக்கு வெருகடி வீதம் கொடுத்துவர, கணச்சுரமும் மாறல்சுரங்களும் நீங்கும். (சஎக)

கணச்சுரத்திற்கும் உட்காய்ச்சலுக்கும்—சங்கன் நெய்.

எண்சீராசிரிய விருத்தம்.

சங்குடனே செருப்படையுந் துளசி பூலா
தருகழற்சி நரிப்பயற்றஞ் சாறு வெவ்வே
றங்கதொரு படியதனி லப்பைக் கொவ்வை
அடர்நெருஞ்சில் தூதுவளை வேர்கி ராம்பும்
இங்கிததிப் பிலிசாதிக் காயின் பூறல்
இயல்வசம் புள்ளிசுக்கு கடுக்காய் தேக்கு
துங்கநெய்தான் படியிலெரித் தருந்திப் பூசச்
சொல்லரிது கணங்களுட் சுரமும் போமே.

(பொ-ரை.)—(1) நற்சங்கன், (2) சிறுசெருப்படை, (3) துளசி, (4) வரட் பூலா, (5) கழற்சி, (6) நரிப்பயறு இவ்வைந்தின் இலைச் சாறு வகைக்குப்படி ஒன்று சேர்த்து அதில் (7) அப்பைக்கோவைக்கிழங்கு, (8) நெருஞ்சில்வேர், (9) தூதுவளைவேர், (10) கிராம்பு, (11) அரிசிதிப்பிலி, (12) சாதிக்காய், (13) இம்பூறல் வேர்ப்பட்டை, (14) சுட்டவசம்பு, (15) வெள்ளுள்ளி, (16) சுக்கு, (17) கடுக்காய்த்தோல், (18) சிறுதேக்கு வகைக்கு காசெடை எடுத்து பால் விட்டரைத்துக் கலக்கி, (19) பசுவின் நெய்படி ஒன்றுசேர்த்து, சிறுதீயில் எரித்துப் பக்குவத்தில் வடித்து, காலை காலையில் மாத்திரம் உச்சிக்கரண்டி வீதம் உள்ளுக்குப் புகட்டியும் மேலுக்குப் பூசியும்வர, கணக்காய்ச்சல், உட்காய்ச்சல் போம். (சஎஉ)

கணச்சுரம், உட்சுரம், மேல்வெதுப்பு, இருமலுக்கு
கலியாணபூசினிக்காய் நெய்.

பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்.

சீராரும்பூசினிச்சாற்றினிளநீருடன்செவ்வாவிநெய்பாலுமாய்
திகழுஞ்சதாவேரியின்கிழங்கிவையுடன்செய்வகைக்கோர்நாழியாய்க்
காராருரோகணிச்சண்பகம்வெட்டிவேர்கடற்பச்சையதிமதுரமும்
காடுவளரிலவங்கமிருமுட்டிதிப்பிலிகருதுசந்தனமேலமும்

பாராரிலாமிச்சுமாவிதைக்கோட்டமும்பருவிளாம்பிசினியுடனே
பண்பிலவுதன்பிசின்வில்வப்பிசினெடுயர்பகருமொருபொன்முசுட்டை
நேராருமோர்வகைக்காசெடைநிதானமாய்நிலவரமதாயரைத்து
நேசமுடனெய்யிற்கலந்தெரிவடித்ததைநித்தங்கொடுத்துவிடுமே.

வெண்பா.

விடுமே கணக்காய்ச்சல் மேல்வெதுப் புட்காய்ச்சல்
தடுமே லிருமலுடன் சாந்தங்—கொடுமேதான்
பூசினிக்காய் நெய்தனக்குப் பூரிக்கு மேயுடலம்
காசினியி லுள்ளவர்க்குக் காண்.

(பொ-ரை.)—(1) கலியாணபூசினிக்காய்ச்சாறு (நீற்றுப்பூசினி), (2) இளநீர், (3) தண்ணீர்விட்டான்கிழங்குச் சாறு, (4) பசுவின்பால், (5) பசுவின் நெய் இவைகள் வகைப் படி ஒன்று சேர்த்து, இதில் (1) கடகரோகணி, (2) சண்பகப்பூ, (3) வெட்டிவேர், (4) கடற்பாசி, (5) அதிமதுரம், (6) இலவங்கம், (7) சிற்றுமுட்டிவேர், (8) பேராமுட்டிவேர், (9) திப்பிலி, (10) சந்தனம், (11) ஏலம், (12) விலாமிச்சம்வேர், (13) மாம்பருப்பு, (14) சாதிக்கோட்டம், (15) விளாம்பிசின், (16) இலவம்பிசின், (17) வில்வப்பிசின், (18) பொன்முசுட்டைவேர் (வட்டத்திருப்பி) வகைக்கு ஒரு காசெடை எடுத்து இடித்துப் பொடித்து, பசுவின்பால் விட்டரைத்துக் கலந்து, எரித்துப் பக்குவத்தில் வடித்துக்கொண்டு, வேண்டியநாள்மட்டும் காலை மாலை உச்சிக்கரண்டி வீதங்கொடுத்து வர, கணக்காய்ச்சல், மேல்வெதுப்பு, உட்காய்ச்சல், இருமல் நீங்கும், உடல் பெருகும். (சஎங)

கணங்களுக்கும் கணக்காய்ச்சலுக்கும்—புள்ளடி எண்ணெய்.

கட்டளைக்கலித் துறை.

புள்ளடி செப்பு நெருஞ்சில்வல் லாரைபூ லாவுடனே
தெள்ளடிக் கோழி யவரையின் சாறெடு சேரொருக்கால்
தள்ளடி யாமணக் கெண்ணெயுஞ் சேர்குரோ சானியுடன்
துள்ளடி ரோகணி சூழும் வெளிச்சையுஞ் சொல்லிடுமே.

சொல்லிடு மால்புல் லுருவியு மாஞ்சியுஞ் சொன்னவகை
எல்லேஇ ரண்டு பணவெடை யாக விதில்கலந்து
துள்ளவெ ரித்துப் பதமா மிறக்கிநல் துட்டளவாய்
பிள்ளைகட் கீயக் கணங்களும் காய்ச்சலும் போய்விடுமே.

(பொ-ரை.)—(1) புள்ளடி, (2) செப்புநெருஞ்சில், (3) வல்லாரை, (4) வரட்பூலா, (5) கோழியவரை இவ்வைந்து இலைகளின் சாறு வகைக்குச் சேர் கால், (6) சிற்றுமணக்கெண்ணெய் சேர் ஒன்று இவைகளை ஒன்று கலந்து, இதில் (1) குரோசானி ஓமம், (2) கடகரோகணி, (3) வெளிச்சைப்பிசின், (4) ஆலம்புல்லுருவி, (5) சடாமாஞ்சில் வகைக்குப் பணவெடை இரண்டு எடுத்து இடித்துப் பொடித்துக் கலந்து எரித்துப் பக்குவ பாகத்தில் வடித்து வைத்துக்கொண்டு, நாள் ஒன்றுக்கு காலை மாலை இருவேளையாக வேண்டிய நாள்மட்டும் ஒரு துட்டெடை கொடுத்துவரக் கணங்களும், கணக்காய்ச்சல்களும் போம். (சஎச)

கணச்சுரம், கணப்பாண்டு, அத்திவெட்டை, இரத்த இருமல்,
கழிச்சல்தோடம் இவைகட்கு—ஆவாரை எண்ணெய்.

வெண்பா.

ஆவாரை வேரோ டழகுசரக் கொன்றைவேர்
காவாத விட்ணுக் கரந்தைவேர்—பூவா
கலக்கமில் லாமல் கமழ்தந்து வீசும்
நிலக்குமிழின் வேரதனை நேர்.

எண்சீராசிரிய விருத்தம்.

வேருசிறு வம்மான்பச் சரிசி யேலம்
விரைசீர மானைக்கால் வணங்கிப் பூடு
தாருடனே வகைக்குவரைப் பலமும் வாங்கி
தனியாஞ்சிற் றேரண்டத் தெண்ணெய் யொன்றில்
கூருடனே வாவின்பால் விட்ட ரைத்துக்
குறிசொல்வேன் கலக்கியெண்ணெ யெரித்து வாங்கி
சீருடனே மண்டலங்கால் கரண்டி வீதம்
சிறுவிச்சா பத்தியமாய்க் கொள்ளச் சொல்லே.

கொள்ளவே கணப்பாண்டு கணசு ரங்கள்
கொடிதான வத்திவெட்டை யிருமல் ரத்தம்
கொள்ளவே பறந்தோடு மெண்ணெய் மார்க்கம்
குறியாகச் சிறுபிள்ளை கழிச்சல் தோடம்
கொள்ளவே யுப்பிலியின் பூண்டு வாங்கிக்
குணமாக நறுக்கியா நெய்யுஞ் சேர்த்துக்
கொள்ளவே ரவிகாயச் சாமந் நாலு
குருவருளால் பிள்ளைதனக் கீந்தி டாயே.

(பொ-ரை.)—(1) ஆவாரைவேர்ப்பட்டை, (2) சரக்கொன்றைவேர்ப்பட்டை, (3) விட்ணுகரந்தைவேர்ப்பட்டை, (4) நிலக்குமிழ்வேர்ப்பட்டை, (5) சிறு அம்மான்பச்சரிசி வேர்ப்பட்டை, (6) ஏலரிசி, (7) நற்சீரகம், (8) நெருஞ்சில் சமூலம் இவைகளை வகைக்கு பலம் அரை எடுத்து, பசுவின்பால் விட்டரைத்து (9) ஒரு படி சிற்றாமணக் கெண்ணெயிற் கரைத்து எரித்துப் பக்குவத்தில் வடித்து, தக்க அளவாக (ஒரு உச்சிக்கரண்டி) ஒரு மண்டலம் கொடுத்துவர கணச்சுரம், கணப்பாண்டு, அத்திவெட்டை, இரத்த இருமல் நீங்கும்.

உப்பிலாங்கொடியின் சாறும், நெய்யும் சமவெடைக் கூட்டிக்காய்ச்சி அதிகாலையில் கொடுத்துவர, கழிச்சல் தோடம் போம். இச்சாபத்தியம்.

(சஎரு)

கணக்காய்ச்சலுக்கு—ஏலாதி மாத்திரை.

எண்சீராசிரிய விருத்தம்.

ஏலாதி மாசிக்காய் திப்பிலி யேலம்
இனியகோ ரோசனமுங் கோட்ட மாஞ்சில்
ஏலாதி சீரகந்தா னிரண்டு வக்கார
வினத்தோடே கால்பலமாய் நிறுத்துக் கொண்டு
ஏலாதி கல்லிலிட்டு முலைப்பால் வார்த்தங்
கிருசாமந் தானரைத் துருண்டை செய்தே
ஏலாதி கணசுரங்கள் கண்ட சேய்கட்
கொடுத்திடுநீ முலைப்பாலி லீந்தி டாயே,

(பொ-ரை.)—(1) ஏலம், (2) மாசிக்காய், (3) திப்பிலி, (4) கோரோசனம், (5) கோட்டம், (6) சடாமாஞ்சில், (7) நற்சீரகம், (8) கருஞ்சீரகம், (9) அக்கராகாரம் இவைகள் வகைக்குப் பலம் கால் எடுத்துப் பொடி செய்து கலுவத்திட்டு முலைப்பால்விட்டு இரண்டு சாமமரைத்துப் பயறளவு உருண்டை செய்து, நாள் ஒன்றுக்கு காலை மாலை இரண்டு வேளையும் ஒரு மாத்திரை வீதம் முலைப்பாலில் கொடுக்க, கணக்காய்ச்சல் நீங்கும்.

குறிப்பு.—ஆமசுரத்தின்கீழ் குறிப்பிட்டுள்ள ஏலாதி மாத்திரையுங் கொடுக்கலாம். (சஎசு)

## (14) உட்காய்ச்சல் குறிகுணம்.

அறுசீராசிரிய விருத்தம்.

மலமுஞ் சலமு மிகத்தீந்து மார்பி லதிக சுரங்காயும்
மலமும் வயிறு மிகவெரியும் வளமாய்த் தலையு மிகமயக்கும்
சலமும் வற்றித் தான்குறையும் சண்டா ளம்போ லுட்காய்ச்சல்
தலமாம் பனிரண் டாண்டுமட்டுந் தனதாய் வருத்துங் கணமிது
[வே.

(பொ-ரை.)—மலமும் சலமுந்தீயும், (நீர் மிகவும் குறைந்து இழியும்,) சுரம் வெளிக்காட்டாமல் உட்சுரமாகவே யிருக்கும், ஆயினும் வெதுப்பும், மார்பில் மட்டும் சுரம் தோன்றும், வயிற்றிலும், மலம் போம்போது ஆசன வாயிலிலும் எரிச்சல் காணும். தலைமயக்கங் கொள்ளும் ஆகிய இக்குறி குணங்கள் கண்டால் உட்காய்ச்சல் எனப்படும். இது கணச்சூட்டால் நேரிடுவது. பன்னிரண்டு ஆண்டுமட்டும் பாலர்களைத் தொடரும். (சஎஎ)

உட்காய்ச்சலுக்கு—கற்றாழை எண்ணெய்.

எண்சீராசிரிய விருத்தம்.

கற்றாழஞ் சாறிளநீ ராவின் பாலும்
கருதுவகை படியொன்று யளந்து கொண்டு
பற்றுஞ்சிற் றாமணக்கி னெண்ணெய் மூன்று
படியளந்தொன் றாய்க்கலந்து சொல்லக் கேளாய்
சற்றான கணப்பூண்டு கலைமான் கொம்பு
சந்தனமுங் கச்சபத்தி னோடுந் நாலும்
மற்றான வகைக்குப்பல மொன்ற தாக
மருவிளநீர் விட்டரைத்து மருந்திற் சேரே.

சேர்க்கவே சண்பகப்பூ சாதிக் காயும்
சீரகமு மதிமதுரம் சிறுநா கப்பூ
வார்க்கவே கரியசீ ரகம்வ கைக்கு
வளமான கால்பலமாய் நிறுத்துக் கொண்டு
பார்க்கவே சாதிபத்ரி பலம ரைக்கால்
பகர்கொத்து மல்லிபல மரைய தாக
மார்க்கமாய்ப் பசுவின்பா லாட்டி முன்னர்
மருந்தில்சேர்த் துக்கலக்கிக் காய்ச்சிக் கொள்ளே.

காய்ச்சியே மெழுகுபதந் தனில்வ டித்துக்
காலையிலு மாலையிலுந் துட்டெடை யேவாரு
பாய்ச்சியிவ் வண்ணமெழு நாளு மீந்தால்
படர்மாந்த கணஞ்சவலை குளியின் தோடம்

ஆச்சியே வரட்கணமு முடம்பி ளைத்தல்
அச்சரத்தில் காய்ச்சலுட னுட்காய்ச் சற்போம்
ஓச்சியே சிறுவருக்கு வந்த நோய்கள்
உண்மையுடன் தீருமது திண்ணந் தானே.

(பொ-ரை.)—(1) கற்றாழைச்சாறு, (2) இளநீர், (3) பசுவின்பால் வகைக்கு ஒரு படி, (4) சிற்றாமணக்கெண்ணெய் மூன்றுபடி இவைகளை ஒன்றாகக் கலந்து, இதில் (5) கணப்பூண்டு, (6) கலைமான் கொம்பு பற்பம், (7) சந்தனம், (8) ஆமையோட்டுப்பற்பம் வகைக்குப் பலம் ஒன்றெடுத்து இளநீர் விட்டரைத்தும், (9) சண்பகப்பூ, (10) சாதிக்காய், (11) சீரகம், (12) கருஞ்சீரகம், (13) அதிமதுரம், (14) சிறுநாகப்பூ இவைகள் வகைக்குப் பலம் கால், (15) சாதிபத்திரி பலம் அரைக்கால், (16) கொத்துமல்லி விதை (தனியா) பலம் அரை நிறுத்து பசுவின்பால் விட்டரைத்தும் சேர்த்துக் கலக்கி எரித்து, மெழுகு பதத்தில் வடித்துக் காலை மாலை ஒரு துட்டெடை வீதம் எழுநாள் மட்டும் கொடுத்துவர மாந்தம், கணம், சவலை, குளிதோடம், வரட்கணம், உடம்பு இளைத்தல், அட்சரசுரக்காய்ச்சல், உட்காய்ச்சல் ஆகிய பிணிகள் தீரும். (சஎஅ)

காய்ச்சல், உட்காய்ச்சல், மாந்தம், உடம்புவற்றல் இவைகட்கு
இளநீர் எண்ணெய்.

கொச்சகம்.

முனிவோர்சிற் றாமணக்கு முதலிளநீர் தனிலவித்து
செனிவாகு மெண்ணெய்படி சேர்பசும்பா லிரண்டுபடி
தனியா குமரிநீர் தானரைப் படியாக
தொனியாய் மெழுகுபதஞ் சொல்லும் படிக்காய்ச்சே.

காய்ச்சியிறுத் தெண்ணெயிற் கற்கமினி சீரகமும்
மாச்சிக்காய் கோட்ட மதுரங்கி ராம்பேலம்
தாழ்ச்சியில்லா சுக்குசரி வகைக்குக் காசெடையாய்
கூச்சமின்றி வெந்தயமும் கூறும் பலங்காலே.

எண்சீராசிரிய விருத்தம்.

காணவே யிவையெல்லாம் வறுத்தி டித்து
கற்கமதை யெண்ணெயிலே கலந்த பின்பு
பூணவே சூரியன்றன் புடத்தில் வைத்துப்
பிள்ளைதனக் கீந்திடவே போநநோ யெல்லாம்
தோணவே காய்ச்சலுட் காய்ச்சல் மாந்தம்
தோன்றுகின்ற வுடம்புவற்றல் வகைகள் யாவும்
நாணவே வாய்வரண்டு குலைந டுங்கி
நாடாதென் றேபெரியோர் நவின்றிட் டாரே.

(பொ-ரை.)—(1) இளநீரில் பக்குவஞ்செய்த சிற்றாமணக்கெண்ணெய் ஒரு படி, (2) பசுவின்பால் இரண்டுபடி, (3) கற்றாழைச்சாறு அரைப்படி இவைகளை ஒன்றாகக் கூட்டி எரித்து மெழுகு பதத்தில் வடித்து, இதில் (1) சீரகம், (2) மாசிக்காய், (3) கோட்டம், (4) அதிமதுரம், (5) கிராம்பு, (6) ஏலம், (7) சுக்கு இளவறுப்பாய் வறுத்து இடித்தெடுத்த இவைகளின் நுண்ணிய பொடி வகைக்குக் காசெடை ஒன்று, (8) மேற்படியாகவே செய்து

பொடித்த வெந்தயத்தூள் பலம் கால் சேர்த்து, சூரியபுடம் வைத்தெடுத்து ஒரு உச்சிக்கரண்டி வீதம் காலைமாலை வேண்டியநாள் மட்டும் குழந்தைகட்குப் புகட்டிவர இவ்வெண்ணெயின் தலைப்பில்கண்ட நோய்கள் தீரும்.

(b) சிற்றாமணக்குக் கொட்டையை இளநீரில் அவித்து ஓடு போக்கிச் சிதைத்து இளநீரில் சேர்த்துக் காய்ச்சி மிதக்கும் எண்ணெயைக் கையினால் வழித்தெடுப்பதே இளநீரில் பக்குவஞ் செய்ததாகும்.

குறிப்பு.—கணச்சுரத்தின்கீழ் குறிப்பிட்டுள்ள (1) புளியாதியிர்க்கு கற்கம் (2) சங்கன்நெய், (3) கலியாணப்பூசினி நெய் இவைகளையுங் கொடுக்கலாம். (௬௭௯)

## (15) இ ர த் த சு ர க் கு றி கு ண ம்.

அறுசீராசிரிய விருத்தம்.

தாகமுங் கழிச்ச லாகுந் தலையது சுழற்றல் காணும்
வேகமாய்ச் சுரமுஞ் சற்றே விட்டுவிட் டேகுங் காயும்
வாகுசேர் கண்ணுந் தாழ்ந்து வாயுடன் நாவு லர்ந்து
சோகமும் வயிற்றில் நோயும் சோர்ந்துகை கால்தண் ணீரே.

(பொ-ரை.)—இரத்தத்தைப்பற்றி யெழுகின்ற சுரத்தில் தாகம், வயிறு போதல், தலைசுழற்றல், சுரம்விட்டுவிட்டு வேகமாய்க் காய்தல், கண்குழிவிழுதல், வாயும் நாவும் உலர்தல், சோகம், வயிற்றுநோய், உடல்சோர்வு, கைகால்களில் வேர்வை தண்ணீராக ஒழுகுதல் ஆகிய குறிகுணங்கள் காணும்.

பரிகாரம்.

வாத பித்த கப சுரத்தின் கீழ் கண்டுள்ள "பாலசஞ்சீவி மாத்திரை" யை, சீரகம், இம்பூறல்வேர் போன்ற பித்தத்தைத் தணிக்கும் குடிநீர் ஒன்றில் சேர்த்துக் கொடுக்க, இரத்தசுரம் நீங்கும். (௬௮0)

## (16) மாங்கிசசுரக் குறிகுணம்.

அறுசீராசிரிய விருத்தம்.

அதிகமாய்ச் சரீர மெல்லா மனல்போலச் சுரமுங் காயும்
சதிரமெல் லாந டுக்கும் தான்மூச்சு மெத்த வோடும்
உதிரம்போ யுடல்வெ ளுத்தே யுருகியே கருகு மேனி
மதியுமே மயங்கி மூர்ச்சை மயிர்க்கூச்சு மாங்கிச வெப்பே.

(பொ-ரை.)—மாங்கிச (ஊன்) சுரத்தில் உடலில் அனற்போல சுரங் காயும், உடல் நடுக்கும், மூச்சு அதிகமாக ஓடும், இரத்தம் குறையும், உடல் வெளுத்து இளைத்துக்கருகும், புத்திமயங்கும், மூர்ச்சை யுண்டாகும், மயிர்க் கூச்சிடும். (௬௮௧)

ஊன்சுரத்துக்கு—கர்ப்பூர மாத்திரை.

எண்சீராசிரிய விருத்தம்.

கர்ப்பூரங் கந்தியிந்து லவங்கத் தோடு
கனமான சாதிக்காய் சாதி பத்திரி
செப்பமுட னொருகழஞ்சு தேசிச் சாற்றில்
திறமாக வொருசாம மரைத்துக் கொண்டே
ஒப்புடனே வுழுந்தளவி லுண்டை செய்தே
உகந்திஞ்சி சர்க்கரையில் சுக்கி லூட்ட
நட்புடனே யூன்சுரமு மூன்றே முக்கால்
நாழிகையில் விட்டகலும் நாள்செல் லாதே.

(பொ-ரை.)—(1) பச்சைக் கர்ப்பூரம், (2) சுத்திசெய்த கந்தகம், (3) இந்துப்பு, (4) இலவங்கம், (5) சாதிக்காய், (6) சாதிபத்திரி இவைகள் வகைக்குக் கழஞ்சி எடுத்து, எலுமிச்சம் பழச்சாற்றில் ஒரு சாமமரைத்து உழுந்தளவு மாத்திரை செய்து, நிழலில் உலர்த்திவைத்துக்கொண்டு, காலே மாலே இருவேளையிலும் இஞ்சிச்சாறு, சருக்கரை, சுக்கு இவைகளில் ஒன்றை அனுபானமாகக் கொண்டு கொடுக்க, ஊன் சுரம் மூன்றேமுக்கால் நாழிகையில் விடும்.

குறிப்பு.—மேற்படி ஆறு சரக்குகளின் எடைக்கு நேரெடை பரிசுத்தமான வாளம் கூட்டி மேற்கண்டபடி அரைத்து உருட்டிய மாத்திரை, மலக்கட்டுடன் வரும் சர்வசுரங்களுக்கும் மிக்க பலன் தரும். இது அநுபவத்தில் கண்டது. (சஅஉ)

## (17) அத்திச்சுரக் குறிகுணம்.

அறுசீராசிரிய விருத்தம்.

அத்திச் சுரத்தின் குணஞ்சொல்லி லனலே வெதும்பு முலேயுண்ணு
புத்தி கலங்கு முள்ளுளேயும் போத வெள்ளோக் காளமிகும்
சத்தி யெடுக்கும் நீர்சிவக்கும் சாமந் தனிலே தான்காயும்
வற்றி வீங்கிரு மல்சோகை வருமே கடுப்பு மிதிற்ருனே.

(பொ-ரை.)—அத்திசுரத்தில் காணும் குறி குணங்கள்.—சுரங்காய்தல் ஆனல் சுரம் சாமந்தோறும் அதிகப்படல், முலேயுண்ணுமை, புத்திகலங்குதல், உள்வலி தோன்றுதல், வெள்ளோக்காளமெடுத்தல், வாந்தியாதல், சிறுநீர் சிவத்தல், உடல் முன்னர்வற்றி பின்னர் வீங்கிச் சோகையுடன் இருமுதல், வயிறுகடுத்தல் ஆகிய இவைகளாம். (சஅங)

அத்திச்சுரம், வரட்கணத்துக்கு - சாத்திரபேதிநெய்.

பன்னிருசீராசிரிய விருத்தம்.

சாத்திர பேதி கோட்டமதுரஞ் சந்தன மேலஞ் சீரகமுந்
  தானுங் கொன்றைப் புளியினெடு சார்ந்த சங்கர ருத்ராக்கம்
காத்திர மான்கொம் புடநெல்லிக் காய்வற் றல்சண் பகமொக்கு
  கனிகொத் துமலி விலாமிச்சை காசள வென்ன வேயாட்டிப்
பாத்திர மதனில் நெய்நாழி பருத்திக் காயி னற்சாறு
  பகருங் காணிச் சாறுவகை காலும் பதமாய் வடியிட்டுத்
தோத்திர மாகச் சர்க்கரைக்கால் துவளக் கரண்டி வீதமிடத்
  தோன்றிய வத்திச் சுரமும்வரட் கணமுஞ் சொல்லா தோடிடுமே.

(பொ-ரை.)—(1) சாத்திரபேதி, (2) கோட்டம், (3) அதிமதுரம், (4) சந்தனம், (5) ஏலம், (6) சீரகம், (7) சரக்கொன்றைப்புளி, (8) உருத்திராக்கம், (9) மான்கொம்பு பற்பம், (10) நெல்லிவற்றல், (11) சண்பகப்பூ, (12) கொத்துமல்லி, (13) விலாமிச்சம்வேர் வகைக்கு காசெடை எடுத்து நைய பசுவின்பால் விட்டரைத்து (1) பசுவின்நெய் படி ஒன்று, (2) பருத்திக்காய்ச் சாறு படி கால், (3) பொன்னுங்காணிச் சாறு படி கால் ஒன்று சேர்த்ததில் கரைத்து எரித்துப் பக்குவத்தில் வடித்து, உச்சிக்கரண்டி வீதம் காலேமாலே கொடுத்துவர அத்திச்சுரம், வரட்கணம் நீங்கும்.

வேளேயாதி எண்ணெயும் நன்மை தரும். (சஅச)

## (18) தாப சுரக் குறிகுணம்.

வெண்பா.

உடலெரிவு சீத முரமெரிவு மேல்மூச்
சடுமுதரத் தங்கி யணுகா—தடுத்தடுத்து
மாந்தினுநீர் நாவரளல் மாருதே தாபசுரம்
போந்ததென மாதே புகல்.

(பொ-ரை.)—தாப சுரத்தில் உடலெரிவு, அதிசீதம், மார்பு எரிச்சல், மேல்மூச்சு, அக்கினிமந்தம், நீர் அடுத்தடுத்து உட்கொள்ளினும் நாவரளல் உண்டாம்.

பரிகாரம்.

பழம்பாசிக் குடிநீர் (கணச்சுரம்).
சிருங்கி கற்கம்.
பால சஞ்சீவி மாத்திரை (மாந்தகணச் சுரம்).
ஏலாதி மாத்திரை (கணச்சுரம்).

மேல்பூச.

கோட்ட எண்ணெய் (வாத-பித்த-கப சுரத்தின்)கீழ் காண்க. (சஅரு)

## (19) உடம்புநோய்க்காய்ச்சல் குறிகுணம்.

வெண்பா.

உதட்டைக் கடிக்குமுறு கைமுட்டி யாக்கும்
மிதப்பநட்ட கண்ணுய் விழிக்கும்—பதட்ட
குசத்தைக் கடித்திழுக்கும் கூறுடம்பு நோயாம்
நிசத்தை விளக்கினேம் நேர்.

(பொ-ரை.)—உடம்பு நோய்க் காய்ச்சலில், உடம்பு நோதல், உதட்டைக் கடித்தல், கைகளை மூடிக்கொள்ளுதல், கண்கள் நட்டக் கண்களாகவே யிருத்தல், பாலுண்ணுமலே தாயின் முலையைக் கடித்திழுத்தல் ஆகிய இக்குணங்கள் காணும். (சஅசு)

உடம்புநோய்க் காய்ச்சலுக்கு—சாணைக்கிப் புட்டவியற் சாறு.

வெண்பா.

சிதேவிப் பூடிடித்துச் செய்யபிட் டாயவித்தே
ஓதேயச் சாற்றி லுரோகணியை—மாதே
அரைத்துநீ வெள்ளாட்டுப் பாலிற் புகட்டப்
புரைத்துடம்பு காய்ச்சலேய் போம்.

(பொ-ரை.)—சிதேவிச் செங்கழுநீர் பூண்டை இடித்துப் புட்டவியலாக அவித்துப்பிழிந்தச் சாற்றில், கடகரோகணியை அரைத்துக் கலந்து வெள்ளாட்டுப் பாலுஞ் சேர்த்துப் புகட்டிவர, உடம்புநோய்க் காய்ச்சல் நீங்கும். (சஅஎ)

## (20) அன்பறுதிசுரக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

ஆர்க்குங் காயு மன்பறுதி யான சுரத்தை யறியக்கேள்
வேர்க்கும் வெதும்புங் கண்சிவக்கும் வெந்நீர் வேண்டும் பலகாலும்
பார்க்கப் பயமா யிருக்குதெனப் பதறி யலறிக் கதறியழும்
சேர்க்க வயிறு சிக்கிவிடுந் தெருவிற் புறப்பட் டோடிடுமே.

(பொ-ரை.)—அன்பனுதிச் சுரத்தில் - வேர்வை, உடல் வெதும்பல், கண் சிவத்தல், குடிக்க அடிக்கடி வெந்நீர் வேண்டுதல், எதையும் நோக்கிப் பார்க்கப் பயமாயிருக்கிறதென்று பதறியும், அலறியும், கதறியும் அழுதல், அடிக்கடி எழுந்து தெருவழியைக் கண்டோடுதல், மலச்சிக்கல் ஆகிய குறிகுணங்கள் காணும். (சஅஅ)

அன்பனுதி சுரத்துக்கு—கற்ருழை எண்ணெய்.

எண்சீராசிரிய விருத்தம்.

கற்ருழஞ் சோறுகடு களிப்பாக் கோடு
கருவேலும் பிரமியுடன் சுக்குங் கூட்டிப்
பற்ருமல் நாலிலொன்ருய்க் காய்ச்சிக் கொண்டு
பதருமல வெண்ணெயுடன் பருகு வீரேல்
வற்ருத கடல்வற்றும் சீதம் போகும்
வலிவான குன்மமெண் சுரமிரும லும்போம்
பெற்ருலோ வன்பனுெடுஞ் சீத பேதி
பேருலகில் நாடாது பேசு வீரே.

(பொ-ரை.)—(1) கற்ருழஞ்சோறு, (2) கடுக்காய்த்தோல், (3) களிப்பாக்கு, (4) கருவேலம்பட்டை, (5) பிரமியிலை, (6) சுக்கு இவைகள் வகைக்குப் பலம் காலெடுத்து இடித்து, அரைப்படி நீர்விட்டு ஒரு ஆழாக்காகச் சுண்ட வைத்து வடித்தக் குடிநீருடன், சமபாகம் சிற்ருமணக்கெண்ணெய் கூட்டி எரித்துப் பக்குவத்திலெடுத்த எண்ணெயில், காலையில் மாத்திரம் ஒரு உச்சிக்கரண்டி வீதம் போதுமான நாளளவு கொடுக்க சீதம், குன்மம், எண்வகை சுரம், இருமல், அன்பனுதிசுரம், சீதபேதி நீங்கும். (சஅகூ)

பழஞ்சுரத்திற்கு—தூதுவளைக் குடிநீர்.

அறுசீராசிரிய விருத்தம்.

அரிய தூது காஞ்சொரிவேர் ஆன சீந்தில் பர்ப்படகம்
பெரிய நொச்சி பெருமுட்டி பின்னுஞ் சிற்ரு முட்டியுடன்
சிறிய கடுக்காய் தான்கூட்டிக் கியாழம் வைத்துத் தாணிருத்தால்
உரிய திப்பிலி பொடிதூவி உவந்து கொள்பழஞ் சுரம்போமே.

(பொ-ரை.)—(1) தூதுவளை வேர், (2) காஞ்சொரி வேர், (3) சீந்தில் கொடி, (4) பர்ப்பாடகம், (5) நொச்சி, (6) பேராமுட்டி, (7) சிற்ருமுட்டி, (8) கடுக்காய் சரியெடை எடுத்து விதிப்படி குடிநீர் வைத்து, திப்பிலிப் பொடி தூவி தக்க அளவு குழந்தைகட்கு புகட்ட, நாட்பட்ட பழஞ்சுரம் நீங்கும்.

மேலும், அடியிற்கண்டவைகளையும் உபயோகிக்கலாம் :—

கோட்ட எண்ணெய், இலவங்காதி மாத்திரை, பாலசஞ்சீவி மாத்திரை, ஏலாதி மாத்திரை.

அத்திவெட்டை.

பழஞ்சுரம், விடசுரம், விடாச்சுரம், கணச்சுரம், அத்திசுரம், உட்காய்ச்சல் இவைகளினுல் என்புகள் பலங்குன்றி வெட்டையாகும். அக்குணமுள்ளவர்கட்கு—

(1) தீராத ஆமசுரத்தின்கீழ் கண்டுள்ள "ஏலாதி மாத்திரை".

(2) கணசுரத்தின்கீழ் குறிப்பிட்டுள்ள "ஆவாரை எண்ணெய்" இவைகளையும் கொடுக்கலாம். (சகூ0)

சுரத்திற்கு ஆகாப் பொருள்கள்.

அறுசீர் விருத்தம்.

பாலெண்ணெய் இளநீர் போகம் பருகிடுங் குளிர்ந்த சோறு
கால்நடை தயிர்பு ளிப்பு கடுவேலை யினிப்பு பாகு
மால்தரு மடமான் கன்றே வந்திடுஞ் சுரத்திற் காகா
ஞாலமேல் மனிதர் பேரில் நாட்டிடிற் சந்நி யாமே.

பச்சைமீ னிறைச்சி கோழி பழங்கறி தேங்காய் மாங்காய்
இச்சைநெய் பருப்பு முட்டை யெழிலுள புனுகு சந்தம்
நச்சுள விவைக ளெல்லாம் நாட்டிய சுரத்திற் காகா
கொச்சைமா னிடர்கள் கொண்டால் கொடியதாம் மரணம் நேரும்.

தோசைப் பிட்டுப் பணியாரம் சொல்லும் பயறு மவல்பொரிகள்
வேசை யுறக்கம் மஞ்சவாடை வேண்டாம் பழங்கறி பழங்கஞ்சி
ஆசையுடனே பொருள் தேடல் யாக்கை யுறக்க மிவையாகா
தோட மிகுந்து பலபிணியாய்ச் சொல்லில் மரணம் வந்திடுமே.

சுரத்திற்கு ஆகாப் பொருள்கள்.

(பொ-ரை.)—பால், எண்ணெய், இளநீர், போகம், குளிர்ந்த சோறு, மிக்க கால்நடை தயிர், புளிப்பு, மிகுந்தவேலை, இனிப்புப் பாகு, பச்சைமீன், இறைச்சி, கோழி, பழங்கறி, தேங்காய், மாங்காய், நெய், பருப்பு, முட்டை, புழுகு, சந்தனம், தோசை, பிட்டு, பணியாரம், பயறு, அவல், பொரி, வேசை உறக்கம், மஞ்சள்வாடை, பழங்கஞ்சி, ஆசையுடன் பொருள் தேடல், மிகத் தூக்கம் என்னும் இவைகள் சுர நோயில் ஆகா. ஒருக்கால் தவறிச் சேர்ந் தால் சந்நி தோடமுண்டாகும். அன்றி அது மிகுமானால் மரணத்தை விளைவித்தாலும் விளைவிக்கும். (சகூக)

# 7-A. சந்நிவாதம்

பாலர்கட்கு வரும் சந்நிகளில் அடியிற்கண்ட சந்நிகளே பெரும்பாலும் வரும். அவை—

(1) மாந்த சந்நி, (2) மாந்தகண சந்நி, (3) ஆம சந்நி, (4) கோராம சந்நி, (5) தாந்திரீக சந்நி, (6) அலத்திடு சந்நி, (7) விட சந்நி, (8) குளிர் சந்நி, (9) தோட சந்நி, ஆம்.

## (1) மாந்தசந்நி.

இது, வருவதற்குக் காரணங்களும், இதன் குறி குணங்களும் இதற்குத் தகுந்த பரிகாரங்களும், மாந்த வகுப்பில் காண்க. (சகஉ)

## (2) மாந்தகணச்சந்நியின் குறிகுணம்.

வெண்பா.

மாந்த கணச்சந்நி மன்னிலோ மாந்தமும்
நேர்ந்த கணமுஞ் சிறந்துடலில்—வாய்ந்துகாய்
வாகிச் சிறுசூடாய் வந்துதரத் தேதங்கி
சோகித் தயருமெனச் சொல்.

(பொ-ரை.)—மாந்தமும் கணமும் ஒன்றுகூடின், அவைகளின் சிறந்த குணங்கள் தோன்றுவதுடன், உட்சுரம் போல் வெதும்பலுண்டாய் உதரத் திற்றங்கி, குழந்தைகளை சோகத்தால் அயரச் செய்யும். இவைகளே மாந்த கண சந்நியின் குறிகுணங்களாகும். (சகங)

மாந்தகணச் சந்நிக்கு—கோரோசனை மாத்திரை.

வெண்பா.

சீர்சிறந்த மாசிக்காய் திப்பிலிகோ ரோசனையும்
கார்சிறந்த கோட்டங் கருஞ்சீரம்—பேர்சிறந்த
அக்கரா கார மரைத்துமுலைப் பாலிலிட
இக்கணமே தீரு மிது.

(பொ-ரை.)—(1) மாசிக்காய், (2) திப்பிலி, (3) கோரோசனை, (4) சாதி கோட்டம், (5) கருஞ்சீரகம், (6) அக்கராகாரம், இவ்வாறும் சமபாகம். இவை களை முலைப்பால் விட்டரைத்து மிளகளவு மாத்திரை செய்து முலைப்பாலிலிட, மாந்தகண சந்நி போம். (சகச)

மாந்தகணச் சந்நி, பலசந்நிகளுக்கு—ஏலாதி மாத்திரை.

அறுசீர் ஆசிரிய விருத்தம்.

ஏலாதி வுண்டைக்கு நல்லேல மிலவங்கம் எழில்மதுர மிருவேலிவேர்
இடசங்கு நன்னாரி முந்திரிகை பேரீந் திலாமிச்சை கோரோசனை
தாளீச பத்திரி நிலப்பனை சடாமாஞ்சி சந்தனந் தேவதாரம்
தன்னுடன் திப்பிலி மிலுப்பையின் பூவதுந் தனித்தனிக் கழஞ்சாகவே

மேலான கடகரோ கணிகழஞ் சொக்குமதை மீறுநீர் வார்த்திவைகளை
விழுதா யரைத்துண்டை குன்றியள வாகவே வெய்யிற்ப டாதவகைசெய்
பாலான மொழிமங்கை பாலதனி லேகொடு பார்மாந்த கணமகலுமே
பண்பான கூந்தற் கியாழத்தி லிட்டிடப் பலசந்நி யுந்தீருமே.

(பொ-ரை.)—(1) ஏலம், (2) கிராம்பு, (3) அதிமதுரம், (4) வெட்டிவேர், (5) சங்கன் வேர், (6) நன்னாரி வேர், (7) கொடி முந்திரி, (8) பேரீந்து, (9) இலாமிச்சம் வேர், (10) கோரோசனை, (11) தாளிசப்பத்திரி, (12) நிலப்பனைக் கிழங்கு, (13) சடாமாஞ்சில், (14) சந்தனம், (15) தேவதாரம்,(16) திப்பிலி, (17) இலுப்பைப்பூ, (18) கடக ரோகணி இவைகள் வகைக்கு கழஞ்சு ஒன்று, இவைகளை நீர் விட்டரைத்து குன்றிப்பிரமாணம் மாத்திரை செய்து நிழலிலுலர்த்தி,முலைப்பால் அநுபானத்திலிட மாந்தகண சந்நியும், முதியார்க்கூந்தல் கியாழத்திலிட பல சந்நிகளும் தீரும். (சகரு)

## (3) ஆமசந்நியின் குறிகுணம்.

அறுசீராசிரிய விருத்தம்.

முலையுண்ணு தழுது பார்க்கு முகமது வேற தாகும்
பலபல வலிப்புண் டாகும் பாலகன் குரலுங் கம்மும்
மலமது கட்டி மெய்யில் வந்திடுஞ் சுரமு மீதே
அலமது வல்ல மின்னே வாமத்தின் சந்நி தானே.

(பொ-ரை.)—குழவி முலையுண்ணாது, தாய் முகத்தை நோக்கிப் பார்த்து அழும், முகம் வேற்றுமையடையும், பலவிதமாய் வலியுண்டாகும், குரல் கம்மும், மலம் தீய்ந்து கட்டுபடும், சுரங்காயும், இவைகள் ஆம சந்நியின் குறி குணங்களாகும். அன்றியும்-உடல், மலம் கறுத்தலும், அதிக தாகங் கொள்ளலும், வயிறு பொருமுதலும், கண்கள் விழித்துப் பார்க்காமல் சுழித்தலும், மயக்க மடைதலும் ஆகிய குணங்களும் ஏற்படும். (சகசு)

ஆமசந்நிக்கு—குடி நீர்.

வெண்பா.

சாரணைக்காய் மூக்குரட்டை தன்காய் பொடுதலையும்
பூரணமா முக்கடுகு பூந்துளசி—வாரணியுங்
கொங்கையரே சீரகமுங் கூட்டிக் குடிநீரை
உண்ணவே வாமசந்நி யோடும்.

(பொ-ரை.)—(1) சாரணையின் காய், (2) மூக்குரட்டைக் காய், (3) பொடு தலைக்காய், (4) திரிகடுகு, (5) துளசி, (6) சீரகம், வகைக்கு ஒரு வராகனெ டை எடுத்து இடித்து, உழக்கு நீர் விட்டு அரை ஆழாக்காகச் சுண்ட வைத்து இறுத்தெடுத்த குடிநீரை, காலை மாலை இரு வேளையாகப் புகட்டிவர, ஆம சந்நி நீங்கும். (சகஎ)

உள்ளுக்கு—கடுக்காய்க்குடி நீர், மேலுக்குப்பூச—அண்டத்தைலம்.

அறுசீராசிரிய விருத்தம்.

கடுக்காய் கடுகு ரோகணியும் கடிய சிவதை திரிகடுகு
முடுக்கா யிடித்துக் காய்ச்சியதை மூரிக் குழவிக் கீந்திடவே
துடுக்காய் கன்னிக் கோழிமுட்டை துய்ய தைலம் வேப்பெண்ணெய்
அடுக்கா யுள்ளு மேலிடவும் ஆம சந்நி யகன்றிடுமே.

(பொ-ரை.)—(1) கடுக்காய், (2) கடகரோகணி, (3) சிவதை, (4) சுக்கு, (5) மிளகு, (6) திப்பிலி, வகைக்கு ஒரு வராகனெடை இடித்து உழக்கு நீர் சேர்த்து அரை ஆழாக்கு குடிநீர் செய்து, அதை காலை மாலை உள்ளுக்குக் கொடுத்தும் ; அண்டத் தைலம், வேப்பெண்ணெய், இவைகளை சமவெடை கலந்து மேலிலும் பூசி, உள்ளுக்கும் மூன்று முதல் ஏழு துளி தாய்ப் பால், அல்லது வெந்நீரில் சேர்த்துக் கொடுக்க ஆமசந்நிபோம். (சகூஅ)

ஆமசந்நிக்கு—துவாலை, ஐந்தெண்ணெய்.

எண்சீராசிரிய விருத்தம்.

கொடிவேலி வேர்ப்பட்டை சங்கம் வேரும்
குறுந்தெருக்கு வேர்ப்பட்டை முடக்கற் றானும்
வடிவாக வைந்தெண்ணெய் விட்டுக் காய்ச்சி
வந்தசந்நி யானதற்கு வாகாய்க் கேளு
துடியாக வண்டம்வெள் ளுள்ளித் தைலம்
துருசாக விறக்கியெங்குந் துவாலை செய்யத்
தடிவான வாமசந்நி யோடு மென்று
சாற்றினார் பொதிகைமுனி சாற்றி னாரே.

(பொ-ரை.)—(1) கொடிவேலிவேர்ப் பட்டை, (2) சங்கன் வேர், (3) எருக்கன்வேர்ப் பட்டை, (4) முடக்கற்றான்வேர்ப் பட்டை, வகைக்குப் பலம் ஒன்று எடுத்துத் துகள் செய்து, (1) நல்லெண்ணெய், (2) சிற்றாமணக் கெண்ணெய், (3) இலுப்பை நெய், (4) புங்கின் நெய், (5) வேப்பெண்ணெய் வகைக்கு வீசை கால் கூட்டியதில் சேர்த்து எரித்து, பக்குவத்தில் வடித்ததில், ஒரு பாகம் எடுத்து, அதற்குச் சமபாகம் அண்டமும், வெள்ளுள்ளியும், சேர்த்து வடித்த தைலத்தைக் கூட்டி, உடல் முற்றும் துவாலையிட, ஆம சந்நி நீங்கும். (சகூகூ)

## (4) கோராம சந்நியின் குறிகுணம்.

எண்சீராசிரிய விருத்தம்.

ஓடுமே வாயுமிகும் நாவி பற்றி
வுடலெங்குங் கனகனத்துச் சூடுண் டாகும்
நாடுமே சதைகளெல்லாங் குலிக்கிக் காட்டும்
நல்லவிழி கால்கைகள் பதைப தைக்கும்
தேடுநீ பார்ப்பதற்கு மாந்த மென்று
செப்பவே வாதநீர் கலந்து கொண்டு
பாடுதற்கு வாயில்லை தாளைப் பற்றும்
பருத்துடம்பு நெருப்பதுபோல் மிகவுங் காயும்
கூடுமே வசைந்தசைந்து வலிக்கும் பாரு
கோராம சந்நிமாந்தக் கொடுமை தானே.

(பொ-ரை.)—வாயுமிகும், உந்தியிலிருந்து உடலெங்கும் கனகனத்துச் சூடுண்டாகும், தசைகள் குலுங்கும், கண்-கால்-கை பதைபதைக்கும், பார்ப் பதற்கு மாந்தம் போலிருக்கும், வாதநீர் உடலில் சேர்ந்திருப்பதால் வாய் பேச முடியாது, தாளைக் கட்டும், உடல் வீங்கும், அதிக அளவில் வெப்பு தோன்றும், உடலசைந்தசைந்து வலிப்பு கொள்ளும் ஆகிய இவைகள் கோராம சந்நியின் குறி குணங்களாகும். (௩00)

கோராம சந்நிக்கும் ஐவகை வலிகளுக்கும்
வேப்பம்பட்டை எண்ணெய்.

எண்சீராசிரிய விருத்தம்.

கொடுமையென்று சொல்லாதே வலிகட் கெல்லாம்
கோதில்லா நூருண்டின் வேப்பம் பட்டை
தடுமையில்லாக் கார்த்திகையின் கிழங்கு முள்ளி
தருகருடன் தவசிவேர் சிவமூலி வேரும்
படுமைபடாச் சிற்றண்டம் முசுறண் டங்கள்
பதமான நெய்கள்வகை பலமே தூக்கு
கடுமையுள்ள முட்டிக்காய்ச் சாறு நாழி
கனவேம்பின் கியாழமது நாழி கூட்டே.

கூட்டுவெள்ளைச் சாறணைவேர் கொத்தான் வேர்தான்
கோதையே யேழுவகைப் பலமி ரண்டாய்
ஈட்டுநறு விளக்கெண்ணெய் நாழி சேர்த்தே
ஏலஞ்சீ ரகமிரண்டு ரோணி காயம்
தீட்டுவகைப் பலமிரண்டு பொடித்துப் போட்டுத்
தீயெரித்து மெழுகாக்கிக் காசெடையே வாரு
மூட்டோடே யோடுமே வலியஞ் சுந்தான்
மூன்றுநாள் பத்தியமாய் முனைந்து பாரே.

(பொ-ரை.)—(1) நூருண்டு சென்ற வேம்பின் பட்டை பலம் பத்து எடுத்து நைய இடித்து எட்டுபடி நீர் விட்டு ஒரு படியாகக் குறுக்கியதுடன் (2) ஆற்றுத்தும்மட்டிக்காய்ச் சாறு ஒரு படி, (3) சிற்றுமணக்கெண்ணெய் ஒரு படி, (4) அண்டத் தைலம் பலம் ஒன்று, (5) முசுறு முட்டைத் தைலம் பலம் ஒன்று, சேர்த்து அதில் (1) கலப்பைக் கிழங்கு, (2) கண்டங்கத்திரி வேர், (3) கருடன் கிழங்கு, (4) தவசு முருங்கை வேர்ப்பட்டை, (5) பெருங் கிழங்கு, (6) வெண்சாறணை வேர், (7) கொத்தான் வேர், இவ்வேழும் வகைக்குப் பலம் இரண்டு, கடைச் சரக்குகளாகிய (1) ஏலம், (2) நற்சீரகம், (3) கருஞ்சீரகம், (4) கடகரோகணி, (5) பெருங்காயம், இவ்வைந்தும் வகைக்குப் பலம் இரண்டு, பொடித்துக் கூட்டி எரித்து, பக்குவ பாகத்தில் வடித்து, காசெடை விதம் காலை மாலை இரு வேளையாக மூன்று நாள், தாய்க்குப் பத்தியம் வைத்துக் கொடுத்துவர, கோராம சந்நியும், ஐவகை வலிகளும், நீங்கும். (௫௦௧)

(5) தாந்திரீகசந்நியின் குறிகுணம்.

அறுசீராசிரிய விருத்தம்.

வேகமாய்ச் சுரமுண் டாகும் மேனியும் பதைப்புண் டாகும்
மோகமாய் முலையுண் ணாது மூர்ச்சையாய்க் கண்ணு றங்கும்
ஆகமே பசலை காட்டி யரையினிற் குளிர்ந்து காணும்
தாகமே மிகவுண் டாகும் தாந்திரீக சந்நி யாமே.

(பொ-ரை.)—தாந்திரீக சந்நியில்—சுரம் வேகமாய்க் காய்தல், உடம்பு பதபதைத்தல், விருப்பத்துடன் முலையுண்ணாமை, மூர்ச்சையோடு உறங்கல், உடலில் சிலிர்ப்புண்டாதல், அரைக்குக் கீழ் குளிர்ந்திருத்தல், நீர் வேட்கை மிகுதல், ஆகிய குறி குணங்கள் இருக்கும். (௫௦௨)

தாந்திரீக சந்நிக்குப் புகை.

அறுசீர் விருத்தம்.

வாய்ந்தவேப் பெண்ணெய் வேளை வளருமூ மத்தை கஞ்சா
சேர்ந்திடு முருங்கை யோடு சித்திர மூல வேரும்
காந்துவெள் ளுளிவ சம்பு கம்பளம் மஞ்ஞை யீர்க்கு
போந்துநீ கோளா யண்டம் புகைக்கத்தாந் திரீகம் போமே.

(பொ-ரை.)—(1) வேப்பெண்ணெய், (2) வேளைவேர், (3) ஊமத்தை வேர், (4) கஞ்சாசடை, (5) முருங்கைவேர்ப்பட்டை, (6) சித்திரமூலவேர்ப் பட்டை, (7) வெள்ளுள்ளி, (8) வசம்பு, (9) கம்பள மயிர், (10) மயிலிறகு, (11) கோழி முட்டைத் தைலம், இவைகளில் (1), (11)-ல் கண்ட எண்ணெய் நீங்க, மற்றச் சரக்குகளை சமவெடை எடுத்து நுண்ணிய பொடி செய்து, இதைக் குழம்பு பக்குவத்திற்குக் கொண்டுவரக் கூடிய அளவிற்கு வேப்பெண் ணெயையும் அண்டத் தைலத்தையும் சமபாகமாகக் கூட்டியதை விட்டுக் குழப்பி சீலையில் தடவி திரியாக்கிக் கொளுத்தி அணைத்துப் புகை காட்ட, தாந்திரீக சந்நி விலகும். (௩௦௩)

## (6) அலத்திடு சந்நியின் குறிகுணம்.

அறுசீராசிரிய விருத்தம்.

கூட்டங்கண் டெழுந்தி ருக்கும் குளிரும்வாய் பிதற்ற லுண்டாம்
வாட்டமா யிளைக்கும் வேர்க்கும் மதிமுகம் வெளுக்கும் பேய்போல்
தேட்டமாய் வார்த்தை யுண்டாஞ் சீரில்லா மூச்சுண் டாகும்
ஆட்டமாஞ் சரீரந் தானும் அலத்திடுஞ் சந்நி யாமே.

(பொ-ரை.)—வெகு சனங்களைக் கண்ட மாத்திரத்தில் எழுந்திருக்கும், உடல் குளிரும், வாய் பிதற்றும், இளைக்கும், வேர்க்கும், முகம் வெளுக்கும் தெளிவுடன் பேசும், துன்பத்திற்கிடமான மூச்சுண்டாகும், உடல் ஆட்டங் கொள்ளும், இக்குணங்களுடைய சந்நிபாதசுரம், அலத்திடு சந்நி எனப் பெயராம். (௩௦௪)

அலத்திடு சந்நிக்கு—வெற்றிலைச்சுரசம்.

சன்னவெற் றிலைசுக் கோமஞ் சாற்றுமா விலிங்கு நொச்சி
துன்னிய வக்கரா காரஞ் சூழ்முருங் கையுமெ ருக்கும்
தின்னுஞ்சிற் றரத்தை கண்ட திப்பலி நறுக்கி வாங்கிப்
பண்ணுமிச் சுரசத் தாமை பற்பமுங் கலந்து வாரே.

(பொ-ரை.)—(1) வெற்றிலை, (2) சுக்கு, (3) ஓமம், (4) மாவிலிங்குப் பட்டை, (5) நொச்சிக் கொழுந்து, (6) அக்கராகாரம், (7) முருங்கப்பட்டை, (8) எருக்கம் பூ, (9) சிற்றரத்தை, (10) திப்பலிக் கட்டை இப்பத்தும் வகைக்கு அரை வராகனெடை எடுத்து நீர் விட்டரைத்துப் பிழிந்து சுட வைத்து, அரை முதல் ஒரு சங்களவில் ஆமை யோட்டுப் பற்பம் இரண்டரிசியெடை சேர்த்துக் கொடுக்க, அலத்திடு சந்நிபோம். (௩௦௫)

## (7) விடசந்நியின் குறிகுணம்.

வெண்பா.

விடமான சந்நியது மேவினல் நஞ்சு
திடமாக யேறல்போற் சேத்மம்—உடன்றுதலை
மீதேறிப் பின்கழுத்தில் மேவியுடல் காய்ந்துகுளிர்
மீதாக முண்டாகு மே.

(பொ-ரை.)—குழந்தைகளுக்கு விட சந்நி உண்டாகுமானால், ஒருவனுக்கு விடம் எவ்வளவு விரைவாக உடலில் ஏறுமோ அவ்வளவு விரைவாகச் சேத்மமானது தலையில் ஏறி, அதனால், பின் கழுத்தில் வலித்தல், உடல் மிகக்காய்தல், அத்துடன் குளிர்தல், மிக்க நீர் வேட்கை என்னும் இவைகள் உண்டாகும். (ருOசு)

விட சந்நி, குளிர் சந்நி, சுரம், விக்கலுக்கு—ஏலாதி மாத்திரை.

எண்சீராசிரிய விருத்தம்.

ஈந்திட்டா லேலாதி யுண்டை கேளா
 யினிதான திரிகடுகு சாதிக் காயும்
ஈந்திட்ட இராம்பேலம் ரோணி மஞ்ச
 ளெழில்நாபி சரக்குவகை கழஞ்ச தாக
ஈந்திட்ட கல்வத்தில் பொடியாய்ச் செய்திங்
 கிருசாமம் பழச்சாறு தன்னு லாட்டி
ஈந்திட்ட பயற்றளவி லுண்டை செய்திங்
 கினிமாசிப் பத்திரியின் கியாழத் தூட்டே.

ஊட்டவே விடசந்நி சுரமும் விக்க
 லுறவான குளிர்சந்நி யூர்விட் டோடும்
நீட்டவே யிந்நூலை முந்நூ றுக்கி
 நிகழ்த்தினேன் குழந்தைகளி னிறக்கத் தாலே
கூட்டவே சிசுவின்நோய் தீர்ப்பா ராகில்
 குரூரமுள்ள பிறப்பதுவு மற்றுப் போமே.

(பொ-ரை.)—(1) திரிகடுகு, (2) சாதிக்காய், (3) இராம்பு, (4) ஏலம், (5) கடகரோகணி, (6) மஞ்சள், (7) நாபி, இவைகள் வகைக்கு ஒரு கழஞ்சி, இவைகளை கல்வத்திலிட்டுப் பொடித்து, எலுமிச்சம் பழச்சாறு விட்டு இரண்டு சாமமரைத்து, பயறளவு மாத்திரை செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொண்டு, வேளை ஒன்றுக்கு ஒரு மாத்திரையாக மாசிப்பத்திரிக் கியாழத்தில் கொடுக்க விடசந்நி, சுரம், விக்கல், குளிர்சந்நி, நீங்கும். (ருOஎ)

விடதோட சந்நி, மாந்தம், பித்த சுரம், வாந்திக்கு

கத்தூரி மாத்திரை.

எய்தாமல் கத்தூரி கழஞ்ச தொன்றும்
இதமான குங்குமப்பூ கழஞ்சி ரண்டாம்
எய்தாமல் ரோசனையுங் கழஞ்சு மூன்றும்
இவைமூன்றுங் கல்வத்தி விட்டுக் கொண்டே

எய்தாமல் அமுர்தமெனு முலைப்பால் விட்டே
இனிதான சாமமொன் றரைத்துக் கொண்டே
எய்தாமற் குன்றிபோ னிழலு லர்த்தி
எடுத்துநீ செப்புதனில் அடைத் திடாயே.

அடைத்திட்ட மாத்திரைதா னொன்றெ டுத்தே
யந்தெடைக்கு முலைப்பால்விட் டிழைத்துக் கொண்டு
விடைத்திட்ட முனைநாவில் தீட்டிட் டக்கால்
விடதோட சந்நிமாந்தம் வீறிட் டோடும்

கடத்தெழுந்த பித்தசுரம் வாந்தி தீரும்
கடைமருந்தின் போக்கறியாக் கழுதை மாண்பர்
குடைத்தெழுந்த குடநகில மானே கேளாய்
குருவருளால் கத்தூரி குளிகை யாமே.

(பொ-ரை.)—கத்தூரி ஒரு கழஞ்சு, குங்குமப்பூ இரு கழஞ்சு, கோரோசனம் மூன்று கழஞ்சு, இவைகளை முலைப்பால் விட்டரைத்துக் குன்றியளவு உருட்டி முலைப்பாலிலே கொடுக்க, விடதோடம், சந்நிமாந்தம், பித்தசுரம் தீரும். (௫0௮)

## (8) குளிர்சந்நியின் குறிகுணம்.

வெண்பா.

குளிர்சந்நி பாலர்க்குக் கூடின் மிகவும்
குளிர்தலுடன் வேர்வை கொடுத்து—நளினமாய்ப்
பின்னருங் காய்ந்து பெருகத் தலைவலித்தே
அன்னநீர் கொள்ளா தறி.

(பொ-ரை.)—குளிர்சந்நி குழந்தைகட்கு உண்டாகில், துவக்கில் குளிருண்டாய், வேர்த்துப் பிறகு சுரங்காயும், தலை பாரம் கொண்டு வலிக்கும், உணவும் நீரும் கொள்ளாது. (௫0௯)

குளிர் சந்நிக்கு—இராமபாணக் குளிகை.

அறுசீராசிரிய விருத்தம்.

மஞ்சளும் சாதிக் காயும் வருந்திரி கடுகங் கிராம்பு
மிஞ்சிய கடகரோணி மிகுமர மஞ்சள் நாபி
அஞ்சிய நிம்ப மோர்நாள் சாறுவார்த் தரைத்து ருட்டி
கொஞ்சிய ராம பாணங் குளிர்சந்நி சுரங்கள் போமே.

(பொ-ரை.)—(1) மஞ்சள், (2) சாதிக்காய், (3) சுக்கு, (4) திப்பிலி, (5) மிளகு, (6) இலவங்கம், (7) கடகரோகணி, (8) மரமஞ்சள், (9) நாபி இவைகளைச் சமவெடை தூக்கிப் பொடித்து எலுமிச்சம் பழச்சாற்றில் நான்கு சாமமரைத்து, மிளகளவு மாத்திரை செய்து நிழலில் உலர்த்திக் கொண்டு, தேன், முலைப்பாலாதி அநுபானத்தில் கொடுக்க, குளிர் சந்நி நீங்கும்.

குறிப்பு.—விட சுரத்தின் கீழ் எழுதியுள்ள ஏலாதி மாத்திரையும் இச்சந்நிக்கு நேர் பரிகாரமாகும். (௫௧0)

## (9) தோடசந்நியின் குறிகுணம்.

எண்சீராசிரிய விருத்தம்.

மாந்தகணம் போராம மொன்றாய்க் கூடி
வயிறுவிடுந் தானுப்பும் வாந்தி பண்ணும்
சேர்ந்தசுரங் கால்கையுங் குளிர்ந்தி ரத்தம்
சீதமிகப் பற்றிநின்று வாயு தள்ளும்

போந்தகண்நா வெந்துபுண்ணுய்த் தோட முற்றிப்
போகாமல் சந்நியாய் வலித்து வேர்க்கும்
சாந்தமுட னிதுதீர மாத மொன்று
தப்பிஞல் நோயாறுந் திங்கள் மூன்றே.

(பொ-ரை.)—மாந்த கணமும், போராம கணமும் ஒன்ருய்க்கூடிஞல், தோட சந்நி யுண்டாம். அதன் குறிகளாவன :—வயிறுபேதியாதல், வயிறு உப்பிக் கொள்ளுதல், வாந்தியாதல், சுரங் காய்தல், அப்படி சுரங்காய்ந்தா லும் காலும் கையும் குளிர்ந்திருத்தல், இரத்தமாகவாவது சீதமாகவாவது இரத்தமும் சீதமும் கலந்தாகவாவது படபடவென்று ஒலித்து வாயு போதல், கண், நா வெந்து புண்ணுய்த் தோடம் முற்றிப்போகாமல், சந்நி வடிவத்தைப் பெற்று வலித்தல், வேர்த்தல் என்பவைகளாம். இத் தோட சந்நியானது தணிந்து தீர்வதற்கு ஒரு மாதம் செல்லும். அப்படி தீராவிட்டால், மூன்று மாதத்தில் தீரும் என்று அறிவாய். (௫கக)

## தீராத சந்நி குணம்.

அறுசீராசிரிய விருத்தம்.

கண்ணை நாக்கைப் புருவத்தைக் காலைக் கையை வலித்துமிக
விண்ணைப் பார்க்கும் பெருமூச்சு விட்டுப் பின்னும் வலிப்புண்டாம்
உண்ண முலையு மொவ்வாது உறங்கா துடலு மஞ்சளிக்கும்
நண்ணுந் தீராச் சந்நியென நவின்ருர் முனிவோ ருலகோர்க்கே.

(பொ-ரை.)—கண்-நா-புருவம்-கால்-கை இவ்வுறுப்புகளை வலித்தல், ஆகாயத்தை நோக்கிப் பார்த்தல், பெரு மூச்சு விட்டுப் பிறகு வலியுண்டாதல், தாய்ப் பாலைப் பிடித்துண்ணக்கூடாமை, தூக்கம் பிடித்துத் தூங்காமை, உடல் மஞ்சள் நிறம் பெறல் ஆகிய குறி குணங்கள் கண்டால், தீராத சந்நி யெனக் கணிக்க வேண்டும். (௫கஉ)

சந்நிக்கு—வேப்பெண்ணெய்.

எண்சீராசிரிய விருத்தம்.

சாப்பிடவே வேப்பெண்ணெ யரைப்படி தானுரும்
தன்னுேடு தனிக்குட்டி விளாவின் வேரும்
தாப்பிட்ட தூதுளைநாய் வேளை வேரும்
தருஞ்சீரங் கத்தூரி மஞ்ச ளோடு
மாப்பிட்ட வெண்காயம் சிற்ற ரத்தை
மரமஞ்ச ளிவையெல்லா மெண்ணெ யிட்டுக்
காப்பிட்டே யெரித்துபத மாயி றக்கிக்
கரண்டிகொளச் சந்நியெலாங் காணு தன்றே.

(பொ-ரை)—(1) வேப்பெண்ணெய் படி அரை, இதில் (2) குட்டி விளா வேர், (3) தூதுளைவேர், (4) நாய்வேளைவேர், (5) சீரகம், (6) கத்தூரி மஞ்சள், (7) வெண்காயம், (8) சிற்றரத்தை, (9) மரமஞ்சள் இவைகள் வகைக்குப் பலம் கால், பால் விட்டரைத்துக் கலக்கி, எரித்துப் பக்குவத்தில் இறக்கி, வேளை ஒன்றுக்கு ஒரு உச்சிக் கரண்டி வீதம் கொடுக்க சந்நி தீரும். (௫கங)

சந்நி சுரம், கபம், இவைகட்கு—வேப்பெண்ணெய்.

எண்சீராசிரிய விருத்தம்.

வேப்பெண்ணெய் படியரைதான் சங்கிலைச் சாறு
 விதமான படியரைக்கால் பாவட்டைச் சாறு
ஆப்பட்ட முசுறுமுட்டை படிய ரைக்கா
 லடைவாக வெண்ணெயிட்டுக் கடைமருந்து
மாப்பட்ட சுக்குதிப் பிலிவ சம்பு
 வளமான மிளகுமிரு சீர கந்தான்
தாப்பட்ட கத்தூரி மஞ்சள் பூண்டு
 தனித்தனிவ ராகனெடை வாங்கிக் கொள்ளே.

வாங்கியே பொடியாக்கி யெண்ணெ யிட்டு
 வளமான மெழுகுபதம் வடித்துக் கொண்டு
தாங்கியே துட்டெடைதான் ஒருவே ளைக்குத்
 தயவாகக் கொடுத்துவரத் தீரும் வியாதி
தூங்கிவிழுஞ் சந்நிசுரங் கபமுந் தானே
 சொல்லுகிறேன் பறக்குமே மெய்தா னீது
சாங்கமுள எண்ணெயிது கைவி டாதே
 தப்பாவெந் நீர்ச்சோறு சாப்பி டாயே.

(பொ-ரை.)—வேப்பெண்ணெய் அரை படி, சங்கிலைச் சாறு, பாவட்டைச் சாறு, முசுறு முட்டை, இவைகள் வகைக்கு அரைக்கால் படி இவைகளைக் கலந்து அதில் சுக்கு, திப்பிலி, வசம்பு, மிளகு, சீரகம், கருஞ்சீரகம், கத்தூரிமஞ்சள், பூண்டு, வகைக்கு வராகனெடை ஒன்று பொடித்துக் கலந்து, மெழுகு பதத்தில் வடித்து, வேளை ஒன்றுக்கு துட்டெடை வீதம் கொடுத்து வர, சந்நிசுரம், கபம் தீரும். வெந்நீர்ச் சோறு கொடுக்க வேண்டும். (௫கச)

# 8. கழிச்சல் வகுப்பு

## (1) மாந்தக்கழிச்சல் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

வாந்தி பிராந்தி மூர்ச்சயதாய் வாய்ந்து குரலுஞ் சீரணித்துக்
[டாம்
காய்ந்து மேனி வெதுவெதுப்பாய்க் கைகால் குளிர்ந்து வலியுண்
சேர்ந்து கழியு மலந்தானும் சீர்கெட் டிருக்கும் பலவிதமாய்ப்
போந்த மாந்தக் கழிச்சலிது பொல்லா தெனவே புகன்றனரே.

(பொ-ரை.)—வாந்தி, மயக்கம், மூர்ச்சை, குரல் கம்மல், உடல்காய்ந்து உடல் வெதுவெதுத்தல், கைகால் குளிர்ந்திருத்தல், வலித்தல், மலம் சேர்ந்திருந்து பலவிதமாய்க் கழிதல், குழந்தை சரியான நிலையிலில்லாமல் பலவிதத் துன்பத்தை யடைதல் என்னும் இக்குறிகள் கண்டால் மாந்தக் கழிச்சலாம். இக்கழிச்சல் மிகக் கொடியதாகும். (ருகரு)

மாந்தக்கழிச்சலுக்கு—நல்வேளைச் சாறு.

அறுசீர் விருத்தம்.

நல்லவேளை நாய்வேளை நாறும் வேலிப் பருத்தியுடன்
சொல்லுங் குப்பை மேனியிலை துதிக்கு மகதிப் பழுப்புடனே
வெல்லும் வசம்பு வெள்ளுள்ளி வேண்டும் படியே சாறுவாங்கி
உள்ளுங் கொடுத்துத் துவாலையிட வோடுங் கழிமாந் தந்தானே.

(பொ-ரை.)—நல்வேளையிலை, நாய்வேளையிலை, வேலிப்பருத்தியிலை, குப்பைமேனியிலை, அகத்திப்பழுப்பு, வசம்பு, வெள்ளுள்ளி இவைகளின் சாறு சம வெடை எடுத்து ஒன்ருய்க்கூட்டி, நோய் வன்மைக்குத் தக்களவு உள்ளுக்குக் கொடுத்து மேலுக்குந் துவாலையிட, மாந்தக் கழிச்சல் நீங்கும். (ருகசு)

கழிச்சல் தோடத்திற்கு—உப்பிலி நெய்.

வெண்பா.

உப்பிலியின் பூண்டை உறநறுக்கி பசுவினெய்
நற்புடனே சேர்த்துத்தான் நாற்சாமம்—செப்பக்
குலவியில் வைத்துக் கொடுகழிச்சல் தோடம்
அலறியே யோடு மறி.

(பொ-ரை.)—உப்பிலாங்கொடியை நறுக்கினது பலம் இரண்டரை, பசுவின்நெய் இரண்டரைப் பலம் இவைகளை ஒரு மண்சட்டியில் கூட்டி, நான்கு சாமம் சூரியபுடம் வைத்து, வேளைக்கு ஒரு கரண்டி வீதம் கொடுக்க, கழிச்சல் தோடம் நீங்கும். (ருகஎ)

மாந்தக்கழிச்சல், மாந்த சந்நிக்கு—வேளைக் குடிநீர்.

வெண்பா.

நல்வேளை யோர்பிடியும் நாட்டமாய்க் கொண்டுவந்து
செல்லவே மூன்றறுப்பாய்ச் செய்ததனை—வல்ல
கனலதனிற் சட்டியைக் காயவைத் துப்பு
புனிதமா யோர்சேரைப் போடு.

எண்சீர் விருத்தம்.

போட்டதொரு வுப்பதுவுஞ் சாம்ப லாகப்
புகட்டியே வறுத்துநீ துடைத்துக் கொட்டிக்
காட்டவே வசம்பதனைத் தட்டிப் போட்டுக்
கருகியே தீப்பற்றி வேகும் போதே
ஆட்டவே முன்னறுத்த வேளை தன்னை
அதிலிட்டுப் பொன்னிறமாய் வறுத்துக் கொள்ளு
தாட்டவே யரைசிரங்கை நீர்தெ ளித்துத்
தானதுவுஞ் சுண்டுமட்டும் வறுத்துக் கேளே.

வறுத்துமறு படிகொஞ்ச நீர்தெ ளித்து
மருவியது சுண்டுமட்டும் வறுத்துக் கொள்ளு
வறுத்துமே யின்னமொரு படிதான் நீரை
வார்க்குமுன்னே யோமங்கா செடைதான் போடு
வறுத்துப் பொரியும்போது சலத்தை வார்த்து
மகத்தான கணபதிக்குப் பூசை செய்து
வறுத்துநீ யெட்டொன்றாய் வற்றக் காய்ச்சி
வரவிறக்கிக் கியாழமொரு சங்கு போடே.

வெண்பா.

போடவே மாந்தத்தின் பொல்லாக் கழிச்சலுமே
எடலில் மாந்தசந்நி யெங்கேயோ—ஓடிவிடும்
பேர்சொன்னால் நில்லாது பேழ்விற் புருவநீண்
காரளகப் பெண்ணரசே காண்.

(பொ-ரை.)—நல்வேளை ஓர் பிடியெடுத்து அதை மூன்றறுப்பாய் அறுத்து வைத்துக்கொண்டு, ஒரு மண்சட்டியைக் காயவைத்து அதில் ஒரு சேர் உப்பைக்கொட்டி அது சாம்பலாகுமட்டும் எரித்து பின்பதைக் கொட்டிவிட்டு, சட்டியைத் துடைத்து அடுப்பேற்றி, அதில் ஒரு தேர் வசம்பை நறுக்கிப்போட்டு, அது தீபற்றிக் கருகி வருஞ்சமயத்தில், முன் அறிந்துவைத்த வேளைக்கீரையைப் போட்டுப் பொன்போல் வறுத்து, அதிலரை சிரங்கை நீரைத்தெளித்து அது வாளுமட்டும் வறுத்து, மறுபடியுங் கொஞ்சம் நீர் தெளித்து அது வாளுமட்டும் வறுத்து, மறுபடியுங் கொஞ்சம் நீரை தெளித்து அதுவும் வாளும் வரை வறுத்து, அதில் ஒரு காசெடை ஓமத்தைப்போட்டு அது பொரியுஞ்சமயத்தில், ஒருபடி நீரை விட்டு எட்டில் ஒன்றாக வடித்து நாள் ஒன்றுக்கு ஒரு சங்கு விழுக்காடு இருவேளை புகட்டிவர, மாந்தக் கழிச்சல், மாந்த சந்நி இவை நீங்கும். (௫௧௮)

## கழிச்சலுக்கு—கீழாநெல்லி வேர்க்கற்கம்.

### வெண்பா.

கீழ்க்காயி னெல்லிவேர் கேள்முலைப்பால் விட்டரைத்தே
வாழ்க்காமற் சங்களவு வார்க்கவே—காழ்க்கூறும்
பொல்லாக் கழிச்சலது பூவுலகை விட்டிங்கு
நில்லேனென் றோடிவிடு நேர்.

(பொ-ரை.)—கீழ்க்காய்நெல்லிவேர் ஒரு வராகனெடையெடுத்து முலைப் பால் போதுமானவரை விட்டரைத்துக் கரைத்து, வேளைக்கு ஒரு சங்கு அளவு வார்க்கக் கழிச்சல் நிற்கும். (ருகக)

## கழிச்சலுக்கு—அதிவிடய மாத்திரை.

### எண்சீர் விருத்தம்.

அதிவிடயஞ் சாதிக்காய் சாதி பத்திரி
அபினிகடுக் காய்தான்றி மிளகு சீரம்
மதியகருஞ் சீரகமும் வகைவ கைக்கு
வளமாக வராகனரை யாகக் கூட்டிச்
சதியில்லா வேலமது வராக னொன்று
தழைத்தமா தளந்தளிரு மத்திப் பட்டை
கெதியான விவையிரண்டுங் கியாழம் வைத்துக்
கிருபையாய் வார்த்தரைத் தடையாய்த் தட்டே.

தட்டியே சட்டிதனைக் காய வைத்துத்
தானரச மிலையில்கட்டிப் புடத்தைப் போடாய்
அட்டியின்றிக் கியாழமது வார்த்து வார்த்தே
யரசிலைகாந் தப்புடத்தைப் போட்டுப் போட்டே
இட்டியே இப்படியைந் தேழு பத்தாம்
இயல்புடம்போட் டேயெடுத்த ரைத்து மைபோல்
கொட்டியே குன்றியள வுண்டை செய்து
குணமாக நிழலுலர்த்திக் கழிச்ச லுக்கே.

கழிச்சலுக் கெருமைத்தயிர் வடிமிட்டே தான்
கண்மணியே ஓர்உண்டைக் கொடுக்கத் தீரும்
பழிச்சலாஞ் சுரமாகில் வெந்நீர் தன்னில்
பரிந்துநீ இட்டக்கால் பறந்து போகும்.
அழிச்சலாங் கழிச்சலுக்குத் தகும்பிர காரம்
அநுபானம் அறிந்திட்டால் திரா துண்டோ
தெழித்தலாம் பதுமபங் கயம்போற் கண்ணாய்
திருவளரும் பொதிகைமுனி செயலாங் காணே.

(பொ-ரை.)—அதிவிடயம், சாதிக்காய், சாதிபத்திரி, அபினி, கடுக்காய்த் தோல், தான்றிக்காய்த்தோல், மிளகு, சீரகம், கருஞ்சீரகம் இவைகள் வகைக்கு அரை வராகனெடை; வலம்பிரி ஒரு வராகனெடை இவைகளைத் தூளாக இடித்துக் குழிக்கல்லிற் போட்டு மாதளந்தளிர், அத்திப்பட்டை

இவைகள் வகைக்கு ஐந்து பலம் இடித்து ஒரு மண் சட்டியிலிட்டு இரண்டு படி தண்ணீர்விட்டு கால்படியாகக் காய்ச்சின குடிநீர்விட்டு அரைத்து, அதை வழித்து அடைபோல் தட்டி, வேறொரு சட்டியை அடுப்பிலேற்றி, அது காய்ந்தவுடன் மேற்படி அடையை அரசிலையால் மூடி, அச்சட்டியில் வைத்து அந்த அரசிலை கருக எரிக்கவும். இவ்வாறு புதிதுபுதிதான அக்குடிநீரால் அரைத்தரைத்து ஐந்து, ஏழு அல்லது பத்து முறை முன்செய்ததுபோற் செய்து எடுத்து, அரைத்துக் குன்றியளவாக மாத்திரை செய்து நிழல் உலர்த்தி, வேளைக்கு ஒரு மாத்திரை எருமைத் தயிர்வடிகட்டின நீரில் கொடுத்தால், கழிச்சலும், வெந்நீரில் கொடுத்தால் சுரமும் தீரும். கழிச்சலுக்குத் தக்க வேறு துணை மருந்துகளிலும் கொடுக்கலாம். (ருஉ௦)

## (2) கணக்கழிச்சல் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

சீதங் கழியு மலங்கழியும் திரும்பிக் கெட்ட பால்போலே
போதக் கழியுங் கறித்தண்ணீர் போலுங் கையுங் கால்குளிர்ந்து
காதை யடைக்கும் வெதுப்புண்டாம் கையிற் பிள்ளை தங்காது
கோதா யிந்தக் குணங்கண்டால் குலவு மிதன்பேர் கழிகணமே.

(பொ-ரை.)—சீதமாகவாவது மலமாகவாவது கழிதல், இவ்விரண்டு வகைகளல்லாமலும் கெட்டுப் போன பால்போலவும் கறித்தண்ணீர் போலவும் கழிதல், கைகால் குளிர்ந்திருத்தல், காது அடைத்தல், சுரம் காய்தல், பிள்ளை கையில் தங்காமை, இவ்வாறிருப்பின், இது கழிகணமென்றறிவாய். (ருஉக)

கணக்கழிச்சலுக்கு—வெங்காயக் குடிநீர்.

அறுசீர் விருத்தம்.

உண்ணுமீ ருள்ளி பத்து மொருபிடி கருவே லீர்க்கும்
எண்ணுஞ்சீ ரகமோர் காசு மிருகாசு வெந்த யந்தான்
வண்ணமா யிவைநி றுத்து வறுத்துநீர் விட்டுக் காய்ச்சித்
திண்ணமாய்க் கொடுக்கப் பேதி கழிகணந் தீரு மன்றே.

(பொ-ரை.)—வெங்காயம் பத்து, கருவேல் ஈர்க்கு ஒரு பிடி, சீரகம் ஒரு காசெடை, வெந்தயம் இரண்டு காசெடை இவைகளில் வெங்காயத்தைக் குறுக அரிந்தும், மற்றவற்றை அப்படியே வறுத்தும் இடித்து, அரை படி நீர் விட்டு கால் படி குடிநீர் செய்து, வேளைக்கு இரு சங்களவு கொடுக்க, கணக் கழிச்சல் நீங்கும். (ருஉஉ)

கழிகணம், காய்ச்சல், தாகம் வரட்சிக்கு
இலந்தைக் குடிநீர்.

வெண்பா.

இலந்தைநா ரத்தைபுளி யின்கணப் பூண்டும்
கலந்துநெல்லி யீர்க்குடனே காய்ச்சுண்—நலமாம்
கழிகணமு முள்வரட்சிக் காய்ச்சலுடன் தாகம்
பழிவருமென் றோடிவிடும் பார்.

(பொ-ரை.)—இலந்தை ஈர்க்கு, நாரத்தை ஈர்க்கு, புளி ஈர்க்கு, கணப் பூண்டு, நெல்லி ஈர்க்கு இவைகளை வகைக்கு கால் பலம் எடுத்து, எட்டு பங்கு நீர் விட்டு, எட்டில் ஒன்றாகக் குடிநீர் செய்து கொடுத்துவர, மேற்படி நோய்கள் நீங்கும். (ருஉ௩)

கழிகணத்திற்கு—மூக்குரட்டை எண்ணெய்.

எண்சீர் விருத்தம்.

மூக்குரட்டை சாரணையு முடக்கற் றானும்
    முத்தெருக்கஞ் செவியுடனே முயலக் கேளாய்
பார்க்கவிதழ்த் தாமரைச்சா றுடனே கூட்டிப்
    பகர்செப்பு நெருஞ்சிலிவை படிதா னென்று
வார்க்கவிளக் கெண்ணெயோர் படிதா னாகும்
    மயிலிறகு பலமொன்று கலந்து காய்ச்சி
ஆர்க்குமிட மலவாத நீங்கி யேதான்
    அந்தரக் கழிகணங்கள் நீங்கிப் போமே.

(பொ-ரை.)—மூக்குரட்டை, சாரணை, முடக்கற்றான், முத்தெருக்கஞ்செவி, ஓரிதழ்த்தாமரை, செப்பு நெருஞ்சில் வகைக்குச் சாறு படி ஒன்று, ஆமணக்குநெய் படி ஒன்று, இவற்றை ஒரு மண் சட்டியில் ஊற்றி, இவற்றோடு ஒரு பலம் மயிலிறகின் சாம்பல் சேர்த்துக் காய்ச்சி, காலையில் மாத்திரம் ஒரு உச்சிக்கரண்டியளவு நோய் வன்மைக்குத் தக்க நாளளவு கொடுத்தால், கழி கணங்களின் வகைகளெல்லாம் நீங்கும். (ருஉச)

கழிச்சல் இருமலுக்கு—வட்டத்திருப்பி நெய்.

அறுசீர் விருத்தம்.

வட்டத் திருப்பி சிறுதேக்கு மதுரம் வசம்பு சுக்கோடே
இட்ட மிளகு திரிபலையு மிசைந்த விடயம் கோட்டமுத்தம்
திட்டங் கழஞ்சு இம்பூரல் சேர்ந்த சாறு படியாநெய்
மட்டப் படியா யெரித்தருந்த மாறுங் கழிச்ச லிருமலுமே.

(பொ-ரை.)—வட்டத்திருப்பி, சிறுதேக்கு, அதிமதுரம், வசம்பு, சுக்கு, மிளகு, கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், நெல்லிவற்றல், அதிவிடயம், கோட்டம், கோரைக்கிழங்கு இவை வகைக்குக் கழஞ்சு ஒன்று எடுத்து வெந்நீர் விட்டு நன்றாயரைத்து, ஒரு மண் சட்டியிற் போட்டு அதில், இம்பூரல் சாறு ஒரு படி, பசுவின்நெய் ஒரு படி, இவற்றை அதிலூற்றிக் காய்ச்சிப் பக்குவத்திலிறக்கி, வேளைக்கு ஒரு உச்சிக்கரண்டியாக நோயின் வன்மைக்குத் தக்க அளவு கொடுக்க, கழிச்சல் இருமல் நீங்கும். (ருஉரு)

வாந்தி, கழிச்சலுக்கு—நெல்லிக் குடிநீர்.

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

நெல்லிப் பட்டை மாம்பட்டை நிகழு மரசம் பட்டையுடன்
வெல்லும் பருத்தி யின்கொட்டை மேவும் பருத்தி யின்பிஞ்சும்
அல்லு மத்திப் பட்டையுட னதன்றன் றளிரும் வகைவகைக்குச்
சொல்லும் வராக னெடையொன்று நூக்கிக் குறுணி தண்ணீரே.

தண்ணீ ரதனி லேபோட்டுத் தழலிற் காய்ச்சித் தானிறக்கி
வெண்ணீ ரிரண்டு வேளையிலும் மேவி யதனைப் பாலகர்க்கே
எண்ணீர் வார்த்துக் கொடுத்திடவே யேகும் வாந்தி கழிச்சலுமே
பெண்ணீ ருலகில் தருமமுடன் பேணிச் செய்வீர் நலமாமே.

(பொ-ரை.)—நெல்லிப்பட்டை, மாம்பட்டை, அரசம்பட்டை, பருத்திக் கொட்டை, பருத்திப்பிஞ்சு, அத்திப்பட்டை, அத்தித்தளிர், வகைக்கு வராக

ணெடை ஒன்று, எடுத்துச் சிதைத்து இரண்டு படி நீர்விட்டு கால் படியாகக் காய்ச்சி, இரண்டு வேளையும் ஒரு சங்களவு கொடுக்க, வாந்திக் கழிச்சல் நீங்கும். (ருஉசு)

வாயால் மூக்கால் பாலெடுத்தல், கழிச்சலுக்கு வேலிப்பருத்திநெய்.

அறுசீர் விருத்தம்.

வேலிப் பருத்திச் சாறுழக்கு மேதி வெண்ணெய் தானுழக்கு
ஆலித் தெழுந்த கருஞ்சீர மதுவுங் கழஞ்சா யரைத்திட்டுப்
பாலித் திருந்து பொன்னிறமாய்ப் பதத்தில் காய்ச்சி வடித்தருந்த
வாலப் பிள்ளை வாய்மூக்கால் வரும்பால் கழிச்சல் மாறிடுமே.

(பொ-ரை.)—வேலிப்பருத்திச் சாறு உழக்கு, எருமை வெண்ணெய் உழக்கு, இவைகளை ஒரு மண்சட்டியில் ஊற்றி ஒன்றுசேர்த்து, அதில் ஒரு கழஞ்சு கருஞ்சீரகத்தை, வெந்நீரால் அரைத்துக் கலக்கி அடுப்பேற்றிச் சிறுக எரித்து நெய் பாகமாகக் காய்ச்சிப் பதத்தில் வடித்து, வேளைக்கு ஒரு கரண்டி வீதம் நோய் வண்மைக்குத் தக்க நாளளவு கொடுக்க, மேற்படி நோய்கள் நீங்கும். (ருஉஎ)

சகலக்கழிச்சலுக்கு—குன்றிகற்கம்.

வெண்பா.

வீத வெண்குன்றி விதைத்தோலி னுட்பருப்பு
ஆத புளிவிதைத்தோ லத்திப்பால்—மேதியின்றன்
வெண்ணெயினி லோர்கழஞ்சுள் வெள்ளமிடும் நீர்க்கழிச்சல்
நின்றுவிடுந் தேன்மொழியாய் நேர்.

(பொ-ரை.)—வெண்குன்றிப்பருப்பு, புளிவிதைத்தோல், அத்திப்பால், எருமை வெண்ணெய், இவைகளை வகைக்கு ஒரு கழஞ்சு சேர்த்து அரைத்துக் கொடுக்க, சகலக் கழிச்சலுந் தீரும். (ருஉஅ)

வெப்புக் கழிச்சலுக்கு—அதிமதுர மாத்திரை.

எண்சீர் விருத்தம்.

அதிமதுர மதிவிடயம் சாதிக் காயு
மழகான மாதளம்பூ சீர கந்தான்
புதியசமன் கூட்டிமா தளச்சா றுதல்
புளிப்பான புளியாரைச் சாற்றி லாதல்
பதியாக வரைத்துத்தூ துளங்காய்ப் போலப்
பக்குவமாய்க் கொடுத்திடவெப் புக்க ழிச்சல்
நிதிபோலத் தீருமிச்சா பத்தி யந்தான்
நீலவிழி மாதரசே நீதந் தானே.

(பொ-ரை.)—அதிமதுரம், அதிவிடயம், சாதிக்காய், மாதளம்பூ, சீரகம், சரி எடைக்கூட்டி, மாதளஞ் சாற்றிலேனும், புளியாரைச் சாற்றிலேனும் அரைத்துத் தூதுளங்காய் அளவு மாத்திரை செய்து நிழலில் உலர்த்தி, வேளைக்கு ஒரு மாத்திரையை பொடிசெய்து வெந்நீரிற் கலந்து நோய் வன்மைக்குத் தக்க நாளளவு கொடுத்து இச்சாப் பத்தியம் வைத்தால், வெப்புக் கழிச்சல் தீரும். (ருஉசு

இரத்தக் கழிச்சலுக்கு—தாழைச்சாறு.

வெண்பா.

தாழை விழுதின் றணிச்சா றிளநீரும்
சூழெலுமிச் சம்சாறும் சுக்குடனே—பேழ்மயிலே
சீரகமுந் தான்பொடியாய்த் திட்ட முடனருந்தப்
போரிடுமாந் தக்கழிச்சல் போம்.

(பொ-ரை.)—தாழை விழுதின் சாறு கால் பலம், இளநீர் கால் பலம், எலுமிச்சம்பழச்சாறு கால் பலம், இவைகளைக் கலந்து அதில், சுக்கு ஒரு வராகனெடை, சீரகம் ஒரு வராகனெடை இவ்விரண்டையும் பொடித்துப்போட்டு ஊறவைத்து வடித்துக் கொடுக்க, இரத்தக் கழிச்சல் நீங்கும். (௫௰)

சீரக கற்கம்.

அறுசீர் விருத்தம்.

சீரகங் கொத்து மல்லி திகழுமா தளையின் பிஞ்சும்
மீரகங் கீழ்க்காய் நெல்லி வேரிவை சமன தாக
ஆரமா வெந்நீர் விட்டே யரைத்துக்கா லையினி லீயப்
பாரிரத் தக்கழிச்சல் பாறிடுந் தயிருஞ் சோறே.

(பொ-ரை.)—சீரகம், கொத்துமல்லி, மாதளம்பிஞ்சு, கீழ்வாய்நெல்லி வேர், இவைகளை வகைக்கு ஒரு வராகனெடை எடுத்து வெந்நீர் விட்டரைத்துக் காலையில் மாத்திரம் நோய் வன்மைக்குத் தக்க நாளளவு கொடுக்க, இரத்தக் கழிச்சல் நீங்கும். (௫௧)

(3) ஆமக்கழிச்சல் (சீதபேதி) குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

உண்டபா லெதிரெ டுக்கும் உடல்பல முழக்கங் காட்டும்
சுண்டுமே ரத்தஞ் சாலச் சுரமிகுந் திருக்கு மேனி
கண்டுசேர் மொழியுந் தாழ்ந்து காலொடு கையு நீத்து
விண்டிடி லாம மென்று விளம்பினர் முனிவர் தானே.

(பொ-ரை.)—உண்டபிறகு பால் எதிர்த்து வாயா லெடுத்தல், உடல் மிக்க மாறுதலடைதல், உடலில் ரத்தம் மிகச் சுண்டுதல், சுரமிருதல், குரல் தாழ்வடைதல், கால்கை அசைவற்றுக் கிடத்தல், இவைகள் ஆமக்கழிச்சலின் குறிகுணங்களாம். (௫௨)

ஆமக்கழிச்சலுக்கு—சாதிக்காய் எண்ணெய்.

சிற்று மணக்கி னெண்ணெய்பலம் திரிநற் பூரம் வராகனென்று
சற்றே சோற்றிற் றுணவித்த சாதிக் காயு மொன்றுரும்
எற்றே யிவையெல் லாந்தானே எண்ணெய் விட்டுத் தானரைத்துக்
கொற்றே வேளைக் கொருகரண்டி கொடுப்பாய் சீத பேதியறும்.

(பொ-ரை.)—சிற்றுமணக்கு நெய் பலம் மூன்று, பூரம் வராகனெடை ஒன்று, சோற்றில் அவித்த சாதிக்காய் ஒரு வராகனெடை, இவ்விரண்டையும் எண்ணெய் விட்டு அரைத்து ஒன்றுபடக்கலக்கிக் காலையில் மாத்திரம், வேளைக்கு ஒரு கரண்டி வீதம் கொடுக்க, மேற்படி சீதபேதி நீங்கும். (௫௩)

பொருமல் கழிச்சலுக்கு—ஆமையோட்டுக் கற்கம்.

அறுசீர் விருத்தம்.

இதுவே கூனன் முதுகோடு மிகழா விடய மசமதாகம்
மிதமாய்த் திருப்பி பாவட்டை மிளகு சுக்கோ டரைத்ததனைக்
கொதிவெந் நீரில் முலைப்பாலில் குன்றி போல விழைத்திடவே
துதிக்கும் பொருமல் கழிச்சலது தூரப் போகுங் குளிகையிதே.

(பொ-ரை.)—ஆமையோடு, அதிவிடயம், ஓமம், வட்டத்திருப்பி, பாவட்டை, மிளகு, சுக்கு இவைகளைச் சரியெடை எடுத்து, முலைப்பால் விட்டரைத்து, வேளைக்கு ஒரு குன்றியளவாக முலைப்பாலில் அல்லது கொதிவெந்நீரில் இழைத்துக் கொடுக்க, பொருமல் கழிச்சல் நீங்கும். (ருடச)

அதிசாரக் கழிச்சலுக்கு—கோரைக்கிழங்கு குடிநீர்.

அறுசீர் விருத்தம்.

கோரைக் கிழங்கு கொத்துமல்லி கோதாய் வில்வக் காயோடே
ஏராய்த் திப்பிலி லோத்திரமு மினிதாய் நாகே சுரத்துடனே
சீராய்க் காய்ச்சி நறுந்தேனைச் சேர்த்துக் கொடுக்கச் சேய்கட்கு
வாராக் கழிச்ச லதிசார மயங்கித் தியங்கி யோடிடுமே.

(பொ-ரை.)—கோரைக் கிழங்கு, கொத்துமல்லி, வில்வக்காய், திப்பிலி, வெள்ளிலோத்திரம், சிறுநாகப்பூ, வகைக்கு கால் பலம் எடை எடுத்திடித்து, கால் படி நீர் விட்டு அரை ஆழாக்காகக் காய்ச்சி, விதிப்படி தேன் கலந்து நோய் வன்மைக்குத் தக்கபடி உச்சிக்கரண்டி வீதம் கொடுக்க, அதிசாரக்கழிச்சல் நீங்கும். (ருடரு)

அதிசாரக் கழிச்சலுக்கு—காட்டாத்திப்பூ குடிநீர்.

வெண்பா.

காட்டாத்திப் பூவும் கருங்காலி வேர்த்தோலும்
கோட்டானைத் திப்பிலியும் கூவிளமும்—கூட்டியே
காய்ச்சித்தேன் விட்டருந்தக் காணுஞ் சிறுவோர்க்குப்
போச்சென் றதிசாரம் போம்.

(பொ-ரை.)—காட்டாத்திப்பூ, கருங்காலிவேர்ப்பட்டை, யானைத்திப்பிலி, கூவிளம்வேர், இவைகளை வகைக்கு அரை பலம் எடுத்து இடித்து உழக்கு நீரிலிட்டு நாலில் ஒன்றாய்க் காய்ச்சி, நோய் வன்மைக்கு தக்க அளவு தேன் விட்டருந்த, அதிசாரக் கழிச்சல் நீங்கும். (ருடசு)

அதிசாரக் கழிச்சல், கபசுரம் இவைகட்கு—அத்திக்காய்ச் சாறு.

அறுசீர் விருத்தம்.

அத்திக் காயின் சாறேம மறியு மெருமைத் தயிருடனே
பத்தி யாகக் கலந்தருந்தப் பண்பாய் பிறந்த குழந்தைகட்குத்
தத்திக் கழியு மதிசாரம் தானே யகலும் கபசுரமும்
மெத்த பயந்து விட்டுவிடு மீன்போற் குவளைப் பெண்மயிலே.

(பொ-ரை.)—அத்திக்காய்ச்சாறு, எருமைத்தயிர் இவைகள் வகைக்கு ஒரு பலம் எடுத்து, ஓமம் ஒரு வராகனெடை அதில் அரைத்துக் கலந்து கொடுக்க, அதிசாரக் கழிச்சல், கபசுரம் போம். (ருடஎ)

மூலக்கடுப்பு, கழிச்சல் இவைகட்கு—அதிவிடய மாத்திரை.

கட்டளைக்கலித் துறை.

மானே விடயங் கிராம்பு கோட்ட மதுரமுடன்
தானே இலவு விளாம்பிசின் தன்னோடு சாதியங்காய்
தேனே யிதழ்சிற் றிலவங்க மாஞ்சில் தெரிந்துநல்ல
கோனே சிவந்தநல் மாதளங் காயினிற் கொண்டடைத்தே.

அடைத்தாடை சுற்றியே மேற்சாணம் பூசி அடரிரவி
புடத்தால் எரித்து விடும்போதி லந்தப் புடமணைத்துஞ்
சுடத்தா னரைசெய் கஞ்சா ரசந்தன்னில் துடரிப்பழத்
தெடுத்தா ளளவிது மாத்திரை தன்னை யியம்பிடுமே.

இடுமே மதுவிற் கஞ்சாவிலைச் சாற்றில் எழில்குரும்பைக்
கொடுமே தயிரில் மலர்த்தெங்கு வாழைக் குணமறிந்து
விடுமே கழிகண மூலக் கடுப்புடன் மேட்டிரைச்சல்
கெடுமே விடமூலம் போகும் விசாரிக் கிலேசங்களே.

(பொ-ரை.)—அதிவிடயம், கிராம்பு, கோட்டம், அதிமதுரம், இலவம் பிசின், விளாம்பிசின், சாதிக்காய், சாதிபத்திரி, சிறு லவங்கப்பட்டை, சடா மாஞ்சில், இவைகளைப் பொடித்து வகைக்கு ஒரு காசெடை எடுத்து, நல்ல மாதளங் காய்க்குள் வைத்துச் சீலைசுற்றி மேல் சாணம் பூசிச் சிறுபுடம் போட்டு, அப்புடத்தை அணைத்து எடுத்து, மேற்கவச நீக்கிக் குழிக் கல்லிலிட்டுக் கஞ்சாசாற்றில் அரைத்து, துடரிப்பழமளவாக வேளைக்கு ஒரு மாத்திரை தேனிலாவது, *கஞ்சாக் குடிநீரிலாவது, குரும்பைச் சாற்றிலாவது, தயிரிலாவது, தென்னம்பாளைச் சாற்றிலாவது, வாழைப்பூச் சாற்றிலாவது, நோய் வன்மைக்குத் தக்களவு கொடுத்தால், கழிகணம், மூலக்கடுப்பு, வயிற் றிரைச்சல், விடமூலம் இவை தீரும்.

* கஞ்சாவிலைச்சாறு கிடைக்காவிடத்து என்றறிக. (௫௩-அ)

கடுப்புக் கழிச்சலுக்கு—புனலிப்பொடி.

வெண்பா.

திகழ்புனலி வேரும் திகழுசைய நேராய்ப்
புகழ்பெறவே கூட்டிப் பொடியாய்—மகிழச்செய்
தேனிற் கொடுக்கவே சீதக்கடுப் புக்கழிச்சல்
வானிற்ப றந்தோடும் பார்.

(பொ-ரை.)—புனலிவேர், சீரகம், இரண்டும் சம எடை பொடி செய்து, தேனில் வேளைக்கு ஒரு பண வெடையாக, நோய் வன்மைக்குத் தக்க நாளளவு கொடுக்க, கடுப்புக் கழிச்சல் நீங்கும். (௫௩-கூ)

பச்சிலைபோற் கழிதலுக்கு—ஏலாதிக் கற்கம்.

அறுசீர் விருத்தம்.

ஏல முடன்சாத் திரபேதி எழிலாய் மதுரம் வகைவகைக்குப்
பால வராக னரையாகப் பழந்தண் ணீர்விட் டேயரைத்துக்
கோல மூன்று நாள்கொடுக்கக் குழந்தை பச்சிலை போல்கழிதல்
ஓல மிட்டே தான்தீரும் ஒளிர்கா லையிடை மடமயிலே.

(பொ-ரை.)—ஏலம், சாத்திரபேதி, அதிமதுரம் வகைக்கு அரை வராக்னெடை எடுத்து நீராகாரம் விட்டரைத்து, மூன்று நாள் கொடுக்க, ஷெ நோய் நீங்கும். (௫சo)

முட்டை போலும், கெட்டபால் போலுங் கழிவதற்கு—உத்தாமணி நெய்.

அறுசீர் விருத்தம்.

உத்தா மணியிலை யோரைந்து முயர்சிற் றவரை யிலையைந்து
ஒத்தாய்ப் பரும்பூண் டோருள்ளி ஓது மேதி நவநீதம்
கத்தா கரண்டி தனிலிட்டுக் காண்முன் மருந்தை யும்போட்டே
எத்தா யிலைமுரி யக்காய்ச்சி யிறுத்து முலைப்பா லொடுகுலுக்கே.

கலி விருத்தம்.

குலுக்கிச் சேய்க்குக் கொடுத்திட மூன்றுநாள்
இலுக்கி டாகெட்ட பால்போற் கழிதலும்
ஒலுக்கண் டம்உடைத் தாற்போற் கழிதலும்
பலிக்கத் தீர்ந்திடும் பத்தியங் காத்திடே.

(பொ-ரை.)—ஒரு கரண்டி எருமை வெண்ணெயில் உத்தாமணியிலை ஐந்து, அவரையிலை ஐந்து, உள்ளி பல் ஒன்று இவைகளைச் சேர்த்து இலை முரியக் காய்ச்சி இறுத்து, முலைப்பால் சேர்த்து மூன்று நாள் கொடுக்க, ஷெ நோய்கள் நீங்கும். பத்தியம் காக்க. (௫சக)

விடாக்கழிச்சலுக்கு—சாதிக்காயுருண்டை.

அறுசீர் விருத்தம்.

சாதிக் காயு மதிவிடயம் சாதி பத்திரி யோடபினி
மாதர்க் கரசே சரியாக வைத்து நல்லெண் ணெயிற்றேய்த்துச்
சேதப் படாம லேயரைத்துத் தினமொரு பணவெடை பெண்பாலில்
நீதப் படியே தான்கொடுக்க நிசமாய்க் கழிச்ச லடைப்படுமே.

(பொ-ரை.)—சாதிக்காய், அதிவிடயம், சாதிபத்திரி, அபின் இவைகளைச் சமபாகம் எடுத்து, நல்லெண்ணெய் விட்டரைத்து, தினம் பணவெடை வீதம் நோய் வன்மைக்குத் தக்க நாளளவு முலைப்பாலில் கொடுத்துவர, விடாக் கழிச்சல் நீங்கும். (௫சஉ)

கழிச்சல்கட்கெல்லாம்—கட்டுவாதி மாத்திரை.

எண்சீர் விருத்தம்.

கொள்ளவே கட்டுவாதி குளிகை கேளாய்
குணமான சாதிக்காய் சாதி பத்திரி
அள்ளவே இலவங்க மேலத் தோடே
அதிமதுர மதிவிடய மபினி கஞ்சா
விள்ளவே குராசானி முத்தக் காசு
வெந்தயமும் சீரகமும் சிறுநா கப்பூ
வள்ளவே புளியாரை காட்டாத் திப்பூ
மாதளம்பிஞ் சரம்பைப்பூ சமனுய்த் தூக்கே.

தூக்கியே கூட்டியிடித் தாவின் பாலில்
துருசாகப் பிட்டவிய லாக வேதான்
ஆக்கியே வாழைப்பூச் சாற்றி லாதல்
அழகுமா தளம்பழத்தின் சாற்றி லாதல்

தூக்கியே விட்டரைத்து மிளகு போலத்
　　தானுண்டை செய்துசர்க் கரையி லீந்தால்
நோக்கியே கழிச்சலதைத் தடைப்ப டுத்தும்
　　நோயெல்லா மோடிவிடு நுணுக்கம் பாரே.

(பொ-ரை.)—சாதிக்காய், சாதிபத்திரி, இலவங்கம், ஏலம், அதிமதுரம், அதிவிடயம், அபினி, கஞ்சா, குரோசானிஓமம், கோரைக்கிழங்கு, வெந்தயம், சீரகம், சிறு நாகப்பூ, புளியாரை, காட்டாத்திப்பூ, மாதளம் பிஞ்சு, வாழைப்பூ, இவைகளைச் சமபாகம் தூக்கி இடித்து, பசும்பாலில் பிட்டவியலாக வேக வைத்து எடுத்து, வாழைப்பூச் சாற்றிலாகிலும், மாதளம் பழச் சாற்றிலாகிலும் அரைத்து, மிளகளவு உருண்டை செய்து, நோய்வன்மைக்குத் தக்க நாளளவு சருக்கரையில் கொடுக்க, எல்லாக் கழிச்சலும் நீங்கும். (௫௪௩)

## புளியாரைச் சாறு.

### எண்சீர் விருத்தம்.

நாட்டமுடன் குழந்தைகட்குப் பேதி கண்டால்
　　நல்லபுளி யாரையுடன் வாழைப் பூவும்
தேட்டமுட னிவையிரண்டும் பிட்ட வித்துத்
　　திரமாகப் பிழிந்ததிலே துளிதேன் விட்டு
வாட்டமுடன் மருந்திதுதான் கொடுத்துப் பாரு
　　மகத்தான கழிச்சலெல்லாம் வாங்கிப் போகும்
தாட்டிகமாய்ச் சற்குருவைத் தியானம் பண்ணித்
　　தன்மையுடன் புருவமதில் சார்ந்து நில்லே.

(பொ-ரை.)—புளியாரை, வாழைப்பூ இரண்டையும் பிட்டவியலாக அவித்துச் சாறு பிழிந்து, அதில் துளி தேன் விட்டுக் கொடுக்க, கழிச்சல்யாவும் தீரும். (௫௪௪)

## வச்சிரகண்டி லேகியம்.

### நொண்டிச் சிந்து.

உச்சிதவே லாயுதனைப் போற்றி—நல்ல
உண்மை மனோன்மணியை நித்தமும் போற்றி
வச்சிரகண்டி லேகியத்தைச் சொல்ல—நல்ல
வாகாய்ச்ச ரக்குவகை எத்தனைநீ கேளு
கொச்சிதேச மதன காமப்பூவும்—நல்ல
கோட்டான் புரிக்கின்ற காட்டாத்திப் பூவும்
அச்சிதேச வால்மிளகு சுக்கு—நல்ல
அதிவிடயங் கசகசா கிராம்புடனே ஏலம்
செஞ்சிதேச கஞ்சா அபினி—நல்ல
சேலத்துப் பனைவெல்லஞ் சாதிக்காய் கூட்டிச்
சட்டியை யடுப்புதனி லேற்றி—நல்ல
சரக்கை யதில்வாட்டி யுரலதனிற் போட்டுப்
பூணிலா வுலக்கை கொண்டிடித்து—நல்ல
புகழான பனைவெல்லம் பாகுதனைக் காய்ச்சி
இடித்ததொரு தூளதனைப் போட்டு—நல்ல
இதமாக வேகிளறி லேகியமாய்ச் செய்து

அந்திசந்தி ரண்டுவேளை தின்றால்—நல்ல
அலறியே ஓடும்மந்த மாந்தம்சந்நிக் காய்ச்சல்
ஏந்திய குழந்தைகளின் மாந்தம்—நல்ல
ஏங்குவலி அதிசார பேதியைக் கேட்கும்
விந்தையுடன் நாலாமுறைக் காய்ச்சல்—நல்ல
வீறிட்ட தோடுமந்த க்ஷயங்களைக் கேட்கும்
பந்தஞ்செயும் மாதவனைப் போலே—நல்ல
பாங்கான போகமஃ தொருசாமஞ் செலுமே.

(பொ-ரை.)—மதனகாமப்பூ, காட்டாத்திப்பூ, வால் மிளகு, சுக்கு, அதிவிடயம், கசகசா, கிராம்பு, ஏலம், கஞ்சா, அபினி, சாதிக்காய் இவைகள் வகைக்கு ஒரு பலம் வீதம் எடுத்து இளவறுப்பாய் வறுத்து, சூரணம் செய்து பன்னிரண்டு பலம் பனை வெல்லத்தை பாகாய்க் காய்ச்சி அதில், ஷை சூரணத்தைப் போட்டுக் கிண்டி, பிறகு பூணில்லா உலக்கையாலிடித்து லேகியம் செய்து, அந்தி சந்தி சுண்டையளவு நோய் வன்மைக்குத் தக்கநாளளவு கொடுத்து வர, சகலவிதக் கழிச்சல், மாந்தம், சந்நிசுரம், நாலாமுறைக் காய்ச்சல், மந்தக்ஷயம், இவை நீங்கும். (௫௪௫)

# 9. வலிப்பு வகுப்பு

வலிப்பு என்பது வலித்தல் என்னும் பொருளது.

வலித்தல் என்பது கைகால் வலி, மார்புவலி, வயிற்றுவலி என்னும் பொருளில் நிற்காமல், காலையும் கையையும் முறுக்கி இழுத்தல் என்னும் பொருளில் நிற்கின்றது.

இது இழுப்பு, இசிவு, இசிப்பு என்னும் பேர்களாலும் அழைக்கப்படுகிறது.

இந்நோயில் கபமானது பொதுவாக உடலில் எங்கும் சேர்வதாயினும் சிறப்பாக மார்பிலும், மூச்சுக் குழலிலும் அடைத்து அதனால்,

> " சத்தமொடு பரிசமும் ரூபரசகந்தம்
> கெந்தமெனு மஞ்சு வகை யசதிகாட்டும் "

எனக் கன்ம சூத்திரத்திற் சொல்லப்பட்டபடி, சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்தறிவுகளும் கெட்டுத் தன்னை மறந்துண்டாவதும், வலி நிற்கின் தன்னறிவு தோன்றுவதூஉமாம்.

ஆயினும், இவ்வலிப்பு நோயானது குழந்தைகள், பெரியவர்களான இருதிறத்தாருக்கும் வருவதாயினும்,குழந்தைகளுக்கு வருவது வேருகவும், பெரியவர்களுக்கு வருவது வேருகவும் கொள்ளல் வேண்டும்.

ஆகையால் குழந்தைகளுக்கு வரும் வலிகளில், இப்போது இந்நூலில் திரட்டப்பட்டவைகள் (1) மாந்தவலி, (2) காக்கைவலி, (3) அள்ளுவலி, (4) புற இசிவு என்னும் நான்குமாம்.

இவையன்றிக், கன்ம சூத்திரம் முந்நூற்றில்,

> " நாணவே யூர்முசல னேடு நாகன்
> நாரைவலி பசுவனெடு வேட மாமே
> ஆமையொடு மாட்டுவலி நீர்மண்டூகம்
> அப்பனே பறவைவலி யோணன் குக்கல்
> கோமளமாங் கூசலன்தோள் மத்த கண்டன்
> கோரனெடு சீதாங்கன் குமர கண்டன்
> கோமமதாய்ப் பதினெட்டு வலியா மாந்தம்."

என்று மாந்த வலியின் தொகை பதினெட்டெனச் சொல்லப்பட்டிருக்கின்றனவன்றி, அவற்றின் குறிகளும் தன்மைகளும் சொல்லப்படவில்லை.

இவையன்றி, இந்நூலில் வலிகளுக்குக் கொடுக்கும் மருந்தாகச் சொல்லப்பட்டிருக்கின்ற சோதி ரிஷி தயிலத்திலும், சில வலிகள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆனால், அவைகளின் குறிகளும் தன்மைகளும் சொல்லப்படவில்லை.

இவற்றை ஆராயின், பண்டைய நூல்கள் பல இறந்துபட்டனவென்றும், அவற்றில் அவை சொல்லப்பட்டிருக்கலாமென்றுந் தோன்றுகிறது.

அவை பின்னர் கண்டறிந்து எழுதப்படுவனவாம். (௫சசு)

வலி நோய்க் காலமும், காரணமும்.

எண்சீர் விருத்தம்.

தன்னிமையால் நோய்உதிக்கும் வாறே தென்னில்
தன்வயது பதினெட்டா மிந்நாட் குள்ளே
உன்னிமைக்குள் தீனியினல் கர்மத் தாலும்
உடம்பினுள்ள சூட்டாலும் வினையி னலும்
வெண்ணிமையாய் நோய்உதித்த வாறி தாகும்
விபரமென்ன கந்தாதி யோழ மேற்று
சொன்னிமைக்குள் ஓடிவிடும் இக்கு ணந்தான்
சூதில்லா நூலிதுவாம் முன்னூ றென்னே.

(பொ-ரை.)—குழந்தைப் பருவமாகிய பதினெட்டு ஆண்டுகளுக்குள் இந் நோய்வரும். இதற்குள் தாயார் உண்ணும் உணவு வேற்றுமையினலும் செய்கை வேற்றுமையினலும் உடம்பிற்குள்ளிருக்கும் சூட்டினலும் இந் நோய் உண்டாகும். இது, மூலிகையாதிக் குடிநீரால் நீங்கும். (ருசஎ)

(1) மாந்த வலிப்பின் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

வயிறு கழியும் விதவிதமாய் மார்பை வலிக்கும் பல்கிட்டும்
பயறு கடித்தாற் போல்தந்தம் பற்றிக் கடிக்கும் இசிப்பெடுக்கும்
கயிறு முறுக்கி விட்டாற்போல் காலுங் கையுந் தானிழுக்கும்
எயிறு திறவா *தன்னமுநீ ரிறங்கா மாந்த வலிக்குறியே.

(பொ-ரை.)—வயிறு பல நிறமாயும் பல வகையாயும் கழிதல், மார்பில் கோழை சேர்வதால் ஒரு வகையான வலி எடுத்தல், வாய் திறக்க முடியாத படி பல் கிட்டிக் கொள்ளல், பருப்பைக் கடித்தால் எப்படி ஒலியுண்டாகுமோ அப்படி ஒலி காணும்படி பல்லைக் கடிக்குதல், கயிற்றை முறுக்கி விட்டுவிட்டால் எப்படியோ அப்படி கை கால்கள் முறுக்கி வலித்தல், பல் திறக்க முடி யாமை, சோறும் தண்ணீரும் உள்ளிறங்காமை என்பவைகள் மாந்த வலிக் குறிகுணங்களாம். (ருசஅ)

மாந்த வலிப்புக்கு—குதிரைக்குளம்பு புகை.

அறுசீர் விருத்தம்.

சேட்டைப் பரிஉகிர் மயிலிறகு தின்னு மிளகு வசம்புசுக்கு
கூட்டக் கடுகு பேயத்தி கூறும் அழிஞ்சில் வேப்பெண்ணெய்
போட்டுக் கம்பள முஞ்சமனுய்ப் புகழ்செம் மறியின் கோட்டுடனே
வாட்டிப் புகைக்க வேபிணியு மாந்த விசிவு மாறிடுமே.

(பொ-ரை.)—குதிரைக் குளம்புச் சீவல், மயிலிறகு, மிளகு, வசம்பு, சுக்கு, கடுகு, பேயத்திவேர்ப் பட்டை, அழிஞ்சில் பட்டை, வேப்பெண்ணெய், கறுப்புக் கம்பளம், செம்மறியாட்டுக் கொம்புச் சீவல், இவைகளில் எண்ணெய் நீங்க, மற்றைய சரக்குகளை வகைக்கு ஒரு பலம் எடுத்துத் தூளா

* இச்செய்யுளில் அன்ன நீரிறங்காதென்றிருப்பதனல் பால்குடிக்கும் பருவத்தில் வரின் தண்ணீரிறங்காதென்றும், சோறுண்ணும் பருவத்தானல் இரண்டு மிறங்காதென்றுங் கொள்க.

யிடித்து, பத்துப் பலம் வேப்பெண்ணெயிற் கலந்து வைத்துக் கொண்டு அதில் கொஞ்சம் எடுத்து நெருப்பிலிட்டால் வெளிப்படும் புகையைக் குழந்தைக்குப் படும்படி காட்டினுல் மாந்த வலி தீர்ந்து விடும். (ருசகூ)

மாந்த வலிப்புக்குங் காக்கை வலிப்புக்கும்—கொடிவேலி நீர்.
எண்சீர் விருத்தம்.

கொடிவேலி வேர்ப்பட்டை சங்கம் வேர்த்தோல்
 குன்றெருக்கம் வேர்ப்பட்டை இவைதா மூன்றும்
வடிவான வராகனெடை தூக்கிக் கொண்டு
 வளமான வெந்நீரை விட்டு நன்றாய்ப்
பொடியாக நறுக்கிவடி கட்டி யந்தப்
 புனலதனில் வராகனெடை குங்கு மப்பூ
துடியாக அரைத்திடுவ லிப்பு மாந்தத்
 தொடுகாக்கை வலிப்புமுடன் தொலைந்து போமே.

(பொ-ரை.)—கொடிவேலி வேர்ப்பட்டை, சங்கம் வேர்ப்பட்டை, எருக்கம் வேர்ப்பட்டை, இவை மூன்றும் வகைக்கு ஒரு வராகனெடை வீதம் நிறுத்தெடுத்துப் பொடியாக்கி, வெந்நீர் விட்டரைத்துக் கலக்கித் தெளிய வைத்து, அந்த நீரை வடித்து எடுத்துக் கொண்டு, அந்நீரில் குங்குமப்பூ ஒரு வராகனெடை அரைத்துச் சேர்த்துக் கொடுக்க, வலிப்பு மாந்தம், காக்கை வலி தீரும். (ருரு௦)

(2) காக்கை வலிப்பின் குறிகுணம்.

வெண்பா.

காக்கை யிசிவு கபந்தள்ளி வாயில்மேல்
நோக்கின்றிக் கைகால் நுவலுமுன்—காக்கை
வலிபோல் வலித்து மருவுநோக் குக்கெட்
டலிபோ லடங்கிவிட லாம்.

(பொ-ரை.)—காக்கை வலியானது வாயினின்றும் நுரைநுரையாய்க் கபந்தள்ளி, கண்பார்வை நன்றாய்த் தெரியாமல், கைகளும் கால்களும் காக்கைக்கு வலி வந்தால் இரண்டு இறகுகளையும் தரையில் மோதிமோதி அடித்துக் கொண்டு காக்கை முன்னும் பின்னும் வலித்துக் கொள்வது போல், முன்னும் பின்னுமாக வலித்துக் கொண்டு, யார் பிடித்தாலும் வலிவாய்த் தரையில் தள்ளி வலித்துக் கொண்டு பார்வையில்லாமற்படி செய்து, பிறகு, பேடிபோல் அடங்கி விடுவதாம். (ருருக)

காக்கை வலிப்புக்கு—பிச்சி எண்ணெய்.

எண்சீர் விருத்தம்.

காக்கைப்பிச் சியுங்கொழுப்பு மதனின் முட்டை
 கனவசம்பு திப்பிலியின் கட்டை தானும்
நீக்கமலுங் கொஞ்சிதழு தாழை வேரும்
 நிலவேம்பின் வேருமிள கரணை வேரும்
போக்குடனே பொடிசெய்தெண் ணெயினிற் போட்டுப்
 புகழாகக் காய்போதே வறுத்த வோமம்
தாக்குவாய் பொரித்தவெங் கார முள்ளி
 தானறுக்கிப் போட்டிறக்கி வைத்துக் கொள்ளே.

வெண்பா.

கொள்ளவே காக்கைக் கொடுமை வலித்தபோ
துள்ள ஒருகரண்டி யுய்த்திட்டால்—மெள்ளெனவே
இப்படிக் காறுதரம் ஏந்திழையீர் நல்கிலுல்
ஒப்பில்லாக் காக்கைவலி யோடும்.

(பொ-ரை.)—காக்கைப் பிச்சி, காக்கைக் கொழுப்பு, காக்கை முட்டைக் கரு, வசம்பு, திப்பிலிக்கட்டை, கொஞ்சி, தழுதாழை, நில வேம்பு, மிளகரணை இவ்வேர்ப்பட்டைகளின் பொடி வகைக்கு ஒரு வராகனெடை எடுத்து, விளக்கெண்ணெய் பத்துப் பலத்தில் போட்டுக் கொதிக்கையில், வறுத்த ஓமம், வெங்காரம், வெள்ளுள்ளி இவைகளையும் வகைக்கு ஒரு வராகனெடை பொடித்துப் போட்டுக் காய்ச்சி, எடுத்துக்கொண்டு, காக்கை வலி வந்த பொழுது, ஒரு கரண்டி வீதம் கொடுக்கவும்; இப்படி ஆறு தரம் கொடுக்க, காக்கைவலி தீரும். (ருரு௨)

## (3) அள்ளு வலிப்புக் குறிகுணம்.

வெண்பா.

மாந்தத்தி லொன்றும் வலியாகு மள்ளுவலி
சார்ந்திரண்டு பக்கந் தனிக்கபமிக்—கார்ந்தந்த
அள்ளெடுத் துப்போட் டதனோடே தானிசிவு
மெள்ளவந் தேவருத்து மேல்.

(பொ-ரை.)—மாந்தவகையில் கூடியுள்ள வலியான அள்ளு வலியானது உடலின் இரண்டு பக்கவிலாக்களிலும் கபஞ் சேர்ந்து, அதனால் அடிக்கடி அள்ளெடுத்துப் போட்டு (மூச்சு வாங்கி), அந்த அள்ளெடுத்த வுடனே வலியும் வந்து வலித்து வருத்துவதாம். (ருரு௩)

அள்ளுவலிப்புக்கு—சாதிக்காய் மாத்திரை.

எண்சீர் விருத்தம்.

பார்க்கவே இன்னுமொரு குளிகை கேளாய்
பாங்கான சாதிக்காய் இராம்பு மோமம்
காக்கவே கரியசீ ரகமும் சுக்கு
கனமான திப்பிலிகத் தூரி மஞ்சள்
சார்க்கவே வசம்புடனே காய மொக்கச்
சரியெடையா யொன்பதுக்குஞ் சமந்தான் கேளாய்
வேர்க்கவே வெள்ளைக்காக் கணன்வேர்ப் பட்டை
விதமாகத் தான்கூட்டி வெந்நீ ராலே.

வெந்நீரில் தானரைத்துச் சுண்டைக் காய்போல்
விதமாகத் தானுலர்த்தி வைத்துக் கொண்டு
வெந்நீரில் குழந்தைகட் கேழு நாள்தான்
விரைவாக வேகொடுக்க வப்பா காது
வெந்நீரிற் சாதமிட் டுண்பீ ராகில்
வேண்டியதோர் நோய்திரும் விளம்பக் கேளாய்
வெந்நீரால் சளிஇருமல் கக்கல் காய்ச்சல்
மீறிவருஞ் சளிகுணவிச் சுழியும் போமே.

போகுமே அள்ளுடனே சந்நி தோடம்
பொல்லாத வலியுடனே விடசு ரங்கள்
போகுமே மந்தமுடன் வயிற்று நோயும்
பொருமலுடன் இரைச்சலும் போகும் சொன்னேன்
போகுமே வசம்புதனைச் சுட்டுக் கொள்ளு
போக்கோடே பச்சையென்றால் பேதி மிக்காம்
போகுமே சுட்டதனால் மட்டாம் பேதி
போகுமே மற்றநோய் புனித மாமே.

(பொ-ரை.)—சாதிக்காய், கிராம்பு, ஓமம், கருஞ்சீரகம், சுக்கு, திப்பிலி, கத்தூரி மஞ்சள், வசம்பு, காயம், இவையாவும் வகைக்கு ஒரு வராகனெடையும் வெள்ளை காக்கணம் வேர்பட்டை ஒன்பது வராகனெடையும் கூட்டி வெந்நீர் விட்டு மெழுகு பதமாயரைத்துச் சுண்டைக்காய் போல் மாத்திரை உருட்டி வைத்துக்கொண்டு, வெந்நீரில் ஒரு மாத்திரையாக காலையில் மாத்திரம் உரைத்து, ஏழு நாளைக்கு கொடுத்துவர, சளி, இருமல், கக்கல், காய்ச்சல், அள்ளு, சந்நிதோடம், பொல்லாதவலி, விடசுரங்கள், மந்தம், வயிற்று நோய், பொருமல், இரைச்சல் இவைபோம். பேதி அதிகமானால் வசம்பைச் சுட்டு வெண்மையாக்கி தேனில் குழைத்துக் கொடுக்க நிற்கும். தாய்க்கு உப்பாகாது. வெந்நீருஞ் சாதமும் கொள்ள வேண்டும். (ருருச)

## (4) புறஇசுவின் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

புறவிசி வையந் தலையில் போதவே மிகவுஞ் சேர்ந்து
பறம்புரி கபமே யாக மருவிடில் வாயு வாங்கே
சிரமுகம் புறத்தி லீர்த்துச் சிலுக்கென வலித்துப் பல்கால்
உரமதா யிழுக்கும் வேர்வை யுறுங்கள முகமு மாமே.

(பொ-ரை.)—புறவிசிவானது பல காரணங்களால் தலையில் ஐயஞ் சேர்ந்து கொஞ்சங் கொஞ்சமாக அது உறைந்து, அத்துடன் வாயுவும் சேர்ந்து சிரத்தையும் முகத்தையும் பின் பக்கமாக இழுத்துத் திடீர் திடீர் என்று கழுத்தை வலித்துப் பல முறையும் இழுக்கும். இதனால் கழுத்து, முகம், தலை இவற்றில் மிக்க வேர்வை உண்டாகும் என்று சொல்லுவார். (ருருரு)

### புற இசிவுக்கு—தும்பைச் சுரசம்.

அறுசீர் விருத்தம்.

தும்பை யிலையுந் துளசியிலை துய்ய விஞ்சி யிலைமூன்றும்
சம்பை யிடையாய் வகைவகைக்குச் சரியெடை யாக வேறிறுத்துப்
பம்பரம் போலுந் தனத்தாளே பகரும் பூண்டோர் ஆறெடையாய்
நம்பிநெகிழத் தானரைத்து நல்ல சிற்று மணக்கிலையே.

இலையில் வைத்துத் தான்சுருட்டி இளக வெதுப்பிச் சாறுபிழி
விலையாய் மூன்று வேளைக்கும் விரும்பிக் காசள வாய்க்கொடுக்கத்
தொலையுஞ் சேயின் புறஇசிவு சொல்லா தோடிப் போய்விடும்பின்
மலையுஞ் சிலையுங் கலையாயே மனத்திற் பயமாய்ச் செய்வாயே.

(பொ-ரை.)—தும்பையிலை, துளசியிலை, இஞ்சியிலை, இவை வகைக்கு ஒரு எடை, பூண்டு ஆறு எடைகளாக எடுத்து நன்றாயரைத்து, சிற்றாமணக் கிலையில் வைத்துச் சுருட்டி நெருப்பில் வெதுப்பிச் சாறு பிழிந்து, மூன்று வேளை காசெடை வீதம் கொடுக்க, புறஇசிவு போய் விடும். (ருருசா)

## சகல வலிப்புகட்கும்—சோதிரிஷிதைலம்.

### கலிவெண்பா.

ஆதி மறைவிளங்கும் ஆயுள் மறையுணர்ந்த
சோதி ரிஷிதைலம் சொல்லக்கேள்—நீதி
அவுரிவேர் முன்னை அழிஞ்சில் சாரணைவேர்
சிவனார்வேம் பின்வேர் சிறுபுள்—துவரான
சங்கம்வேர் செங்கத் தரியின்வேர் வாகைவேர்
புங்கம்வேர் நொச்சிவேர் பூவரசு—துங்கமுள்ள
குட்டிக்க ளாவேரும் குட்டிக் குமிழ்வேரும்
குட்டி விளாவேர் குதம்பைவேர்—திட்ட
முருங்கை மிளகரணை முட்காவே ளைவேர்
அரியபா வட்டையா தொண்டை—விரும்புகிற
வெட்பாலை வேரெருக்கம் வேர்கண்டங் கத்திரிவேர்
துப்புகொடி வேலிவேர் தூதுளைவேர்—தப்பில்லாக்
கூத்தன் குதம்பைவேர் கூறும் வனமரைவேர்
காத்தவேலி விட்ணு கரந்தைவேர்—சீர்த்தியுள
சத்தியின் சாரணைவேர் தான்மணநன் ஞரிவேர்
அத்தம்போ லாகுமெலி யாலின்வேர்—சுத்த
முகைக்கின்ற வேர்வகைகள் முப்பத்து மூன்றும்
வகைக்கு வராகன் வளர்பத்—துகந்தெடுத்து
நல்லபா கல்சாறும் நாய்ப்பாக லின்சாறும்
செல்லாடா தோடைநீர் சின்னிநீர்—வல்ல
எருக்கினிலை புன்கும் எலுமிச்சை நீரும்
பெருக்கமுடக் கற்றனீர் பின்னும்—திருக்குடைய
காட்டுக் குறிஞ்சான் கனமாவி லிங்கநீர்
பாட்டில் வருமிந்தப் பத்துமிவை—கூட்டி
வகைக்குப் படிகால் வளமா யளந்து
தொகையுடனே சேர்த்துத் துடியாய்ப்—பகையில்லா
வவ்வா லிரண்டாகும் வாயசமும் தானொன்றும்
ஒவ்வாப் பெருமோனன் ஒன்றாகக்—கவ்வா
முயலொன்று சிற்றேனன் மூன்றுடும்பு மொன்று
கயல்விழியே பாம்பின்றன் கண்டம்—வயமொன்று
பச்சை மயிலிறகு பண்பாக ஐந்தாகும்
சச்சயமாய் நல்லவடம் தானைந்தாம்—இச்சைப்
பசுவினிட நீரும் பகர்மேதி நீரும்
விசயவெள் ளாட்டினீர் மெய்நீர்—அசையா
வகைவகைக்குக் காற்படியாய் வாகா யளந்து
தொகையாய்க் கடைச்சரக்கு சொல்லின்—தகைமைக்
கருஞ்சீர கத்துடனே கத்தூரி மஞ்சள்
உரிமையுடன் பூதகரப் பானும்—வரஞ்சிறந்த
மஞ்சள் மரமஞ்சள் வாய்விளங்க நற்கடுக்காய்
தஞ்சைநகர் இட்டம் சதகுப்பி—மிஞ்சுநற்
சிற்றரத்தை பேரரத்தை செண்பகப்பூ திப்பிலியுங்
சற்றும் பெருங்காயம் சாதிக்காய்—பற்றுடைய

செவ்வியங் குக்கில் சிறுதேக் கரப்பொடியும்
அவ்வகைக் காறு வராகனெடை—கவ்வும்
வசம்பு வராகனெடை மாண்பாகப் பத்தாம்
பசையுள் ளிவராகனது பத்தும்—நிசம்பெறவே
விசுவ லம்புரிக்காய் வராகனெடை யீரெட்டு
வாசமுறக் கொண்டுவந்து வைத்துமே—ஆசையுடன்
செய்யும் விபரம் தெளிவாகச் சொல்லக்கேள்
மைவிழிசேர் திவ்ய மடமயிலே—பையவே
காட்டுவேர் எல்லாம் கதிக்கக் கியாழமிட்டு
மாட்டிக் கடைச்சரக்கில் வார்த்தரைத் தாட்டியே
பச்சிலைகட் சாறுவிட்டுப் பார்த்துநன் றுயரைத்து
மிச்சமுள கோநீர்கள் விட்டரைத்துக்—கச்சுடையாய்ச்
சாணிபத மானல் சரியெனவே பாண்டத்தில்
பேணிநீ யிட்ட பிறகேதான்—வாணியே
வேப்பெண்ணெய் நாழி விளக்கெண்ணெய் ஓர்நாழி
கோப்பாக முன்மருந்திற் கூடவிட்டுப்—பூப்பாக்
கலக்கிஅடுப் பேற்றுகையிற் காகமுட னேனன்
துலக்க முயலோடு வவ்வால்—பிலக்க
உடும்போடு சிற்றேனன் உக்ரநல்ல பாம்புடன்
இடும்பொன்றும் செய்யா தெடுத்துத்—திடமாய்
அறுத்துதிரம் பாண்டத்தி லம்மருந்திற் சேர்த்து
மறுத்துத்தோ லிற்குடல் வாங்கிக்—குறித்ததோர்
எண்ணெயிலே தான்விட் டெரித்திரண்டு சாமமது
வண்மையுடன் தான்இறக்கி வைத்தான—தண்மை
மறுநாள் அடுப்பில் வளமா யெரித்து
வெறுவா மெழுகுபத மேபார்த்—தறிவாய்
இறைச்சிகளை யெல்லாம் எடுத்தெறிந்து போட்டு
மறைத்து வடிகட்டி வைத்து—நிறைத்துமே
உள்ளுக்குக் காசெடைதான் உண்மையுட னேகொடுத்துத்
தெள்ளு தலைமுழுதுந் தேய்த்துமே—மெள்ளச்
சருவாங்க முந்துவளை தானிட்டுப் பார்க்க
விரைவாகத் தீரும் வியாதி—பரவியெழும்
கோண வலிப்பு குமரகண் டன்வலிப்பு
காணப் புறவலிப்பும் காக்கைவலி—பூணுகிற
சந்நி வலிப்போடு தங்காத உள்வலிப்பும்
பன்னும் ரணவலிப்பும் பார்மீதே—இன்னும்
முகவாதத் தின்வலிப்பு மூன்றுமுக சந்நி
இகலும் இமையிடிப்பு மெல்லாம்—புகலுங்
குதிரை வலிப்பு நடுக்கின் வலிப்பும்
சதிராய் முசலாம் கசமும்—பதறுவலி
பாரிச வாதம் படருஞ்சந் தின்வாதம்
மாரீச மாமுடக்கு வாதமும்—வாரீச
உள்ளங்கா லின்வாதம் உச்சிவா தத்தோடு
கள்ளமில் லாத கனுவாத—மெள்ளவே
வாதமெனப் பட்ட வலிப்பென்னப் பட்டவையும்
பாதக சந்நிியெனப் பட்டவையும்—ஆதரையில்

மெய்யாகத் தீரும் வினவுமிதற் குப்பத்யம்
பொய்யப் புகையும் புளியுடனே—வெய்யக்
கருவாடு மீன்ஊன் கரப்பான்க டள்ளிப்
பரிவா யிருந்தால் பலிக்கும்—பெரியார்
சிறியவர்க்கும் சைசவர்க்கும் சேய்கட்கும் ஆகும்
நெறிசோதி யார் சொன்ன—நேர்.

### வேர்வகை.

(பொ-ரை.)—அவுரிவேர், முன்னைவேர், அழிஞ்சில்வேர், சாரணைவேர், சிவனார்வேம்பின்வேர், சிறுபுள்ளடிவேர், சங்கம்வேர், செங்கத்தாரி வேர், வாகைவேர், புங்கன்வேர், நொச்சிவேர், பூவரசுவேர், குட்டிக் களாவேர், குட்டிக்குமிழ்வேர், குட்டிவிளாவேர், பெருந்தும்பைவேர், முருங்கைவேர், மிளகரணைவேர், முட்காவேளைவேர், பாவட்டைவேர், ஆதொண்டைவேர், வெட்பாலைவேர், வெள்ளெருக்கம்வேர், கண்டங்கத்தி ரிவேர், கொடிவேலிவேர், தூதுளேவேர், கூத்தன்குதம்பைவேர், ஓரிதழ்த் தாமரைவேர், உத்தாமணிவேர், விட்ணுகரந்தைவேர், சத்திச்சாரணை வேர், நன்னாரிவேர், எலியாலின்வேர். இந்த முப்பத்துமூன்று வேரும் வகைக்குப் பத்து வராகனெடை ; நல்லபாகல், நாய்ப்பாகல், ஆடா தோடை, சின்னி, எருக்கு, புங்கு, எலுமிச்சம் பழம், முடக்கற்றான், காட்டுக் குறிஞ்சான், மாவிலிங்கு இப்பத்து வகைகளின் சாறு வகைக்குப்படி கால்.

### உயிர்வகை.

வௌவால் 2, காக்கை 1, பெரு ஓணான் 1, முயல் 1, சிறு ஓணான் 3, உடும்பு 1, பாம்பின் கண்டம் 1, பச்சை மயிலிறகு 5,

### கொழுந்தின் வகை.

ஆவின்கொழுந்து—ஐந்துவராகனெடை.

### நீர்வகை.

பசுவின்நீர், எருமைநீர், வெள்ளாட்டுநீர், சிறுநீர், இந்நான்கு நீரும் வகைக்குக் கால் படி.

### கடைச் சரக்கு.

கருஞ்சீரகம், கத்தூரி மஞ்சள், பூதக்கரப்பான் பட்டை, மஞ்சள், மா மஞ்சள், வாய் விளங்கம், கடுக்காய்த் தோல், இரும்புச் சிட்டம், சதகுப்பி, சிற்றரத்தை, பேரரத்தை, சண்பகப்பூ, திப்பிலி, பெருங்காயம், சாதிக்காய், செவ்வியம், மைசாட்சி, கண்டு பாரங்கி, அரப்பொடி, இவைகள் வகைக்கு வராகனெடை ஆறு, வசம்பு வராகனெடை பத்து, வெள்ளுள்ளி வராகனெ டை பத்து; வலம்புரிக்காய் வராகனெடை பதினாறு.

இவற்றில், வேர் வகை 33-யும் நன்றாயிடித்து ஒரு மண்பாண்டத்தி லிட்டு, அதில் எட்டுப்படி நீர் விட்டு ஒரு படியாகக் காய்ச்சி வைத்துக்கொண்டு கடைச் சரக்குகளை தூளிடித்துக் கல்லிலிட்டு மேற்படி குடிநீர் விட்டரைத்து, பின்னர் மேற்படி பச்சிலைச்சாறுகளை விட்டரைத்து, பின்னர் நீர்களை விட்டரை த்து, மேற்படி அரைத்த கடைச்சரக்குகள் சாணிபதமானால் அந்த மருந்தை ஒரு மண்சட்டியில் இட்டு அதில் வேப்பெண்ணெய் படி ஒன்று, சிற்றாமணக் கெண்ணெய்படி ஒன்று, சேர்த்து அடுப்பேற்றிஎரிக்கும்போது, உயிர்வகைகளை

யெல்லாம் அறுத்து இரத்தத்தை மேற்படி மருந்தில் சேர்த்து, அவைகளையும் தலை, குடல், தோல் மயிர் இவைகளைப் போக்கி அத்துடன் சேர்த்து இரண்டு சாமமெரித்து இறக்கி வைத்து, மறு நாள் அடுப்பேற்றி மெழுகு பதமாய் எரித்து, இறைச்சிகளையெல்லாம் எடுத்தெறிந்துவிட்டு, வடிகட்டி உள்ளுக்கு நாள் தோறும்காசெடையாகக் காலை மாலை இரண்டு வேளையும் கொடுத்துத் தலையிலும் உடம்பிலும் தேய்த்துவர, கோணவலிப்பு, குமரகண்டவலிப்பு, புறவலிப்பு, காக்கைவலிப்பு, சந்நிவலிப்பு, உள்வலிப்பு, விரணவலிப்பு, முகவாதவலிப்பு, முகசந்நி, இமையிடிப்பு, குதிரை வலிப்பு, நடுக்கு வலிப்பு, முசல்வலிப்பு, பதறுவலிப்பு, பாரிசவாதம், சந்துவாதம், முடக்கு வாதம்,உள்ளங்கால்வாதம், உச்சிவாதம்,கணுவாதம், சந்நிகளும் உண்மை யாகத் தீரும். பத்தியம் : புகை, புளி, கருவாடு, மீன் ஊன், கரப்பான் பொருள்கள் ஆகிய இவைகளை நீக்கி உணவு உண்ணல் வேண்டும். இது, கைக்குழந்தை முதல் சிறு பிள்ளைப்பருவம்வரை உதவும். (ருருஎ)

---

# 10. சோகை, பாண்டு, காமாலை

---

## வாத சோகையின் குறி குணம்

அறுசீர் விருத்தம்.

ஆமெனும் வாத சோகை யணுகிடும் வகையைக் கேளாய்
பாமெனும் பழைய துண்டு பைங்கிளி யோடு தானும்
வாமெனும் புணர்ச்சி செய்து மல்லுசெய் தநுபோ கித்து
நாமெனும் ரவியி லேகி நடந்துதான் சென்ற பின்பே.

பின்புமே ராக்கா லத்தில் புசித்துடன் புணர்ச்சி செய்தால்
அன்புமே வைத்து பித்த ராசனு மெழும்பி மேலே
துன்பமாய் மூலம் புக்கித் தோன்றிடும் வன்னி தானும்
இன்பமாய் வாதங் கூடி யிணைபிரி யாது பாரே.

இணைபிரி யாதி ரண்டு மிருந்ததால் குணத்தைக் கேளாய்
கனதனம் வற்றிப் போகும் கபாலமே சூட தாகும்
முளைச்சடம் பொங்கிப் போகு மூலமே கருகிப் போகும்
துணைவிந்து மோகத் தாலே துன்பமே யணுகுந் தானே.

அணுகுமே வாத சூட்டா லாத்தும மழிந்து போகும்
இணுகுமே மாத ரோடே யியம்பிய புணர்ச்சி செய்தால்
அணுகிவிந் தூறிக் கர்ப்பம் வயிற்றினிற் சனிக்கும் பாலன்
முணங்கெனப் பிறந்த பின்பு மூன்றுண்டிற் சோகை யாமே.

சோகைதா னணுகும் போது துடிக்கவே சுரம்வந் தெய்தும்
தாகமே யதிக மாகும் சலமது சிரசிற் கோக்கும்
தோகையாள் தனக்குப் பாருன் சுண்டியே சலம தாகும்
வேகமாய் மலத்தில் வாயு புக்கினுல் வினைதான் பாரே.

வினையது வருகு நேர்மை விபரமா யுரைக்கக் கேளாய்
அனையது வாகத் தானு மபானனும் வாயு கூடி
புனையது கீழ்மூ லத்திற் புக்கினுல் தடிக்கும் தேகம்
கனலது மெத்தக் காணும் கண்ணது வெளுக்குந் தானே.

வெளுத்திடு முதடு தானும் வெடிக்குமே தலைதான் நோகும்
களைத்திடுஞ் சோப மாகிக் கைகால்க ளசதி காணும்
பழுத்திடும் முகம்வே ருகும் பாரமாய் பசியெ டாதாம்
உளுத்திடுஞ் சிசுவுக் கேதா னுட்டண மதிக மாமே.

உட்டண மதிக மானு லொடுங்கிடுந் தாது நாடி
உட்டண மதிகந் தன்னு லுடலது வற்றிக் காணும்
உட்டண மதிகத் தாலே மூலமே கடுப்புண் டாகும்.
உட்டணக் குறியே கண்டால் மோசமே வருகுந் தானே.

(பொ-ரை.)—புருடனுனவன் காலையில் பழையதுஉண்டு உடனே வலிந்து, புணர்ந்து, அவ்வதிர்ச்சி நீங்காமுன்னர் மிக்க வெயிலில் மிகுதியாக நடந்து.

அவ்விரவிலும் அவ்வாறே இராவுணவு உண்ட உடனே புணர்ந்தால், பித்த மானது விருத்தியடைந்து மூலத்திற் சேர அதன் இயக்கத்தாலும் அதன் செயலாலும் சூடுண்டாய், அச்சூட்டுடன் வாதங்கூடி மிகுந்து தொழிற்பட்டதா லும், அச்சூடு மேல் நோக்குந் தன்மையதாதலாலும், அது மேல் நோக்க கபாலம் கொதித்தும், அது இருந்து தொடங்கின இடம் மூலமாதலால் வெந்து கருகியும், உடல் முழுதும் சூட்டால் பொங்கியும், விந்து குறைந்தும், உயிர் வன்மை கெட்டு மழியும், இவ்வாறு நிகழுங்காலத்தில் மீண்டும் புணர்ந் தால், அக்கருப்பையில், விந்தூறிப் பிறக்கும் பிள்ளைக்கு மூன்றுமாண்டின் தொடக்கத்தில், வாதசோகை யென்னும் நோய் உண்டாம்.

அதன் குறிகளும் தன்மைகளுமாவன: உடல் நடுக்கும்படியான சுரம் காய்தல், நீர் வேட்கை, தலையில் நீர்கோத்தல், தாய்க்குப் பால் சுண்டி நீராதல் என்பவைகளாம்.

இச்சோகையில் மலசலக் கழிவிற்கு ஆதாரமான அபானவாயு கீழ் மூல த்திற்புகுந்தால், உடம்பு ஊதித்தடித்தல், சுரம் அதிகமாய்க் காய்தல், கண் வெளுத்தல், உதடுவெடித்தல், தலை நோதல், உடல் வீங்கல், கைகால்கள் அயர்ந்துபோதல், முகம் மாறுபடல், மிக்க பசியெடாமை, சூடு அதிகமாதல் என்னும் இவைகளும் உண்டாகும், இவை பெரும்பாலும் ஊதுகாமாலைக் குறிகளாகக்காணப்படுகிறது. (ஆகையால், வாதத்தில் சேர்ந்தது ஊது காமாலை என்றறியக் கிடக்கின்றது.)

அவ்வாறுண்டாம் அச்சூட்டால் எழு தாதுக்கள், நரம்புகள் வன்மை குறைதல், உடல்வற்றல், மூலக்கடுப்புண்டாதல், முதலியவை உண்டாம். இவை (வரட் காமாலைக் குறிகளாகக் காணப்படுகின்றன. ஆகையால் வரட் காமாலையும் வாதத்தாலுண்டாவதென்று அறிய விருக்கின்றது.) (ருரு அ)

வாத சோகைக்கு—முக்கத்தாரி எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

மோசமே வராம லுந்தான் மூர்த்தத்தின் சோகை தீர
தோசமாம் வாத சோகை தொலைந்திட வெண்ணெய் கேளாய்
நாசமாய்ப் போகு நோய்தான் ரத்தின தேக மாகும்
பேசவே யிந்த நூலின் பேதமே யறிந்தி டாயே.

அறிந்திடு முக்கத் தாரி யரசம்வே ரத்திப் பட்டை
வறிந்திடு முசுமு சுக்கை வாடிவேர் கருந்து மூாவும்
நுறிந்திடு மமுக்க ராவேர் தூதளை பொன்னுங் காணி
வெறிந்திடு வில்வ வேரும் விளாவுடன் துத்தி வேரே.

துத்தியுஞ் சரக்கொன் றைத்தூர் தொடரியுந் தகரை வேரும்
மித்துரு மேனி சங்கு முருத்ததோர் மகிழம் வேரும்
பத்தியாய் வகையொன் றுக்குப் பலமது நிறுத்து வாங்கி
நத்தியே மூன்று நாளும் ரவிதனி லுலர்த்தி டாயே.

உலர்த்தியே யுரலி லிட்டே யோரிடி யாகச் செய்து
வலர்த்தியே யிதனைத் தோண்டி வளம்பெறத் தூணி நீரில்
மலர்த்தியே யிதனைத் தாக்கு மறுபடி வனமூ லிச்சாறு
குலர்த்தியே சொல்லக் கேளாய் கூறுவோ மழிஞ்சிச் சாறே

அழிஞ்சியு நத்தைச் சூரி யாதொண்டை கீழ்க்காய் நெல்லி
வழிஞ்சியா மணக்கு புங்கு மாதுளை பருத்தி மேனி
விழிஞ்சி யாவாரை நீலி விடத்தலை பொன்னுங் கண்ணி
பிழிஞ்சியே வகை வகைக்குப் புகழிது பலஞ்சா றுமே.

சாறது வீதங் கொண்டு சாற்றுவாய் முன்பு நீரில்
பாரது கடைச ரக்கு பலவிதஞ் சொல்லக் கேளு
நேரது பறங்கிப் பட்டை நிம்பத்தோல் சாதிக் காயும்
சீரது தேவ தாரம் செண்பகப் பூவு மாமே.

பூவது லவங்கப் பூவும் புகழ்வலம் புரிக்காய் கோட்டம்
ஆவது தான்றிக் காயு மரிசிதிப் பிலியு மாஞ்சில்
தாவதி செவ்வி யந்தான் சந்தனத் தூளு மேலம்
பாவது கடுக்காய்ப் பூவும் பரிவுட னிறுத்து வாங்கே.

வாங்குசீ ரகமவ் வீதம் வகைவகைப் பலங்கா லாகும்
வாங்குட னிளம்வ றுப்பாய் வறுத்துமே யிடித்துத் தூளாய்த்
தீங்கது வராமற் றுனும் செலமதி லிதனைச் சேர்த்துத்
தாங்கவே யின்னங் கேளாய் சரக்கதன் வகையைத் தானே.

சரக்கதில் லிங்கம் பூரம் தாரமும் வீரங் கந்தி
குரக்கவே வெள்ளை வாளம் கோரோசனை புழுகு தானும்
நிரக்கக்கத் தூரி வீதம் நிலைபெற வகையொன் றுக்கு
வரக்கக்கால் கழஞ்ச தாகும் வாங்கியே பொடியாய்ச் செய்யே.

செய்துமுன் நீரில் தாக்கி சேரிரு கூட வெண்ணெய்
நெய்துட னெடுத்து விட்டு நிகழ்பெற வடுப்பி லேற்றி
மூய்துசா மந்தான் மூன்று மூலமாம் வன்னி மூட்டி
எய்துட னெரிக்கும் போதே விச்சலஞ் சுண்டிப் போமே.

சுண்டிடுங் கியாழ மெல்லாம் சூட்சமா யடிநீ ராலுல்
கண்டிடு விறக்கி நீதான் கனலது வற்றி னக்கால்
இண்டிடுங் கற்கந் தன்னி லதனையே வடித்திட் டேதான்
அண்டிடு வாலை பூசை அம்பிகை பதத்தைப் போற்றே.

போற்றியே யுலகத் தோரில் புண்ணியர்க் கில்லை நோய்தான்
பார்த்திடும் பாவத் தாலே பழிவரும் வினைவந் தெய்தும்
காத்திடுந் தேகந் தன்னில் கர்மநோய் சூழும் பாரு
மாற்றிடாப் பிணிக ளெல்லாம் மரணமாங் குணத்தைக் காணே

காணவே வாத சோகை காயத்தை விட்டுப் போகும்
ஆணவே யதிகா லத்தி லருள்பெற வெண்ணெய் தன்னில்
பூணவே நோய்க ளுக்குப் போடுநீ கழஞ்சு மூன்று
தோணவே நவநாள் மட்டுந் துதிபெற கொடுத்துப் பாரே.

கொடுத்திட விதற்குப் பத்தியம் கொள்ளுமே புகையும் போகம்
கடுத்திடும் புளியும் பாகற் காயுட னிறைச்சி மச்சம்
விடுத்திடும் பூசி னிக்காய் வெந்தயங் கடுகோ டுள்ளி
மடித்திடு மகத்திக் கீரை மழைரவி காற்று காதே.

காற்றுடன் நடையோட் டந்தான் கடுங்குரல் கார மாகா
பார்த்துடன் வெந்நீர்ச் சாதம் பாங்குடன் வறுத்த வுப்பாம்
போற்றுட னேகொ றுக்காய்ப் புளிதனைக் கூட்ட லாகும்
மாற்றுட னெண்ணெ யுண்டு மறுநவ நாளுந் தள்ளே.

தள்ளியே நவநா ளுந்தான் தலைக்குவா ரோமந் தேய்த்து
வள்ளல்தா னெனக்குச் சொன்ன ரதனையே யாமுஞ் சொன்னோம்
கள்ளமே யில்லை யிந்தக் கைவல்லியவந் தாதி யுண்மை
உள்ளமே சுத்த மாகு முத்தமர் மொழிந்த நூலே.

(பொ-ரை.)—முக்கத்தாரிவேர், அரசம்வேர், அத்திப்பட்டை, முசுமுசுக்கைவேர், தொட்டாற்சுருங்கிவேர், கருந்துளசிவேர், அமுக்கரான் வேர், தூதுவளைவேர், பொன்னுங்கண்ணிவேர், வில்வவேர், விளாவேர், துத்திவேர், சரக்கொன்றைவேர், தொடரிவேர், தகரைவேர், குப்பைமேனிவேர், சங்கம்வேர், மகிழம்வேர், இவ்வேர்கள் வகை ஒன்றுக்குப் பலம் எடுத்து மூன்று நாள் வரைக்கும் வெயிலில் உலர்த்தி இடித்து, ஒரு பெரிய மண் தோண்டியிற் போட்டு, அதில் ஒரு தூணி நீர் விட்டு, அதில் அழிஞ்சில், நத்தைச்சூரி, ஆதொண்டை, கீழாநெல்லி, ஆமணக்கு, புங்கு, மாதளை, பருத்தி, மேனி, ஆவாரை, நீலி, விடதாரி, பொன்னுங்கண்ணி, இவைகளின் சாறு வகைக்குப் பலம் ஊற்றி, பறங்கிப்பட்டை, வேப்பம் பட்டை, சாதிக்காய், தேவதாரச்சக்கை, சண்பகப்பூ, இலவங்கம், வலம்புரிக்காய், கோட்டம், தான்றிக்காய்த்தோல், அரிசித்திப்பிலி, சடாமஞ்சில், செவ்வியம், சந்தனத்தூள், ஏலரிசி, கடுக்காய்ப்பூ, சீரகம் இவை வகைக்குப் பலங்காலாக எடுத்து இளவறுப்பாக வறுத்திடித்து அதில் சேர்த்து, பின்னர் இலிங்கம், பூரம், தாரம், வீரம், கந்தகம், வெள்ளை, வாளம், கோரோசனம், புழுகு, கத்தூரி வகை ஒன்றுக்குக் கால் கழஞ்சு எடுத்துப் பொடித்ததிற் போட்டு, முத்தெண்ணெய் இரண்டு சேர் விட்டு மூன்று சாமம் எரித்துப் பக்குவத்தில் வடித்து, அந்த எண்ணெயில் மூன்று கழஞ்சு எண்ணெய் காலையில் மாத்திரம் ஒன்பது நாள் கொடுத்து கொள், புகை, போகம், புளி, பாகற்காய், இறைச்சி, மச்சம், பூசினிக்காய், வெந்தயம், கடுகு, வெள்ளைப் பூண்டு, அகத்திக்கீரை, மழையில் நனைதல், வெயிலிற் காய்தல், காற்றில் உலர்வல், அதிகமாக நடத்தல், அதிகமாக ஓடல், மிகுதியாகக் கூச்சலிடல், மிக்க காரம் இவைகளை நீக்கிவைக்க, வாதசோகை நீங்கும்.

வெந்நீருஞ் சோறும், வறுத்த உப்பும், கொடுக்காய்ப்புளியும் ஆகும். மறு பத்தியம் ஒன்பது நாளிருந்து, பிறகு ஓமம் தேய்த்துத் தலை முழுக்காட்ட வேண்டும். அப்படி செய்தால், நோய்கள் நீங்கி உடல் நல்ல நிலையில் இருக்கும். (ருருகூ)

## உ. பித்தசோகைக் குறிகுணம்

அறுசீர் விருத்தம்.

அருள்பெறும் பித்த வாயு ஆண்மையின் குற்றத் தாலே
மருவளர் சிசுவுக் கேதான் வல்பிணி தொடர்தல் கேளாய்
திருவரு ளாலே வந்த தீவினை கடூர மல்ல
குருவருள் சாபத் தாலே கொடியதீ வினைதா னென்றே.

தீவினை யாலே யெய்தும் குணங்குறி சிசுவுக் கேதான்
மாவினை பித்தத் தின்கா மாலையில் சோகை யாகில்
மேவினைப் பிறக்கு நோய்தான் விளக்குமே யேதென் றக்கால்
நாவினு லுரைக்கக் கேளாய் நாயக னூலே நோயே.

நாயகன் குணத்தைக் கேளாய் நாமுரை பிரிவிந் நூலில்
காயகக் காரன் காம போகத்தால் விரகஞ் சூழ்ந்து
சேயக மாதி னோடே சேர்ந்துதான் புணர்ச்சி செய்து
காயமே வியர்வை தட்டக் களைக்கவே போகித் தாலே.

களைக்கவே யிந்த வீதம் கன்னியோ டனுச ரித்து
விளைக்கவே தாது நட்ட மேவியே செய்வோ ராகில்
துளைக்கவே யன்ன முண்ணத் துடிதுடித் துயிர்ப சிக்கில்
இளைக்கவே புணர்ச்சி செய்வோர்க் கிவ்வித நடக்குந் தானே.

நடந்தநா யகனும் பெண்ணுள் நாடியே யனுபோ கத்தில்
படர்ந்துதான் கருவி லாகிப் பார்தனில் பிறக்கும் பாலன்
செடமது பித்த நீரால் தெளித்ததால் தேக மெங்கும்
கடமது கனக்க வூதிக் கண்ணுமே வெளுக்குந் தானே.

வெளுத்திடு மிரண்டாண் டானல் வினையது சூழக் கேளாய்
களைத்திடு சடலந் தன்னில் கனலதால் வரட்சி காணும்
பழுத்திடுந் தேக மூதிப் பாண்டுகா மாலை போலாம்
கொளுத்திடு குடங்கள் போலக் குறிவயிறு பெருகுந் தானே.

வயிறது பெருகிற் றேதான் வற்றிடுங் கால்கள் கையும்
தயிரது போலே பேதி தனித்தடிக் கடிக்குப் பாயும்
துயரமே யதிக மாகும் துவண்டிடு மசதி காணும்
பயறது போலே புண்கள் படருங்கா மாலை யாமே.

(பொ-ரை.)—காம போகத்தால் விரகஞ் சூழ்ந்து வியர்வை தட்டு மட்டும் புணர்ச்சி செய்து களைத்தலால் தாது நட்டம் உண்டாகும். இப்படி உண்டானவர் பசியிருக்கும் போது மாதருடன் புணர்ச்சி செய்வதால் உண்டாகும் குழந்தைக்கு பித்த நீர் அதிகமாகிச் சரீரம் ஊதிக் கண்ணும் வெளுக்கும். இந்நோய் பித்த சோகை எனப்படும். இக்குழந்தைக்கு இரண்டு வயதானல், உடம்பு இளைத்து வரண்டு தேகம் ஊதி பாண்டு, காமாலை போலாகும். வயிறு குடம்போலப் பெருகும், கால் கை வற்றும், தயிர்போல் அடிக்கடி பேதியாகும், மிகவும் துன்பமும், அயர்ச்சியும், சிறு பயறு போல புண்களும் படரும். (ருசுo)

பித்த சோகைக்கு—மாம்பட்டை எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

படருங்கா மாலை யந்தப் பாரநோய் தனக்குக் கேளாய்
இடறது வராதே யிந்நூ லியம்பிடு மெண்ணெய் கேளாய்
நிடருமாம் பட்டை யத்தி நிம்பத்தோல் முக்கத் தாரி
திடமெனச் சித்திர மூலி சிறுமுட்டி யமுக்க ராவேர்.

வேரெனு மூங்கில் வேரும் விடத்தலை யெருக்கு தானும்
வாரெனும் பிரப்ப வேரு மல்லிகை சிற்று மல்லி
கோரெனு மழிஞ்சில் முல்லை குரும்பனை யாம ணக்கு
தேரெனுஞ் செங்கத் தாரி திருமேனி யழகி யாமே.

மேனியும் பொன்னு வாரை மிளகதின் கருணை வாடி
ஞானியா நத்தைச் சூரி நன்னாரி முசுட்டை புங்கு
வானிற மான சூரை வன்னியும் கமுகின் வேரும்
காணிற வகைவ கைக்குக் கருதிடும் பலந்தான் வேரே.

வேருடன் வகைகள் வாங்கி மிகுத்ததோர் ரவியில் மூன்று
சீருடன் நாளு லர்த்திச் செப்பிடு முரலில் தாக்கிப்
பாருட னிடித்துத் தோண்டிப் பாங்குடன் தூணி நீரில்
காருட னிட்டுப் பின்னும் கருதுவோ மூலிச் சாறே.

மூலியும் நிலத்து மாயும் முருங்கையும் புனல்மு ருங்கை
வேலியின் பருத்தி வெள்ளைச் சாரணை கீழ்வாய் நெல்லி
காலிமா தளையு நொச்சில் காக்கணன் பிரமி துத்தி
பாலிநெய்ச் சட்டி நீலி பரிவுட னிவைகள் வாங்கே.

வாங்கிடும் வகைவ கைக்கு வளமதாய்ச் சொல்லக் கேளாய்
தேங்கிட வேண்டா மிந்தச் சாறுமே பலமி ரண்டு
நாங்கவே முன்பு நீரில் நளினமா யிதனை யிட்டுப்
பாங்குட னின்னங் கண்டு திப்பிலி மிளகு சுக்கே.

சுக்குடன் பறங்கிப் பட்டை சொல்லிய தும்ம ராட்டம்
தக்கவே தான்றிக் காயும் தாளிசபத் திரியு மேலம்
புக்கவே லவங்கப் பூவும் புகலவே கடுக்காய் மாஞ்சில்
சிக்கவே சிற்ற ரத்தை செவ்வியம் சிங்கி தானே.

சிங்கியாங் கடகம் சாதிக் காயுடன் சிவந்த பத்திரி
அங்கியா மக்ரா கார மதிகமாம் சண்ப கப்பூ
கங்குசீ ரகமுங் கோட்டம் கருதிடும் வகைவ கைக்குப்
பொங்கவே பலங்கால் வாங்கிப் புகலவே யின்னங் கேளே.

இன்னுங்கத் தூரி தானு மியம்புநற் புழுகுங் கூட்டி
அன்னரோ சனையும் வீத மவ்வகை வராகன் வாங்கி
முன்னைய சரக்க தெல்லாம் முறைவறுப் பாகச் செய்தே
உன்னித மாகக் கல்லி னுரலினில் தாக்கி டாயே.

தாக்கியே யிடித்து மாப்போல் தடையிலா வடியே கட்டி
ஆக்கியே முன்பு நீரி லடைவுட னிதனை யிட்டு
நோக்கியே சொல்லக் கேளாய் நுசிதஅப் பிரகம் காந்தம்
தூங்கிடுங் கௌரி நாபி துத்தமும் தார மாமே.

துத்தமும் துருசு வெள்ளை துதிபெறும் வீரம் பூரம்
வித்தக லிங்கம் வாளம் மேவிடு சூதம் கந்தி
சித்தமே யிவைவ கைக்குச் செப்பிடு முக்க மூஞ்சா
யுத்தமர் மொழிந்த நூலி னுரைதனை யறிந்தி டாயே.

அறிந்திடு மிதனை வாங்கி யருள்பெறத் தூள தாக்கித்
தெரிந்ததோர் முன்பு நீரில் திருத்தமா யிதனை யிட்டுப்
பிரிந்திட வேண்டாம் பின்பு பேராம ணக்கி னெண்ணெய்
பரிந்துநீ படிரண் டிட்டுப் பாரதோ ரடுப்பி லேற்றே.

ஏற்றியே முச்சா மந்தா னெரியதா யெரிக்கும் போது
பாத்தியே பதமா இற்றன் பசுமையாய் வருதல் காணும்
போற்றியே நீரெல் லாந்தான் புகலக்கேள் சுண்டும் பாராய்
ஆற்றிடு விறக்கிப் பின்னும் மடைவுடன் வடித்தி டாயே.

வடித்துமே கலசத் திட்டு வாலையின் பதமே வைத்து
மடித்துமே பித்தத் தின்கா மாலையின் சோகை தீரத்
துடித்ததோர் வினையு மேகும் துன்பமே யணுகி டாது
குடித்திடக் குழந்தை கட்குக் குணங்குறி செப்பு வோமே.

குணமதைச் சொல்லக் கேளாய் கொடுத்திடு நவநாள் தானும்
கணமிரு கழஞ்ச தெண்ணெய் கருதிடு சிசுவுக் கேதான்
தினமொரு நாள்தப் பாமல் திருத்தமாய்க் கொடுக்கும் போது
இனமெனத் தேகந் தானு மெழுகுபோல் வலுக்குந் தானே.

வலுக்கவே குழந்தை பெற்ற மாதாவுக் கென்ன பத்தியம்
தெலுக்கவே மிளகு காரம் செய்திடா வெந்நீர்ச் சாதம்
குலுக்கவே வறுத்த வுப்பு திண்டியு மிரண்டு வேளை
பலுக்கவே யதன்மே லொன்றும் பாலிப்ப தாகா தென்றே.

என்றென நவநாள் தானு மிப்படி யிருந்தா ராகில்
குன்றெனும் வினையும் போகும் கூறுவோ மின்னங் கேளீர்
நன்றெனத் தேகம் வச்சிர நலமதாம் சுவஸ்த நன்றும்
அன்றெனக் கைவல் யவந் தாதியின் பெருமை தானே.

(பொ-ரை.)—(1) மாம்பட்டை, (2) அத்திப்பட்டை, (3) வேப்பம்பட்டை, (4) முக்கத்தாரிவேர், (5) சித்ரமூலவேர், (6) சிற்றுமுட்டி, (7) அமுக்கரா (8) மூங்கில்வேர், (9) விடாதாரிவேர், (10) எருக்கம்வேர், (11) பிரப்பம் வேர், (12) மல்லிகைவேர், (13) சிற்றுமல்லிவேர், (14) அழிஞ்சில்வேர், (15) முல்லைவேர், (16) பனைவேர், (17) ஆமணக்குவேர், (18) செங்கத் தாரிவேர், (19) குப்பைமேனிவேர், (20) பொன்னுவாரைப்பட்டை, (21) மிளகரணைச் சமூலம், (22) நத்தைச்சூரிசமூலம், (23) நன்னாரி, (24) முசுட் டை, (25) புங்கம்பட்டை, (26) சூரைவேர், (27) வன்னிவேர், (28) கீழுருகுவேர் இவைகளை வகைக்கு ஒரு பலம் எடுத்து மூன்று நாள் வெயிலில் உலர்த்தி இடித்துத் தூணி நீரில் சேர்த்து, பிறகு (1) நிலத்துளசி, (2) முருங்கைப் பட்டை, (3) புனல் முருங்கைப்பட்டை, (4) வேலிப்பருத்தியிலை, (5) வெள்ளைச் சாரணைசமூலம், (6) கீழாநெல்லிச்சமூலம், (7) மாதளைக்கொழுந்து, (8) நொச்சியிலை, (9) காக்கணம்வேர், (10) பிரமியிலை, (11) துத்தியிலை, (12) நெய்ச்சட்டிச்சமூலம், (13) அவுரிவேர், இவைகளின் சாறு வகைக்கு இரண்டு பலம் சேர்த்து, பிறகு, (1) திரிகடுகு, (2) பறங்கிப்பட்டை, (3) தும்பராட்டம், (4) தான்றிக்காய், (5) தாளிசபத்திரி, (6) ஏலம், (7) இலவங்கம், (8) கடுக்காய், (9) சடாமாஞ்சில், (10) சிற்றரத்தை, (11) செவ்வியம், (12) கற்கடசிங்கி, (13) சாதிக்காய், (14) சாதிபத்ரி, (15) அக்ராகாரம், (16) செண்பகப்பூ, (17) சீரகம், (18) கோட்டம், இச்சரக்குகளின் சூரணம் வகைக்குப் பலம் கால், (1) கஸ்தூரி, (2) புழுகு, (3) கோரோசனை வகைக்கு ஒரு வராகன் இவைகளில் மணச்சரக்குகளை நீக்கி மற்றவற்றைத் தனித்தனி வறுத்தும் மற்றவற்றை வறுக்காமலும் பொடித்து, மேல் நீரில் கலக்கி, பிறகு (1) அப்ரகம், (2) காந்தம், (3) கௌரி, (4) நாபி, (5) துத்தம், (6) தாரம், (7) துருசு, (8) வெள்ளைப்பாடாணம், (9) வீரம், (10) பூரம், (11) இலிங்கம், (12) வாளம் (13) சூதம் (14) கந்தி இவைகள் வகைக்கு மூன்று கழஞ்சு

தூளாக்கி சேர்த்து, இத்துடன் ஆமணக்கெண்ணெய் படி இரண்டு சேர்த்து அடுப்பிலேற்றி மூன்று சாமம் எரித்து நீர் சுண்டின பிறகு பதத்தில் இறக்கி வடித்துக் கொள்ளவும். இந்த எண்ணெயை ஒன்பது நாள் காலையில் மாத்திரம் இருகழஞ்சு எண்ணெய் வீதம் கொடுத்துவர, பித்த சோகை, காமாலை தீரும், உடல் வன்மையாம். தாய்க்குப் பத்தியம், மிளகுகாரம் ஆகாது. வெந்நீர்ச்சாதம், வறுத்த உப்பு இவையாகும். இரண்டு வேளை ஆகாரத்திற்கு மேல் கூடாது. (ருசுக)

பித்த சோகைக்கு—கரிசாலைக்குடி நீர்.

அறுசீர் விருத்தம்.

கையாந் தகரை நீர்முள்ளி கமழ்நா யுருவி வேர்க்கிட்டம்
செய்யாச் சுக்கு மிளகுடனே சீர மிவைகள் சமனாக
மெய்யாக் கியாழ மாய்ச்செய்து மீறு மந்தி சந்திகொடு
பொய்யாம் பித்த சோகையது போகும் போகுங் கண்டாயே.

(பொ-ரை.)—(1) கையாந்தகரை, (2) நீர் முள்ளி, (3) நாயுருவிவேர், (4) அயக்கிட்டம், (5) சுக்கு, (6) மிளகு, (7) சீரகம், இவைகளை வகைக்குப் பலம் கால் நிறுத்தெடுத்து இடித்து அரைபடி நீர் விட்டு, எட்டிலொன்றாகக் குறுக்கியதை காலை மாலை இரண்டு வேளையும் கொடுத்துவரப் பித்த சோகை நீங்கிப் போம். (ருசுஉ)

பாண்டு, சோகை, காமாலைக்கு—மண்டூர அடைக்கியாழம்.

எண்சீராசிரிய விருத்தம்.

சுத்திசெய்த மண்டூரம் பலமோ ரெட்டு
சூதவிலை நீர்முள்ளி கீழ்வாய் நெல்லி
சித்திரமாங் கரசலாங் கண்ணி யோடு
சிறப்பாக வகைக்கஞ்சு பலமே கூட்டிப்
புத்தியுடன் சீரகமும் பலமொன் றாகப்
புனல்படியோ ரெட்டுவிட்டு வற்றக் காய்ச்சிப்
பத்தியுட னடைகியாழ மாகத் தானே
பண்பாக வந்திசந்தி கொடுத்தி டாயே.

கலி விருத்தம்.

கொடுத்திடப் பாண்டு கொடிய சோகைகளும்
அடுத்த காமாலை யனைத்துமே தீரும்
படித்திடு மிச்சாப் பத்தியங் காத்திடத்
தொடுத்த வியாதிக ளெல்லாம் தொலையுமே.

(பொ-ரை.)—(1) சுத்தி செய்த மண்டூரம் பலம் எட்டு. (2) மாவிலை பலம் ஐந்து, (3) நீர்முள்ளி பலம் ஐந்து, (4) கீழாநெல்லி பலம் ஐந்து, (5) கரிசாலை பலம் ஐந்து, (6) நற்சீரகம் பலம் ஒன்று, இவைகளை இடித்து நீர் படி எட்டில் சேர்த்து எட்டிலொன்றாக வற்று மட்டுங் காய்ச்சி, அடைகியாழமாக வைத்து, காலை மாலை இரு வேளையும் நோய்க்குத்தக்கபடி அளவையும் நாளையுங் கணித்துக் கொடுக்க பாண்டு, சோகை, காமாலை ஆகிய இவைகள் தீரும்.

மருந்து கொள்ளுங் காலத்திலும், மறுபத்தியம் வைத்துள்ள பொழுதும் இச்சாபத்திய மிருக்க வேண்டும். (ருசுரு)

பாண்டு, காமாலை, சோகை, நீர்க் கோவைக்கு—தயிர் பக்குவம்.

எண்சீராசிரிய விருத்தம்.

மேதியிளந் தயிர்படிகா லச்சா ணிப்பால்
விதமாக மூன்றுதுளி விடுக லக்கி
ஓதியே மிளகேழு பொடித்துப் போட்டே
உண்டுவா விப்படியே நாள்மூன் றுக்கு
நீதியாய்க் கடும்பத்திய மூன்று நாளும்
நினைவாக மறுபத்ய மூன்று நாளாம்
ஏதியே யேழாநாள் தலைநீர் வார்த்தே
எட்டாநாள் புளியுப்பு வறுத்துக் கூட்டே.

வெண்பா.

கூட்டவே பாண்டு கொடுங்காமா லைசோகை
நீட்டுடம்பு வீக்கமு நீர்க்கோவை—ஓட்டமிடும்
அன்னவஞ்சூழ் பூவி லழகொழுகும் பெண்மயிலே!
பன்னிப் பரவசத்தைப் பார்.

(பொ-ரை.)—எருமைத் தயிர் படி காலில், எருமைச் சாணப்பால் துளி மூன்று விட்டு, ஏழுமிளகெடுத்து நுண்ணிய பொடியாக்கிக் கலந்து மூன்று நாள் காலை மாலை இருபொழுதும் கொடுத்து, கடும்பத்தியம்வைத்து மூன்று நாள் மறுபத்தியமும் வைத்து ஏழா நாள் தலைக்கு நீர் விடவும்.

மருந்து கொள்ளும் போதும், மறுபத்தியமிருக்கும் போதும் உப்பு, புளி நீக்கி பத்தியங்காக்க வேண்டும்.

இவ்வாறு செய்ய, பாண்டு, காமாலை, சோகை, உடம்பு வீக்கம், நீர்க் கோவை தீரும். (௫௬௪)

## காமாலை.

### (1) ஊது காமாலை குறி குணம்.

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

ஊதுகா மாலைக் குணங்கேளா யூதி முகமுங் காலதைக்கும்
பாதி சாமம் பசியெடுக்கும் புசித்த வுடனே மந்திக்கும்
சீதஞ் சிறுத்து வயிறுவிடும் சிந்தை மயக்க முண்டாகும்
காது மடைக்கு மிளைப்புண்டாங் காமாலை யூதற் குணமிதுவே.

காதுட னுடம்புங் கண்ணும் கனக்கவே வீங்கும் வற்றும்
போதவே நாவும் புண்ணுய்ப் பொருந்திய சுரமுண் டாகும்
வேதுகை காலுஞ் சோர்ந்து வெறுத்திடு மன்னந் தன்னை
ஊதுகா மாலை யென்றே யுரைத்தனர் முனிவர் தானே.

(பொ-ரை.)—முகம், கால், இவை ஊதி அதைத்தல், நடுச்சாமத்தில் பசித்தல், புசித்தாலும் மந்தமுண்டாதல், கொஞ்சம் கொஞ்சமாய் சீதம் விழுதல், சிந்தை மயக்கமும் உண்டாதல், காது அடைத்தல், இளைப்பு உண்டாதல், காது, உடம்பு, கண் இவ்விடங்களில் வீங்கி வீங்கி வற்றுதல், நாபுண்ணுதல், சுரம் அடித்தல், கையும் காலுஞ் சோருதல், அன்னத்தை வெறுக்குதல்ஆகிய இக்குணங்கள் ஊது காமாலைக் குறி குணங்களாகும். இதனை அடியிற் கண்ட மேற் கோளாலும் அறிக.

அறுசீர் விருத்தம்.

கொள்ளவே பசிக்கு முப்பும் கொடுஞ்சீதம் வயிறு போகுந்
தள்ளவே மயக்குங் காதைத் தடையுற வடைக்குங் கண்தான்
வெள்ளையாய் வெளுத்துக் காணும் வெதும்பியே யூத லாகு
முள்ளமே யிளைப்பாய்த் தோன்று மூதுகா மாலை பெண்ணே. (ருசுரு)

ஊதுகாமாலைக்கு—கிட்டக் கற்கம்.

எண்சீர்க்கழிநெடில் விருத்தம்.

கிட்டமுடன் அரப்பொடியும் வெள்வெண் காயம்
இளர்முருங்கை யிலையுங்கோ கனகத் தோடே
திட்டமுடன் முற்றியதோர் தேங்காய் கூட்டிச்
சிறந்தவிள நீரைவார்த் தரைத்துக் கொண்டு
வட்டமுறு முலையாளே யிரண்டு நேரம்
வாகாக வரைக்கழஞ்சு குழவிக் கீயச்
சட்டமதா யூதுகா மாலை மஞ்சள்
தனித்தவரட் காமாலை தணியுந் தானே.

(பொ-ரை.)—கிட்டம், அயப்பொடி, வெள்வெண்காயம், முருங்கை யிலை, கரிசாலை, தேங்காய் வகைக்கு சமனெடையாக எடுத்து இளநீரால் நன்றாக அரைத்து, அரைக்கழஞ்சு வீதம் காலைமாலை கொடுத்துவர, ஊது காமாலை, மஞ்சள் காமாலை, வரட்காமாலை தீரும். (ருசுசு)

ஊது காமாலைக்கு—முடக்கற்றான் குடிநீர்.

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

மாலைசேர் முடக்கற் றான்வேர் வழுக்கைநீர்ச் சுண்டி சுக்கு
சாலநீர் முள்ளி தானுஞ் சங்கொடு சங்கங் குப்பிக்
கூலமாங் கண்டங் காலி கொடுத்திடு குடிநீ ராக
ஞாலமிட் டலறி யோடு மூதுகா மாலை யாமே.

(பொ-ரை.)—முடக்கற்றான்வேர், பிரமியவழுக்கை, நீர்ச்சுண்டி, சுக்கு, நீர்முள்ளி, சங்கன்வேர், சங்கங்குப்பிவேர், சிறுகண்டங்கத்திரி இவைகள் வகைக்கு கழஞ் சொன்று, நீர் கால் படி, இதை அடுப்பேற்றி அரை ஆழாக்காய்ச் சுண்டக் காய்ச்சிக் காலை மாலை கொடுக்கவும். (ருசுஎ)

(2) மஞ்சட் காமாலைக் குறிகுணம்.

அறுசீராசிரிய விருத்தம்.

கண்ணுடன் சிறுநீர் நாக்கு கனக்கவே மஞ்சட் போலாம்
எண்ணிய சுரங்கள் வாந்தி யெடுத்திடு மயக்க மூதல்
வண்ணமாய் மூக்கி னீரும் வடிந்திடும் வயிற்று ளேயாம்
நண்ணுமஞ் சட்கா மாலை நாடிய குணங்கள் தானே.

(பொ-ரை.)—மஞ்சட் காமாலை நோயில் கண், சிறுநீர், நா, இவைகள் மஞ்சள் நிறம் பெறும், சுரம் காயும், வாந்தி காணும், மயக்க முண்டாகும், உடல் ஊதும், மூக்கில் நீர் பாயும், வயிறு நோம்.

இந்நோய் அடியிற் கண்ட காரணத்தாலும் நேரிடும் :—

குண்டியக் கரமி ருந்தால் குளுப்பையாய் முகங்கால் வீங்கும்
விண்டிட ரத்தம் வற்றும் வெதுப்புமேல் விலாவில் தோன்றும்
பண்டியின் மலமுஞ் சிக்கிப் பசுமஞ்சட் சிறுநீ ராகும்
கண்டியாய்க் கண்வெ ளுக்கு மஞ்சட்கா மாலை யாமே.

(பொ-ரை.)—குண்டியில் அக்கரமிருந்தால் முகம், கால், இவை வீங்கும், இரத்தம் வற்றும், மேல்விலாவில் வெதும்பும், மலஞ்சிக்கும், சிறுநீர் மஞ்சள் நிறமாகும், கண் சிறு மஞ்சள் கலந்த வெண்ணிறம் பெறும், இக் குணங்களையுடைய நோய் மஞ்சட் காமாலை எனப்படும். (ருசுஅ)

மஞ்சட் காமாலைக்கு—கீழாநெல்லிக் குடிநீர்.

குணத்தொடு கீழா நெல்லி கூறுபொற் றலைக்கை யானு
மணத்தவெள் ளாட்டு லத்தி வளர்ந்தவா மணக்கு சுக்கு
பிணைத்திடு முடக்கற் றானும் பாகமாய்க் குடிநீர் கொண்டால்
இணைத்தமஞ் சட்கா மாலை யேகும்பா லன்னங் கொள்ளே.

(பொ-ரை.)—(1) கீழாநெல்லி சமூலம், (2) மஞ்சட்கரிசாலை, (3) வெள் ளாட்டுப் புழுக்கை, (4) ஆமணக்கம் வேர், (5) சுக்கு, (6) முடக்கற்றான் வேர், வகைக்கு ஒரு கழஞ்சு கொண்டு குடிநீர் செய்து, காலை மாலை இரு வேளையும் புகட்டிவர, மஞ்சட் காமாலை தீரும். இதற்குப் பத்தியம் பாலுஞ் சோறுமாம். (ருசுசு)

மஞ்சட் காமாலைக்கு—அதிமதுரக்கற்கமும், கீழாநெல்லிக் கற்கமும்.

எண்சீராசிரிய விருத்தம்.

சாற்றினு ரதிமதுரம் சங்கம் வேரும்
    தனித்தநிம்பப் பழத்தரைத்துத் தானே யாவின்
சாற்றினுர் பால்தனிலே யுண்ண வேதான்
    தணியுமஞ்சட் காமாலை தரணி தன்னில்
சாற்றினுர் கண்டீரோ கீழ்வாய் நெல்லி
    தழைத்தமணித் தக்காளி தயிரில் தானே
சாற்றினுர் அரைத்தியக் குழவி கட்குத்
    தணியுமஞ்சட் காமாலை சபலந் தானே.

(பொ-ரை.)—அதிமதுரமும், சங்கம் வேரும், வகைக்குப் பலம் கால் தூக்கி, எலுமிச்சம் பழச் சாற்றாலரைத்து பசுவின் பாலில் கலந்து, காலை மாலை இருவேளையுங் கொண்டாலும் அல்லது கீழாநெல்லி சமூலமும், மணித்தக்காளி இலையும், வகைக்குக் கழஞ்சு ஒன்று சேர்த்து, பசுவின் தயிரில் அரைத்துக் கொண்டாலும், மஞ்சட் காமாலை தீரும்.

குறிப்பு.—இம்மருந்துகளை மூன்று முதல் ஐந்து நாள் வரையில் கொடுப் பதும் உப்பு, புளி நீக்கி, பாலன்னம், வெந்நீர் சாதம் உண்ணச் செய்தலும் வழக்கம். அன்றியும், இதை மும்முறையேனும், நோய் நீங்கு மட்டேனும் கொடுக்கலாம். (ருஎ0)

## (3) வரட் காமாலைக் குறிகுணம்.

வெண்பா.

கண்பச்சென் றேயிருக்கும் காலோய்ந் துடம்புலரும்
தண்ணீர்க்கு மெத்தத் தவிக்குமே—பெண்ணே !
இருட்பிழம்பைப் போலு மிளவலுக்குத் தான்சூழ்
வரட்காமா லைக்குணத்தின் வாறு. (௫௭௧)

(பொ-ரை.)—வரட் காமாலையில் கண் பச்சை நிறமடையும், காலோயும், உடம்பு உலரும், நீர் வேட்கை அதிக முண்டாகும்.

வரட் காமாலைக்கு—மணித்தக்காளி கற்கம்.

வெண்பா.

மணித்தக்கா ளிக்கீழின் காய்நெல்லி மண்மேல்
கணித்துச்ச மூலநிம்பக் காயின்—கணித்தே
எருமைத் தயிரி லினிதாக வுண்டு
எருமைத் தயிர்பால்நெய் யீ.

(பொ-ரை.)—(1) மணித்தக்காளி, (2) கீழாநெல்லிச் சமூலம், இவ்விரண்டும் சமனெடையெடுத்து, அரைத்து, எலுமிச்சங்காயளவு எருமைத் தயிரில் கலந்து கொடுத்து, எருமைத் தயிர், பால், நெய்யும் உபயோகித்துவர, வரட் காமாலை நீங்கும். (௫௭௨)

# 11. பற்பல நோய்களின் வகுப்பு

---

பால் உண்ணுக் குழந்தைக்கு—அவுரி வேர்ச் சுரசம், எண்ணெய்.

எண்சீர் விருத்தம்.

அவுரிவேர் சத்திச்சா ரணையின் வேரும்
　　அமுக்கரா வேர்நிலப் பனங்கி ழங்கும்
விவர்கருங் காலியிலை கஞ்சாங் கோரை
　　மிளகரணைப் பட்டைமூக் குரட்டை வேரும்
துவருடைய திரிகடுகு பறங்கிப் பட்டை
　　தும்மராட் டகங்கடுகு சீர கந்தான்
பவுரியிவை வகைவகைக்கு வராக னொன்று
　　பசும்பாலா லரைத்துவடி யிட்டுக் கொள்ளே.

இட்டுக்கொள் ளொருசங்கு வார்த்திட் டக்கால்
　　இளங்குழந்தை பால்குடிக்கு மிதுவல் லாமல்
மிட்டுமிந்த மருந்தெல்லாங் கூட்டித் தானே
　　மகிழ்சிற்று மணக்கெண்ணெய் தன்னிற் போட்டுச்
சட்டமுட னேயெரித்துப் பதத்தி றக்கித்
　　தயவாக வளவறிந்து புகட்டி விட்டால்
நட்டமுடன் பால்குடியா திருந்த பிள்ளை
　　நலமாகப் பாலுண்ணும் நாடிப் பாரே.

(பொ-ரை.)—அவுரிவேர், சத்திச் சாரணைவேர், அமுக்கராக் கிழங்கு, நிலப்பனங்கிழங்கு, கருங்காலியிலை, கஞ்சாங்கோரை, மிளகரணைப்பட்டை, மூக்கரட்டைவேர், சுக்கு, மிளகு, திப்பிலி, பறங்கிப்பட்டை, பேரரத்தை, கடுகு, சீரகம், இவைகளை வகைக்கு ஒரு வராகனெடை எடுத்துப் பொடித்துக் கூட்டி யதில், கால்பலமெடுத்து போதுமான பசும்பால்விட்டு அரைத்துப் பிழிந்து வடிகட்டிக் கொண்டதில், வேளைக்கு ஒரு சங்களவாக நோய் வன்மைக்குத்தக்க நாளளவு வார்த்து வந்தால், பால் குடியாத பிள்ளை பால் குடிக்கும். அன்றி இச்சரக்குகளை யெல்லாம் பசும்பாலால் அரைத்துச் சிற்றாமணக்கு எண்ணெய் பலம் பத்தில் போட்டு எரித்துப் பக்குவத்திலிறக்கிக் காலையில் ஒரு உச்சிக் கரண்டி வீதம் நோய் வன்மைக்குத்தக்க நாளளவு கொடுக்கப் பால்குடியாத பிள்ளைகள் பால் குடிக்கும். (௫௭௩)

இருமலுக்கு—இண்டிலைக்குடிநீர்.

எண்சீர் விருத்தம்.

இண்டிலையும் தூதுவளை கண்டங் கத்திரி
　　இயல்பாக வகைக்குமொரு பிடியே கொண்டு
மண்டியே திப்பிலியும் வெள்ளைப் பூண்டும்
　　வகைக்குமொரு துட்டெடைதான் வாங்கி வந்து
பண்டியொரு படிநீரை விட்டுக் காய்ச்சிப்
　　பரிவாக வந்திசந்தி பத்து நாளும்
கொண்டிடவே யிருமலது விரைவிற் றீரும்
　　குணமான இச்சாப்பத் தியமாக் கொள்ளே

(பொ-ரை.)—இண்டிலே, தூதுவளை, கண்டங்கத்திரி, வகைக்கு ஒரு பிடி எடுத்து குறுக அரிந்து மண் சட்டி அடுப்பிலேற்றி அதிலிட்டுச் சிவக்க வறுத்து திப்பிலி, வெள்ளைப்பூண்டு வகைக்கு துட்டு எடை நருக்கிப்போட்டு, ஒரு படி தண்ணீர்விட்டு எட்டொன்றாய்க்காய்ச்சி, பத்து நாள் இருவேளையுங் கொடுத்தால், இருமல் தீரும். (௫எச)

அண்ணாக்குக்கு—பூசுமருந்து.

நேரிசை வெண்பா.

எவச்சாரம் சுண்ண மிவைபழச் சாற்றால்
அவச்சார மாக வரைத்துச்—சுவைசேரும்
அண்ணாக்கி லேதடவ அண்ணாவு தான்வளர்தல்
கண்ணார வோடுமது காண்.

(பொ-ரை.)—எவாச்சாரம், கற்சுண்ணாம்பு இரண்டையும் சரி எடை எடுத்து எலுமிச்சம்பழச்சாற்றாலரைத்து, அண்ணாக்கில் தடவிவர, அண்ணாக்கு வளர்தல் நீங்கும். (௫எ௫)

கக்குவான் குறிக்குணம்.

கொச்சகம்.

கெக்கரித்துத் தும்பிக் கிளர்ந்திருமல் உண்டாகும்
கொக்கரித்துப் பற்கடித்துக் கோழைகப மேஇறங்கி
வக்கரித்தங் காண்பெண்ணா மற்கட்டி யிட்டாற்போல்
நக்கரித்து நாணு நவில்கக்கு வானதுவே.

(பொ-ரை.)—ஒரு வகையாகக் கூவித் ததும்பி மிகுதியாக இருமல், கேவல், பல்லைக்கடித்தல், கபம் கோழையாக இளகியும் கெட்டிப்பட்டும் வெளிவருதல், ஆண் பெண்களிருவரும் மல் கட்டினாற்போல் துன்புறுதல் என்பவைகள் கக்குவான் நோயின் குறிகளாம்.

இக்குறிகளன்றி கொக் கொக் என்று ஒலித்துக் கோழையுடன் இருமலும் உண்டாதலு முண்டு, இதைக்

" கொக்குக் கொக்கெனுங் கோழை யிருமலாங்
கக்குவாய் " என்பதாலறிக. (௫எசு)

கக்குவானுக்கு—தூதுவேளை நெய்.

வெண்பா.

தூதுவே ளைதான் துவைத்துமே சாறுகொண்டு
கோதில் படிநெய்யும் கோட்டமொடு—மாதேநீ
கூட்டி யெரித்தருந்தக் கோரகக்கு வானதுவும்
தாட்டியின்றி யோடிவிடுந் தான்.

(பொ-ரை.)—தூதுவளைச் சாறு படி ஒன்று, பசு நெய் படி ஒன்று இவ்விரண்டையும் ஒரு மட்சட்டியில் கூட்டி, அத்துடன் உயர்ந்த கோட்டம் ஒரு பலம் பொடித்துத் தூவிக் கலக்கி, அடுப்பேற்றிக் காய்ச்சி பதத்திலிறக்கி, காலை மாலை இரு வேளை உச்சிக் கரண்டி யளவாகக் கொடுத்து வர, கக்குவான் நீங்கும். (௫எஎ)

நாவரட்சிக்கு—கோட்டக் குடிநீர்.

எண்சீர் விருத்தம்.

கோட்டமுடன் சீரகமும் ஏலம் சுக்கு
கூவிளவே ரதிமதுரம் கூர்மத் தோடு
வாட்டமுடன் சந்தனமும் கலைமான் கொம்பு
வரட்பூலா வேருநெற் பொரியு நேராய்த்
தேட்டமுடன் குடிநீரைக் குடிக்க வேதான்
தேசத்துச் சிறுவோர்க்குத் தேனே கேளாய்
நாட்டமுட னேமயக்கம் சோப தாபம்
நாவரட்சி யுந்தீரு நாட்டுள் ளோரே.

(பொ-ரை.)—கோட்டம், சீரகம், ஏலம், சுக்கு, வில்வவேர், அதிமதுரம், ஆமையோடு, சந்தனம், கலைக் கொம்பு, வரட்பூலா வேர், நெற் பொரி, இவைகள் வகைக்கு வராகனெடை ஒன்று எடுத்து இடித்துக் கால்படி நீர் விட்டு, அரை ஆழாக்காகக் காய்ச்சி, ஒரு வேளைக்குக்கொடுக்கவேண்டும். இப்படி, வேளை வேளைக்குப் புதிதாய்க் குடிநீர் போட்டு நோய் வன்மைக்குத் தக்க நாளளவு குடிப்பித்தால், மயக்கம், சோபம், தாபம், நாவரட்சி இவை தீரும். (ருஎஅ)

தாகத்திற்கு—ஏலாதிக் குடிநீர்.

அறுசீர் விருத்தம்.

ஏல மதுரம் பர்ப்படகம் ஏற்ற சீந்தில் அறுகுசந்தம்
சால வில்வப் பழத்துடனே சவிலா மிச்சம் வேப்பீர்க்கு
கோலிரு நாழி நீர்விட்டுக் கொதிக்கக் காய்ச்சி யுழக்காக்கி
வாலர் பெரிய மாந்தருக்கு வருந்திக் கொடுதா கம்போமே.

(பொ-ரை.)—ஏலம், அதிமதுரம், பர்ப்படகம், சீந்தில் கொடி, கணு நீக்கின அறுகங்கட்டை, சந்தனம், வில்வப்பழம், விலாமிச்சம் வேர், வேப்பீர்க்கு, இவைகள் வகைக்கு ஒரு பலம் எடுத்திடித்து, இரண்டுபடி நீர் விட்டு எட்டொன்றாகக் காய்ச்சி, நோய் வன்மைக்குத்தக்க நாளளவு குடித்தால், தாகம் தீரும். (ருஎகூ)

தாகத்திற்கு—புளியம்பட்டைக் குடிநீர்.

அறுசீர் விருத்தம்.

புளியம் பட்டை மிளகுடனே புங்கு வேலி நாயுருவி
அளிய இலைகட் சமனெசாம்ப லாக்கி யோமம் வராகனெடை
நளியப் பொரித்து நீர்விட்டு நலமாய்க் காய்ச்சி வடிகொள்ள
தளிய முளைக்குத் தணியாத தாகம் போகும் கண்டாயே.

(பொ-ரை.)—புளியம்பட்டை, மிளகு, புங்கம்பட்டை, உத்தாமணியிலை, நாயுருவியிலை, இவைகளை வகைக்கு ஒரு பலம் எடுத்து சாம்பலாக்கி உடனே அதில் ஒரு வராகனெடை ஓமத்தை போட்டுப் பொரிய விட்டு, அரைப்படி நீர் விட்டு நாலில் ஒன்றாகக் காய்ச்சி, இருவேளை நோய் வன்மைக்குத் தக்க அளவு கொடுக்க, குழந்தைக்குத் தணியாத நீர்வேட்கை நீங்கும். (ருஅ0)

### வீக்கத்திற்கு—தாளிக் குடிநீர்.

வெண்பா.

தினத்தாளி சங்குசுரை சேர்நெருஞ்சி யுள்ளி
வனமுள்ளி யுங்குறிஞ்சான் வாங்குங்—கனமட்டு
வெண்கார மேபொடியாய் மேவுகுடி நீரருந்தக்
கண்காண வீக்கமறுங் காண்.

(பொ-ரை.)—தாளிக் கீரை, சங்கிலை, சுரைக்கொடி, நெருஞ்சிச்செடி, உள்ளி, நீர்முள்ளி, சிறுகுறிஞ்சான் இவைகளை வகைக்குக் கால் பலமெடுத்து நறுக்கி, அரைபடி நீர்விட்டு அரை ஆழாக்காக குடிநீர் செய்து, அதில் பொரித்த வெங்காரப் பொடி போட்டுக் கொடுத்தால், வீக்கம் நீங்கும். (௫அக)

### பொருமல், வீக்கம், வயிற்றுக்கட்டி, உப்பலுக்கு—சங்காதிக் குடிநீர்.

பன்னிருசீர் முடுகு விருத்தம்.

சங்குநெருஞ்சில் சாரணைகோவைத் தண்டுட னீர்முள்ளி
தான்றிகடுக்காய் புளியிலைநெல்லி தம்முடன் வேப்பந்தோல்
மாங்கியகிட்ட மிரும்பினரப்பொடி மஞ்சளு நன்னாரி
வழுதலைகொன்றை விழுதிகுமாரி மணலி சுரைக்கொடியும்
பங்கம்பாளை செங்கத்தாரி பாதிரி குறிஞ்சானும்
பழகியகாடி கோசலம்விட்டே பாகமு மெட்டொன்றாய்ப்
பொங்கியகுடிநீ ரானதுபருகப் பொருமலும் வீக்கமுடன்
போதவயிற்றிற் கட்டியுமுப்பலும் பொடியா குந்தானே.

(பொ-ரை.)—சங்கு, நெருஞ்சில், சாரணை, கோவைத் தண்டு, நீர்முள்ளி, தான்றித்தோல், கடுக்காய்த்தோல், புளியிலை, நெல்லியிலை, வேப்பம்பட்டை, இரும்புக் கிட்டம், இரும்பரப்பொடி, மஞ்சள், நன்னாரி வேர், வழுதலைவேர், சரக்கொன்றை, விழுதியிலை, கற்றாழை, மணலிக் கீரை, சுரைக் கொடி, பங்கம்பாளை, செங்கத்தாரி, பாதிரி, குறிஞ்சான், இவைகள் வகைக்கு ஒரு பலமாக எடுத்திடித்து, ஒரு மட்பாண்டத்திலிட்டு பழகிய காடிநீரும், பசுவின் நீரும் வகைக்கு மூன்று படி விட்டு, எட்டொன்றாய்க் காய்ச்சி, வேளைக்கு அரை யாழாக்காக காலை மாலை, இரண்டு வேளையும், நோய் வன்மைக்கும் உடல் வன்மைக்குந் தக்க நாளளவு கொடுக்க, வயிற்றுப் பொருமல், வீக்கம், வயிற்றிலுள்ளகட்டிகள், உப்பல் முதலிய பாண்டு மகோதர நோய்களி லியைந்தவைக ளெல்லாம் நீங்கும்.

வயிற்றிற் கட்டிகள் எனவே கல்லீரல், மணீரல் மலர்ச்சிகளைக் கொள்க. (௫அ௨)

### அசீரணத்திற்கு—வெற்றிலைக் குடிநீர்.

அறுசீர் விருத்தம்.

வெற்றிலை பத்தெடுத்து வேண்டுஞ்சுண் ணாம்பு பூசி
வைத்திடு வடுப்பில் சட்டி மடிக்கும்வெற் றிலையைப் போட்டே
ஒத்துடன் வறுத்து நன்றாய் ஒருபடி நீரை வார்த்துப்
பற்றற வெட்டொன் றாக்கிப் பாங்குட னிறுத்துக் கொள்ளே.

இப்படிக் கொள்ள வேதான் இதமுட னசீர ணங்கள்
தப்பிய தாது சந்நி சயித்தியம் வாந்தி பிராந்தி
செப்பிய வயிற்றி றைவு சீதமும் கடுப்பு தாகம்
அப்பொழு தோடு மென்றே யகத்திய ருரைசெய் தாரே.

(பொ-ரை.)—பத்து வெற்றிலை எடுத்து, அதில் சுண்ணும்பு, அளவாய்த் தடவி மடித்துச் சட்டியிற் போட்டு வதக்கித் தண்ணீர் ஒரு படி விட்டு எட்டுக் கொன்ருகக் குடிநீர் காய்ச்சி, நோய் வன்மைக்குத் தக்க நாளளவு கொடுக்க அசீரணம், தாதுக்குறைவு, சந்நி, சயித்தியம், வாந்தி, மயக்கம், வயிற்றுநோய், சீதபேதி, ஆசனக்கடுப்பு, தாகம் இவை தீரும். (ருஅங)

நடுக்கல் வாந்தி, அசீரணத்திற்கு—காடிச் சோற்றுக் குடிநீர்.

அறுசீர் விருத்தம்.

சோறுட னசம தாகம் துய்யதோர் வசம்பு தானும்
பாரிய நுணு தமாலம் பருமிள குடனே கூட்டி
வேறுவே ருய்ந றுக்கி விதங்கொட்டாங் கச்சி ஓடும்
நாரியே காய்ச்சிக் கொள்ள நடுக்கல்வாந் தியுந்தான் போமே.

(பொ-ரை.)—காடிச் சோறு, ஓமம், வசம்பு, நுணு இலை, மிளகு, இவைகளை வகைக்கு ஒரு வராகனெடை எடுத்துச் சட்டியிலிட்டு, முக்கண் தேங்காயோடு கொளுத்தி அதிலிட்டு எல்லாவற்றையும் சாம்பலாக்கி, உழக்கு நீர் விட்டு அரை ஆழாக்காகக் காய்ச்சி மூன்று வேளைக்குக் கொடுக்க, நடுக்கலும், நடுக்கலோடு கூடிய வாந்தியும் தீரும். (ருஅச)

விக்கலுக்கு—தேற்ருன் கற்கம், வெங்காரப்பொடி.

அறுசீர் விருத்தம்.

தேற்ருங் கொட்டை சந்தனமும் திகழுங் கலைமான் கொம்புடனே
கூற்ரும் விழிப்பெண் முலைப்பாலில் கொட்டைப் பாக்கின் அளவரைத்தே
ஆற்ரு வெல்லங் கூட்டியிட அகலும் வெங்கா ரம்பொரித்து
போற்ரு இளநீ ரிற்கொடுக்கப் போகும் விக்கல் ஆமென்றே.

(பொ-ரை.)—தேற்ருங்கொட்டை, சந்தனம், கலைக் கொம்பு, இவைகளை முலைப்பால் விட்டு அரைத்து, கொட்டைப் பாக்களவு எடுத்து வெல்லங் கூட்டிக் கொடுத்தாலும், வெங்காரத்தைப் பொரித்துக் கால் வராகனெடை எடுத்து இளநீரிற் கலந்து கொடுத்தாலும், விக்கல் தீரும். (ருஅரு)

மயிலிறகுப் பொடி.

கலி விருத்தம்.

எட்டுத் திப்பிலி யீரெட்டு சீரகம்
கட்டுத் தேனில் கலந்துண விக்கலும்
விட்டுப் போகும் விடாவிடிற் பொத்தகம்
சுட்டுப் போடுநான் தேரனு மல்லனே.

(பொ-ரை.)—திப்பிலி எட்டுப் பங்கு, சீரகம் பதினறு பங்கு, இவைகளைப் பொடி செய்து தேனில் குழைத்துண்ண விக்கல் நீங்கும். அப்படி நீங்காவிடில், மேற்படிச் சூரணத்திற்குச் சமன் மயிலிறகு சுட்ட சாம்பல் பொடிகூட்டி, தேனில் குழைத்துண்ண நீங்கும். (ருஅசா)

திப்பிலிப் பொடி.

வெண்பா.

திப்பிலியும் ரோகணியும் சேரவறுத் துப்பொடித்தே
துப்பா மயிலிறகுஞ் சுட்டுதான்—தப்பாமல்
செந்தேன் கலந்திழைத்துச் செய்யநா விற்றடவப்
பைந்தொடியே விக்கலறும் பார்.

(பொ-ரை.)—சிறுதிப்பிலி, கடுகுரோகணி, மயிலிறகு சாம்பல், இவைகள் சரியெடை எடுத்து, முன் இரண்டு சரக்குகளை வறுத்துப் பொடித்து எல்லாவற்றையும் ஒன்றாய்க் கலந்து வேளைக்கு இரண்டு பண வெடை தேனிலிழைத்துக் கொடுக்க, விக்கல் தீரும். (ரு௮எ)

வாந்தி, விக்கலுக்கு—மாதளைப்பொடி.

கலி விருத்தம்.

நீடு மாதளை நெற்பொரி சர்க்கரை
கோடு திப்பிலி தேனிற் குழைத்திடப்
பீடு விக்கல் பெருத்ததோர் சர்த்தியும்
ஓட ஓட ஒருத்துவ துண்மையே.

(பொ-ரை.)—மாதளம்பூ, நெற்பொரி, நாட்டுச் சர்க்கரை, திப்பிலி, இவைகளைச் சரி எடை எடுத்துப் பொடித்து நோய் வன்மைக்குத் தக்க அளவு தேனில் கொடுக்க, விக்கல், சர்த்தி நீங்கும். (ரு௮௮)

வாந்திக்கு—மான் கொம்புக் கலவைப் பொடி.

எண்சீர் விருத்தம்.

தினமான குழந்தைகட்கு வாந்தி கண்டால்
    சிங்கியென்ற கலைக்கொம்பு திப்பிலியுங் கூட்டி
இனமாக அதிவிடயங் கூடச் சேர்த்தே
    இன்பமுடன் பொடிசெய்து தேனி லிட்டால்
கனமான வாந்தியெல்லாம் விட்டுப் போகும்
    கைகண்ட மருந்திதுதான் கருதிப் பாரு
மனமான மனதறிவா யிருந்து கொண்டு
    மகத்தான சுருதியிலே மனத்தை நாட்டே.

(பொ-ரை.)—கலைக்கோடு பற்பம், திப்பிலி, அதிவிடயம், இவைகளைச் சரி எடை எடுத்து, பின் இரண்டையும் பொடி செய்து பற்பத்துடன் கூட்டி, நோய் வன்மைக்குத் தக்க மருந்தளவும் நாளளவும் கணித்து தேனில் கொடுத்தால், எவ்வித வாந்தியும் நீங்கும். (ரு௮௯)

வாந்தி ஒக்காளத்திற்கு—காடிச் சோற்றுக் குடிநீர்.

அறுசீர் விருத்தம்.

காடிச் சோறு வசம்புடனே கனத்த மிளகு பற்பமதாய்
ஆடிச் செய்து கியாழமிடு அன்றி வாந்தி யானக்கால்
கேடில் நன்னு ரிப்பட்டை கியாழத் தரைத்து நல்கிடவே
ஓடிப் போகும் வாந்தியுடன் ஒக்கா ளந்தான் போமன்றே.

(பொ-ரை.)—புளித்த காடிச் சோறு, வசம்பு, மிளகு, இவைகளைச்சரி எடை எடுத்துச் சட்டியிலிட்டுச் சாம்பலாக்கி, போதுமான அளவு நீர்விட்டுச்

சுண்டக்காய்ச்சிக் கொடுக்க, வாந்தி ஒக்காளந்தீரும். அப்படி தீராவிட்டால் நன்னாரிப்பட்டையை ஷெ கியாழத்திலரைத்துக் கலக்கி அருந்த நின்று விடும். (௫௬௦)

வாந்தி, விக்கலுக்கு—இலவங்கப் பொடி.

வெண்பா.

பேசுங்கி ராம்புடனே பேர்சீர கம்மேலம்
வீசு மயிலிறகு மேற்சாம்பல்—தேசுபெற
நாலையுந் தூளாக்கி நன்றாகத் தேனிலிட
வாலர்தம் வாந்திவிக்கல் மாறும்.

(பொ-ரை.)—மொட்டு நீக்கின கிராம்பு, சீரகம், ஏலம், மயிலிறகுச் சாம்பல் இவைகளைச் சரி எடை எடுத்து இவற்றில் முன்னர் மூன்றையும் பொடித்து எல்லாவற்றையும் ஒன்றாய்ச் சேர்த்து, வேளை ஒன்றுக்கு இரண்டு பணவெடை யளவு நோய்வன்மைக்குத் தக்க நாளளவு தேனிற் கொடுத்தால், வாந்தியும், விக்கலும் தனித்தனியிருப்பினும் சேர்ந்திருப் பினும் தீரும். (௫௬௧)

வெள்ளோக்காளம், பித்தம், விக்கல், சர்த்திக்கு
பருத்திச் சூரணம்.

வெண்பா.

பருத்திப் பருப்பும் பகர்கணையு மேலம்
தரித்ததொரு நெற்பொரியுஞ் சாரச்—சருக்கரை
கொண்டால்வெள் வாந்தி கொடும்பித்தம் விக்கல்சர்த்தி
கண்டால் விரைந்தோடுங் காண்.

(பொ-ரை.)—பருத்தி விரைப் பருப்பு, திப்பிலி, ஏலரிசி, நெற்பொரி இவைகளைச் சரி எடை சூரணித்து அதற்குச் சரியெடை நாட்டுச் சருக்கரை கூட்டி, இரு வேளையும் மூன்று விரற்கடை யளவாக நோய் வன்மைக்குத் தக்க நாளளவு கொடுத்தால், வெள்ளோக்காளவாந்தி, பித்தம், விக்கல், வாந்தி இவை தீரும். (௫௬௨)

மார்பு சளி, கோழைகட்டு—பிரண்டைச் சாறு.

கலி விருத்தம்.

நாட்டி டுபிரண் டைநருக் கொன்றுதான்
வாட்டி டுபிழி வாங்கு ரசந்தனைப்
போட்டி டுமிரு போதுமோ ரைந்து நாள்
கூட்டி டுஞ்சளி கோழைக்கட் டோடுமே.

(பொ-ரை.)—பிரண்டைத் துண்டு ஒன்றைக் கணு நீக்கி நெருப்பில வாட்டிப் பிழிந்த ரசம் துட்டெடை வீதம், ஒரு நாளைக்கு இரண்டு வேளையாக ஐந்து நாள் கொடுத்தால், சளி, கோழைக்கட்டு இவைகள் தீரும். (௫௬௩)

அமரத்திற்கு—கடுக்காய் எண்ணெய்.

வெண்பா.

ஆமணக்கின் எண்ணெயிலே அங்கடுதூ ளைக்குழப்பித்
தேமணக்குஞ் சீலையினில் தோய்த்துமே—பூமணக்கும்
கண்ணிற் பிழியக் கருதும் அமரந்தான்
விண்ணிற்ப றந்தோடு மே.

(பொ-ரை.)—கடுக்காய்த் தோல் தூள் ஒரு பலத்தைச் சிற்றாமணக்கு எண்ணெய் இரண்டரைப் பலத்தில் போட்டுக் குழப்பிச் சீலையில் பொட்டணமாக முடிந்து கண்ணில் பிழிய விரைவில் அமரம் நீங்கும். (ருகூச)

கண்ணோய்க்கு—புளிமாதளைச் சாறு.

வெண்பா.

புளிமா தளையிற் றிகழும் ரசத்தில்
சுளுவாய்நற் கற்கண்டைத் தூள்செய்து—வளமிவைசேர்
கண்ணிற் பிழிந்துவிடு காதலர்கண் ணோய்தீரும்
மண்ணிற் பெரியவர்க்கு மாம்.

(பொ-ரை.)—புளிப்பு மாதளம் பழரசம் பலம் ஒன்றில், கற்கண்டைப் பொடித்த தூள் ஒரு வராகனெடை சேர்த்து, கண்ணிற் பிழிய கண்ணோய் தீரும். (ருகூரு)

மாலைக் கண்ணுக்கு—சிறுதும்பை மை.

கலி விருத்தம்.

தீர வேசிறு தும்பை யிலையினீர்
சேர வேபிழிந் திருகரத் தாலிழை
பாற வேமை பறிந்திடுங் கண்ணினுள்
மாற வேஅந்தி மாலைவிட் டோடுமே.

ஓடு மேபத்திய முன்ன ரறிந்துகொள்
போட வேஎழு போதிரு நேரமும்
சாடு மேஉப்பு கைப்பு புளிதவிர்
நாட வேவெந்நீ ரன்னம்உண் ணேடுமே.

(பொ-ரை.)—தும்பை யிலைச் சாற்றைப் பிழிந்து கையிலிட்டு இழைத்து ஒரு விரலாற் கண்ணினுள் காலை மாலை இரண்டு வேளையும் ஏழு நாள் இட்டால், மாலைக்கண் நீங்கும், பத்தியம்—உப்பு, கைப்பு, புளிப்பு தவிர்க்கவும். வெந்நீரும் சோறும் சாப்பிடவும். (ருகூசா)

புளித்த கண்ணுக்கு—சங்கிலைமை.

கலி விருத்தம்.

ஓடு வெண்கல மொன்றுகீ ழாகவை
சாடு சங்கிலைச் சாறு பிழிவைமேல்
ஆடு செம்பினு லந்தமை யானபின்
போடு நாளேழ் புளிச்சகண் ணறுமே.

ஆறும் பாசிநற் பருப்பா வின்பால்
சேரு நற்புழுங் கலரி சியின்மா
நேருஞ் சர்க்கரை நெய்சுக்கு சீரகம்
கீறு நற்களி கிண்டியு ணில்லையே.

(பொ-ரை.)—வெங்கலத்தில் சங்கிலைச் சாறு விட்டுச் செப்பினால் தேய்க்க வரும் மையை ஏழு நாள் காலை, மாலை, கண்ணில் போட்டால், புளித்த கண் நீங்கும்.

பச்சைப் பருப்பு, பசுவின் பால், புழுங்கலரிசிமா, சர்க்கரை, நெய், சுக்கு, சீரகம் இவற்றால் நேர்ந்தபடி களி கிண்டிக் கொடுக்கவேண்டும். (ருகூஎ)

## செவி நோய்க் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

கண்களும் பீளை சாரும் கையொடு தலையுந் தேய்த்துப்
பண்களுங் குரலுந் தாழ்ந்து பாலகன் மெலிந்து வாடிப்
புண்படு மேனி போலப் புரண்டுதா னழுமே யாகில்
பண்படு செவிநோ யென்று பகருவா ரறிவுள் ளோரே.

(பொ-ரை.)—கண்கள் பீளை சாருதல், கையால் தலையைத் தேய்த்தல், குரல் கம்முதல், உடல் மெலிந்து புரண்டழுதல் இவை காதில் நோயிருந்தால் உண்டாகுங் குறிகளாதலால், இது செவி நோய் என்றறிவாய். (ருகூஅ)

## காது நோய்க்கு—செங்கழுநீர் எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

சீதே வியாரின் செங்கழுநீர் செழியக் கிழங்கு முள்ளியுடன்
மாதே வசம்பு வேப்பெண்ணெய் வார்த்துக் கொதிப்பித் தேயிறக்கிக்
காதில் விடவே நோயெல்லாம் காணு தோடு மிவ்வுலகில்
பேதை மயிலே வைத்தியர்க்குப் பேசு மாயுள் வேதமிதே.

(பொ-ரை.)—சீதேவியார் செங்கழுநீர்க் கிழங்கு, உள்ளி, வசம்பு, வகைக்கு ஒரு வராகனெடை பொடித்து ஒரு பலம் வேப்பெண்ணெயிலிட்டுக் கொதிப்பித்து ஆற்றிக் காதில்விட, காது நோய் தீரும். (ருகூகூ)

## காது நோய்க்கு—சதுரக்கள்ளிச் சாறு.

கலி விருத்தம்.

ஆறு மேசது ரக்கள்ளி யையனல்
நேரு மேவதக் கிரு நேரமும்
சாரு மேபிழிந் தடைசெவி நோவுதான்
தீரு மேபத்தி யம்புளி தள்ளிடே.

(பொ-ரை.)—சதுரக்கள்ளியை அனலில் வாட்டி, இரண்டு வேளையும் காதில் பிழிந்து பஞ்சடைக்க, காது நோய் தீரும். பத்தியம் புளி தள்ள வேண்டும். (௬00)

## காது சீயுக்கு—எருக்கெண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

சுக்குத் திப்பிலியுங் கோட்டம் சுகந்த சமிந்த லவணமுடன்
வக்க முத்தக் காசுள்ளி வசம்பு வகைக்கு மாடஎடை
தக்க கர்ச்சூர் எருக்கிலைநீர் தானே கலந்து எண்ணெயிட்டு
சிக்கக் காய்ச்சிச் செவியிலிடச் சீயு மாறுங் கண்டாயே.

(பொ-ரை.)—எருக்கிலைச் சாறு பத்து பலம், எண்ணெய் பத்து பலம், ஒரு மட்சட்டியில் கூட்டி, சுக்கு, திப்பிலி, உயர்ந்த கோட்டம், இந்துப்பு, கோரைக் கிழங்கு, வெள்ளைப் பூண்டு, வசம்பு, பேரீச்சங்காய் இவை வகைக்கு மாட எடை கூட்டி அடுப்பேற்றிப் பக்குவமாய்க் காய்ச்சி இறக்கிக் காதில் மூன்று துளி விட்டுவர, காது சீ நிற்கும். (௬0௧)

காதில் நாயீக்கு—மேனிச் சாறு.

வெண்பா.

குப்பைமே னிச்சாறும் கோலச் சிறுநீரும்
ஒப்பிக்கா திற்பிழிய ஒண்டொடிகேள்—செப்பினதோர்
காதிற் புகுந்த கடியநா யீச்சாகும்
தீதில்லா திம்மருந்தைச் சேர்.

(பொ-ரை.)—குப்பைமேனிச் சாறும் சிறுநீரும் கலந்து, வேளைக்குமூன்று துளி காதில்விட, நாயீ சாகும். (௬0௨)

காதில் நாயீக்கு—கோழியவரைச் சாறு.

கலி விருத்தம்.

ஓடுங் கோழிச்சா றுந்திரு மேனிநீர்
தேடுங் கூட்டிச் செவிதுளை விட்டிடில்
வேடு நாயீ வெளிப்படும் ஓலமிட்
டாடுமில் லாவிடி லழிந்து நீறுமே.

(பொ-ரை.)—கோழியவரைச்சாறு, குப்பைமேனிச்சாறு இரண்டையும் கலந்து, காதில் மூன்று துளி விட, நாயீ வெளிப்படும். அப்படி வெளிப்படா விடில் உள்ளேயே செத்துப்போம். (௬0௩)

பல்ஈறில் வரும் இரத்தத்திற்கு—நன்னாரி கற்கம்

அறுசீர் விருத்தம்.

பச்சைநன் னாரி வேரைப் பரிவுடன் கொண்டு வந்து
மிச்சையில் வெந்நீர் விட்டு விசிதமாய் அரைத்துப் பின்னர்
கொச்சையுள் நரம்பைப் போக்கிக் கொட்டைப்பாக் களவு வெந்நீர்
இச்சையாய்க் கொடுக்கப் பல்லு ஈறினில் ரத்தம் போமே.

(பொ-ரை.)—பச்சை நன்னாரி வேரைக் கொண்டு வந்து நரம்பைப்போக்கி வெந்நீர் விட்டரைத்துக் கொட்டைப் பாக்களவு எடுத்து வெந்நீரில் கலக்கி உள்ளுக்குக் கொடுக்க, பல் ஈறிலிருந்து ரத்தம் வருவது நிற்கும். (௬0௪)

முடிசாய்ந்து போனதற்கு—செவ்வலரிக் குளிசம்,
பொன்னாங்காணி எண்ணெய்.

அறுசீர் விருத்தம்.

உற்றசெவ் வலரி தன்னில் உத்தர வேர்பிடுங்கி
அற்றவே குளிச மாடி ஆணெனில் வலது கையில்
எற்றபெண் பிள்ளை யாகில் இடதுகை யதனிற் கட்டி
நற்றவ காணிச் சாறு நல்லெண்ணெய் சமனாய்க் கூட்டே.

கூட்டச்சங் கெடையே வார்க்கக் குழந்தையும் தெளிவ தாகும்
தாட்டிக சிகரந் தானும் சாய்ந்தது நிமிர்ந்து நன்மைக்
காட்டிடுங் களிப்பு மாகும் கமலயன் விதித்த தென்றல்
பாட்டையும் பாடி யென்ன பயந்தாளின் பாக்கியந் தானே.

(பொ-ரை.)—சிவப்பு அலரியின் வடக்கே ஓடும் வேரை எடுத்துக் குளிசஞ் செய்து, குழந்தையைக் குளிப்பாட்டி ஆணானல் வலது கையிலும், பெண்ணானால் இடது கையிலும் கட்டிப் பிறகு, பொன்னாங் காணிச் சாறும் நல்

லெண்ணெய்யும் சரி கூட்டி வேளைக்குச் சங்களவு வார்க்க சாய்ந்து போன தலை நிமிரும். அவ்வளவே விதியாயிருந்தால் தாய் செய்த அறம் அவ்வள வென்றே கொள்ளவேண்டும். (கூOரு)

முடிசாய்ந்து போனதற்கு—துத்தி உருண்டை.

எண்சீர் விருத்தம்.

சிறுதுத்தி வேர்வரட்பூ லாக்கொ ழுந்து
திகழ்விடத்தே ரிலைவேப்பந் தளிரு நல்ல
முறுகுமொரு தலைப்பூண்டுஞ் சமனுய்ச் சேர்த்து
முலைப்பாலி லரைத்ததனை யுள்ளே வார்க்கக்
குறுகுறுத்த முடிசாய்ப்பு தீருந் தீரும்
கொடிமினிடைக் குவளைவிழிக் குமுதச் செவ்வாய்
நறுவிகங்க நடைக்கமல வதன மாதே
நவையில்குழந் தைப்பரிதா பத்தைப் பாரே.

(பொ-ரை.)—சிறுதுத்தி வேர், வரட்பூலாக்கொழுந்து, விடதாரியிலை, வேப்பந் தளிர், ஒரு தலைப்பூண்டு இவைகளைச் சரி எடை சேர்த்து, முலைப் பாலில் அரைத்து வேளை ஒன்றுக்கு கொட்டைப் பாக்களவு முலைப் பாலிற் கரைத்து வார்க்க, சோர்ந்த தலை நிமிரும். (கூOகூ)

ஆண் குழந்தைகளின் விதை வாதத்திற்கு நூல் நூற்கிற கதிரால் சூடு போடலும், மருந்தும்.

எண்சீர் விருத்தம்.

பார்க்கவே குழந்தைகட்கு விதையைப் பற்றிப்
பக்கத்தி லுப்பிசமாய்க் கண்ட தானல்
நேர்க்கவே யடித்தொடையைக் கையி னலே
நிமிட்டிப்பார் நரம்பதுவுந் தடிப்புப் பார்த்து
வேர்க்கவே கதிரதனை வெதுப்பிக் கொண்டு
விரைக்கெட்டு விரற்கடைக்கீழ்ச் சுட்டுப் போடாய்
சூர்க்கவே யனலடுப்பிற் காய மிட்டுச்
சுட்டெடுத்து மூன்றுநா ளடைவாய்த் தின்னே.

தின்கையிலே பத்தியமோ வொன்று மில்லை
சிறுமஞ்சட் பொடியில்விளக் கெண்ணெய் விட்டுப்
புண்ணென்னுந் தொடைதனிலே தொட்டுப் போடப்
பொங்கியே புண்ணுகி யாறும் போது
மண்ணெனவே விதைதனிலே கண்ட வீக்கம்
வாயுமுதல் வாதமுதல் வாங்கிப் போகும்
கண்ணுரக் கண்டதிது சொல்லி விட்டோம்
காசினியிற் காட்டாதே யிந்த நூலே.

(பொ-ரை.)—குழந்தைகளுக்கு விதையைப் பற்றி விதையின் பக்கத்தில் வீங்கி நோய் கண்டதனுல், அவ்விதையின் அடியிலுள்ள தொடையில் கையால் நிமிட்டவும். அதனுல் நரம்புதடிப்பு விளங்கும். அதைக் கண்டு ஊசியைவெதுப்பி விரைக்கு எட்டு விரற்கடையின் கீழ் சூடு போட வேண்டும். அதுவன்றி, நன்ருய் அனலாயிருக்கின்ற நெருப்பில் பெருங்காயத்தைக் கொஞ்சமிட்டு சுட்டெடுத்து மூன்று நாள் காலையில் மாத்திரம் கொடுக்க வேண்டும். இதற்குப் பத்தியம் ஒன்றுமில்லை. மேற்படி சூடு போட்ட இடத்தில்

விளக்கெண்ணெயில் மஞ்சள் தூள் போட்டுக் கலந்து மேற்படி புண்ணில் தடவ அப்புண் மிகுதிப்பட்டு ஆறும்போது மேற்படி விதை வீக்கம், அவ் வீக்கத்திற்குக் காரணமான வாதம் முதலியவை நீங்கும். இது கண்ணுற் பார்த்ததாகும். (௬0௭)

## மசரைப்புழு நோய்க் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

சோருஞ் சீத மலந்தண்ணீர் துலங்க விடாம லேகழிந்து
சேறு மலம்போ லபானத்தைச் சேர்த்தல் வெளியில் வயிற்றிநோய்
காரி னிறம்போல் கத்தரிக்காய் கசங்கல் போலக் கழிந்துகுத்தல்
வாரும் வடமுந் திகழ்முலையாய் மசரைப் புழுவின் குணமாமே.

(பொ-ரை.)—குழந்தை சோர்ந்து கிடத்தல், ஒரு வேளை சீதமாகவும், ஒரு வேளை மலமாகவும், ஒரு வேளை நீராகவும், ஒரு வேளை கலந்ததாகவும் கழிதல், மலவாய் வெளி வருதல், வயிற்றுவலி, கத்தரிக்காய் கசங்கின நிறமாய் கழிதல், என்னும் இவைகள் மசரைப்புழுவின் குறிகளாம். (௬0௮)

## மசரைப்புழுவுக்கு—சிறுபீளை நெய்.

அறுசீர் விருத்தம்.

மசரைநோய் தீரக் கேளாய் வருமே மேதி நெய்யுழக்கு
திசையா மஞ்சளு மீருள்ளி திரிகடு வசம்போ டேலம்
தசைநறும் பீளை வேரும் தருமத னிலையின் சாறும்
அசையுறு மசரை மீனின் அதன்தலை தானுங் கூட்டே.

கூட்டிமுன் சாறு விட்டுக் கூர்மையா யரைத்து நெய்யில்
நாட்டமாய்க் கலந்து காய்ச்சி நற்பத மெழுக தானல்
தேட்டமாய் வடித்தோர் காசு திகழுநெய் கொள்ளத் தீரும்
வீட்டமே யின்ன மொன்று பசு நெய்யிற் சொல்லுவோமே.

(பொ-ரை.)—எருமை நெய் உழக்கு, மஞ்சள், ஈருள்ளி, சுக்கு, மிளகு, திப்பிலி, வசம்பு, ஏலம், சிறு பீளைவேர், சிறு பீளை இலைச்சாறு உழக்கு, மசரை மீன் தலை இவைகளில் சிறு பீளைச்சாறு தவிர மற்றவைகளை வகைக்கு வராகனெடை யெடுத்து மேற்படி சாற்றாலரைத்து மேற்படி நெய்யில் கலக்கி அடுப்பேற்றிக் காய்ச்சிப் பதத்தில் இறக்கி வேளைக்கு ஒரு காசெடை கொடுத்து வர, மசரைப்புழு நோய் தீரும். (௬0௯)

## மசரை நோய்க்கு—நாயுருவி நெய்.

அறுசீர் விருத்தம்.

மசரைநோய்க் குக்கேள் மானே மருவுமா வினெய் யுழக்கில்
குசையினு யுருவி மேனி கொழுஞ்சிதூ துளையோர் நாலும்
வசம்புடன் சுக்கு மஞ்சள் வகையோர்பாக் களவு கூட்டிப்
பசைப்பத மெழுகாய்க் காய்ச்சிப் பரிந்துண மயரை நோய்போம்.

(பொ-ரை.)—பசு நெய் உழக்கு, நாயுருவி யிலை, குப்பைமேனி யிலை, கொழிஞ்சி யிலை, தூதுளை யிலை, வசம்பு, சுக்கு, மஞ்சள், இவைகள் எல்லாம் வகைக்குப் பாக்களவு, தண்ணீரால் அரைத்து நெய்யில் சேர்த்துக் காய்ச்சி மெழுகு பதத்தில் வடித்துக் கொண்டு, வயதுக்குத்தக்க அளவில் கொடுக்க, மசரைப்புழு நோய் தீரும். (௬௧0)

## கிரி நோயின் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

மஞ்சடை மதலை தானு மருவிடும் பால்பா லாக
மிஞ்சியே வயிற்றிற் பூச்சி மேனியு மிளைத்துக் காட்டும்
நெஞ்சொடு விலாவிற் றட்டி நெறிகெட்டுப் பேசு மாகில்
அஞ்சவே கிரி நோயென் றறிந்துகொள் ளழகு மாதே.

(பொ-ரை.)—குழந்தை வயிற்றிற் கிரிப்புழு இருந்தால், அடிக்கடி பால் போலச் சிக்கிக் கழிதல், உடம்பு இளைத்துக் காட்டுதல், மார்பிலும், விலாவிலும் தட்டிக் கொண்டு புத்திமாறிப் பேசல் என்னுங் குறி குணங்கள் உண்டாம். (சூகக)

## கிரி நோய்க்கு—இளநீர் நெய்.

அறுசீர் விருத்தம்.

கேளுங் கிரி நோய்தனக்குக் கிளர்ந்த பசுவி னெய்யுழக்கு
கேளி இளநீ ரொப்பாகக் கிராம்பு சாதிக் காய்மதுரம்
தோழி யோமம் சுக்கேலம் தூகோட்டம் மறுகா லொன்று
மாள வரைத்து நெய்காய்ச்சி வருநெய்க் கரண்டி கொளத்தீரும்.

(பொ-ரை.)—பசு நெய் உழக்கு, கேளி இளநீர் உழக்கு, இவ்விரண்டை யுங் கலந்ததில், கிராம்பு, சாதிக்காய், அதிமதுரம், ஓமம், சுக்கு, ஏலம், மணை முள்ள கோட்டம், வகைக்கு ஒன்றரை வராகனெடை எடுத்துத் தண்ணீ ரால் அரைத்துக் கலந்து, பக்குவ பாகத்திற் காய்ச்சி வடித்து, நோய் வன் மைக்குத் தக்கவாறு ஒரு உச்சிக் கரண்டி கொடுத்துவர கிரி நோய், நீங்கும். (சூகஉ)

## கிரிப்பூச்சிவீழ—எலிசெவிக் குடிநீர்.

வெண்பா.

நித்தம் எலிச்செவியும் நீள்முருங்கை நல்வேரும்
அத்தத் திரிபலையோ டாங்குடிநீர்—ரத்தகணுய்
வாய்விளங்க மேல்தூவி மைந்தர் வயிற்றின்உள்ள
தாய்விழுங்கப் பூச்சிவிழுந் தான்.

(பொ-ரை.)—எலிக்காதுகீரை, முருங்கைவேர்ப்பட்டை, கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், நெல்லிவற்றல், இவைகள் வேளை ஒன்றுக்குக் கால் பலம் எடுத்து இடித்து ஒரு மண்பாண்டத்திலிட்டு நீர் அரைப்படி வார்த்து அரையாழாக்காகக் காய்ச்சி வடித்து, அதில் ஒரு வராகனெடை வாய் விளங்கம் பொடித்துத் தூவித் தினந்தோறும் இருவேளையும் இப்படியே செய்து கொடுத்து வந்தால், கிரிப் பூச்சி மலத்துடன் வெளியில் வந்து விழுந்து விடும். பசுங்குழவியாயிருப்பின் தாயும் உண்டுவரலாம். (சூகங)

## கிரிப்பூச்சி விழ—முருங்கைக் குடிநீர்.

அறுசீர் விருத்தம்.

கிரிப் பாம்பு விழமருந்து கேளீர் முருங்கை இலையதனை
நேர்ப்பாய் அவித்து நால்நாழி நீரே வார்த்து நாலிலொன்றாய்
ஏர்ப்பாய்க் கால மேகொடுத்து இலையை வயிற்றி லேவைத்துக்
கோர்ப்பாய்க் கட்டச் செத்துவிழுங் கொடியக் கிரிப் பாம்பதுவே.

(பொ-ரை.)—முருங்கைக் கீரை பலம் பத்தை அவித்து, நான்கு படி நீர் விட்டு, நாலொன்றாகக்காய்ச்சி, அதில், அரை ஆழாக்குக் குடி நீரைக்

காலையில் கொடுத்து, அவ்விலையை எடுத்துப் பிழிந்து வயிற்றில் வைத்துக் கட்டி விட்டால், அக்கொடிய கீரிப்பூச்சி செத்து மலத்தோடு வந்து விடும். (சுகச)

## நாகப் பூச்சி இருக்குங் குறி குணம்.

வெண்பா.

பேச்சை இனிக்கேள் பெருவயிறுங் கொப்பூழும்
காய்ச்சலுட னோக்காளம் கக்குமே—மேய்ச்சலுறு
பூச்சியது நாகமாம் பூவையே நீயறிந்து
நீச்சறவே வைமருந்தை நேர்.

(பொ-ரை.)—வயிறு பெருத்தல், கொப்பூழ் மலர்தல், காய்ச்சல் அடித்தல், ஓக்காளித்து வாந்தி எடுத்தல், இக்குறிகளிருந்தால் நாகப்பூச்சி இருக்கும் என்று அறிந்து கொள்ளவேண்டும். (சுகரு)

நாகப்பூச்சிக்கு—பாகல் எண்ணெய்.

எண்சீர்ச் சந்த விருத்தம்.

இந்நி லந்தனிற் பாகல் கழற்சிச்சா
 றேந்து கொங்கைய ரேவிளக் கெண்ணெயும்
கன்னி யீதேக ணக்குழு ழக்கதாய்க்
 காய்ந்த சுக்கு கரந்தை நற்பூரமும்
சென்னி யுள்ளிவ சம்புவ ராகனுய்ச்
 சென்ற தோரெடை யாயவை சேர்த்திடு
வன்னி மீதினில் வைத்தே எரித்திதை
 வாய்த்த சங்கு குழவிக் கிடுவீரே.

(பொ-ரை.)—பாகல்சாறு, கழற்சிச்சாறு, ஆமணக்கெண்ணெய், வகைக்கு உழக்கு, ஒரு மண்சட்டியிலிட்டு சுக்கு, கரந்தை, இரசகர்ப்பூரம், ஒரு தலைப் பூண்டு, வசம்பு, வகைக்கு வராகனெடை ஒன்று, இவற்றுள் பூரம் தவிர மற்றவைகளை ஷை சாற்றாலரைத்து அடுப்பேற்றி எரித்து வடித்து, பிறகு பூரத்தைச் சேர்த்தரைத்து ஒரு சங்கு வீதம் குழந்தைக்கு கொடுத்து வர, நாகப்பூச்சி விழும். (சுகசு)

நாகப் பூச்சிக்கு—புரசம்விதைக் குடிநீர்.

கலி விருத்தம்.

சாடு மோமம் தனிப்பு ரசம்விதை
யோடு வேப்பீர்க் குற்றபி ரண்டையும்
போடு நால்வகை போட்டுச் சமனெடை
ஆடு நீரு மரைப்படி கண்டிடே

கண்டி டேளரி காய்ச்சிநா லொன்றுதான்
சுண்டி டஇறுத் துக்குடி மூன்றுநாள்
உண்டிடப் பூச்சி யுள்ளது கட்டுடன்
பண்டு பந்தாய் விழுமீ தறிந்திடே.

அறிந் திடும்பேதி ஆங்கடுத் துக்கொடு
சரிந்தி டும்பூச்சி தங்காதி னத்துடன்
பறிந்தி டும்பின்னிப் பந்துபந் தாய்விழும்
தரிந்தி டும்பத்திய மில்லைநீ தோற்றிடே.

(பொ-ரை.)—ஓமம், முருக்கம் விதை, வேப்பீர்க்கு, பிரண்டை இவைகள் நான்கும் வகைக்கு அரைப்பலம் எடுத்துப் பொடித்து, ஒரு மண்சட்டியில் இட்டு மூன்று ஆழாக்கு நீர் விட்டு நாலிலொன்ருகக் காய்ச்சி இறுத்து, இருவேளையும் மூன்று நாள்கொடுத்து, பிறகு பேதிக்குக் கொடுக்க, நாக்குப் பூச்சியாவும் இனத்துடன் பந்து பந்தாய் விழுந்து விடும். (சுகஎ)

## மலவாதக் குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

உரைப்போங் கேளாய் மலவாத மோகோ கண்ணின் புருவத்தைக்
கரைப்போ நாக்கும் கைகாலும் கண்ணைக் குவித்து விண்பார்க்கும்
விரைப்போ முந்தி யடிதங்கி மேல்கீழ் வயிற்றை வலிப்பிக்கும்
மரைப்போந் தூங்கா மஞ்சளிக்கும் வண்டார் முலையும் விரும்பாதே.

(பொ-ரை.)—மலவாதத்தின் குறிகளாவன, கண்ணின் புருவத்தைக் குவித்தல், நா, கைகள், கால்கள், கண் இவைகளைக் குவித்தல், கண் விண்ணைப் பார்த்தல், உந்தியின் அடியில் வாயு தங்கி மேல்வயிற்றையும் கீழ் வயிற்றையும் வலிப்பித்தல், தூங்காமை, உடல் மஞ்சளித்தல், தாயின் பாலை விரும்பிக் குடியாமை என்பவைகளாம். (சுகஅ)

## மலசலக் கட்டுக்கு—கள்ளி அடை.

வெண்பா.

இலைக்கள்ளி வேர்ப்பட்டை யைந்துபல முள்ளி
கலமிளகு சுக்கு கடுக்காய்—பிலக்க
அடைசுட்டு மைந்தர்க் கருந்த மலநீர்த்
தடைவிட்டே யோடிவிடுந் தான்.

(பொ-ரை.)—இலைக்கள்ளி வேர்ப்பட்டை பலம் ஐந்து, உள்ளி, மிளகு, சுக்கு, கடுக்காய்த் தோல் இவைகளை வகைக்கு, கால் பலமாக எடுத்து, எல்லாவற்றையுமரைத்து, அடை சுட்டுக் கொடுக்க, பிள்ளைக்கு வரும் மலசலக்கட்டு நீங்கும். (சுகக)

## சாத்திய குறி குணம்.

அறுசீர் விருத்தம்.

பொருந்தியே சோர்ந் திடாதே புகழ் விழி சிவப்பேருதே
வருந்திடும் உடல்நா ருதே வரிவிழி நீர்ப்பா யாதே
கரந்துநா வரண்டி டாதே கபமுறை யாதே யாகில்
வருந்திபரி காரஞ் செய்ய மாதுடன் பகர வுற்ருர்.

(பொ-ரை.)—உடல் சோர்ந்து விழாமலும், விழி சிவப்பேருமலும், உடல் யாதொரு கெட்ட நாற்றத்தையும் வீசாமலும், கண்களில் தண்ணீர் வடியாமலும், நாவரளாமலும், கபம் கெட்டிப்படாமலும் இருக்கும் குறிகள் எந்த நோயிலும் காணப்படுமாஞல், அந்நோய்க்கு மருத்துவஞ் செய்தால் நன்மையைப் பயக்கும். (சுஉ0)

## அசாத்திய குறிகுணம்.

அறுசீர் விருத்தம்.

கண்ணையு மூடிக் கொண்டு கழிந்துகை கால்கு ளிர்ந்து
மண்மீதில் மனிதர் காண மயக்கமாய்ச் சோர்ந்து வீழ்ந்து
கண்மீது பெற்ற தாயார் சாலவும் அழவே பிள்ளை
விண்மீதில் ஏகு மென்று விரைந்துமே முனியு ரைத்தார்

விழிகள்தான் நெருப்புப் போல மிக்கவே சிவப்புண் டாகி
எழிலுள உச்சி தானும் இனிகுழி குழிந்து மேலும்
உழல்குக்கி தான்க ழிந்தே உடல்குளிர்ந் திருக்கும் ஆகில்
மழைவிழி ஐம்பத் தொன்றின் மரணமென் றறிந்து கொள்ளே

(பொ-ரை.)—கண்கள் திறவாமை, அடிக்கடி கழிதல், கைகளும், கால்களும் குளிர்ந்து சில்லிடல், மயக்கமாய்ச் சோர்ந்து விழுதல், அடிக்கடி ஓயாமல் அழுதல், கண்கள் நெருப்புப் போல் சிவத்தல், உச்சி குழிவிழுதல், உழலை, இவைகள் உண்டாயிருக்குமானால், அக்குழந்தை ஐம்பத்தோர் நாளில் சாகும். (சூஉக)

மருந்திற்கு முறிவு.
அறுசீர் விருத்தம்.

கொள்ளுக் காடி கொமட்டிக்காய்க் கோழி பன்றி கொக்கோடு
பள்ளச் சேம்பு வாளவரைப் பாலை சுரைக்காய் பூசினிக்காய்
முள்ளிற் பெரிய பாகற்காய் முதிரை விளைந்த பயற்றங்காய்
எள்ளும் இவைகள் தின்பீரேல் எல்லா மருந்தும் இழந்தீரே.

கடலை அவரைப் பெரும்பயறு கானற் காட்டுப் பாகற்காய்
படரும் பசளை நெல்லிக்காய் பழுபா கற்காய் சுண்டைக்காய்
அடர இவைகட் கொண்டோருக் கனங்கன் மகுட முலையாளே
உடனே முறியும் மருந்தெல்லாம் உடலில் வியாதி பிலத்திடுமே.

மாங்காய் இளநீர் வழுதுணங்காய் மாவின் பண்டம் புளிகடுகு
தேங்காய் நெய்பால் கிழங்குபழம் தின்னுங் காயம் மீன்இறைச்சி
நீங்கா திருக்குஞ் சாராயம் நேரே கள்ளுப் பனங்கள்ளும்
ஆங்கே இவைக ளனைத்தையுமே அருந்தா திருந்தால் மருந்தாமே.

மயிரைக் குரவை வரால்தேளி மற்றுங் கெளிறு நாய்க்கெளிறு
அயரைச் சென்னை சுறுவாகும் ஆகா தென்றால் வகைகேளு
உயரும் உளுவை விலாங்காறல் உசித வாளை எருக்கூனி
கயல்மீன் கெண்டை யாகாது கண்டு சொன்னார் முனிவோரே.

இஞ்சி தயிரும் எண்ணெயொடு இசைந்த கஞ்சி இலைக்கறியும்
வஞ்சிக் கைப்போ டிவையெல்லாம் மருவி யிரவில் உண்பீரேல்
அஞ்சி மாலின் தேவியவள் அகன்று போவாள் வினைமூளுஞ்
செஞ்சொல் மொழியாய் முன்னுரைத்த திறத்தை யறிந்து சொல் [லீரே.
(சூஉஉ)

மருந்திற்கான பதார்த்தங்கள்.

கிள்ளுக் கீரை இளஅத்திக் கிளரு முருங்கை யிலைச்சாரம்
புள்ளிப் பறட்டை இளஅவரைப் பொன்னாங் காணி சிறுகீரை
சுள்ளிக் கொழுந்தும் இவையெல்லாஞ் சுகமாய்ப் புடலம் பிஞ்சுடனே
வள்ளைத் துளிரைச் சுண்டலுமாம் வகையா யறியும் உண்பவர்க்கே.

முருங்கை இலையும் அதன்காயும் முள்ளிப் பிஞ்சு தூதுவளை [தும்
அரும்பும் இலையும் அதன்காயும் ஆவின் பாலுஞ் சுரைக்கொழுந்
நெருங்குஞ் சிறிய வழுதுணையும் நிறைந்த கண்டங் கத்திரியும்
விரும்பி உண்ணும் இலைக்கறியாய் விட்டே யோடும் வியாதிகளே
(சூஉ௩

பாலவாகடம்
(முற்றிற்று.)

# மருந்து அட்டவணை
## (நோய்களுடன்)

# நோய் அட்டவணை

## (மருந்துகளுடன்)